உ

சிவமயம்.

ஸ்ரீகோரக்ஷநாதர் சிஷ்யராகிய

ஸ்ரீ சுவாத்மாராமயோகீந்திரர்

அருளிச்செய்த

# ஹடயோகப்பிரதீபிகை

சம்ஸ்கிருதமூலம்.

---

இஃது

தஞ்சைமாநகரம்

ஸ்ரீமத் வி. குப்புஸ்வாமி மகாராஜரவர்கள்

இயற்றிய

தத்துவப்பிரகாசிகையென்னும்

தமிழ் விருத்தியுரையுடன்.

---

தஞ்சைமாநகரம்

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ் அவர்களால்

தமது

ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.



விலை] [ரூ 2.

ओ३म्



ஸ்ரீ பிரஹ்மநிஷ்ட பண்டித
வே. குப்புஸ்வாமி மஹராஜ் அவர்கள்.

உ

சிவமயம்.

# விஷய அட்டவணை.

## இந்நூலில் மேற்கோளாகக் காட்டப்பட்ட

# சாஸ்திரங்களின் பெயர்கள்.

1 அந்நபூர்ணோபநிஷதம்
2 அபரோக்ஷாநுபூதி
3 அபியுக்தம்
4 அபிருதசித்தி
5 இராதாயந்திரவிதானம்
6 இராஜயோகம்
7 இராஜசித்தாந்தராஜயோ
கம்
8 கடவல்லியுபநிஷத்து
9 கருடபுராணம்
10 கூர்மபுராணம்
11 கேரண்டசம்ஹிதை
12 கோரக்கசதகம்
13 கோரக்கசித்தாந்தம்
14 கோரக்கநாதர்
15 கோரக்ஷஸம்ஹிதை
16 கோரக்ஷபத்ததி
17 சநத்குமாரசம்ஹிதை
18 சநாதனசித்தாந்தம்
19 சர்வவேதாந்த சித்தாந்த
சாரசங்கிரகம்
20 சாண்டில்ய உபநிஷத்து
21 சாந்தோக்கியோபநிஷத்து
22 சித்தசித்தாந்தபத்ததி
23 சித்தாந்தசாராவலி
24 சிவசங்கிதை
25 சிவபுராணம்
26 சிவயோகதீபிகை
27 சுருதிகள்
28 சுரேசுவராசாரியர்
29 சுவேதாசுவதரஉபநிஷத்து
30 சூதசம்ஹிதை
31 சௌபாக்கியலக்ஷ்மி உப
நிஷத்து
32 ஞானேசுவரர்
33 சக்ஷஸ்மிருதி
34 தத்தாத்திரேயர்
35 தரிசனோபநிஷத்து
36 தாயுமானவர்
37 தியானபிந்தூபநிஷத்து
38 திரிசிகி உபநிஷத்து
39 திரிபுராசாரசமுச்சயம்
40 திருமந்திரம்
41 தேஜோபிந்தூபநிஷத்து
42 நந்திகேசுவரபுராணம்
43 நாதபிந்தூபநிஷத்து
44 நாநார்த்தநிகண்டு
45 நாரதீயம்
46 நாராயணதீர்த்தர்
47 பகவத்கீதை
48 பதார்த்தமஞ்சூஷா
49 பாகவதம்
50 பாதஞ்சல சூத்ரபாஷ்யம்
51 பாதஞ்சலதரிசனம்
52 பிரஹ்மஞானதந்திரம்
53 பிரஹ்மமீமாம்சை
54 பிரஹ்மவித்தியோபநிஷ
த்து
55 பிரஹ்மவைவர்த்தம்
56 பிரஹ்மாண்டபுராணம்
57 பிருகதாரணியகம்
58 புராணம்

முற்றிற்று.

## முதற்பதிப்பின்

# முகவுரை.



பரம புருஷார்த்தமாகிய மோக்ஷத்தை யடைதற்குச் சாதன மாகச் சாங்கியம் யோகமென இரண்டு மார்க்கங்கள் சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாதிகளிற் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள், சாங்கியம் ஒருவற்கும் யோகம் ஒருவற்கும் எளிதா யிருக்கும். ஆயினும் சாங்கியம் பூர்வாப்பியாசமுடைய உத்த மோத்தம அதிகாரிகளுக்கே எளிதாம். ஆதலால் இங்கே (இந்நூலில்) மற்றைய அதிகாரிகளை யுத்தேசித்து யோகம் விரிக் கப்படுகின்றது.

யோகமென்பது பிரமாணம், விபரியயம், விகற்பம், நித் திரை, ஸ்மிருதியென்னும் * ஐந்து விருத்திகளையும் நிரோதித்த லால் சித்தம் நிர்விஷய சைதன்னியமாத்திரமாக நிலைத்தலாம்.

அந்த யோகத்திற்கு உத்தம மத்திம மந்தாதிகாரிகளை முன் னிட்டுக் கிரமமாக அப்பியாச வைராக்கியமும், தவம், சுவாத்தி யாயம், ஈசுரப்பிரணிதான மென்னும் கிரியாயோகமும், இயமாதி அஷ்டாங்கங்களும், சாதனமாகப் பாதஞ்சலசூத்திரத்திற் சொல் லப்பட்டிருக்கின்றன. அந்தச் சாதனயோகமும், வியவகாரத்தி னால் மந்திரயோகம், ஹடயோகம், இலயயோகம், இராஜயோக மென நான்கு வகையாம்.

அவற்றுள் விதிபூர்வகமாக மந்திரத்தைப் பன்னிரண்டு வரு ஷம் வரையிற் பிரயோகித்தல் மந்திரயோகமாம். இப்படி யப்பி யசிக்கின் கிரமமாக அணிமாதிசித்திகளை யடைவன். அற்பபுத்தி யுடைய அதமசாதகன் இந்த மந்திரயோகத்தை யநுஷ்டிப்பன். மற்ற ஹட லய ராஜயோகங்கள் இந்நூலிற் கூறப்பட்டிருக்கின்றன.

இந்த யோகம் சர்வோத்தமர்களாகிய பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரர்களாலும், நாரதர், சுகர், யாஞ்ஞவல்கியர், வசிஷ்டர் முத

* இவற்றைப் பாதஞ்சலதரிசனத்தில் விரிவாய்க் காணலாம்.

லிய ஞானசிரேஷ்டர்களாலும், மச்சேந்திரர் முதலிய சித்தர்களா லும் அப்பியசிக்கப் பட்டதாம்.

இதை ஸ்ரீ ஆதிநாதராகிய பரமேசுவரன் மச்சேந்திரநாத ருக் குபதேசித்தார். அவர் கோரக்ஷநாதருக் குபதேசித்தார். அந்தக் கோரக்ஷநாதரது கிருபையால் ஹடவித்தையைப் பெற்ற சுவாத்மாராம யோகீந்திரர் இக்காலத்து முமுக்ஷுக்கள் எளிதாய் உணரும்பொருட்டு யோகவிஷயத்தில் மிகச்சிறந்து விளங்காநின்ற ஹடயோகப்பிரதீபிகை யென்னும் இந்நூலை வடமொழியிற் செய் தருளினர். இதில் நான்குபதேசங்களிருக்கின்றன.

அவற்றுள்,

முதலுபதேசத்தில் யோகத்திற்குமுதலங்கமாயும், தேக மனதுகளின் இரஜோதர்மமாகிய சஞ்சலத்தன்மையைக் கெடுத்து ஸ்திரத்தன்மையைச் செய்வதாயுமிருக்கும் ஆசனஞ் சொல்லப் பட்டிருக்கிறது.

இரண்டாவதுபதேசத்தில் மலசுத்தியையும், மலசுத்தியால் ஹடசித்தியையும், ஹடசித்தியால் வாயுவின் ஸ்திரத் தன்மையை யும், வாயுவின் ஸ்திரத்தன்மையால் சித்தத்தின் ஸ்திரத்தன்மை யையும், வாயு மனதுகளின் ஸ்திரத்தன்மையால் தீர்க்காயுசு அணி மாதி ஐசுவரியமுடைமை முதலிய சித்திகளையும் தருதற்கேது வாயுள்ள பிராணாயாமம் சொல்லப்பட்டிருக்கின்றது.

மூன்றாவ துபதேசத்தில் குருவாக்கியதற்பரனாய், ஆசன கும்பகாதிகளைச் செய்பவனாய், ஆகார விகாரமுதலிய செய் கைகளில் ஒழுங்குடையவனாயிருந்து, இடைவிடாது அடிக் கடி பழகுவோனுக்கு அணிமாதி சித்திகளையும் மிருத்யு ஜயத்தையுந் தரத்தக்க மகாமுத்திரை முதலிய பத்து முத்திரை கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

நான்காவ துபதேசத்தில் மிக வுத்தமமானதும் ஆதிநாத ரால் சம்பாதிக்கப்பட்ட கோடிசமாதிக்கிரமங்களுள் சிலாக்கிய

மானதும், மிருத்தியுவைக் கெடுப்பதும், யோகி தன்றேகத்தைச் சுவேச்சையாக விடுதற்கேதுவாயுள்ளதும், தத்துவஞானத்தை யுதிப்பித்து வாசனக்ஷய பூர்வகமாக ஜீவன்முக்திசுகத்திற்குபாய மாயுள்ளதும், பிராரப்தத்தைக்குறைத்து ஜீவப்பிரஹ்ம அபேதம் செய்வித்து அத்தியந்த பிரஹ்மாநந்தப்பிராப்தியாகிய மோக்ஷத்தைத் தருவதுமான பிரத்தியாகாராதி வடிவமாகிய சமாதிக்கிரமம் சொல்லப்பட்டிருக்கின்றது.

இதுவே யோகமார்க்கத்தையறிய விரும்புவோர்களுக்குத் தக்க நூலாம். இது வடநாட்டிற் பிரபலமாய் வழங்கிவரினும் தென்னுட்டில் இத்தகைய நூல் இது வரையிலும் வாராமையால், நமது நாட்டிலுள்ளவர்கள் யாவரும் யோக மிவ்வியல்பினதென் றுணரும்பொருட்டு, இந்நூலிற்கு ஸ்ரீ பிரஹ்மாநந்தராற் செய்யப்பட்ட சம்ஸ்கிருத வியாக்கியானத்திற்கிணங்கத் தமிழில் தத்துவப்பிரகாசிகையென்னும் விருத்தியுரையும் அதற்காங்காங்கு விளக்கவுரையும்செய்து சம்ஸ்கிருத மூலத்துடன் பிரசுரிக்கப்பட்டது. இதில் ஏனைய யோகசாஸ்திரங்களிலுள்ள எல்லா விஷயங்களு மடங்கியிருக்கின்றன. இது அதிகாரிகளாவார் யாவர்க்கும் இன்றியமையாததென்பது இந்நூலின் கண்ணேயே இனிது விளங்கும்.

சம்ஸ்கிருதமும் தமிழு முணர்ந்தவர்களும், தமிழ்மாத்திர முணர்ந்தவர்களுமாகிய இருதிறத்தாருக்கு முதவும்வண்ணம் சாதாரணமான தமிழ்நடையி லெழுதப்பட்டிருக்கின்றது. இது வடமொழிக்கு நேராகவேயிருக்கவேண்டுமென்னும் கருத்தால் பெரும்பாலும் தமிழ்நடை வடமொழிச் சார்பாகவே யிருக்கும். அப்பியாசக்கிரமங்களெல்லாம் இந்நூலில் மிக வெளிப்படையாகக் காட்டப்பட்டிருக்கினும், அவற்றைக் குருவின்றிச் சுதந்திரமாகச் செய்யலாகாது அப்படிச் செய்யுமிடத்து நோய்முதலியவற்றுல் வருந்துதலும் மரணமுமுண்டாம். இக்காலத்தில் அதிகாரிகளி னருமைப்பட்டானும், சம்பிரதாய நழுவுதலானும் இந்த ஹடயோகம் சாங்கோபாங்கமாகசித்திப்பது துர்பலபமாயினும், சிலவிரக்தர்களுக்கு ஒவ்வோர் அங்கம் சித்திக்கும் அதாவது ஷட்கிரியை, அநேக ஆசனங்கள், முத்திரை முதலிய அங்கங்களில் ஒவ்

வோர் அங்கம் சித்திக்கும். அதனையே பூரணமாக அப்பியசிக்கின், அதுவே குருவாயிருந் துணர்த்துதலால் மற்ற அங்கங்களோடு யோகமுழுவதும் சித்திக்கும். அது பாதஞ்சலசூத்திர பாஷியத்தில்,

"யோகேந யோகோ ஜ்ஞாதவ்யோ
யோகோ யோகாத் ப்ரவர்த்ததே ||

யோகத்தினால் யோகம் அரியத்தக்கது. யோகத்தால் யோகம் விருத்தியாகும் என்னும் சௌபாக்கியலக்ஷ்மி யுபநிஷத்தின் வாக்கியத்தால் யோகத்திற்கு யோகமே குருவாம்" என்று வியாசபகவானாற் சொல்லப்பட்டிருக்கின்றது. ஹடயோகத்தைத் தீபம்போற் பிரகாசிப்பிப்பதாயிருத்தலால், இந்நூலிற்கு * ஹடயோகப்பிரதீபிகை யென்றும்; தீபத்தின் பிரகாசம்போற் சம்சயாதி யந்தகாரத்தை யொழித்துத் தத்துவத்தை (உண்மைப் பொருளை) யுணர்த்துவதாயிருத்தலால், இதனுரைக்குத் தத்துவப் பிரகாசிகை யென்றும் பெயரிடப்பட்டது,

"யோகீச்வராந் யோகஞ்ச யோகசாஸ்த்ரஞ்ச பார்வதி |
நிந்தந்தி யே நராஸ்தே வை ராக்ஷஸா பூமிசாரிண: ||

ஏ! பார்வதி! யோகீசுவரர்களையும் யோகத்தையும் யோகசாஸ்திரத்தையும் எந்த நரர்கள் நிந்திக்கின்றார்களோ அவர்கள் பூமியில் இராக்ஷதர்களாவர்" என்பது சிவவாக்கியம்.

யதக்ஷரபதப்ரஷ்டம் மாத்ராஹீநஞ்ச யத்பவேத் |
தத்ஸர்வம் க்ஷம்யதாம் தேவ நடராஜ நமோஸ்து தே ||

ஓ! நடராஜப்பெருமானே! உமக்கு நமஸ்காரம். இதிலுண்டாகும் எழுத்துக்குற்றம் சொற்குற்றமுதலிய யாவையும் க்ஷமிக்கக்கடவீராக.

---

* இந்நூலில் ஹட லய ராஜயோகங்கள் மூன்றும் சொல்லப்பட்டிருக்கினும், அவற்றுள் ஹடயோகத்தைப் பிரதானமாகவும், மற்றிரண்டையும் ஹடயோகவாயிலாகவும் பிரதிபாதித்தலால், இந்நூல் ஹடயோகப்பிரதீபிகை யெனப் பெயரிடப்பட்டது.

வே. து.

# இரண்டாம் பதிப்பின்

# முகவுரை.



ஹட லய ராஜயோகங்களை யுணர்த்துவதற்கு இந்நூலைப் போற் சிறந்த நூலில்லாமையின் இது பரமப் பிரமாணமுடைய தாமென்பதனை அறிவித்தற் பொருட்டு, இந்நூலின் மூல சுலோ கங்கள் இன்னின்ன சுருதிவாக்கியங்களென்று இப்பதிப்பின் பதக்குறிப்பில் ஆங்காங்கு காட்டப்பட்டுளது. முன்பதிப்பி லில்லாத ஷட்கர்ம ஆசனங்கள் முத்திரைகள் பல விஷயங்களும் பல பிரமாணங்களும் காட்டப்பட்டுள்ளன. அல்லாமலும் முன் பதிப்பினுல் பிறழ்ந்தனவும் விடுபட்டனவும் இப்போது சீர்படுத்திச் சேர்க்கப்பட்டனவும் அநுபவாநுசாரமாகச் சில விஷயங்கள் திருத்தப்பட்டு மிருக்கின்றன. இப்பதிப்பிலும் ஜீவசுபாவத்தினுல் பிழைகள் ஏற்படுமாயின் அவற்றைப் பெரியோர் க்ஷமிக்க.

வே. கு.

ஸ்ரீகணேசாய நம:

# ஹடயோகப்பிரதீபிகை.

## முதல்உபதேசம்.

### உரைவாழ்த்து.

𑌨𑌤𑍍𑌵𑌾 𑌗𑌣𑌪𑌤𑌿𑌂 𑌸𑌾𑌂𑌬𑌂 𑌗𑍁𑌰𑍂𑌂𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌕𑌾𑌂 ।
𑌹𑌠𑌯𑍋𑌗𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌸𑍍𑌯 𑌕𑍁𑌰𑍍𑌵𑍇 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌭𑌾𑌷𑌿𑌕𑌾𑌮𑍍 ॥

(இதன்பொருள்) ஸ்ரீ கணபதியையும், அம்பிகைசமேதராகிய பரமேசுவரனையும், குருவையும் நமஸ்கரித்து ஹடயோகப்பிரதீபிகைக்குத் தத்துவப்பிரகாசிகையென்னும் தமிழுரையைச் செய்கின்றேன். என்றவாறு.

### நூன்மங்கலம்.

(அவதாரிகை) முமுக்ஷுக்களது நன்மையின் பொருட்டு, இராஜயோக வாயிலாகக் கைவல்யபலத்தையுடைய ஹடயோகப்பிரதீபிகையை விதிக்க விருப்பமுள்ளவராகிய மிகுந்தகருணையுள்ள சுவாத்மாராமயோகீந்திரர், அஃது இடையூறின்றி இனிது முடியும்பொருட்டு, ஹடயோகப் பிரவர்த்தகராகிய ஸ்ரீ ஆதிநாதரது நமஸ்கார லக்ஷணமுள்ள மங்கல (வாழ்) த்தை முதலில் ஆசரிக்கின்றார்:—

𑌶𑍍𑌰𑍀𑌆𑌦𑌿𑌨𑌾𑌥𑌾𑌯 𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌯𑍇𑌨𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌾 𑌹𑌠𑌯𑍋𑌗𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 ।
𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌜𑌤𑍇 𑌪𑍍𑌰𑍋𑌨𑍍𑌨𑌤𑌰𑌾𑌜𑌯𑍋𑌗
𑌮𑌾𑌰𑍋𑌢𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑍋𑌰𑌧𑌿𑌰𑍋𑌹𑌿𑌣𑍀𑌵 ॥ ௧ ॥

(இ-ள்) மிகவுயர்ந்த இராஜயோகத்தில் ஏற இச்சையுள்ளவர்களுக்கு ஏணியைப்போல விளங்கும் ஹடயோகவித்தையை யுபதேசித்த ஸ்ரீ ஆதிநாதருக்கு நமஸ்காரம். எ-று.

இங்கே ஸ்ரீஆதிநாதரென்றமையால், சர்வேசுவரனாகிய சிவனென்றாவது அல்லது ஸ்ரீயென்னும் லக்ஷ்மிக்கு நாதராகிய விஷ்ணுவென்றாவது கொள்ளலாம். ஆனால் பார்வதிக்குப் பரமேசுவராகிய ஸ்ரீஆதிநாதர் ஹடவித்தையை உபதேசித்தது மகாகாளயோகசாஸ்திரமுதலியவற்றில் பிரசித்தம். மற்ற மந்திரயோக ஹடயோக முதலிய கீழ்ப்பூமிகளுக்கெல்லாம், இந்த இராஜயோகம் மேற்பூமியாயிருத்தலால் மிகவுயர்ந்ததென்னப்பட்டது. மிகவுயர்ந்த உப்பரிகையில் ஏற இச்சையுள்ளவர்களை ஏணியானது வருத்தமின்றி அவ்வுப்பரிகையிற் சேர்ப்பிப்பதாயிருத்தல்போல, இந்த ஹடதீபிகையும் மிகவுன்னதமாகிய இராஜயோகத்தில் ஏற இச்சையுள்ளவர்களை வருத்தமின்றி அவ்விராஜயோகத்திற் சேர்ப்பிப்பதா யிருக்கின்றதென்பது உவமையலங்காரம்.

ஹ-வென்பது சூரியன்; ட-வென்பது சந்திரன்; இவ்விரண்டன்யோகம் (சேர்க்கை) ஹடயோகமாம். இதனால், சூரியசந்திரர்களென்னும் பிராணாபானனிரண்டன் ஐக்கிய லக்ஷணமாகிய பிராணாயாமம் ஹடயோகமாமென்னும் ஹடயோகலக்ஷணம் சித்தித்தது. இது கோரக்ஷநாதராற் செய்யப்பட்ட சித்தசித்தாந்தபத்ததியென்னும் நூலிலும்,

ஹகார꞉ கீர்தித꞉ ஸூர்யஷ்ட²காரஶ்சந்த்³ர உச்யதே ।
ஸூர்யாசந்த்³ரமஸோர்யோகா³த்³த⁴ட²யோகோ³ நிக³த்³யதே ॥ ०

* ஹகாரம் சூரியனென்றும், டகாரம் சந்திரனென்றும் சொல்லப்படுகின்றது. சூரியசந்திரர்களின் சேர்க்கையால் ஹடயோகம் எனப்படுகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ()

(அ-கை) இப்படிப் பரமகுருநமஸ்காரலக்ஷணமாகிய மங்கலஞ்செய்து, விக்னம் மிகுதியாயிருக்கின் மங்கலமும் மிகுதியாய்ச் செய்யவேண்டியதாமென்னும் நியாயத்தால், தமது குருநமஸ்காரலக்ஷணமாகிய மங்கலத்தை ஆசரிக்கின்றவராய், இந்நூலின் விஷயம் பிரயோஜனமுதலியவற்றைக் காட்டுகின்றார்:—

* இதுயோகசிகோபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது

𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌶𑍍𑌰𑍀𑌗𑍁𑌰𑍁𑌂 𑌨𑌾𑌥𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌰𑌾𑌮𑍇𑌣 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾 ।
𑌕𑍇𑌵𑌲𑌂 𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌾𑌯 𑌹𑌠𑌵𑌿𑌦𑍍𑌯𑍋𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 ॥ ௨ ॥

(இ-ள்) தனது ஸ்ரீகுரு(கோரக்க)நாதரை பக்திபூர்வகமாக நமஸ்கரித்துச் சுவாத்மாராமயோகியால் இராஜயோகமாத்திரஞ் சித்திக்கும்பொருட்டு ஹடவித்தை யுபதேசிக்கப் படுகின்றது. எ-று.

இங்கே மாத்திரமென்னும் பதத்தால், ஹடவித்தைக்கு இராஜயோகமே முக்கியப்பிரயோஜனமாம், பற்றைத்தருவனவாயிருத்தலால் சித்திகள் பிரயோஜனமாகாவென்பது அபிப்பிராயம். இதனால் இந்நூலிற்கு இராஜயோகபல(பிரயோஜன)த்தோடுகூடிய ஹடயோகம் விஷயமென்பதும்; இராஜயோகவாயிலாகக் கைவல்யம் பலமென்பதும்; அதில்விருப்பமுடையவன் அதிகாரி யென்பதும்; கிரந்தத்திற்கும் விஷயத்திற்குமுள்ள பிரதிபாத்தியப் பிரதிபாதகபாவசம்பந்தமும், நூலிற்கும் கைவல்லியத்திற்குமுள்ள பிரயோஜ்ய பிரயோஜகபாவசம்பந்தமும், நூலின் பெயரால் வழங்கப்படும் ஸபல(பிரயோஜனமுடைய)யோகத்திற்கும் கைவல்யத்திற்குமுள்ள சாத்திய சாதனபாவசம்பந்தமுமாகிய இவை சம்பந்தமாமென்பதும் சொல்லப்பட்டன. (௨)

(அ-கை) மந்திரயோகம், சகுணத்தியானம், நிர்க்குணத்தியானம், முத்திரை முதலியவைகளினாலேயே இராஜயோகம் சித்திப்பதாயிருக்க, ஹடவித்தையை யுபதேசிப்பதா லென்னபிரயோஜனமென்று ஆசங்கித்து எழுந்த (சஞ்சல) சித்தமுடையவர்களுக்கு. மந்திரயோக முதலியவற்றால் இராஜயோகம் சித்தியாதாகலின், ஹடயோகத்தினாலேயே இராஜயோகஞ் சித்திக்குமென்று சொல்லுகிறவராய்க் கிரந்தத்தைப் பிரதிஞ்ஞைசெய்கின்றார் :—

𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾 𑌬𑌹𑍁𑌮𑌤𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍇 𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌮𑌜𑌾𑌨𑌤𑌾𑌮𑍍 ।
𑌹𑌠𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌿𑌕𑌾𑌂 𑌧𑌤𑍍𑌤𑍇 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌰𑌾𑌮𑌃 𑌕𑍃𑌪𑌾𑌕𑌰𑌃 ॥ ௩ ॥

(இ-ள்) மந்திரயோகாதி அநேகமதவடிவ காடாந்தகாரத்திலுண்டாகிய பிராந்தியினால் (அந்தந்த வுபாயங்களினால் இராஜயோகத்தின் பொருட்டுப் பிரவர்த்தித்தவர்களுக்கு அங்கங்கே

அது கிட்டாமையும், "இராஜயோகமின்றிச் சித்திக்கு" மென்று சொல்லுதலுமாகிய இவைமுதலியவற்றால்) இராஜயோகத்தை யறியாதவர்களுக்குக் கிருபாகரனாகிய சுவாத்மாராமனால் ஹடப் பிரதீபிகை செய்யப்படுகின்றது. எ-று.

கிருபாகரனென்பது கிருபையைச் செய்பவன் அல்லது கிருபைக்கு ஆகர(உறைவிட)மாயுள்ளவன் என்று பொருள்படும். இதனால் ஹடப்பிரதீபிகையைச் செய்தற்கு அஞ்ஞானிகளைமுன்னிட்ட இரக்கமேகாரணமென்பது சொல்லப்பட்டது. சுவ (தனது) ஆத்மாவில் இரமித்தலால் சுவாத்மாராமனுவன். ஹடயோகத்தைத் தீபத்தைப்போலப் பிரகாசிப்பிப்பதாயிருத்தலால் ஹடப்பிரதீபிகையாம்; அல்லது ஹடமேபிரதீபிகையாம்; இராஜயோகத்தைப் பிரகாசிப்பிப்பதாயிருத்தலால்.

சுவாத்மாராமனென்றதனால் ஞானத்தி னேழுபூமியையுமடைந்த பிரஹ்மவித்துவரிஷ்டனெனப்பட்டது. அப்படியே முண்டக சுருதியும்.

"ஆத்மக்ரீட ஆத்மரதி: க்ரியாவாநேஷ ப்ரஹ்மவிதாம் வரிஷ்ட:

ஆத்மக்கிரீடையும் ஆத்மாவில் இரமித்தலுமாகிய கிரியையையுடைய இவன் பிரஹ்மவித்துக்களில் வரிஷ்டன் (மிகமேலானவன்)." என்று கூறுகின்றது. இந்தச் சப்தபூமிகள் யோகவாசிஷ்டத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன:—

ஜ்ஞாநபூமி: ஸுபேச்சாக்யா ப்ரதமா ஸமுதாஹ்ருதா |
விசாரணா த்விதீயா ஸ்யாத் த்ருதீயா தநுமாநஸா ||
ஸத்வாபத்திஸ்சதுர்த்தீ ஸ்யாத் ததோऽஸம்ஸக்திநாமிகா |
பதார்த்தாபாவிநீ ஷஷ்டீ ஸப்தமீ துர்யகா ஸ்ம்ருதா ||

முதலாவது * ஞானபூமி சுபேச்சை, இரண்டாவது விசாரணை, மூன்றாவது தநுமாநஸி, நான்காவது சத்துவாபத்தி, ஐந்தாவது அசம்சத்தி, ஆறாவது † பரார்த்தாபாவினி, ஏழாவது துரியகாவெனப்படும்"

---

* ஞானசப்தபூமியின் இலக்ஷணத்தை வராகோபநிஷத்து மகோபநிஷத்து ஸ்ரீ விசாரசந்திரோதய முதலியவற்றிலுங் காணலாம்.

† பதார்த்தாபாவினியென்றும் பாடம்.

க. விவேகவைராக்கியங்களோடுகூடிய சமதமாதி பூர்வகமாகிய தீவிரமுமுக்ஷுத்துவம் சுபேச்சை.

உ. சிரவணமனனலக்ஷணமுடையது விசாரணை.

ஙூ. அநேகார்த்தங்களைக் கிரகிக்கும் மனமானது அவ்வநேகார்த்தங்களைவிட்டுச் சத்தென்னும் ஒரே அர்த்தத்தின் விருத்திப்பிரவாகமுடையதாகுங்காலத்துச் சூக்ஷ்மமாகின்றது. அப்படிப்பட்ட சூக்ஷ்மமான மனதையுடைய நிதித்தியாசனம் தநுமாநஸியாம். இம்மூன்றும் சாதனபூமிகள். இம்மூன்று பூமிகளில் ஏறியுள்ளோர் சாதகரெனப்படுவர்.

ச. மூன்று பூமிகளாலும் சுத்தசத்துவமாகிய அந்தக்கரணத்திலுண்டாகும் 'நான்பிரஹ்மம்' என்னும் வடிவினதாகிய அபரோக்ஷவிருத்தி சத்துவாபத்தி யெனப்படும். இது நான்காவதாகிய பலபூமியாம். இதில் ஏறியயோகி பிரஹ்மவித்தெனப்படுவன். இது ¶ சம்பிரஞ்ஞாத யோகபூமி. இனிச்சொல்லப்படும் மூன்றும் $ அசம்பிரஞ்ஞாதயோக பூமிகளாம்.

ரு. சத்துவாபத்திக்குப்பின் சத்துவாபத்தியெனப் பெயரிய பூமியிலுள்ள சித்திகளில் ஆசையில்லாதிருத்தல், அசம்சத்தியெனப்படும். இதில் ஏறிய யோகியானவன் தானே ஸமாதியினின்றும் விழிக்கிறான். இப்பூமியை யடைந்தவன் பிரஹ்மவித்துவரனெனப்படுவன்.

சூ. பரப்பிரஹ்மத்திற்கு அந்நியமாகிய அர்த்தங்களைப்பாவியாதிருக்கும் பூமி, பரார்த்தாபாவினி யெனப்படும். இதிலேறிய யோகி பிறர் எழுப்பினாற்றான் விழிப்பன். இதை யடைந்தவன் பிரஹ்மவித்துவரியா னெனப்படுவன்.

---

¶ இந்த யோகபூமியில் தியானிக்கப்படுபொருள் செவ்வையாய் அநுபவிக்கப்படுதலால், இது சம்பிரஞ்ஞாதயோகபூமி யெனப்படுகின்றது.

$ இவற்றில் த்யானிக்கப்படுபொருள் செவ்வையாய் அநுபவிக்கப்படாமையின், இவை அசம்பிரஞ்ஞாதயோகபூமிகளெனப் படுகின்றன.

எ ஏழாவது துரியபூமி. இதிலேறிய யோகிதானும் விழியான். பிறராலும் விழிப்பிக்கப்படான். இதை யடைந்தவன் பிரஹ்மவித்துவரிஷ்டனெனப்படுவன். அதிற் பிரமாணமாயுள்ள சுருதி இங்குதான் சொல்லப்படுகின்றது. முன் இவனை ஜீவன் முக்தனெனப்பட்டவன். அவனே இங்கு (இந்நூலிற்) சுவாத்மா ராமபதத்திஞற் சொல்லப்படுகின்ருன். (௯)

(அ-கை) மஹான்களால் அநுஷ்டிக்கப்பட்டிருக்கிறதென்று ஹடவித்தையைச் சிலாகித்துப், பெரியோர்களால் ஹடவித்தையைப் பெற்றிருப்பதாகிய தமது பெருமையையுங் கூறுகின்ருர்:—

𑌹𑌠𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌹𑌿 𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌗𑍋𑌰𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑍇 ।
𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌰𑌾𑌮𑍋𑌽𑌥𑌵𑌾 𑌯𑍋𑌗𑍀 𑌜𑌾𑌨𑍀𑌤𑍇 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌤𑌃 ॥௰॥

(இ-ள்) மச்சேந்திரர் கோரக்கர் முதலியோர்கள் சாதன லக்ஷணபேதபலங்களால் விசேஷமாக ஹடவித்தையை அறிந்திருக்கிருர்களென்பது பிரசித்தம். சுவாத்மாராமனென்னும் யோகியும் அந்தக்கோரக்கரது பிரசாதத்தால் அறிவன். எ-று.

முதலியோ ரென்றமையால் ஜாலந்தரநாதர், பர்த்திருஹரி கோபீசந்தர் முதலியோர்களுங் கொள்ளப்படுவர். மிகப்பெரிய பிரஹ்மாவினுலும் இந்த வித்தை சேவிக்க(அநுஷ்டிக்க)ப் பட்டதென்பதற்கு இங்கே

“ 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑍋 𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌵𑌕𑍍𑌤𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑍁𑌰𑌾𑌤𑌨𑌃 ।

யோகத்தைச் சொன்னவர் இரணிய கர்ப்பர். அவருக்கு முன் வேருருவருமில்லை” என்னும் யோகியாஞ்ஞவல்கியரது ஸ்மிருதி பிரமாணமாம். சொல்லுந்தன்மையும் மானசவியாபார பூர்வகமா மென்பதனுல் மானசவியாபாரம் அர்த்தத்தால் வந்தது. அப்படியே சுருதியும் “𑌯𑌨𑍍𑌮𑌨𑌸𑌾 𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌾𑌚𑌾 𑌵𑌦𑌤𑌿 - எதை மனதினுலே தியானி (நினை) க்கின்ருனே அதை வாக்கினுற் சொல்லுகின்ருன்.” என்று கூறுகின்றது. இந்த வித்தை பாகவதர்களாகிய உத்தவர் முதலியோர்களுக்குப் பகவானுற் சொல்லப்பட்டிருக்கின்றது. சிவன் யோகியென்பது பிரசித்தமே. ஆகையால்

இந்த வித்தை சர்வோத்தமர்களாகிய பிரஹ்மா விஷ்ணு ருத்திரர்களால் அநுஷ்டிக்கப்பட்டதாகின்றது. பிரஹ்மசூத்திரகர்த்தாவாகிய வியாசரால் யோகி நிராகரிக்கப்பட்டிருக்கிறனென்று சங்கிக்கலாகாது. ஏனெனின், அங்குப்பிரகிருதியின் சுவதந்திரத் தன்மையை அறிந்தவர்களால் அங்கீகரிக்கப்பட்ட பேதாம்சமாத்திரம் நிராகரிக்கப் பட்டிருக்கின்றது ; பாவனாவிசேஷவடிவ யோகம் நிராகரிக்கப்படவில்லை. பாவனை சகலருக்கும் சம்மதம். அஃதில்லாமல் சுகமும் சம்பவியாது. அப்படியே பகவற்கீதையிலும்.

“ 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌨 𑌚𑌾𑌽𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌨𑌾 ।
𑌨 𑌚𑌾𑌭𑌾𑌵𑌯𑌤𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑍁𑌤𑌃 𑌸𑍁𑌖𑌮𑍍 ॥

அயுக்தனுக்கு (மனச்சமாதானமாகிய யோகமில்லாதவனுக்கு)ப்புத்தி(ஆத்மசொரூபஞானம்)இல்லை. அயுக்தனுக்குப்பாவனை (ஆத்மத்தியானம்)இல்லை. பாவனையில்லாதவனுக்குச் சாந்தியில்லை. சாந்தி இல்லாதவனுக்குச் சுகமேது ? ” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. நாராயணதீர்த்தராலும்,

“ 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌸𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍁𑌖𑌂 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑍇
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌚𑌿𑌦𑍍𑌭𑍇𑌦𑌗𑌤𑌂 𑌤𑍁 𑌵𑌾𑌕𑍍𑌯𑍈𑌃 ।
𑌵𑍍𑌯𑌾𑌸𑍋 𑌨𑌿𑌰𑌾𑌚𑌷𑍍𑌟 𑌭𑌾𑌵𑌨𑌾𑌖𑍍𑌯𑌂
𑌯𑍋𑌗𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑍂𑌤𑍍𑌰𑍈𑌃 ॥

* பிரகிருதியிலுள்ள சுதந்திரத்தன்மை சத்தியத்தன்மை முதலியவற்றையும் சித்தின் பேதத்திலுள்ள சத்தியத்தன்மையும் தம்மாற் செய்யப்பட்ட பிரஹ்மசூத்திர வாக்கியங்களால் வியாசர் நிராகரித்திருக்கின்றாரன்றிப் பாவனை யென்னும் யோகத்தை நிராகரிக்கவில்லை.” இன்னும்,

“ 𑌸𑌵𑌿𑌧𑌾𑌷𑍍𑌟𑌾𑌙𑍍𑌗𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌵𑍍𑌯𑌾𑌸𑍋𑌽𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌵𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑌯𑌮𑍍 ।
𑌭𑌾𑌷𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑍍𑌰 𑌶𑍁𑌕𑌾𑌯 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 𑌤𑌤𑌃 ॥

---

* இதனைப் பிரஹ்மமீமாம்சையின், 𑌏𑌤𑍇𑌨 𑌯𑍋𑌗𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 என்னும்-அ-௨,-பா-௧-சூ-௩, சூத்திரத்தின் பாஷ்யத்தில் விரிவாய்க் காணலாம்.

உ தொயொமொஹமவதா ஶீதாயாஉயிகொடநூதஃ |
கூதஃஸூகாஜிஹிஷூா உதூஸஜொடிஷாஉூராஃ ||

புத்திமானாகிய ஆசாரியர் தாம்பாஷியமுதலியவற்றில் ஆத்மாவை வெளிப்படுத்தும் யோகத்தைவிளக்கியிருக்கின்றார். ஆதலால், அதில் (யோகத்தில்) ஆசாரியர் முதலியோர்களுக்கு அபிப்பிராயமே. கீதையில் பகவானாலும் யோகம் மிகுதியாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. வேறு இடங்களில் சுகர்முதலியோர்களாலும் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகையால் இதில் சாதுக்கள் மிகவும் ஆதரவுடையவர்களாயிருக்கிறார்கள்'' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அன்றியும்

"வெஷெஷு யஜெஷு தவஃஸுவெவ
உாநெஷு யதூணூஹலம்வூஷிஷு |
கூதெூதிதஸூவஊஷிஉம்விஜிகூா
யொமிவாஉம்ஷூாந உவெதிவாஊூ ||

இதையறிந்து (இவ்வத்தியாயத்திற் கூறியவற்றைத் தெரிந்தநுஷ்டித்து) யோகியானவன் வேதங்களிலும் யாகங்களிலும் தவங்களிலும் தானங்களிலும் எந்தப் புண்ணியபலம் பிரதிஷ்டிக்க (சொல்ல) ப்பட்டிருக்கின்றதோ, அவையெல்லாவற்றையும் கடக்கிறான். மேன்மையானதும் முதன்மையானதுமாகிய ஸ்தானத்தை (பிரஹ்மத்தை) யும் அடைகிறான்.'' என்று பகவானுஞ் சொல்லியிருக்கின்றார். வெகுவாய்ச் சொல்லுவதிலென்ன?

ஜிஜூாஸூரவியொமஸூ ஶஷூஹூாதிவதஉதெ ||

யோகத்தை யறியவிரும்புவோனும் சப்தப்பிரஹ்மத்தைக் கடக்கிறான். (வேதத்திற் கூறிய கருமபலத்தைவிட அதிகபலனை யடைகிறான்)'' என்று பகவானால் யோகஜிஞ்ஞாசு(யோகத்தை அறியவிரும்புவோர்) களுக்கும் மேன்மை சொல்லப்பட்டிருக்குமாயின், யோகிகளுக்குச் சொல்லுவானேன். இது நாரதர் முதலிய பக்தசிரேஷ்டர்களாலும் யாஞ்ஞவல்கியர் முதலிய சிரேஷ்டஞானிகளாலும் அநுஷ்டிக்கப்பட்டிருத்தலால், பக்தர்களுக்கும் ஞானிகளுக்கும் விரோதமில்லாததாம் என்று அடங்குக. கூயவா-என்பது அசை. (ச)

(அ-கை) ஹடயோகத்தில் பிரவிருத்தியை யுண்டாக்குவதற்கு ஹடவித்தையால் ஐசுவரியத்தை யடைந்த சித்தர்களைக் கூறுகின்றார்:—

ஸ்ரீஆதிநாதமத்ஸ்யேந்த்ர ஶாபராநந்தபைரவா: |
சௌரங்கீமீநகோரக்ஷ விரூபாக்ஷபிலேஶயா: || ௫ ||

மந்தாநோ பைரவோ யோகீ ஸித்திர்புத்தஶ்ச கந்தடி: |
கோரண்டக: ஸுராநந்த: ஸித்தபாதஶ்ச சர்படி: || ௬ ||

காநேரீ பூஜ்யபாதஶ்ச நித்யநாதோ நிரஞ்ஜந: |
கபாலீ பிந்துநாதஶ்ச காகசண்டீஶ்வராஹ்வய: || ௭ ||

அல்லாம: ப்ரபுதேவஶ்ச கோடாசோலீ ச டிண்டிணி: |
பாநுகீ நாரதேவஶ்ச கண்ட: காபாலிகஸ்ததா || ௮ ||

இத்யாதயோ மஹாஸித்தா ஹடயோகப்ரபாவத: |
கண்டயித்வா காலதண்டம் ப்ரஹ்மாண்டே விசரந்தி தே || ௯ ||

(இ-ள்) எல்லாநாதர்களுக்கும் முதல்நாதராகிய ஆதிநாதர் (ஈசுவரன்), அவர் சிஷ்யராகிய மச்சேந்திரர், சாபரர், ஆனந்த பைரவர், சௌரங்கி, மீனநாதர், கோரக்கநாதர், விரூபாக்ஷர், பிலேசயர், மந்தானர், பைரவர், சித்தி, புத்தர், கதண்டி, கோரண்டகர், கராநந்தர், சித்தபாதர், சர்ப்படி, கானேரி, பூஜ்யபாதர், நித்தியநாதர், நிரஞ்சனர், கபாலீ, விந்துநாதர், காகா, சண்டீசுவரர், * அல்லாமர், பிரபுதேவர், கோடா, சோலீ, டிண்டிணி பானுகி, நாரதேவர், கண்டர், காபாலிகர், என்னுமிவர்முதலிய மஹாசித்தர்கள் ஹடயோகத்தின் பிரபாவத்தால் (சாமர்த்தியத்தால்) காலதண்டத்தை (தேகத்தினின்றும் பிராணன் பிரிதற்கு அநுகூலமாகிய வியாபாரத்தை)க் கண்டித்து (சேதித்து) அதாவது மிருத்தியுவை ஜெயித்துப் பிரஹ்மாண்டமத்தியில் தடையின்றிச் சஞ்சரிக்கின்றார்கள். எ-று.

* அல்லாமப்பிரபுதேவர் என்று ஒருவராகவும் உரைப்பர்.

ஆதிநாதராகிய ஈசுவரன்முதல் நாதசம்பிரதாயம் பிரவர்த்திக்கப்பட்டதென்று நாதசம்பிரதாயக்காரர் கூறுகின்றனர், ஓர் காலத்து ஆதிநாதர் ஓர் தீவிலிருந்துகொண்டு, அங்கொருவருமில்லையென்றுணர்ந்து பார்வதிக்கு யோகத்தை யுபதேசித்தார். கரையின் சமீபத்திலுள்ள ஜலத்திலிருந்த ஓர் மச்சம் (மீன்) அந்த யோகோபதேசத்தைக் கேட்டு ஏகாக்கிர சித்தமுள்ள நிச்சலகாயமுடையதாயிற்று. அப்படி இருக்கும் மீனைப்பார்த்து இது யோகத்தைக் கேட்டிருக்கிறதென்றுணர்ந்து கிருபாளுவா (கிருபையை யுடையவரா) கிய ஆதிநாதர் ஜலத்தைப் புரோக்ஷி(தெளி)த்தார். அப்படிப் புரோக்ஷித்த மாத்திரத்தில், அது திவ்விய சரீரமுள்ள மச்சேந்திர ரென்னும் சித்தராயிற்று. அவரையே மச்சேந்திரநாதரென்று சொல்லுவர்.

கை கால் குறைந்த புருஷனை ஹிந்துஸ்தான பாஷையில் சௌரங்கி யென்பர். ஓர் காலத்து ஆதிநாதரால் யோகத்தைப் பெற்றுப் பூமியிற் சஞ்சரிக்கும் மச்சேந்திரநாதரது கிருபாநோக்க மாத்திரத்தால், ஓர் காட்டிலிருந்த சௌரங்கிக்குக் கை கால்கள் முளைத்தன. அவரும் இவரது கிருபையால் நமக்குக் கை கால்களுண்டாயினவென்றுணர்ந்து, அவருடைய பாதங்களில் நமஸ்கரித்து, எனக்கநுக்கிரகஞ்செய்கவென்று பிரார்த்திக்க, அப்படியே அநுக்கிரகித்தார். அவரது அநுக்கிரகத்தாற் சௌரங்கியென்னும் பிரசித்தசித்தரானார்.

கோரக்கரது சரித்திரத்தைப் பக்தவிஜய முதலியவற்றிற் காண்க.

"என்னுமிவர் முதலிய" என்பதிலுள்ள முதலியவென்னுஞ் சொல்லால் தாராநாதர் முதலியோர் கொள்ளப்படுவர்.

பிரஹ்மாண்டமத்தியில் தடையின்றிச் சஞ்சரிக்கின்றார்களென்பது பாகவதத்தில்

"யோகீஶ்வராணாம் கதிமாஹுரந்த ர்பஹிஸ்த்ரிலோக்யா: பவநாந்தராத்மநாம்"

காற்றினுள் பிரவேசிக்கும் வடிவுடைய யோகீசுவரர்களின் மூன்று லோகங்களுக்குள்ளும் வெளியும் செல்லுதலைக் கூறுகின்றார்.'' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (ரு-கூ)

(அ-கை) ஹடம் சகல தாபங்களையும் நாசஞ்செய்வதும், சகல யோகங்களுக்கும் சாதகமுமா மென்பதை மட கமடவுருவகத்தாற் கூறுகின்றார்:—

அசேஷ. தாப தப்தாநாம் ஸமாஸ்ரய மடோ ஹட: |
அசேஷயோகயுக்தாநாமாதாரகமடோ ஹட: ‖ க0 ‖

(இ-ள்) ஹடயோகமானது (ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம் ஆதிதைவிகமென்னும்) சகல தாபங்களாலும் தபிக்கப்பட்டவர்களுக்கு நல்ல ஆசிரயவடிவமாகிய * மடமும், அப்படியே (மந்திர கரும யோகமுதலிய) சகல யோகங்களையு முடையவர்களுக்கு ஆதாரபூதமாகிய கமடமு (ஆமையு) மாம் எ-று.

தாபத்திரயமூன்றனுள்,

க. ஆதியாத்மிகம் காயிகம் மானஸிகமென இரண்டு வகையாம். அவற்றுள், காயிகதுக்கம் வியாதியினாலாகியது; மானஸிக துக்கம் காமமுதலியவற்றாலாகியது.

உ. ஆதிபௌதிகம் புலி பாம்புமுதலியவற்றா லாகியது.

௩. ஆதிதைவிகம் கிரகமுதலியவற்றா லுண்டாகியது.

கமடம் (ஆமை) உலகத்திற்கு ஆதாரமா யிருத்தல்போல ஹடம் சகலயோகிகளுக்கும் ஆதாரமாம். (க0)

(அ-கை) இப்போது எல்லாவித்தைகளையும்விட இந்த ஹடவித்தை மிக இரகசியமாய் வைக்கத்தக்க தென்பதையும், அதற்கேதுவையும் கூறுகின்றார்:—

ஹடவித்யா பரம் கோப்யா யோகிநா ஸித்திமிச்சதா |
பவேத்வீர்யவதீ குப்தா நிர்வீர்யா து ப்ரகாஸிதா ‖

* தாபத்தினா லடிபட்டவர்களுக்கு மடம் ஆசிரயமாதல்போல, மூன்று தாபங்களாலு மடிபட்டவர்களுக்கு ஹடம் ஆசிரயமாம்.

(இ-ள்) அணிமாதி ஐசுவரியசித்தியை யல்லது கைவல்ய சித்தியை விரும்பும் யோகியால் ஹடயோகவித்தை மிக இரகசியமாய் வைக்கத்தக்கதாம். ஏனெனின், இரகசியமாய் வைக்கப்பட்ட ஹடவித்தை வீரிய (கெடுதலில்லாத ஐசுவரியத்தை அல்லது கைவல்யசித்தியை யுண்டாக்கும் சாமர்த்திய) முடையதாம். அப்படி இரகசியமாய் வைக்கப்படாத வித்தை வீரியமில்லாததாம். எ-று.

(அ-கை) இனி யோகாதிகாரிகளின் இலக்ஷணம் வருமாறு:-

ஜிதாக்ஷாய ஶாந்தாய ஸக்தாயைவ முமுக்ஷவே
விஹீநாய தோஷைர ஸக்தாய ஹோக்த்ரே |
அஹீநாய தோஷைஷ தம் ரக்ஷகமே தத்
வா ஜநையோ நதேயோ ஹடம் ஶுத்தராஜை ||

இந்திரிய ஜெயமுள்ளவனும், சாந்தனும், முக்தியில் ஆசக்தனும், தோஷங்களில்லாதவனும், போகத்தில் பற்றில்லாதவனும், குணமுள்ளவனுமாகிய முற்கூறிய அதிகாரிக்கு ஹடம் கொடுக்கத்தக்கதாம். அந்நியனு(அநதிகாரி)க்குக் கொடுக்கத் தக்கதன்று" என்றும்.

"விஹித கர்மக்ருத்ஸம்யக் காமஸங்கல்பவர்ஜிதம் |
யமைஶ்ச நியமைர்யுக்தம் ஸர்வஸங்கவிவர்ஜிதம் ||

விதிக்கப்பட்ட கர்மமுடையவனும், காமசங்கற்ப மில்லாதவனும், இயம நியமங்களோடு கூடியவனும், சர்வசங்கப்பரித்தியாகியும்,"

"க்ருதவித்யம் ஜிதக்ரோதம் ஸத்யதர்மபராயணம் |
குருஶுஶ்ரூஷணரதம் பித்ருமாத்ருபராயணம் ||
ஸ்வாஶ்ரமஸ்தம் ஸதாசாரம் வித்வத்பிஶ்ச ஸுஶிக்ஷிதம் ||

வித்தையுள்ளவனும், கோபத்தை வென்றவனும், சத்திய தருமத்தை விரும்பியவனும், குருபணிவிடையில் பிரியமுள்ளவனும், பிதாமாதாக்களை யுபசரிப்பவனும், தனது ஆசிரமத்திலுள்ளவனுமாகிய சதாசாரன் (நல்லொழுக்கமுடையோன்), வித்

துவான்களால் செவ்வையாக வுபதேசிக்கப்படுவன்" என்று யாஞ்ஞவல்கியராலும்.

"ஶிஶ்நோதரபராயைவ நதேயம்வேஷதாரிணே ‖

பெண்களைக்கூடுதலும் வயிறு வளர்த்தலுமே வேலையாயிருக்கும் வேஷதாரிகளுக்குக் கொடுக்கத் தக்கதன்று" என்று சிலவிடத்தும் சொல்லப்படுகின்றது.

இதில் யோகசிந்தாமணிகாரர்,

" ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஸ்த்ரீஶூத்ராணாம்ச பாவநம் |
ஶாந்தயே கர்மணாமந்யத் யோகாந்நாஸ்தி விமுக்தயே ‖

பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய ஸ்திரீ சூத்திரர்களுக்குக் கருமங்களின் சாந்தியாகிய முக்திக்கு யோகத்தைப்பார்க்கிலும் பரிசுத்தமானது வேறில்லை." என்னும் புராணவாக்கியங்களில் பிராணிமாத்திரத்திற்கு யோகத்தில் அதிகாரம் சொல்லப்பட்டிருந்தாலும், யோகத்தில் மோக்ஷமாகிய பலம் விரக்தனுக்கே யுண்டாகின்றது. ஆகையால் அவனுக்கே யோகாதிகாரம் உசிதம் என்கின்றனர்.

அப்படியே வாயுசங்கிதையில்,

"த்ருஷ்டே ததா நுஶ்ரவிகே விரக்தம் விஷயே மந: |
யஸ்ய தஸ்யாதிகாரோஸ்மிந் யோகே நாந்யஸ்ய கஸ்யசித் |

இகலோகபரலோக விஷயங்களில் விரக்தியடைந்த மனதுடையவனுக்கே இந்த யோகத்தில் அதிகாரமுண்டு. வேறொருவனுக்கு மில்லை." என்றும்,

சுரேசுவராசாரியரால்,

" இஹாமுத்ர விரக்தஸ்ய ஸம்ஸாரம் ப்ரஜிஹாஸத: |
ஜிஜ்ஞாஸோரேவ கஸ்யாபி யோகேஸ்மிந் அதிகாரிதா ‖

இகலோகபரலோகங்களில் விரக்தனும், சம்சாரத்தைத் தள்ளும் விருப்பத்தால் யோகத்தை அறிய விரும்புவோனுமாகிய ஒருவனுக்கே இந்தயோகத்தில் அதிகாரமுண்டு" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது.

அன்றியும்.

,, நைதத்தேயாது ர்விநீதாயஜாது
ஜ்ஞாநம்குஹ்யம்தத்விஶிஷ்டாய |
ஈஷ்வநிஹிஷ்வநாந்நவவாசா
நேவீகொவாணிநஷ்டஹெணாவிஶாய ||

இதைத் துன்மார்க்கர்களுக்கு ஒருக்காலுந் தரலாகாது அதுவும் செவ்வையாகப் பலிக்கும்பொருட்டு இரகசியமாயறியத் தக்கது. இதைத்தகாத இடத்தில் வைத்தலாலேயே சரஸ்வதி யானவள் நம்மை வெகுகாலத்திற்குக் கோபத்தால் தகிப்பள்" என்று மேலோர்களாலும் சொல்லப்பட்டிருக்கின்றது. (கக)

(அ-கை) இனி ஹடாப்பியாசத்திற்குத் தக்க இடத்தைக் கூறுகின்றார்:—

ஸுராஜ்யே தாா்மிகே தேஶே ஸுபிக்ஷே நிருபத்ரவே |
தநு:ப்ரமாணபர்யந்தம் ஶிலாக்நிஜலவர்ஜிதே ||
ஏகாந்தே மடிகாமத்யே ஸ்தாதவ்யம் ஹடயோகிநா ||கஉ||

(இ-ள்) நல்ல ராஜ்யமும், தர்மமுள்ளதும், சுபிக்ஷமுள்ளதும் (பஞ்சமில்லாததும்), திருடர் புலிமுதலியவற்றின் உபத்திரவமில்லாததுமாகிய தேசத்தில், * வில்லளவு கல்லும் அக்கினியும் ஜலமுமில்லாத ஏகாந்தமாகிய சிறு மடத்தில் ஹடயோகியானவனிருக்க வேண்டும். எ-று.

இராஜாவின் கருமமாவது அல்லது தன்மையாவது எதில் நன்மையாயிருக்கிறதோ அது நல்லராஜ்யமெனப்படும். "யதாராஜா ததாப்ரஜா அரசனெவ்வண்ண மவ்வண்ணங்குடிகளும்" என்னும் முதியோர்மொழியால் இராஜனது நன்மையால் குடிகளுடைய நன்மையுங்குறிப்பிக்கப்பட்டது. தர்மமுள்ளதென்பதனால், ஹடாப்பியாசிகளுக்கு அநுகூலமாகிய ஆகாரமுதலியவற்றின் இலாபங் குறிப்பிக்கப்பட்டது.

சுபிக்ஷமுள்ளதென்றதனால் வருத்தமின்றி அவை (ஆகாரமுதலியன)கிடைக்குமென்பது குறிப்பிக்கப்பட்டது. இவற்றால்

---

* இது யோகதண்டலி உபநிஷத்திலுள்ளது.

அத்தேசம் வெகுகாலம் வசிக்கத்தக்கதாமென்பது குறிப்பிக்கப் பட்டது.

வில்லளவு என்பதனால் ஆசனத்திற்கு நாலுமுழம்வரையில் கல் * அக்கினி ஜலமுதலியவைகள் இருக்கலாகாவென்பது

---

* அக்கினி ஜல முதலியனவுள்ள இடம் யோகாப்பியாசத்திற்குரியன வாகாமை.

"ஸஶப்³தே³ ஸாக்³நிஜலாஶ்ரயே ஜீர்ணே கோ³ஷ்டே² சதுஷ்பதே² |
ஶார்கரே நதீ³தீரே ஶ்மஶாநே ஸஸரீஸ்ருபே ||

சப்தமுள்ளதும், அக்கினி ஜல நெருங்கியுள்ளதும், ஜீர்ணமான பசுக் கொட்டிலும், நாற்சந்தியும், சருகுகளுள்ளதும், நதியிலும், மயானத்தி லும், பாம்புள்ளதும்.

ஸப⁴யே கூபதீரே வா சைத்யவல்மீகஸஞ்சயே |
தே³ஶேஷ்வேதேஷு தத்த்வஜ்ஞோ யோகா³ப்⁴யாஸம் விவர்ஜயேத் ||

பயமுள்ளதும், கிணற்றின் கரையும், சைத்திய(பலிஸ்தான)மும் வன்மீகத்தி (புற்றி) னால் கூடினமானதுமான இத்தன்மைய இடங்களி லிருந்து யோகாப்பியாசஞ் செய்தலைத் தத்துவமுணர்ந்தவன் விடவேண்டு மென்று" மார்க்கண்டேயத்தும்.

"நாக்³ந்யாஶ்ரயே ஜலாஶ்ரயே ஶுஷ்கபர்ணசயே ததா² |
ந ஜந்துமஶகாகீர்ணே ஸர்பஶ்வாபதஸங்குலே ||

அக்கினியுள்ளவிடத்தும், ஜலமுள்ளவிடத்தும், சருகுமயமாயுள்ள விடத்துமிருக்கலாகாது கொசுஈடி பூச்சிகள் மொய்க்குமிடத்தும், பாம்பு நாய் முதலியன சூழ்ந்துள்ள இடத்துமிருக்கலாகாது."

"ந து³ஷ்டஸத்த்வஸம்பூர்ணே ஸப⁴யே து³ர்ஜநாவ்ருதே |
ஶ்மஶாநே சைத்யவல்மீகே ஜீர்ணாகா³ரே சதுஷ்பதே² ||

துஷ்ட மிருகங்கள் நிறைந்ததும், பயமுள்ளதும், துஷ்டஜனங்களாற் சூழப்பட்டதும், மயானமும், சைத்தியமும், புற்றும், ஜீர்ணமானவீடுக ளும், நாற்சந்தியுமான இடங்களிலிருக்கலாகாது."

நதீ³நத³ஸமுத்³ராணாம் தீரே ரத்²யாந்தரேऽபி வா |
ந ஜீர்ணாராமகோ³ஷ்டா²தௌ³ நாநிஷ்டே ந ச நிந்தி³தே ||

நதி நத சமுத்திர தீரங்களிலும் வழிகளிலுமிருக்கலாகாது. ஜீர்ண மான நந்தவனம் பசுக்கொட்டில் முதலியவற்றிலு மிருக்கலாகாது. இஷ்ட மில்லாவிடத்திருக்கலாகாது, நிந்திக்கப்படுமிடத்து மிருக்கலாகாது." என்று சிவபுராணத்தும், மற்றுமநேகவுபநிஷத முதலியவற்றிலும் கூறியி ருத்தல் காண்க.

பொருள். அதனல் சீதோஷ்ணவிகாரங்கள் இல்லாமை குறிப்பிக்கப்பட்டது.

ஏகாந்தமாவது ** ஜனங்களில்லாத விடம். இதனல் ஜனங்களது சேர்க்கையில்லாமையாம் கலகமுதலியவைகளில்லை யென்பது குறிப்பிக்கப்பட்டது. ஜனசங்கமிருந்தால் கலகமுதலியவை யுண்டாகவே செய்யும்.

அப்படியே பாகவதத்தில்.

,, வாஸெஸஹூ நா௱கலஹொ ஹவெஷுவா தஷ்ராவயொரவி |

அநேகர் வசிப்பதால் கலகமுண்டாகும். இருவரிருந்தாலும் வார்த்தையுண்டாகும்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. மடத்தின் மத்தியிலென்றமையால், குளிர் வெயில் முதலியவற்ருலுண்டாகும் கிலேசமில்லாமை குறிப்பிக்கப்பட்டது.

---

** ஜனங்களில்லாத இடமுதலியன யோகாப்பியாசத்திற்குரியனவென்பது.

"ஶுஹெகாலெ ஶுஹெஷெஶெ ஶிவக்ஷேத்ராதிகெ வா நஃ |
விஜநெ ஜந்துராஹிதெ நிஶ்ஶப்டெ பாயவஜிதெ ‖

சுடகாலத்தில் சுபதேசத்தில் சிவக்ஷேத்திர முதலிய வற்றில் ஜனங்களில்லாததும், ஜந்துக்களில்லாததும், சப்தமில்லாததும், பாதமின்றியதும்,

"ஸுவஷ்விஷெ ஷுெ ஸஉஜெ ஜூய யூவாதிவாஹிதெ ‖
உகுஸுஷ்ஸரோகீணெ விதாநாதிவிஹிதெ ‖

செவ்வையாய் மெழுகப்பட்டதும், காட்சிக்கினியதும், கந்தம் தூப முதலியவற்றினல் பரிமளிக்கப்பட்டதும், உதிர்ந்தபுஷ்பங்கள்நிறைந்ததும், விதான (மேற்கட்டி) முதலியவற்ரு லலங்கரிக்கப்பட்டதும்.

"கஸுஷவெஷ்ஸமிதெதாயஹயமூலஸநிதெ |

அரும்பு, மலர், சமித்து, நீர், பழம், கிழங்கு என்பவற்ருேடு கூடியதுமான இடத்திலிருந்து யோகாப்பியாசம் செய்யவேண்டு மென்று மார்க்கண்டேயத்தும் மற்றும் சிவபுராணம் உபநிஷத முதலியவற்றிலும் கூறப்பட்டுள்ளது.

**யோகாப்பியாசாரம்ப காலம் :**—வசந்தரிதுவான சித்திரை வைகாசி மாதங்களிலும், சரத்ரிதுவான ஐப்பசி கார்த்திகை மாதங்களிலும் யோகமாரம்பிக்கின் சரீரத்தி லெவ்விதரோகமு முண்டாகாது நிர்விக்கினமாய் நிறைவேறும்,

இங்கே "𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌹𑌾𑌰𑌵𑌿𑌹𑌾𑌰𑍇𑌣 𑌹𑌠𑌯𑍋𑌗𑌸𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 । யுக்தமான ஆகார விஹாரங்களால் ஹடயோகத்தினது சித்தியின் பொருட்டு" என்னும் பாதிசிலரால் சேர்க்கப்பட்டிருத்தலால் உரைசெய்யப்படவில்லை. மூலசுலோகங்களுக்கு மாத்திரம் உரை செய்யப்பட்டது. இப்படியே மேலும் எந்தச் சுலோகங்கள் என்னால் வியாக்கியானம் செய்யப்படாதனவாக இந்நூலிற் காணப் படுகின்றனவோ, அவைகளெல்லாம் இடையிற் சேர்கப்பட்டன வாக அறியத்தக்கனவாம். (கஉ)

(அ-கை) இனி மடத்தின் இலக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

𑌅𑌲𑍍𑌪𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌗𑌰𑍍𑌤𑌵𑌿𑌵𑌰𑌂 𑌨𑌾𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑌨𑍀𑌚𑌾𑌯𑌤𑌂
𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌗𑍋𑌮𑌯𑌸𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑌿𑌪𑍍𑌤𑌮𑌮𑌲𑌂 𑌨𑌿𑌶𑍍𑌶𑍇𑌷𑌜𑌨𑍍𑌤𑍂𑌜𑍍𑌝𑌿𑌤𑌂 ।

(இ-ள்) சிறுவாயிலுள்ளதாய்ப் பலகணியும் (ஜன்னலும்) பள்ளமும் பெருச்சாளி முதலியவற்றின் வளையுமில்லாததாய், மிக வுயரமும் மிகத்தாழ்வுமகலமுமில்லாததாய், பசுஞ்சாணத்தாலீர முண்டாகும்படி செவ்வையாய் மெழுகப்பட்டதாய், நின்மலமாய், கொசு மூட்டுப்பூச்சி முதலிய எந்த ஜெந்துக்களுமில்லாததாய்,

𑌬𑌾𑌹𑍍𑌯𑍇 𑌮𑌣𑍍𑌡𑌪𑌵𑍇𑌦𑌿𑌕𑍂𑌪𑌰𑍁𑌚𑌿𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌕𑌾𑌰𑌸𑌂𑌵𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌂
𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌯𑍋𑌗𑌮𑌠𑌸𑍍𑌯 𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑌿𑌦𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑍈𑌹𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌿𑌭𑌿𑌃 ॥

மடத்திற்கு வெளியே மண்டபம் வேதி (மேடை) முதலியவற்றால் மிகவும் இரமணீயமாய், நாற்புறமும் சுவராற்சூழப்பட்டதாயிருக்க வேண்டுமென்று ஹடாப்பியாசிகளாகிய சித்தர்களால் * யோக மடத்தின் இவ்விலக்ஷணம் சொல்லப் பட்டிருக்கின்றது. எ-று.

மிகவுயரமாயும் தாழ்வாயுமிருந்தால் ஏறுதலிறங்குதலினால் அதிகவருத்தமுண்டாம்; அகலமாயிருந்தால் தூரமாகப் பார்வை செல்லும். ஆகையால் அதை நிவர்த்திக்கும் பொருட்டு மிகவுயரமும் தாழ்வும் அகலமுமில்லாததாமென்று சொல்லப்பட்டது.

---

*** இவ்வாறே மடத்தி னிலக்ஷணம் சதாசிவ யோகீந்திரர்களாற் செய்யப்பட்ட சிவயோகதீபிகையிலும், "இயமநியமங்களோடு கூடிய புருஷன் சகலசங்கமும் விட்டவனாய், கல்வியுடையவனாய், சத்தியதரும முடையவனாய், கோபத்தை ஜெயித்தவனாய், குரு சிசுரூஷை செய்பவனாய்**

இப்படியே நந்திகேசுவரபுராணத்திலும்

"ஸுசிரம் ஸுவிந்யாஸம் ஸுமநோஜ்ஞம் ஸுவாஸிதம் ||
தூபாமோதாதிஸௌரப்யை: புஷ்பாத்யைரலங்க்ருதம் |

புத்திமானானவன் அழகாயும், விந்யாசமாயும், மநோஜ்ஞமாயும் (மனதிற்குப் பிரியமுண்டாக்கத் தக்கதாயும்), வாசனையேற்றப்பட்டதாயும், தூப பரிமளாதிவாசனை புஷ்பமுதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டதாயும்"

ஸுநிதீயம் நதீவ்ருக்ஷவஹ்நிநீரைரலங்க்ருதம் |
ஸித்தஸங்கநிஷேவிதம் ஸித்திப்ரதம் ||
க்ஷேத்ரே தீர்த்தே க்ராமே நகரே வா ... |

பிதாமாதாக்களால் விதிச்சப்பட்டவனாய், தனது ஆசிரமத்திற்குரிய நல்லொழுக்கமுடையவனாய், வித்துவான் (ஞானி) களால் உபதேசிக்கப்பட்டவனாய், பழம் கிழங்கு நீர் முதலியவற்றோடு கூடிய தவ வனத்தையடைந்து இரமமியமானதும், வேதகோஷத்தோடு கூடியதும், தத்தம் வருணாசிரம தருமங்களிற் பொருந்தியுள்ள பிரஹ்மவித்துக்களாற் சூழப்பட்டதும், பழம் கிழங்கு புஷ்பம் நீர் முதலியவைகள் நிறைந்துள்ளதுமான க்ஷேத்திரம், அல்லது நதிதீரம், அல்லது கிராமம், அல்லது நகரமென்னு மிடங்களில் உயரமும் ஆழமும் அகலமுமில்லாததாய்ச், சிறுவாயிலுள்ளதாய்க், கோமயமுதலியவற்றால் மெழுகப்பட்டதாய், எல்லாவிதத்திலும் பாதுகாப்புள்ளதாயிருக்கும் ஒரு நல்ல சோபனமாகிய மடத்தைச்செய்து, அதில் வேதாந்தசிரவணம் செய்துகொண்டு யோக மப்பியசிக்கக்கடவன்" என்று சாண்டில்யோபநிஷத்திலும் இவ்வாறே விரிவாக யோகதத்துவோபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஹடசங்கேதத்தில்' "யோகமடம் காற்றுப்போகாத குகையும், நான்கு முழ அகலநீளமுள்ளதும், வட்டமாகியதுவாரம் (வாயில்) உள்ளதும், தேகதோஷங்களைக் கெடுப்பதும், வாயுசோஷத்தை விலக்குவதும், நாடிகளிலுள்ள மலத்தைச் சுத்திசெய்து உள்ளே விகாசத்தைத் தருவதும், ஹிருதயத்தில் ஸ்திரத்தன்மையை யுண்டுபண்ணுவதுமாயிருக்கவேண்டு" மென்று சொல்லப்பட்டிருக்கிறது.

யோகமடத்திலாவது குகையிலாவது எண்ணெய்விளக்கெரிக்கலாகாது. ஏனெனின், எரியும் அவ்விளக்கைப் பார்க்குங்கால் செவ்வையாய்க் கும்பிக்கப்பட்ட பிராணன் சீக்கிரம் வேறு மார்க்கம் வெளிப்படும், ஆகையால் நெய்விளக்கே யெரிக்கவேண்டும்,

முனிகள் தீர்த்தங்கள் நதிகள் விருக்ஷங்கள் பதுமினிகள் மலைகள் முதலியவற்ருல் சிறப்பிக்கப்பட்டதாயும், சித்திரகருமத்தாற் கட்டப்பட்டதாயும், வெவ்வேறுவிதமான சித்திரங்களால் விசித்திரம்செய்யப்பட்டதாயுமுள்ள யோகக் கிரகத்தை நல்ல இரம்மியமான வழியோடு செய்யவேண்டும்.

ஊர்த்வஸ்தா விக்ரமதாம்ஸ்தாம் தாந் ந்ரூம் நீந்யாதி ஸிந்தூஸ்ச ||
விஷ்ணுர்த்வஸ்தா விக்ரமதாந் திரஸ்ய ரூர்த்வே வேஷு ||

சித்திரத்திலுள்ள சித்தர்களைப் பார்த்து மதி மிகமுயற்சியுடையதாகும். சித்திரத்திலுள்ள சாந்தமுடைய முனிவர்களைப் பார்த்து மனம் சாந்தியடையும்.

ஸம்யோமாஹாஸ்யாய விவேஷ்டாஸாரணேஷு ||
ஸ்மாநம் ஸஹாவோரம் நரகாம்ஸ்ச விவேசயேத் |

யோகக்கிரகத்தின் மத்தியில் சம்சாரமண்டலத்தை யெழுத வேண்டும். ஓரிடத்தில் மகாகோரமான மயானத்தையும், நரகங்களையும் எழுதவேண்டும்.

தாந்த்வஸ்தா பீஷணாகாராந் ஸம்ஸாரே ஸாரவர்ஜிதே |
நிர்வேதோ ஜாயதே ஸீக்ரம் ஸித்திவாஞ்சகஃ ||
வ்யாதிதாஞ்ச ஜராஜீர்ணாந் தாந் மத்தாம்ஸ்ச வ்ரணாந் ||

பயங்கரவடிவமுள்ள அவற்றையும், வியாதியுள்ளவர்களையும், தாழ்ந்தவர்களையும், மத்தர்களையும், ஒழுகுகின்ற இரணமுடையவர்களையும் பார்த்து, சித்தியில் விருப்பமுள்ள யோகியானவன் சாரமற்ற சமுசாரத்திற் பிரியமில்லாதவனுகின்ருன்" என்று மடத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

(அ-கை) மடத்தின் லக்ஷணத்தைக்கூறி, மடத்திற் செய்ய வேண்டியதின்னதெனக் கூறுகின்ருர்:—

ஏவம்விதே மடே ஸ்தித்வா ஸர்வசிந்தாவிவர்ஜிதஃ |
குருபதிஷ்டமார்க்கேண யோகமேவ ஸமப்யஸேத் || ௧௫ ||

(இ-ள்) முற்கூறிய இலக்ஷணமுடைய மடத்திலிருந்துகொண்டு, சகலசிந்தைகளும் நீங்கியவனுய், குருவினுலுபதேசிக்கப்பட்

டவழியாக யோகத்தையே யென்றும் செவ்வையாக அப்பியசிக்கவேண்டும். எ-று.

யோகத்தையே யென்பதிலுள்ள ஏகாரத்தினால், யோகாப்பியாசத்திற்கு அந்நியமானவைகள் யோகத்திற்கு விக்கினத்தைச் செய்வனவா மென்பது சூசிப்பிக்கப்பட்டது. அது,

ஶாஜயொமஸ்ஹிஜ்ஜ ஸெவெத ஹாமாஸதா ।
குருவதா ஸாஜெ ந கடாதுாணஜபாவாயஃ ॥

அறிவுள்ளவன் வாயுஜயம் சித்தித்துள்ள குருவை யெப்போதும் சேவித்து, அந்தக் குருவின் பிரசாதத்தால் பிராணஜயம் செய்யவேண்டும்" என்று யோகபீஜத்திலும்,

வெதாந்ததகெ ரதிரிஸராமமெஷு
நாநாவிதெயஃ ஶாஸ்த்ரகலாபகெஷு ।
யாநாதிஹிஃஸத்காரகெண ந ரமா
ஶிந்தாமணிரெஹ ரகமாவிஹாய ॥

சிந்தாமணியானது குரு ஒருவரையன்றி மற்ற வேதாந்த தர்க்கவசனங்களாலும், ஆகமங்களாலும், நானாவித சாஸ்திரக் கூட்டங்களாலும், தியானமுதலிய நற்செய்கைகளாலும், அறியத் தக்கதன்று" என்று இராஜயோகத்திலும்,

" கூவாயரொஜெமஸவஹுஸுவாவ ஸ்ஸிரயீஃஸ்வயஃ ।
யயொகஜஹைதெதந வராவொதவிவநிவரூதிஃ ॥

ஸ்திரபுத்தியுடையவன் தான் ஆசாரிய னிடத்தினின்றும் யோகத்தின் சகலஐசுவரியங்களையும் பெற்றுச், சொல்லியவண்ணமடைகிறான்" சுகத்தையும் பெறுகின்றான். என்று ஸ்கந்தபுராணத்திலும்,

" மாவஸாதாஹுஹைத பெமஷோமஸாயாதஃ ।
ஶிவஸாதாஹுஹைத யொமஸிஜிஞ்ஶாஶ்வதஃ ॥

குருப்பிரசாதத்தினால் அஷ்டாங்கத்தோடுகூடிய யோகத்தையும் சிவப்பிரசாதத்தால் சாசுவதமாகிய யோகசித்தியையும் அடைகிறான்" என்று சுரேசுவராசாரியராலும்,

“யஸ்ய தேவே பரா பக்திர்யதா தேவே ததா குரௌ |
தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாஶந்தே மஹாத்மந: ||

எவனுக்குத்தெய்வத்தினிடத்தில் மேலானபக்தியும், தெய்வத்தினிடத்தி லிருப்பதுபோலவே குருவினிடத்திலுமிருக்கின்றதோ அப்படிப்பட்ட மஹாத்மாவுக்கே சொல்லிய இவ்வர்த்தங்கள் பிரகாசிக்கும்” என்று சுவேதாசுவதரவுபநிஷத்திலும், “ஆசார்யவாந் புருஷோ வேத ஆசாரியனையுடைய புருஷன் அறிவான்” என்று சாந்தோக்கியசுருதியிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. (௧௪)

(அ-கை) இனி யோகாப்பியாசப் பிரதிபந்தங்களைக் கூறுகின்றார்:—

அத்யாஹார: ப்ரயாஸஶ்ச ப்ரஜல்போ நியமக்ரஹ: |
ஜநஸங்கஶ்ச லௌல்யம் ச ஷட்பிர்யோகோ விநஶ்யதி || ௧௫ ||

(இ-ள்) பசிக்குவேண்டியதைவிட அதிகமானபோஜனம், சிரமத்தையுண்டாக்குதற்கநுகூலமாகிய வியாபாரம், அதிகப்பேச்சு, (பிராதக்காலஸ்நானம், இராத்திரி போஜனம், பலாஹார முதலிய) நியமத்தைக்கொள்ளுதல், ஜனசங்கம், சஞ்சலத்தன்மை யென்னுமிவ்வாறினாலும் * யோகம் விசேஷமாய்க் கெடுகின்றது. எ-று.

---

* இவ்வாறே,
“நாஜீர்ணே'த்ர ப்ரஸேகார்த்தே ந ச விண்மூத்ரஸங்குலே |
ந ஶ்ராந்தோ நாதிஸாரே ச நாதிபுக்த: ஶ்ராந்தித: |
ந சாதிவ்யாகுலசித்தோ ந சாதிக்ஷுத்பிபாஸித: |
நாபி ஸ்வகுருகார்யாத்யவ்யாஸக்தோ யோகமாசரேத் ||

அஜீர்ணம், பூரிப்புரஸம், வாந்தி யென்பவையுள்ளபோது யோகமாசரித்தல் கூடாது. மலமூத்திரங்களால் தூஷிக்கப்பட்டபோதும் சத்திசெய்யும்போதும் கூடாது. அதிசாரத்திலும் கூடாது. அதிகமாயுண்டபோதும், சிரமமுள்ளபோதும் கூடாது. மிகவியாகூலத்தாற் கலங்கியபோதும் கூடாது. மிகப்பசிதாகமுடையவனானபோதும் கூடாது தனது குருவின் கர்ம முதலியவற்றில் பொருந்தியுள்ளபோதும் கூடாது.” என்று சிவபுராணத்திலும்,
“நாயுக்த: க்ஷுத: ஶ்ராந்தோ ந ச வ்யாகுலசேதந: ||”
“நாத்யஶிதே நசைவாநஶிதே நாஸ்வப்நிதாதிகே |
காலேஷ்வேஷு ந யுஞ்ஜீத யோகம் யோகீ ந தத்வவித் ||”

காமமுதலியவற்றை யுண்டாக்குவதாயிருத்தலால் ஜனசங்கம் பிரதிபந்தகமெனப்பட்டது. (கரு)

---

வயிற்றிரைச்சலுள்ளவனும், பசித்தவனும், களைத்தவனுமாசரிக்கலாகாது. கலங்கிய கண்ணுடையவனு மாசரிக்கலாகாது." "மிக்க சீதமுள்ளபோதும் கூடாது. உஷ்ணத்திலும் கூடாது. துவந்துவத்திலும் ஜலவாயுவுள்ள இக்காலங்களிலும் யோகதற்பரன் யோகத்தைப் பழகலாகாது." என்று மார்க்கண்டேயத்தும் கூறியுள்ள சமயங்களில் செய்யும் அப்பியாசத்தினாலும் யோகம் விசேஷமாய்க் கெடுகின்றது.

இஃதன்றி யோகாப்பியாசாந்தராயங்கள் சிவபுராணத்தில்,

"ஆலஸ்யம் வ்யாதயஸ்தீவ்ராஃ ப்ரமாதஃ ஸ்தாநஸம்ஶயஃ |
அநவஸ்தித சித்தத்வமஶ்ரத்தா ப்ராந்திதர்ஶநம் ||
துஃகாநி தௌர்மநஸ்யஞ்ச விஷயேஷு ச லோலதா |
தஶைதே யுஞ்ஜதாம் பும்ஸாமந்தராயாஃ ப்ரகீர்த்திதாஃ ||

க. ஆலசியம், உ. தீவிரவியாதிகள், ங. பிரமாதம், ச. ஸ்தானசம்சயம், ரு. நிலைப்பின்றியமனத்தன்மை, சு. அசிரத்தை, எ. பிராந்திதர்சனம், அ. துக்கங்கள், கூ. மனக்கலக்கம், க0. விஷயப்பற்று என்னும் பத்தும்யோகஞ்செய்கின்ற புருஷனுக்கு விக்கினங்கள் என்று சொல்லப்படுகின்றன.

ஆலஸ்யமலஸத்வஞ்ச யோகிநாம் தேஹசேதஸோஃ |

அவற்றுள், க. ஆலசியம் யோகிகளின் தேகமனமிரண்டன் சோர்வு.

யா தாதுவைஷம்யதோஷஜா வ்யாதயஃ கர்மதோஷஜாஃ ||

உ. சரீரதாதுக்களின் விஷமத்தன்மையினாற் பிறப்பனவும் கர்மதோஷத்தாற் பிறப்பனவும் தீவிரவியாதிகளாம்.

ப்ரமாதோ நாம யோகஸ்ய ஸாதநாநாமபாவநா |

ங. பிரமாதமென்பது யோகத்தினது சாதனங்களினின்மை.

இதம் வேத்யுபயாம்ஶம் விஜ்ஞாநம் தத்ஸ்தாநஸம்ஶயஃ ||

ச. இதுவோ அன்றோவென்று இரண்டனைப்பற்று முணர்ச்சியாகிய அது ஸ்தானசம்சயம்.

அப்ரதிஷ்டா ஹி மநஸஸ்த்வநவஸ்திதிருச்யதே |

ரு. மனது நிலையாதிருத்தலே நிலைப்பின்றிய மனத்தன்மையாம்.

அஶ்ரத்தா பாவரஹிதா வ்ருத்திர்வை யோகவர்த்மநி ||

சு. அசிரத்தையாவது யோகமார்க்கத்தில் விசுவாசமின்மை.

விபர்யஸ்தா மதிர்யா ஸா ப்ராந்திதிருஷ்டிரிதீர்யதே |

(அ-கை) இனியோக சித்திகளைத் தருபவைகளைக் கூறுகின்றார்:—

உத்ஸாஹாத்ஸாஹஸாத்தைர்யாத் தத்வஜ்ஞாநாச்ச நிச்சயாத் |
ஜநஸங்கபரித்யாகாத் ஷட்பிர்யோக: ப்ரஸித்யதி || ௧௬ ||

---

௭. விபரீதப்பட்ட புத்தி எதுவோ அது பிராந்திதரிசனமென்று சொல்லப்படுகின்றது.

து:கமஜ்ஞாநஜம் பும்ஸாம் சேதஸ்யாத்யாத்மிகம் விது: ||

௮. துக்கமாவது அஞ்ஞானத்தினல் புருஷர்களது சித்தத்திலுண்டாவதனை ஆத்யாத்மிக மென்றறிவர்.

ஆதிபௌதிகம் தேஹோத்தம் யத்து:கம் ப்ராக்க்ருதை: |

எத்துக்கம் முன் செய்யப்பட்டவைகளால் சரீரத்திலுண்டாக்கியதோ அது ஆதிபௌதிகம்.

ஆதிதைவிகஸம்ஜ்ஞம் ததஶநாத்யம்புவிஷாதிஜம் ||

இடி அப்பு விஷமுதயவற்றாலாவது ஆதிதைவிகம்.

இச்சாத்வேஷஜம் க்ஷோபம் சித்தஸ்ய ப்ரவக்ஷ்யதே |

௯. இச்சாத்வேஷங்களாலாம் க்ஷோபம் மனக்கலக்கமாம்.

விஷயேஷு விசித்ரேஷு விமோஹஸ்து விமூடதா ||

௧௦ விசித்திரமான விஷயங்களிலுண்டாம் மயக்கம் (அதில்விஷயப்பற்றும்.") என்று பத்து விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வாறே யோகதத்துவோபநிஷத்திலும்.

ப்ரதமாப்யாஸகாலே து விக்நா: ஸ்யுச்சதுராநந |
ஆலஸ்யம் கத்தநம் தூர்த்தகோஷ்டீ மந்த்ராதிஸாதநம் ||
தாதுஸ்த்ரீலௌல்யகாதீநி ம்ருகத்ருஷ்ணாமயாநி வை |
ஜ்ஞாத்வா ஸுதீஸ்த்யஜேத்ஸர்வாந் விக்நாந் புண்யப்ரபாவத: ||

பிரஹ்மாவே! முதல் யோகாபியாசகாலத்தில் ஆலசியம், பேச்சு, தூர்த்தகோஷ்டி, மந்திராதிசாதனம், தாது, ஸ்திரீப்பற்று முதலியன விக்கினங்களாம் நல்லபுத்திமான் கானற்சலவடிவமாக அறிந்து புண்ணியப் பிரபாவத்தால் எல்லாவிக்கினங்களையும் விடவேண்டும்." என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(இ-ள்) க. உற்சாகம், உ. சாகசம், ௩. தைரியம், ச. தத்துவஞானம், ரு. நிச்சயம், சு. *ஜனசங்கப்பரித்தியாகம் என்னுமிவ்வாறினாலும் யோகம் பிரசித்தியாகின்றது. எ-று.

(க) விஷயத்தில் பிரவிருத்தித்துள்ள சித்தத்தைத் தடுப்பேனென்னும் முயற்சி, உற்சாகம்.

(உ) சாத்தியமாகும் சாத்தியமாகாதென்பதைக் கவனியாமல் திடீரெனப் பிரவிருத்தித்தல், சாகசம்.

(௩) ஜீவனுள்ளவரையிலும் சாதிப்பேனாகவென்னுந் துக்கமில்லாமை தைரியம்.

(ச) விஷயங்கள் கானற்சலம்போல அசத்தியம்; பிரஹ்மமே சத்தியமென்னும் யதார்த்தமாகிய ஞானம், அல்லது யோகங்களில் யதார்த்தமாகியஞானம் தத்துவஞானமாம்.

(ரு) சாஸ்திரத்திலும் குருவாக்கியத்திலுமுள்ள விசுவாசமாகிய சிரத்தை, நிச்சயமாம்.

(சு) இங்கே யோகாப்பியாசத்திற்குப் பிரதிகூலமானவர்களது சங்கம் ஜனசங்கமெனப்பட்டது. (கசு)

---

"க. பகலில் தூங்குவதனாலும், இரவில விழித்தலாலும், அதிமைதுனத்தினாலும், மிகுந்தநடையினாலும், மலமூத்திரங்களை அடக்குதலாலும் விஷமமான உணவின் குற்றத்தினாலும், பிரயாசத்தாலும், பிராணசிந்தனத்தினாலும், சீக்கிரம் ரோகமுண்டாகி தடுக்குமாயின் யோகி யோகாப்பியாசத்தினால் எனக்குரோகமுண்டாயிற்று என்று சொல்லுகின்றான் அதனால் அப்பியாசத்தினை விடுகின்றான். இவ்விதமாக முதல் விக்கினம் சொல்லப்படுகின்றது. உ. இரண்டாவது சம்சயமெனப்படுவது. ௩. மூன்றாவது மிக்க மதர்ப்பு. ச. நான்காவது சோம்பல் எனப்படுவது, ரு. ஐந்தாவது நித்திரை வடிவினது சு. ஆறாவது விரதி (யோகத்தில்பிரியமின்மை) எ. ஏழாவது பிராந்தி (மயக்கம்) அ. எட்டாவது விஷயம், கூ. ஒன்பதாவது அநாக்கியம் கய. பத்தாவது யோகதத்துவத்தினைப் பெறாமை இத்தன்மைய இப்பத்து விக்கினங்களையும் அறிஞன் விசாரத்தினால் நீக்கவேண்டும்" என்று யோகாப்பியாசவிக்கினம் பத்தும் யோகதண்டலியுபநிஷத்திற் கூறப்பட்டிருக்கின்றன.

* "சம்சர்க்கத்தால் (சேர்க்கையால்) வெகு தோஷங்களும், சங்கமில்லாமையால் வெகு குணங்களுமுண்டாகின்றன. ஆகையால் யதியானவன் சகலப்பிரயத்தினத்தினாலும் எப்போதும் சங்கத்தை விடவேண்டு" மென்று பிரஹ்மஞானதந்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

### இயமம்.

“அஹிம்ஸா ஸத்யமஸ்தேயம் ப்ரஹ்மசர்யம் க்ஷமா த்ருதி: |
தயார்ஜவம் மிதாஹார: ஶௌசம் சைவ யமா தஶ || க ||

(இ-ள்) க. அஹிம்ஸை (கொல்லாமை), உ. சத்தியம், ங. அஸ்தேயம் (திருடாதிருத்தல்), ச. பிரஹ்மசரியம், ரு. க்ஷமை (பொறை), சு. திருதி (தைரியம்), எ. தயை, அ. ஆர்ஜவம் (நேர்மை), கூ. மிதமான ஆகாரம், கO. சௌசமென்னும் இப்பத்தும் * இயமமாம்.

---

* இயமம் பத்தினிலக்ஷணம் வருமாறு:—

(க) வேதத்திற்சொல்லிய பிரகாரமல்லாமல் வேறு எவ்விதத்தினாலும் மனோவாக்குக் காயங்களால் ஹிம்ஸை (கொலை) செய்யாதிருத்தல் அஹிம்ஸை (கொல்லாமை),

ஹிம்ஸையானது காயம் வாக்கு மனது என்பவற்றால் மூவகைப்படும். அவை ஒவ்வொன்றும் கிருதம் காரிதம் அநுமோதிதமென்னும் பேதத்தால் மூவகைப்படும்.

க. கிருதம் தன்னால் செய்யப்பட்டது.

உ. காரிதம் பிறரைக்கொண்டு செய்விப்பது

ங. அநுமோதிதம் ஒருவன் செய்வதைக்கண்டு நல்லது நல்லதென்று களித்தல்.

அவை ஒவ்வொன்றும், க. லோபமூலம், உ. குரோதமூலம், ங. அஞ்ஞானமூலமென்று மூவகைப்படும்,

(க) மாம்ஸம் தோல் முதலியவற்றை யுத்தேசித்துக் கொல்லுவது லோபமூலம்.

(உ) தனக்கு அபகாரஞ் செய்ததென்று கோபத்தால் கொல்லுவது குரோதமூலம்.

(ங) மோகத்தி (அறிவின்மையி) னால் செய்வது அஞ்ஞானமூலம்.

அவை ஒவ்வொன்றும் தனித்தனி மிருது, மத்தியம், அதிமாத்திரமென்று மூன்றுவகைப்படும்

அதிமாத்திர மென்பது தீவிரம். அதனினும் குறைந்தது மத்தியம். அதனினும் குறைந்தது மிருது. இவ்வாற்றால் ஹிம்ஸை இருபத்தேழு வகைப்படும்.

இவ்வாறே மேற் அசத்திய முதலியவற்றிலும் இயன்றவாறு பேதத்தினைக்கண்டு கொள்க அத்தன்மைய ஹிம்சையின்மை அஹிம்ஸையாம்,

ஆத்மாவை யறியாதிருத்தல் ஆத்மஹிம்ஸை யெனப்படும். அதன் விபரீதமான அதாவது ஆத்மா எல்லாவற்றிலுமுள்ளது, சேதிக்கப்படாதது,

கிரகிக்கத்தகாதது என்னும் புத்தியும் மேலாகிய அஹிம்ஸையெனப்படும். இதனால் அவனருகில் வைரமுள்ள பிராணிகளாகிய புலி பசுமுதலியன தமது வைரத்தை விடும்.

(உ) நேத்திரமுதலிய இந்திரியங்களால் கண்டவை கேட்டவை முதலியவற்றை அப்படியே சொல்லிவிடுதல் சத்தியம். எல்லாமுமாகிய பிரஹ்மமே சத்தியம்; மற்றவை அசத்தியமாமென்னும் புத்தியும் சத்தியமாமென்று மேலோர் கூறுவர். இதனால் சுவர்க்காதி பலத்தைக் கொடுக்குந்தன்மை வாக்கு மாத்திரத்தினால் சித்திக்கின்றது.

(ங) அந்நியர்களது துரும்பு இரத்தினம் பொன் முதலிய வெந்தப் பொருளையும் கவர எண்ணுதிருத்தல் அஸ்தேயம் (கள்ளாமை). ஆத்மாவினிடத்து அநாத்மத்தன்மையாக வியவகரியாதிருத்தலையும் அஸ்தேயமென்று ஆத்மஞானிகள் கூறுவர். இதன் பயன் :—திவ்வியரத்தினங்கள் அவன் முன் நிற்கும்.

(ச) இருது காலத்தில் தன்மனைவியைப் புணர்ந்து, அந்நிய மாதரை மனோவாக்குக் காயங்களால் விலக்கியிருத்தல் பிரஹ்மசரியம். இதனையே அஷ்டவிதமைதுனமில்லாமை யென்று கூறுவர். அவையாவன,

க. ஸ்திரீகளை ஆசையாய் நினைத்தல், உ. கீர்த்தனம், ங. கேளி (விளையாடுதல்), ச. பார்த்தல், ரு. இரகசியமாய்ப் பேசுதல், சு. சங்கற்பம், எ. நிச்சயம், அ. கிரியாநிவிருத்தி என்பன அஷ்டவிதமைதுனம். பிரஹ்மபாவனையில் மனஞ்சரித்தலையும் பிரஹ்மசர்யமென்று கூறுவர். இதனால் சரீரேந்திரிய மனதுகளில் எல்லாக்காரியங்களையும் செய்யும் சாமர்த்தியமுண்டாகும்.

(ரு) சத்துருக்கள்முதலியோர்களால் தனக்கு ஓர் துன்பம் வந்தவிடத்தும் கலங்காதிருத்தல் க்ஷமையெனப்படும். இதனால் சரீராபிமான மொழியும்.

(சு) வேதத்தினாலேயே சம்சாரம் நீங்கும் வேறுவிதத்தினால் நீங்காதென்னும் அறிவுண்டாதல் திருதி (நிலையுடைமை). யான் ஆத்மா அந்நியமல்லன் என்னும் உறுதியான எண்ணத்தையும் சிரேஷ்டமான திருதியென்று கூறுவர். இதனால் இச்சித்தபயன் பெறப்படும்.

(எ) எல்லாவுயிர்களையுந் தன்னைப்போற்காணுதல் தயை (இரக்கம்). இதனால் சர்வஜனப் பிரியத்துவமுண்டாம்.

(அ) புத்திரமித்திர களத்திராதிகளிடத்தும் பகைவரிடத்தும் தன்னிடத்தும் எப்போதும் சமபாவனைவைத்தல் ஆஜர்வம் (கபடமின்மை). இதனால் மனமலர்ச்சி யுண்டாகும்.

நியமம்.

தப: ஸந்தோஷ ஆஸ்திக்யம் தாநமீஸ்வரபூஜநம் ।
ஸித்தாந்தவாக்யஶ்ரவணம் ஹ்ரீமதீ ச ஜபோ ஹுதம் ॥ ௨ ॥
நியமா: ஸம்ப்ரோக்தா யோகஶாஸ்த்ரவிஶாரதை: ॥

**க. தவம், உ. சந்தோஷம், ங. ஆஸ்திக்கியம் (விசுவாசம்), ச. தானம், ரு. ஈசுவரபூஜனம், சு. சித்தாந்தவாக்கியசிரவணம், எ. லஜ்ஜை (நாணம்), அ. மதி, கூ. ஜபம், கo. விரதமென்னும் இப்பத்தும் * நியமமாம். எ-று.**

---

(கூ) யோகத்திற்கநுகூலமான போஜனத்தை அரைவயிறு ஆகாரமும் கால்வயிறு ஜலமுமாகக் கொள்ளுதல், **மிதாகாரமாம்.** இதனுல் பலவகை ஜாட்டிய முண்டாகாமல் ஆரோக்கிய முண்டாகும்.

(கo) சௌசம் பாகிய மாந்தரமென இருவகைத்தாம். அவற்றுள்,

தன் தேகத்தில் மண் முதலியவைகளிட்டு மலத்தை நீரினுற்கழுவுவது **பாகிய** (வெளி) **சௌசம்.**

நான் சுத்தன் என்னும் ஞானம், **ஆந்தர (உள்) சௌசம்.** இவற்றுள் ஞானசௌசமென்னும் ஆந்தரசௌசத்தைவிட்டுப், பாகியத்தையே பிரதானமாகவுடைய மூடர்கள் பொன்னைக் கைநெகிழவிட்டு ஓட்டைக் கிரகிக்கின்றவர்களை ஒப்பார். இதனுல் சத்துவகுண சம்பத்தியுண்டாகும். தனது சரீரத்தில் சுத்திகாணுது அருவருப்பும், பிறசரீரத்தினைத் தீண்டாமையுமுண்டாகும்.

இவ்வியமலக்ஷணம், **திரிசிகியுபநிஷத்து, தர்சனுேபநிஷத்து, சாண்டில்லியோபநிஷத்து, சூத்சங்கிதை** முதலியவற்றிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

* **நியமம் பத்தினிலக்கணம்** வருமாறு:—

(க) வேதத்திற் சொல்லியபடி கிருச்சிர சாந்திராயண முதலியவற்றுல் சரீரத்தையுலர்த்துதல் **தவம்.** மோக்ஷமென்பது யாது? பந்தமென்பது யாது? இந்தச் சம்சாரம் எப்படி வந்தது? என்று விசாரித்தலும் தவமெனப்படும். இதனுல் காயத்தின் அணிமாதி சித்தியும் இந்திரியங்களின் தூரதிருஷ்டி முதலிய சித்தியுமுண்டாம். **ஷூர்மி நீக்கமுமாம்.**

(உ) கிடைத்ததில் திருப்தியடைதல் **சந்தோஷம்.** பிரஹ்மலோக பரியந்த முண்டாகும் அவாவையொழித்து ஆத்மஞானத்தையே விரும்பி

யிருத்தலும் சந்தோஷமாமென்பர். இதனுல் உள்ளே நிரதிசய சுகமுண்டாம்.

(ங) சுருதி ஸ்மிருதிகளிற் சொன்னவற்றை விசுவசித் (நம்பு) தல் **ஆஸ்திக்கியம்.** இதனுல் இக பர சுகத்தைப்பெற்று முக்தியையும் பெறுவன்.

(ச) நியாயமாய்த் தேடியபொருளை அடியார்முதலியோர்களுக் களித்தல் **தானம்.** இதனுல் சகல பாபமும் குறையும்.

(ரு) தங்களுக் கியன்றபடி பிரஹ்ம விஷ்ணு ருத்திராதிகளைப் பூசித்தல் **ஈசுவரபூஜை.** இராகாதி குணங்களொழிந்து உண்மைபேசுகின்றவனுய் நல்லொழுக்கமுடையவனுய், ஹிம்ஸைமுதலியவைகளில்லாத கர்மத்தைச்செய்தலும் **ஈசுவரபூஜை** யெனப்படும். இதனுல் சமாதி சித்திக்கும்.

(சூ) சத்தியம் ஞானம் அநந்தம் பரமாநந்தமுதலிய லக்ஷணமுடையது பிரத்தியக்கு (அந்தராத்மா) என்றறிவது வேதாந்தசிரவணமென்னும் **சித்தாந்தசிரவணமாம்.** இதனுல் பிரஹ்மம் நித்தியம் ஜகத்து அநித்தியமென்னும் பரோக்ஷஞான முண்டாம்.

(எ) வைதிக லௌகிக மார்க்கங்களுக்கு விருத்தமாகிய கர்மங்களிற் பிரவிருத்திக்க நாணுதல், **இலஜ்ஜையா** (நாணமா)ம். இதனுல் நிஷித்தப் பிரவிருத்தி யுண்டாகாது.

(அ) சகல வைதிக கர்மங்களிலு முண்டாகும் சிரத்தை **மதியாம்.** இதனுல் கர்மம் பலத்தோடு கூடியதாகும்.

(கூ) வேதத்திற் சொல்லியபடி மந்திரங்களை அப்பியசித்தல் **ஜபம்,** கற்பசூத்திரம், வேதம், தருமசாஸ்திரம் புராணேதிகாசங்களென்னு மிவற்றையப்பியசித்தலும் ஜபமெனப்படும். அந்த ஜபமும் வாசிகம் மானசமென்று இருவகைப்படும். அவற்றுள், **வாசிகம்** உபாம்சு (பிறர் காதுக்குக் கேட்காமல் ஜபித்தல்) உச்சம் (உரத்துஜபித்தல்) என இருவகையாம். **மானசம்,** மனனம் தியானமென இருவகையாம். உச்சத்தைவிட உபாம்சு ஆயிரமடங்கும், உபாம்சுவைவிட மானசமாகிய மனனத்தியானங்கள் கோடிமடங்கும் அதிகபலனைத் தருவனவாம். உச்சத்தினுல் பலன் உண்டாவதாயிருந்தாலும் அது நீசர் காதிற்படுமாயின் நிஷ்பலமாகும். ஜபத்தினுல் இஷ்டதேவதை பிரசன்னமாகும்.

(ய) வேதத்திற்கூறிய விதிநிஷேதங்களை யநுஷ்டித்தலாகிய நித்திய கர்மம் **விரதமெனப்படும்.** இதனை மகமென்றுங் கூறுவர்.

இந்நியமலக்ஷணம் திரிசிகியுபநிஷத்து, தர்சனோபநிஷத்து, சாண்டில்லியோபநிஷத்து, சூதசங்கிதை முதலியவற்றில் சொல்லப்பட்டிருக்கின்றது.

"தேகேந்திரியாதிகளிலுண்டாகும் வைராக்கியம் இயமமென்று விவேகிகளாற் சொல்லப்படும். பாதத்துவத்தில் இடைவிடாதுண்டாகும் விருப்பம் நியமமெனப்படும். சர்வ வஸ்துக்களிடத்தும் உதாசீனமாயிருத்தல் உத்தமமாகிய ஆசனமாம். இந்தச் சகலஜகத்தும் மித்தையாகத் தோற்றுதல் பிராணாயாமமாம். சித்தத்தின் அந்தர்முகத்தன்மை பிரத்தியாகாரமாம். சித்தத்தின் நிச்சலத்தன்மையைத் தாரணையென்றறிவர். அந்தச் சின்மாத்திரமே நானென்று சிந்தித்தல் தியானமெனப்படும். தியானத்தைச் செவ்வையாய் மறத்தல் சமாதியெனப்படுமென் றிப்படி இயமாதி அஷ்டாங்க லக்ஷணம் திரிசிகி யுபநிஷதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது

"ஞானத்தோடு கூடிய இயமாதி அஷ்டாங்கயோகம் சொல்லப்படுகின்றது.

க. சீதம், உஷ்ணம், உணவு, உறக்கம் என்பவற்றின் விஜயம், எப்போதும் சாந்தி, நிச்சலத்தன்மை, விஷயங்களிற் செல்லாது இந்திரியங்களைத் தடுத்தல் என்னும் இவை இயமங்களாம்.

உ. குருபக்தி, உண்மைவழியிற்பற்று, சுகாநுகதவஸ்துவின் அநுபவத்தினாலாம் திருப்தி, பற்றின்மை, ஏகாந்தவாசம், மனோநிவிருத்தி, பலேச்சையில்லாமை. வைராக்கியபாவம் என்னுமிவை நியமங்களாம்.

ங. சுகாசனத்திருப்பதும் மரவுரியும் ஆசனநியமமாம்.

ச. பூரக கும்பக ரேசகங்களால் முறையே பதினாறு அறுபத்துநாலு முப்பத்திரண்டு மாத்திரையாகச் செய்வது பிராணாயாமம்.

ரு. இந்திரியார்த்தங்களாகிய விஷயங்களினின்றும் மனதை யீர்த்தல் பிரத்தியாகாரம்.

சூ. விஷயத்தினின்று திருப்புதலோடு சைதன்னியத்தில் நிறுத்துதல் தாரணமாகின்றது.

எ. சர்வ சரீரங்களிலும் சைதன்னியத்தின் ஏகதானத்தினை (இடையீடின்றிய புத்தியினை)ச்செய்தல் தியானம்.

அ. தியானத்தினை மறத்தல் சமாதி" என்று மண்டலப்பிராஹ்மணோபநிஷத்திலும் வேறு யோகாஷ்டாங்கக்கிரமம் சொல்லப்பட்டுளது.

(அ-கை) முதலில் ஆசனத்தைச் சொல்லுவதற் கேதுவை யும், சாமானியமாக அதன் பலத்தையுங் கூறுகின்றார்:—

𑌹𑌠𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌙𑍍𑌗𑌤𑍍𑌵𑌾𑌦𑌾𑌸𑌨𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌦𑌾𑌸𑌨𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌮𑌾𑌰𑍋𑌗𑍍𑌯𑌂 𑌚𑌾𑌙𑍍𑌗𑌲𑌾𑌘𑌵𑌮𑍍 ॥

(இ-ள்) (ஆசனம், கும்பகமெனுஞ் சித்திரம், முத்திரை யெ ன்னுங் கரணம், நாதானுசந்தானம் என்று இந்நூலிற் சொல்லப் படும் நாலங்கங்களில்) ஆசனம் ஹடத்திற்கு முதலங்கமாயிருத் தலால், அது முதலிற் சொல்லப்படுகின்றது. அவ்வாசனம் ஸ் தைரியத்தையும் (ஸ்திரத்தன்மையையும்), ஆரோக்கியத்தையும், அங்கலாகவத்தை (சரீர கனமின்மையை) யும் செய்யும். எ-று.

பிரத்தியாகாரமுதல் சமாதிவரையிலுள்ளவைகள் நாதாநுச ந்தானத்திலடங்கும்; ஆசனம், தேகமனதுகளின் சஞ்சலத்தன் மையாகிய இரஜோதருமத்தைக் கெடுக்குந்தன்மையால், ஸ்திரத் தன்மையை யுண்டுபண்ணுகிறது; "𑌆𑌸𑌨𑍇𑌨 𑌰𑌜𑍋 𑌹𑌂𑌤𑌿

---

"𑌆𑌸𑌨𑍇𑌨 𑌰𑍁𑌜𑌂 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑍇𑌨 𑌪𑌾𑌤𑌕𑌮𑍍
𑌵𑌿𑌕𑌾𑌰𑌂 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌾𑌹𑌾𑌰𑍇𑌣 𑌮𑍁𑌞𑍍𑌚𑌤𑌿 ।
𑌧𑌾𑌰𑌣𑌾𑌭𑌿𑌰𑍍𑌮𑌨𑍋𑌧𑍈𑌰𑍍𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂
𑌸𑌮𑌾𑌧𑍌 𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍 ॥

௧. யோகி ஆசனத்தால் வியாதியைக் கெடுக்கின்றான்.

௨. பிராணாயாமத்தினால் பாதகத்தினைக் கெடுக்கின்றான்.

௩. பிரத்தியாகாரத்தினால் மானதவிகாரத்தினை விடுகின்றான்.

௪. தாரணைகளால் மனோதைரியத்தினையும்.

௫. தியானத்தினால் அற்புத சைதன்னியத்தினையுமடைகின்றான்.

௬. சமாதியில் சுபாசுப கர்மங்களை விட்டு மோக்ஷத்தினை அடை கின்றான்." என்று யோகசூடாமணி யுபநிஷத்தில் யோகாங்கம் ஆறி னுக்கும்பயன் கூறப்பட்டுளது. இயமத்திற்குத் துர்ச்சங்கத்தை விடுதலும் நற்சங்கத்தைக் கொள்ளுதலும் நியமத்திற்குச் சன்மார்க்கப் பிரவிருத்தியும் துன்மார்க்க நிவிருத்தியும் பயனெனக்கொள்க.

இங்கே பப்பத்தாகக் கூறிய இயம நியமங்களே பதஞ்சலிபகவனாலும் மற்றப் புராணமுதலியவற்றிலும் அவ்வைந்தாக அடக்கிச் சொல்லப்பட்டி ருக்கின்றன வென்பது ஸ்ரீ மதுசூதனசரஸ்வதிகள் அபிப்பிராயம்.

ஆசனத்தால் இரஜோதர்மத்தைக் கெடுக்கின்றான்'' என்னும் யோகசூடாமணியுபநிஷத் வாக்கியத்தால்.

சித்தவிக்ஷேபத்தைச் செய்யும் ரோகமில்லாமை ஆரோக்கியமாம். ரோகம் சித்தவிக்ஷேபத்தை தருவதாமென்பது பாதஞ்சல சூத்திரத்தில்,

“ வ்யாயிஸ்த்யா நஸம்ஶய ப்ரமாதாலஸ்யாவிரதிப்ராந்தி த.
ஶநாலப்தபூமிகத்வாநவஸ்திதத்வாநி . சித்தவிக்ஷேபாஸ்தே
ऽந்தராயா: ॥

வியாதி, ஸ்தியானம் (யோகாநுஷ்டானசாமர்த்தியமில்லாமை), சம்சயம், பிரமாதம் (இதுஆகும் இது ஆகாதென்பது), ஆலசியம், அவிரதி (சித்தத்திற்கு விஷயத்தில் வைராக்கியமில்லாமை), பிராந்திதரிசனம் (விபரீதஞானம்), சமாதி பூமிகிடையாதிருத்தல், கிடைத்தபூமியில் சித்தம் நிலையாதிருத்தல் என்னுமிவை சித்தவிக்ஷேபமென்னும் அந்தராய (யோகப்பிரதிபக்ஷ)ங்களாம்' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. சரீரத்தில் கனமில்லாமை அங்கலாகவ மெனப்படும். இதனால் கௌரவ (திண்மை) வடிவமாகிய தமோதர்மங்களைக் கெடுக்குந்தன்மையும் சொல்லப்பட்டது. சகாரத்தால் (உம்மையால்)பசி விருத்தியாதல் முதலியவைகளு மறிவிக்கப் படுகின்றன. (௧௭)

(அ-கை) வசிஷ்டர் முதலியோர்களுக்குச் சம்மதமாகிய ஆசனங்களிற் சிரேஷ்டமானவை யென்றுற் சொல்லப்படுகின்றன வெனக்கூறுகின்றார்:—

வஸிஷ்டாத்யைஶ்ச முநிபி
ர்மத்ஸ்யேந்த்ராத்யைஶ்ச யோகிபி: ।
அங்கீக்ருதாந்யாஸநாநி
கத்யந்தே காநிசிந்மயா ॥ ௧௮ ॥

(இ-ள்) வசிஷ்டர் முதலிய மனனசீலர்களாகிய முனிவர்களாலும், மச்சேந்திரர்முதலிய யோகிகளாலும் அங்கீகரிக்கப்பட்ட எண்பத்திநான்காசனங்களில் சிரேஷ்டமாகிய சில என்றுற் சொல்லப்படுகின்றன. எ-று.

முதலியவெனுஞ்சொல்லால் யாஞ்ஞவல்கியர் முதலியோர்களும், சகாரத்தால் (உம்மையால்) மந்திரமுதலியவற்றை அநுஷ்டிப்பவர்களும் கொள்ளப்படுவர். மச்சேந்திரர் முதலியவென்பதிலுள்ள முதலியவெனுஞ் சொல்லால் ஜாலந்தரநாதர் முதலியோர்களும், சகாரத்தால் (உம்மையால்) முத்திரைமுதலியவற்றின் அநுஷ்டானமுடையவர்களுங் கொள்ளப்படுவர். இருதிறத்தாருக்கும் மனனமும் ஹடாப்பியாசமு மிருந்தாலும் வசிஷ்டர் முதலியோர்களுக்கு மனனமும், மச்சேந்திரர் முதலியோர்களுக்கு ஹடாப்பியாசமும் பிரதானமாமென்று பிரித்துக் காண்க. (க௮)

### க. சுவஸ்திகாசனம்.

(அ-கை) அவற்றுள், சுகத்தைத்தருவதாயிருத்தலால் சுவஸ்திகாசனத்தை முதலிற் கூறுகின்றார்:—

* ஜாநூர்வோரந்தரே ஸம்யக்
க்ருத்வா பாததலே உபே |
ருஜுகாய: ஸமாஸீந:
ஸ்வஸ்திகம் தத்ப்ரசக்ஷதே || க௯ ||

(இ-ள்) முழந்தாளுக்கும் தொடைக்கும் மத்தியில் இரண்டு பாதங்களையும் வைத்துக் காயம் நிமிர்ந்து செவ்வையாய் உட்கார்ந்திருப்பது ** சுவஸ்திகாசனமென்று சொல்லப்படும். எ-று.

---

* இது சாண்டில்யோபநிஷத்வாக்கியம். இவ்வாசனம் திரிசிகிவராகம் தர்சன முதலிய உபநிஷதங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. சுவஸ்திகாதி சில முக்கியாசனங்கள் சூதசங்கிதை சௌரபுராணம் சிவபுராண முதலிய பல நூல்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

** இது முதலாகச் சொல்லப்படும் ஆசனங்களில் சிரசை இன்னவிதமாக வைக்கவேண்டுமென்று சொல்லாதவிடத்துப் பொருந்துமாயின் ஜாலந்தர பந்தத்தினைக்கொள்ளுக. திருஷ்டி நியமம் சொல்லாதவிடத்துச் சாத்தியமாயின் புருவ நடுவிற் பார்வை வைக்க. கைவைக்கும் நியமம் சொல்லாவிடத்து நாபியில் இடது கையினைத்திருப்பி வைத்து அவ்வுள்ளங்கையில் வலது கையை உள்ளங்கை மேலிருக்கும்படிவைக்க கைகளால் சரீரத்தில் எவ்வவயவத்தினையாவது பிடித்துக்கொள்ளென்று சொல்லாதவிடத்துப் பெருவிரல் சுட்டுவிரல்களால் பிடித்துக்கொள்ளுக.

இங்கே முழந்தாளென்னுஞ் சொல்லால் முழந்தாளைச் சம்பந்தித்துள்ள கணைக்கால் கொள்ளப்படுகின்றது.

"ஜாநுநோரு: கணைக்காலுக்குந் தொடைக்கும்" என்னும் பாடமும் பொருந்தும்.

"உளரூஜாநோரந்தரா ஸம்யக் க்ருத்வா பாததலே உபே |
ரிஜுகாய: ஸமாஸீந: ஸ்வஸ்திகம் தத் ப்ரசக்ஷதே ||

தொடைக்கும் கணைக்காலுக்கும் இடையாகிய முழந்தாள் மத்தியில் இரண்டு பாதங்களையும் வைத்துக்கொண்டு யோகிகளிருப்ப தெதுவோ, அதனைச் சுவஸ்திகமென்று விவேகிகள் அறிவர்" என்று ஸ்ரீதரரால் சொல்லப்பட்டிருக்கிறது. (௧௯)

## ௨. கோமுகாசனம்.

(அ-கை) கோமுகாசனத்தைக் கூறுகின்றார்:—

* ஸவ்யே தக்ஷிண குல்பம் து
ப்ருஷ்டபார்ஸ்வே நியோஜயேத் |
தக்ஷிணேபி ததா ஸவ்யம்
கோமுகம் கோமுகாக்ருதி: || ௨௦ ||

(இ-ள்) இடது பிருஷ்ட (பின்) பாகத்தில் அதாவது சம்பிரதாயத்தால் கடியின் கீழ்ப்பாகத்தில் வலதுபர (கர) ட்டையும், அப்படியே வலது பிருஷ்டபாகத்தில் இடது பரட்டையும் செவ்வையாகச் சேர்க்கவேண்டும். இது கோமுகவடிவம் போன்ற கோமுகாசனமாம். எ-று

இவ்வாசனம் மூலபந்தத்தால் அபானசித்தியைத் தருவதுடன் பகந்தரவியாதியையுங் கெடுக்கின்றது. தௌதி நௌலிக்கிரியைகளின் சித்தியையும் விசேஷமாய்த் தருகின்றது. (௨௦)

---

* இக்குறியிட்டவை சாண்டில்யோபநிஷத் வாக்கியங்கள். இவ்விரண்டு ஆசனங்களும் திருசிகி வராகம் தர்சன முதலிய உபநிஷத்துக்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

ங. வீராசனம்.

(அ-கை) வீராசனத்தைக்கூறுகின்றார்:—

* 𑌏𑌕𑌂 𑌪𑌾𑌦𑌂 𑌤𑌥𑍈𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍
𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍇𑌦𑍂𑌰𑍁𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌇𑌤𑌰𑌸𑍍𑌮𑌿𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 𑌚𑍋𑌰𑍁𑌂
𑌵𑍀𑌰𑌾𑌸𑌨𑌮𑌿𑌤𑍀𑌰𑌿𑌤𑌮𑍍 ॥ உக ॥

(இ-ள்) ஒருபாதத்தை ஒருதொடையிலும், மற்றப் பாதத்தில் வேறுதொடையையும் வைத்தல், அதாவது வலது பாதத்தை இடது தொடையிலும் இடதுபாதத்தில் வலது தொடையையும் வைத்தல், வீராசனமெனப்படும். எ-று. (உக)

ச. கூர்மாசனம்.

(அ-கை) * கூர்மாசனத்தைக்கூறுகின்றார்.—

𑌗𑍁𑌦𑌂 𑌨𑌿𑌰𑍁𑌧𑍍𑌯 𑌗𑍁𑌲𑍍𑌫𑌾𑌭𑍍𑌯𑌾𑌂
𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ।
𑌕𑍂𑌰𑍍𑌮𑌾𑌸𑌨𑌂 𑌭𑌵𑍇𑌦𑍇𑌤𑌦𑍍
𑌇𑌤𑌿 𑌯𑍋𑌗𑌵𑌿𑌦𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ॥உஉ॥

(இ-ள்) இரண்டு பரடுகளினுலும் குதத்தை நிரோதித்து (தடுத்து), இரண்டு முழந்தாள்களேயும் பூமியில் வைத்து, நிமிர்ந்து செவ்வையாக இருத்தல், கூர்மாசனமாமென்று யோகவித்துக்கள் அறிவர். எ-று.

இவ்வாசனம் எண்பது வாததோஷங்களேயும் கெடுப்பதாம். (உஉ)

ரு. குக்குடாசனம்.

(அ-கை) * குக்குடாசனத்தைக் கூறுகின்றார்:—

---

* இக்குறியிட்டவை சாண்டில்யோபநிஷத் வாக்கியங்கள். இவ்விரண்டு ஆசனங்களும் திரிசிகி வராகம் தர்சன முதலிய உபநிஷத்துக்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

* இக்கூர்மாசனம் வராகத்தும், * குக்குடாசனம் திரிசிகியிலும் வராகதும் கூறப்பட்டிருக்கின்றன.

𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌂 𑌸𑍁𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯
𑌜𑌾𑌨𑍂𑌰𑍍𑌵𑍋𑌰𑌨𑍍𑌤𑌰𑍇 𑌕𑌰𑍌 |
𑌨𑌿𑌵𑍇𑌶𑍍𑌯 𑌭𑍂𑌮𑍌 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯
𑌵𑍍𑌯𑍋𑌮𑌸𑍍𑌥𑌂 𑌕𑍁𑌕𑍍𑌕𑍁𑌟𑌾𑌸𑌨𑌮𑍍 || ௨௩ ||

(இ-ள்) தொடைகளின் பேரில் மேல்நோக்கிய பாதங்களாக வைக்கும் பதுமாசனத்தைச் செவ்வையாகச் சேர்த்துக்கொண்டு, முழந்தாளுக்கும் அதாவது முழந்தாளுக்கடுத்த கணைக்காலுக்கும் தொடைக்கும் மத்தியில் இரண்டுகைகளையும் நுழைத்துப் பூமியிற் செவ்வையாய் நிறுத்தி மேலெழும்பியிருத்தல் பதுமாசனம் போன்ற குக்குடாசன மெனப்படும். (௨௩)

௬. உத்தானகூர்மாசனம்.

(அ-கை) உத்தான கூர்மாசனத்தைக் கூறுகின்றார்:—

𑌕𑍁𑌕𑍍𑌕𑍁𑌟𑌾𑌸𑌨𑌬𑌨𑍍𑌧𑌸𑍍𑌥𑍋
𑌦𑍋𑌰𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑌮𑍍𑌬𑌦𑍍𑌧𑍍𑌯 𑌕𑌨𑍍𑌧𑌰𑌾𑌮𑍍 |
𑌭𑌵𑍇𑌤𑍍𑌕𑍂𑌰𑍍𑌮𑌵𑌦𑍁𑌤𑍍𑌤𑌾𑌨
𑌏𑌤𑌦𑍁𑌤𑍍𑌤𑌾𑌨𑌕𑍂𑌰𑍍𑌮𑌕𑌮𑍍 || ௨௪ ||

(இ-ள்) முன்சுலோகத்திற் கூறிய குக்குடாசன பந்தத்திலிருந்துகொண்டு, இரண்டு புஜங்களாலும் கழுத்தை நெருக்கிக் கூர்மத்தைப்போல உத்தானம் (ஒட்டியிருத்தல்) எதினாலுண்டாகிறதோ, அது * உத்தானகூர்மக மெனப்படும். எ-று (௨௪)

எ. தனுராசனம்.

(அ-கை) தனுராசனத்தைக் கூறுகின்றார்:—

𑌪𑌾𑌦𑌾𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑍌 𑌤𑍁 𑌪𑌾𑌣𑌿𑌭𑍍𑌯𑌾𑌂
𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌵𑌧𑌿 |
𑌧𑌨𑍁𑌰𑌾𑌕𑌰𑍍𑌷𑌣𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍
𑌧𑌨𑍁𑌰𑌾𑌸𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 || ௨௫ ||

---

* உத்தானகூர்மாசனமும் தனுராசனமும் திரிசிகியுபநிஷத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

(இ-ள்) கைகளால் இரண்டு காற்பெருவிரல்களையும் பிடித்துக், காதுவரையிலும் வில்லைப்போல இழுக்கவேண்டும். அதாவது பெருவிரலைப் பிடித்திருக்கும் ஒருகையை நீட்டிக்கொண்டு, பெருவிரலைப் பிடித்திருக்கும் மற்றொரு கையைக் காது வரையிலும் இழுக்கவேண்டுமென்பது பொருள். இது * தனுராசனமெனப்படும்.

இவ்வாசனம் ஆலசியத்தைக்கெடுப்பதாயும், கபாதிதோஷங்களை ஜெயிப்பதாயும், மலசுத்தியைத் தருவதாயுமிருக்கின்றது. எந்தப்பக்கத்தில் கால் காதுவரையிற் பொருந்துகிறதோ அந்தப்பக்கத்து நாடி ஊர்த்துவகதி (மேற்செல்லுவது) ஆகும். ()

## அ. மச்சேந்திராசனம்.

(அ-கை) ‡ மச்சேந்திராசனத்தைக் கூறுகின்றார்:—

𑌵𑌾𑌮𑍋𑌰𑍁𑌮𑍂𑌲𑌾𑌰𑍍𑌪𑌿𑌤𑌦𑌕𑍍𑌷𑌪𑌾𑌦𑌂
𑌜𑌾𑌨𑍋𑌰𑍍𑌬𑌹𑌿𑌰𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌵𑌾𑌮𑌪𑌾𑌦𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑌗𑍃𑌹𑍍𑌯 𑌤𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑍍𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌙𑍍𑌗𑌃
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌨𑌾𑌥𑍋𑌦𑌿𑌤𑌮𑌾𑌸𑌨𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ‖ ௨௬ ‖

(இ-ள்) இடதுதொடையின் மூலத்தில் (குதிவயிற்றிபொருந்தி விரல்கள் வெளியில் இராதவண்ணம்) வைக்கப்பட்ட வலது பாதத்தை (சம்பிரதாயத்தால் பின்புறமாகச்சென்ற இடதுகையினால் குதியின் மேற்பாகத்தை)ப் பிடித்துக்கொண்டு, வலது முழ

---

* கோண்டசங்கிதையிலுள்ள தனுராசன விதி:—

𑌪𑍍𑌰𑌸𑌾𑌰𑍍𑌯 𑌪𑌾𑌦𑍌 𑌭𑍁𑌵𑌿 𑌦𑌣𑍍𑌡𑌰𑍂𑌪𑍌
𑌕𑌰𑍌 𑌚 𑌪𑍃𑌷𑍍𑌠𑍇 𑌧𑍃𑌤𑌪𑌾𑌦𑌯𑍁𑌗𑍍𑌮𑌮𑍍 |
𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑍁𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌙𑍍𑌗𑌂
𑌨𑌿𑌗𑌦𑍍𑌯 𑌯𑍋𑌗𑍀 𑌧𑌨𑍁𑌰𑌾𑌸𑌨𑌂 𑌤𑌤𑍍 ‖

பாதமிரண்டையும் தண்டம்போல் பூமியில் நீட்டிக் குப்புறப்படுத்து கால்களைப் பின்புறம்வளைத்து அவற்றைப் பாடுகளின் பக்கத்தில் கைகளால் பிடித்து வயிற்றினடிப்பாகத்தில் சரீரத்தின் பாரத்தைவைத்து தனுசினைப்போல சரீரம் வளைந்திருத்தல் தனுராசனமாம்.

‡ இவ்வாசனம் திரிசிகிபிராஹ்மணத்திற் கூறப்பட்டுளது.

ந்தாளுக்கு வெளியில் (பூமியில்) வைக்கப்பட்டிருக்கும் இடது பாதத்தை (இடது முழந்தாளுக்கு வெளியிற் சுற்றிய வலதுகையி னால் இடதுகாற் பெருவிரலை)ப் பிடித்துக்கொண்டு, (இடது பக் கம் பின்புறமாய் முகமிருக்கும்படி) திரும்பிய அங்கமாக இருக்க வேண்டும். இவ்வாசனம் மச்சேந்திரநாதராற் சொல்லப்பட்ட ஆசனமாகின்றது.

இவ்வாசனம் மச்சேந்திரநாதரால் சொல்லப்பட்டமையால் அவர் பெயரால் வழங்கப்படுகின்றது. இப்படியே வலதுதொடை யின் மூலத்திற்சேர்க்கப்பட்ட இடது பாதத்தைப் பின்புறமாய்ச் சென்ற வலது கரத்தாற்பிடித்து, இடது முழந்தாளுக்கு வெளி யிற் சூழ்ந்த வலதுபாதத்தை வலதுமுழந்தாளுக்கு வெளியிற் சூழ்ந்த இடதுகையினாற் பிடித்து, வலப்பாகமாய் முகம் பின் புறமிருக்கும்படி திரும்பிய அங்கமாகவும் அப்பியாசிக்கவேண் டும். (உசு)

(அ-கை) மச்சேந்திராசனத்தின் பலத்தைக் கூறுகின்றார்:—

மத்ஸ்யேந்த்ரபீடம் ஜடரப்ரதீப்திம்
ப்ரசண்டருங்மண்டலகண்டனாஸ்த்ரம் |
அப்யாஸத: குண்டலினீப்ரபோதம்
சந்த்ரஸ்திரத்வம் ச ததாதி பும்ஸாம் || உஎ ||

(இ-ள்) பிரசண்ட(சகித்தற்கரிய)ரோகக்கூட்டங்களைக் கண் டித்தலில் அஸ்திரம் போன்றிருக்கும் மச்சேந்திராசனம், தினந் தோறும் ஆவர்த்தனம் செய்தலாகிய அப்பியாசத்தால் புருஷர் களுக்கு ஜடராக்கினியின் விருத்தியையும், குண்டலினியென் னும் ஆதாரசக்தியின் விழிப்பையும், (அண்ணத்தின் மேற்பாகத் தில் நித்தியம் அசைந்துகொண்டிருக்கும்) சந்திரனது ஸ்திரத் துவத்தை(அசைவின்மையை)யும் தருகின்றது. (உஎ)

## கூ. பச்சிமதான ஆசனம்.

(அ-கை) பச்சிமதான ஆசனத்தைக் கூறுகின்றார்:—

ப்ரஸார்ய பாதௌ புவி தண்டரூபௌ
தோர்ப்யாம் பதாக்ரத்விதயம் க்ருஹீத்வா |

ஜாநூபரிந்யஸ்தலலாடதேசோ
வஸேதிதம் பஶ்சிமதாநமாஹு꞉ ॥ ௨௮ ॥

(இ-ள்) பூமியில் தண்டவடிவமாக இரண்டு குதிகளையும் சேர்த்துப் பாதங்களை நீட்டிக், கைச்சுட்டுவிரல்களால் காற்பெருவிரல்களைப் பலமாக இழுத்துப் (முழந்தாளின் கீழ்பாகம் பூமியினின் றெழாதவண்ணம்) பிடித்துக்கொண்டு, முழந்தாளின் மேல் நெற்றியை வைத்துக்கொண் டிருத்தல்வேண்டும். இதைப் * பச்சிமதானுசன மென்பர். பச்சிமோத்தானுசன மென்றும் கூறுவர். (௨௮)

(அ-கை) இனி அதன் பலத்தைக் கூறுகின்றூர்:—

இதி பஶ்சிமதாநமாஸநாக்ர்யம்
பவநம் பஶ்சிமவாஹிநம் கரோதி ।
உதயம் ஜடராநலஸ்ய குர்யாத்
உதரே கார்ஶ்யமரோகதாம் ச பும்ஸாம் ॥ ௨௯ ॥

(இ-ள்) இப்படி முற்கூறிய ஆசனங்களில் முக்கியமாகிய பச்சிமதானுசனமானது பிராணனைப் பச்சிமமென்னும் சுழிமுனை மார்க்கமாய்ச் செல்வதாக்குகின்றது. ஜடராக்கினியையும் விருத்தி செய்கின்றது. அன்றியும், உதரத்தில் (மத்தியப்பிரதேசத்தில்) கிருசத்துவத்தை(மெலிவை)யும், ரோகமின்மையை (ஆரோக்கியத்தை)யும் செய்கின்றது.

சகாரத்தால் (உம்மையால்) நாடியின் நிமிர்ச்சிமுதலிவற்றின் சமத்தன்மையையும் செய்கின்றது என்று கொள்க. (௨௯)

௧௦. மயூராசனம்.

(அ-கை) மயூராசனத்தைக் கூறுகின்றூர் :—

தராமவஷ்டப்ய கரத்வயேந
தத்கூர்பரஸ்தாபிதநாபிபார்ஶ்வ꞉ ।
உச்சாஸநோ தண்டவதுத்தித꞉ கே
மாயூரமேதத் ப்ரவதந்தி பீடம் ॥ ௩௦ ॥

* இவ்வாசனம் திரிசிகியுபநிஷதத்தில் சொல்லப்பட்டுளது.

(இ-ள்) விரல்களை விரித்து, இரண்டுகைகளையும் பூமியிலூன்றி, நாபியினிருபக்கங்களினும் முழங்கைகளை வைத்து, உயர்ந்த ஆசனமாகத் தண்டத்தைப்போல எழும்பி நிற்றலை * மயூராசனமென்பர். (௩௰)

(அ-கை) மயூராசனத்தின் குணங்களைக் கூறுகின்றார்:—

𑌹𑌰𑌤𑌿𑌸𑌕𑌲𑌰𑍋𑌗𑌾 𑌨𑌾𑌶𑍁𑌗𑍁𑌲𑍍𑌮𑍋𑌦𑌰𑌾𑌦𑍀
𑌨𑌭𑌿𑌭𑌵𑌤𑌿𑌚𑌦𑍋𑌷𑌾𑌨𑌾𑌸𑌨𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌯𑍂𑌰𑌮𑍍 |
𑌬𑌹𑍁𑌕𑌦𑌶𑌨𑌭𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌸𑍍𑌮𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌶𑍇𑌷𑌂
𑌜𑌨𑌯𑌤𑌿𑌜𑌠𑌰𑌾𑌗𑍍𑌨𑌿𑌂𑌜𑌾𑌰𑌯𑍇𑌤𑍍𑌕𑌾𑌲𑌕𑍂𑌟𑌮𑍍 ||௩௧||

(இ-ள்) மயூராசனம் குன்மம், ஜலோதர முதலிய சகல ரோகங்களையும் கெடுக்கும். வாத பித்த கபங்களும், ஆலசியத்தைத் தருபவைகளுமாகிய தோஷங்களைத் திரஸ்கரிக்கும். அதிகமாய்ச் சாப்பிட்ட தீய்ந்த அந்நங்களெல்லாவற்றையும் பஸ்மமாக்கும். ஜடராக்கினியை யுண்டாக்கும். காளகூடத்தைப் போல அபகாரத்தைச் செய்கின்ற அந்நங்களையும் ஜீர்ணமாக்கும். (௩௧)

## ௧௧. சவாசனம்.

(அ-கை) சவாசனத்தையும் அதன்பலத்தையுங் கூறுகின்றார்:—

• 𑌉𑌤𑍍𑌤𑌾𑌨𑌂𑌶𑌵𑌵𑌦𑍍𑌭𑍂𑌮𑍌 𑌶𑌯𑌨𑌂 𑌤𑌚𑍍𑌛𑌵𑌾𑌸𑌨𑌮𑍍 |
𑌶𑌵𑌾𑌸𑌨𑌂𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌹𑌰𑌂𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌾𑌰𑌕𑌮𑍍 || ௩௨ ||

(இ-ள்) மறித்த சரீரத்திற்குச் சமமாக முதுகு பூமியிலொட்டியிருக்கும்படி நித்திரையிற்போலப் பொருந்தியிருத்தல், † சவாசனமாம். இச்சவாசனம் ஹடாப்பியாசத்தாலுண்டாகும் இளைப்பைத்தீர்ப்பதாயும், சித்தத்திற்கு விசிராந்தியைத் தருவதாயுமிருக்கின்றது. (௩௨)

---

* இவ்வாசனம் திரிசிகி, வராகம், தர்சனம், சாண்டில்யமுதலிய உபநிஷதங்களிற் சொல்லப்பட்டுளது.

† இதனை மிருதாசனமென்றும் கூறுவர்.

(அ-கை) இனிச்சொல்லப்படும் நான்காசனங்களின் மேன்மையைக் கூறுகின்றார் :—

வதுரஶீத்யாஸநாநி ஶிவேந கதிதாநிவ ।
தேப்யஶ்சதுஷ்கமாதாய ஸாரபூதம் ப்ரவீம்யஹம் ॥ ௩௩

(இ-ள்) ஈசுவரனால் எண்பத்துநான்காசனங்களும் அவற்றின் லக்ஷணங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள், மிக்க சாரபூதமாயுள்ள நான்காசனங்களைக் கிரகித்து யான் சொல்லுகிறேன்.

அவற்றின் லக்ஷணங்களுமென்பது சகாரத்தால் (உம்மையால்) வருவிக்கப்பட்டது. அது கோரக்கநாதரால்

* ஆஸநாநிச தாவந்தி யாவந்த்யோ ஜீவஜாதய: ।
ஏதேஷாமகிலாந்பேதாந் விஜாநாதி மஹேஶ்வர: ।
சதுரஶீதிலக்ஷாணி ஏகைகம் ஸமுதாஹ்ருதம் ।
தத: ஶிவேந பீடாநாம் ஷோடஶோநம் ஶதம் க்ருதம் ।

ஜீவஜாதிகளெவ்வளவோ, அவ்வளவாசனங்களிருக்கின்றன. அவற்றி னெல்லாப்பேதங்களையும் மகேசுவரர் அறிகின்றார். எண்பத்துநான்குலக்ஷங்களில் லக்ஷத்துக் கொவ்வொன்று செவ்வையாக உதாகரிக்கப்படுகின்றது. ஆகையால் ஈசுவரனால் எண்பத்துநான்கு ஆசனங்கள் கூறப்பட்டிருக்கின்றன” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (௩௩)

(அ-கை) அந்நான்கு ஆசனங்களின் பெயர்களைக் கூறுகின்றார் :—

ஸித்தம் பத்மம் ததா ஸிம்ஹம் பத்ரம் சேதி சதுஷ்டயம் ।
ஶ்ரேஷ்டம் தத்ராபி ச ஸுகே திஷ்டேத்ஸித்தாஸநே ஸதா ॥ ௩௪ ॥

(இ-ள்) (*) சித்தாசனம், பதுமாசனம், சிம்ஹாசனம், பத்திராசனம் என்னும் நான்கும் சிரேஷ்டமுள்ளனவாம். அவற்றி

---

* இவ்வாக்கியம் தியானபிந்தூபநிஷத்தினதாம்.

(*) சித்தம், பதுமம், உக்கிரம், சுவஸ்திகமென்னும் நான்கும் பிரதானமாமென்று சிவசங்கிதையில் ஈசுவரனாற் சொல்லப்பட்டிருக்கின்றது.

லும் சுகத்தைத்தரும் சித்தாசனத்தி லெப்பொழுது மிருக்க வேண்டும்.

இதனால் சித்தாசனம் நாகினும் மேன்மையானது என்பது குறிப்பிக்கப்பட்டது. (௩௪)

### ௧௨. * மச்சேந்திரசித்தாசனம்.

(அ-கை) நான்காசனங்களினு மேலானதாயிருத்தலால் சித்தாசனத்தைக் கூறுகின்றார் :—

𑌯𑍋𑌨𑌿𑌸𑍍𑌥𑌾𑌨𑌕𑌮𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌮𑍂𑌲𑌘𑌟𑌿𑌤𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌦𑍃𑌢𑌂 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍇
𑌨𑍍𑌮𑍇𑌣𑍍𑌢𑍍𑌰𑍇 𑌪𑌾𑌦𑌮𑌥𑍈𑌕𑌮𑍇𑌵𑌹𑍃𑌦𑌯𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌹𑌨𑍁𑌂 𑌸𑍁
𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍 । 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌃 𑌸𑌂𑌯𑌮𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍋𑌽𑌚𑌲𑌦𑍃𑌶𑌾 𑌪𑌶𑍍𑌯𑍇𑌦𑍍
𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌰𑌨𑍍𑌤𑌰𑌂 𑌹𑍍𑌯𑍇𑌤𑌨𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌕𑌪𑌾𑌟𑌭𑍇𑌦𑌜𑌨𑌕𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾
𑌸𑌨𑌂 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௩௫ ॥

(இ-ள்) குதத்திற்கும் உபஸ்தத்திற்கும் மத்தியப் பிரதேசமாகிய யோனிஸ்தானத்தை இடதுகாலின் பாதமூலத்தால் அழுத்தி, வலது பாதத்தை உபஸ்தத்திற்கு மேற்பாக (இலிங்க)த்திற்றிடமாக அழுத்தவேண்டும். இருதயத்தில் மோவாய்க்கட்டையைச் செவ்வையாக நிறுத்தி [மோவாய்க்கட்டைக்கும் இருதயத்திற்கும் நாலங்குல மிடை யிருக்கும்படி செய்து என்பது இரகசியம்]. இந்திரியங்களை விஷயங்களினின்றும் தடுத்து அசைவற்ற பார்வையாய்ப் புருவமத்தியிற் பார்க்கவேண்டும். பிரசித்தமாகிய இது மோக்ஷகபாடத்தின் (பிரதிபந்தகத்தின்) பேதத்தை (நாசத்தை) யுண்டாகும் சித்தாசனமென்று சொல்லப்படுகின்றது.

---

இங்கே உக்கிராசனமென்றது பச்சிமதானசனத்தை. பதுமாசனத்தைச் சுபாசனமென்பர். அவற்றுள், சித்தாசனம் பதுமாசனமென்னும் இரண்டும் கிரகஸ்தாசிரமிகளுக்குக் கூடுமாயினும், பதுமம் கிரகஸ்தாசிரமிகளுக்கும், சித்தம் மற்ற ஆசிரமிகளுக்கும் சிலாக்கியமாமென்பர்.

* இவ்வாசனம் திரிசிகியுபநிஷத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

சித்தர்(யோகி)களது ஆசனம், சித்தாசனமாம்.

“ 𑌆𑌸𑍍𑌯𑌤𑍇𑌽𑌨𑍇𑌨𑍇𑌤𑌿 𑌵𑌾 𑌆𑌸𑌨𑌂

இதில் உட்காருகிறான் அல்லது இதனால் உட்காரப்படும். ஆதலால் ஆசனமெனப்படுகின்றது.” (௩௫)

## ௧௫. மதாந்திரசித்தாசனம்

(அ-கை) மச்சேந்திரருக்குச் சம்மதமாகிய சித்தாசனத்தைக்கூறி, அன்னியருக்குச் சம்மதமுள்ள ஆசனத்தைக் கூறுகின்றார் :—

𑌮𑍇𑌢𑍍𑌰𑌾𑌦𑍁𑌪𑌰𑌿 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌵𑍍𑌯𑌂 𑌗𑍁𑌲𑍍𑌫𑌂 𑌤𑌥𑍋𑌪𑌰𑌿 ।
𑌗𑍁𑌲𑍍𑌫𑌾𑌂𑌤𑌰𑌂 𑌚 𑌨𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌸𑌨𑌮𑌿𑌦𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

(இ-ள்) உபஸ்தத்திற்கு மேற்பாகத்தில் (இலிங்கத்தின்மேல்) இடது பரட்டைச் சேர்த்து, அப்படியே முக்கியமாகிய இடது பாதத்தின்பேரில் வலது பரட்டைச்சேர்த்து இருக்கவேண்டும். இது சித்தாசனமாம்.

இந்தச் சித்தாசனம் மதாந்திர சம்மதமாகையால் பேதமில்லை யென்பது பொருள். (௩௬)

(அ-கை) அவற்றுள் முதலாவது மஹாசித்தர்களுக்குச் சம்மதமாமென்பதை விளக்கும்பொருட்டு, இதன் (சித்தாசனத்தின்) மதபேதங்களையும் நாமபேதங்களையும் கூறுகின்றார் :—

𑌏𑌤𑌤𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌸𑌨𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑌨𑍍𑌯𑍇 𑌵𑌜𑍍𑌰𑌾𑌸𑌨𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃
𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌸𑌨𑌂 𑌵𑌦𑌂𑌤𑍍𑌯𑍇𑌕𑍇 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍍𑌗𑍁𑌪𑍍𑌤𑌾𑌸𑌨𑌂 𑌪𑌰𑍇

(இ-ள்) முற்கூறிய இதைச் சித்தாசனமென்று சிலர் கூறுகின்றனர். அன்னியர் வஜ்ஜிராசன மென்றறிகின்றனர். சிலர் முக்தாசனமென்று கூறுகின்றனர். வேறுசிலர் குப்தாசனமென்று சொல்லுகின்றனர். எ-று.

இங்கே ஆசனத்தையுணர்ந்தவர்கள் இடது காற்பரட்டை யோனிஸ்தானத்திற் சேர்த்து, வலதுகாற்பரட்டை உபஸ்தத்தின் பேரில் வைத்தலைச் * சித்தாசனமென்றும்,

---

* இது திரிசிகிப்பிராஹ்மணத்துக் கூறப்பட்டுளது.

வலது காற்பரட்டை யோனிஸ்தானத்தில் வைத்து, இடது காற்பரட்டை உபஸ்தத்தின்பேரில் வைத்தலை * வஜ்ஜிராசன மென்றும்,

வலதுகாற்பரடு இடது காற்பரடு இரண்டையும் மேலுங்கீழு மாகச் சேர்த்து யோனிஸ்தானத்தில் வைத்தலை † முக்தாசன மென்றும்,

மேலுங்கீழுமாகச் சேர்க்கப்பட்ட இரண்டு பாடுகளையும் உபஸ்தத்தின்மேல் வைத்தலைக் குப்தாசனமென்றும் கூறுவர். ()

(அ-கை) இனி ஏழுசுலோகங்களால் சித்தாசனத்தைக் கீர்த்திக்கின்றார்:—

𑌯𑌮𑍇𑌷𑍍𑌵𑌿𑌵 𑌮𑌿𑌤𑌾𑌹𑌾𑌰 𑌮𑌹𑌿𑌂𑌸𑌾𑌂 𑌨𑌿𑌯𑌮𑍇𑌷𑍍𑌵𑌿𑌵 |
𑌮𑍁𑌖𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑌨𑍇𑌷𑍍𑌵𑍇𑌕𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌸𑌨𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃 ||

(இ-ள்) இயமங்களுள் மிதாகாரமும், நியமங்களுள் அஹிம்சையும் முக்கியமாதல் போல, எல்லா ஆசனங்களுள்ளும் சித்தாசனம் ஒன்றே முக்கியமானதாமென்று சித்தர்களறிகின்றனர்.

---

* இடதுகாற்குதியைக் குதத்தில் வடக்கும் தெற்குமாயிருக்கும்படிக் குறுக்காக வைத்துட்கார்ந்து வலதுகாலை நிற்கவைத்து, அக்குதியினை வலது காற்பெருவிரலை யொட்டவைத் துட்காருதலையும் சிலர் வஜ்ராசனமென்பர். வஜ்ராசனத்தால் கண்ணிமைகொட்டல் கிரமமாகக் குறையும்; அபானவாயுமேற் கதியுடையதாய்ச் சரீரத்திற்குப் பலத்தைக்கொடுக்கும். மற்றோர்வகை வஜ்ராசனம்:—

𑌜𑌙𑍍𑌘𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑌜𑍍𑌰𑌵𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌗𑍁𑌦𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑍇 𑌪𑌦𑌾𑌵𑍁𑌭𑍌
𑌵𑌜𑍍𑌰𑌾𑌸𑌨𑌂 𑌭𑌵𑍇𑌦𑍇𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌦𑌾𑌯𑌕𑌮𑍍 ||

கணைக்காலிரண்டினால் வஜ்ரம்போற்செய்து (தொடையிற்பொருத்தி. இரண்டு பாதங்களையும் குதத்தின் பக்கங்களில் வைத்தல் வஜ்ராசனம்) இதுயோகிகளுக்குச் சித்தியைத்தருவதாம்.

† இடதுகாற் பாட்டாற் சீவனியையழுத்தி வலதுகாற்பாட்டை அப்பாட்டின் கீழழுந்தவைத்தல், முக்தாசனமாமென்றுங் கூறுவர். இவ்விரண்டு விதத்தையும் தரிசனோபநிஷத்திலும் சூதசங்கிதையிலும் காண்க.

முக்தாசனம் தர்சனம், சாண்டில்யம், வராகமுதலிய வுபநிஷத்துகளிற் கூறப்பட்டுளது. மற்றோர்வகை முக்தாசனம் திரிசிகியிற் கூறப்பட்டுளது.

மிதாகாரம் "ஸுஸ்நிக்³த⁴மதுராஹார:-' என்பவற்றாற் (௫அ-வது சுலோகத்தாற்)சொல்லப்படும். ()

(அ-கை) இதுவுமது:—

ச²துராஶீதிபீடே²ஷு ஸித்³த⁴மேவ ஸதா³ப்⁴யஸேத் |
த்³வாஸப்ததிஸஹஸ்ராணாம் நாடீ³நாம் மலஶோத⁴நம் ||

(இ-ள்) எண்பத்துநான்காசனங்களுள் சித்தாசனத்தையே யெப்போதும் அப்பியசிக்கவேண்டும். அது எழுபத்திரண்டாயிரம் நாடிகளின் மலத்தையும் சோதிப்ப(சுத்திசெய்வ)தாயிருக்கின்றது.

சித்தாசனத்தையே எப்போதும் அப்பியசிக்கவேண்டுமென்பது * ஹேதுகர்ப்பவிசேஷணம். (௩௯)

(அ-கை) இதுவுமது:—

ஆத்மத்⁴யாயீ மிதாஹாரீ யாவத்³ த்³வாத³ஶவத்ஸரம் |
ஸதா³ ஸித்³தா⁴ஸநாப்⁴யாஸாத்³ யோகீ³ நிஷ்பத்திமாப்நுயாத் ||

(இ-ள்) ஆத்மாவைத் தியானிப்பவனும் மிதாஹாரமுள்ளவனுமாய்ப், பன்னிரண்டுவருஷம் வரையில் எப்போதும் சித்தாசனத்தையே அப்பியசித்தலால் யோகி (யோகாப்பியாசி), யோகசித்தியை யடைகின்றான். அதாவது வேறு யோகாப்பியாசமின்றிச் சித்தாசனத்தின் அப்பியாசமாத்திரத்தால் சித்தியை யடைவானென்பது பொருள். (௪0)

(அ-கை) இதுவுமது:—

கிமந்யைர் ப³ஹுபி⁴: பீடை²: ஸித்³தே⁴ ஸித்³தா⁴ஸநே ஸதி
ப்ராணாநிலே ஸாவதா⁴நே ப³த்³தே⁴ கேவலகும்ப⁴கே || ௪௧ ||

(இ-ள்) சித்தாசனம் சித்தித்தால் சாவதானமாகிய பிராணவாயு கேவலகும்பகத்திற் கட்டுப்படும். கட்டுப்படுமாயின், மற்ற அநேக ஆசனங்களா லென்ன பிரயோசனம்? (ஒன்றுமில்லை). ()

---

* ஹேதுவை(காரணத்தை)க் கர்ப்பதில் (மத்தியில்) உடைய விசேஷணம் (அடை) ஹேதுகர்ப்பவிசேஷணமெனப்படும்.

(அ-கை) இதுவுமது:—

𑌉𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌨𑌿𑌰𑌾𑌯𑌾𑌸𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑍋𑌨𑍍𑌮𑌨𑍀 𑌕𑌲𑌾 ।
𑌤𑌥𑍈𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵 𑌦𑍃𑌢𑍇 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌸𑌨𑍇 𑌸𑌤𑌿 ।
𑌬𑌨𑍍𑌧𑌤𑍍𑌰𑌯𑌮𑌨𑌾𑌯𑌾𑌸𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑍋𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ॥ ௪௨ ॥

(இ-ள்) உன்மனீயவஸ்தையாகிய கலை வருத்தமில்லாமல் தானே யுண்டாகின்றது. முற்கூறியவண்ணம் சித்தாசனமொன்றே திடமாகச் சேர்க்கப்படுமாயின்,

("𑌪𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑌿𑌘𑌾𑌤𑍇𑌨 𑌸𑌂𑌪𑍀𑌡𑍍𑌯 𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌕𑍁𑌞𑍍𑌚𑌯𑍇𑌦𑍍𑌗𑍁𑌦𑌮𑍍 ॥

குதியால் யோனியைச் செவ்வையாகப் பீடித்துக் குதத்தைச் சுருக்கவேண்டும்" என்று இனிச்சொல்லப்படும் மூலபந்த முதலியவற்றினுண்டாகும்) வருத்தமில்லாமல் அந்த மூன்றுபந்தங்களும் சுவயமாகவே(தாமே)யுண்டாகின்றன.

சந்திரரேகையைப்போல சந்தோஷத்தை யுண்டுபண்ணுவதாயிருத்தலால் உன்மனியைக் கலையென்றார். (௪௨)

(அ-கை) இதுவுமது:—

𑌨𑌾𑌸𑌨𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌦𑍃𑌶𑌂 𑌨 𑌕𑍁𑌮𑍍𑌭𑌃 𑌕𑍇𑌵𑌲𑍋𑌪𑌮𑌃 ।
𑌨 𑌖𑍇𑌚𑌰𑍀𑌸𑌮𑌾 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌨 𑌨𑌾𑌦𑌸𑌦𑍃𑌶𑍋 𑌲𑌯𑌃 ॥ ௪௩ ॥

(இ-ள்) சித்தாசனத்திற்குச் சமமான ஆசனமுமில்லை. கேவல கும்பகத்திற்குச் சமமான கும்பகமுமில்லை. கேசரிமுத்திரைக்குச் சமமான முத்திரையுமில்லை. நாதத்திற்குச் சமமான இலயமுமில்லை. (௪௩)

## ௧௪. பதுமாசனம்.

(அ-கை) இனிப் பதுமாசனத்தைக் கூறுகின்றார்:—

𑌵𑌾𑌮𑍋𑌰𑍂𑌪𑌰𑌿 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 𑌚 𑌚𑌰𑌣𑌂 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌵𑌾𑌮𑌂 𑌤𑌥𑌾
𑌦𑌕𑍍𑌷𑍋𑌰𑍂𑌪𑌰𑌿 𑌪𑌶𑍍𑌚𑌿𑌮𑍇𑌨 𑌵𑌿𑌧𑌿𑌨𑌾 𑌧𑍃𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌦𑍃𑌢𑌮𑍍 ।
𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑍌 𑌹𑍃𑌦𑌯𑍇 𑌨𑌿𑌧𑌾𑌯 𑌚𑌿𑌬𑍁𑌕𑌂 𑌨𑌾𑌸𑌾𑌗𑍍𑌰𑌮𑌾𑌲𑍋𑌕𑌯𑍇𑌤𑍍
𑌏𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌵𑌿𑌨𑌾𑌶𑌕𑌾𑌰𑌿 𑌯𑌮𑌿𑌨𑌾𑌂 𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌂 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

இடது தொடையின்பேரில் வலது பாதத்தையும் அப்படியே வலது தொடையின்பேரில் இடது பாதத்தையும் செவ்வையாக வைத்துப், பின்புறமாய் விதியோடு இரண்டு கைகளாலும் இரண்டு காற்பெருவிரல்களையும் திடமாய்ப் பிடித்துக்கொண்டு, இருதயத்திற்குச் சமீபத்தில் (நாலங்குலம் இடையிருக்கும்படி) மோவாய்க்கட்டையை வைத்து, நாசிநுனியைப் பார்க்கவேண்டும். இது யோகிகளுக்கு வியாதியை நாசஞ்செய்யும் ‡ பதுமாசனமென்று சொல்லப்படும். (சச)

### கரு. மச்சேந்திரபதுமாசனம்.

(அ-கை) மச்சேந்திரநாதராற் கொள்ளப்பட்ட பதுமாசனத்தைக் கூறுகின்றார்:—

* 𑌉𑌤𑍍𑌤𑌾𑌨𑍌 𑌚𑌰𑌣𑍌 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌊𑌰𑍁𑌸𑌂𑌸𑍍𑌥𑍌 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑌤𑌃 ।
𑌊𑌰𑍁𑌮𑌧𑍍𑌯𑍇 𑌤𑌥𑍋𑌤𑍍𑌤𑌾𑌨𑍌 𑌪𑌾𑌣𑍀 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌦𑍃𑌶𑍌 ॥

𑌨𑌾𑌸𑌾𑌗𑍍𑌰𑍇 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍇𑌦𑍍𑌰𑌾𑌜𑌦𑌨𑍍𑌤𑌮𑍂𑌲𑍇 𑌤𑍁 𑌜𑌿𑌹𑍍𑌵𑌯𑌾 ।
𑌉𑌤𑍍𑌤𑌮𑍍𑌭𑍍𑌯 𑌚𑌿𑌬𑍁𑌕𑌂 𑌵𑌕𑍍𑌷𑌸𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌪𑌵𑌨𑌂 𑌶𑌨𑍈𑌃 ।
𑌇𑌦𑌂 𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌵𑌿𑌨𑌾𑌶𑌨𑌂 ।
𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌯𑍇𑌨 𑌕𑍇𑌨𑌾𑌪𑌿 𑌧𑍀𑌮𑌤𑌾 𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 𑌭𑍁𑌵𑌿 ॥ சஎ ॥

(இ-ள்) இரண்டு புறங்கால்களையும் பிரயத்தினத்தாற் றொடையின் பேரிற்சேர்த்து, இரு தொடையின்மத்தியில் இரண்டு கைகளையும் பொருந்தச்செய்து தொடையில் சேர்க்கப்பட்ட பாதமிரண்டன் கணைக்காலிலொட்டிய பின்புறமுடையதாக இடதுகையினை யொட்டச்செய்து, அதன்பேரில் வலதுகையை ஒட்டச்செய்து, அதன்பின்

பார்வையிரண்டனையும் நாசி நுனியில் நிச்சலமாக (அசைவில்லாததாக)ச் சேர்த்து, முன்பற்களினிருபுறத்திலுமிருக்கும் † மூலத்தில் நாவினால் ஸ்தம்பித்து, மார்பில் மோவாய்க்கட்

‡ இவ்வாசனம் சாண்டில்யம், திரிசிகி, வராகம், தர்சனம், யோகதுண்டலி முதலிய வுபநிஷதங்களிற் சொல்லப்பட்டுளது.

* இவை கோரக்ஷபத்ததியிலுள்ள சுலோகங்கள்.

† இந்த ஜிவ்ஹாபந்தம் குருமுகமாக வறியத்தக்கதாம்.

டையை வைத்து, மெல்ல மெல்ல * வாயுவை யெழுப்புதல். சர்வவியாதிகளையும் நாசஞ் செய்யும் பதுமாசனமெனப்படும். (பாக்கியஹீனனாகிய) எவனாலும் அடைதற்கரிதாம். ஆனால் புவியில் புத்திமானாலடையப்படுகின்றது.

யதார்த்தமாக ஜிவ்ஹாபந்தத்தினாலேயே மூலபந்தம் செய்யப்பட்டதாமென்று ஹடாரகசியத்தை யறிந்தவர் கூறுவர். (சரு-சசு-சஎ)

### கசு. வேறுபதுமாசனம்.

(அ.கை) இதுவும் மஹாயோகிகளுக்குச் சம்மதமாமென்பதை விளக்கும்பொருட்டுப், பதுமாசனத்தில் வேறு செய்கைப் பேதத்தையுங் கூறுகின்றார் :—

𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌸𑌂𑌪𑍁𑌟𑌿𑌤𑍌𑌕𑌰𑍌𑌦𑍃𑌢𑌤𑌰𑌂𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾𑌤𑍁𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌂
𑌗𑌾𑌢𑌂𑌵𑌕𑍍𑌷𑌸𑌿𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌾𑌯𑌚𑌿𑌬𑍁𑌕𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌂𑌶𑍍𑌚𑌤𑌚𑍍𑌚𑍇𑌤𑌸𑌿 ।
𑌵𑌾𑌰𑌂𑌵𑌾𑌰𑌮𑌪𑌾 𑌨𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑌨𑌿𑌲𑌂 𑌪𑍍𑌰𑍋𑌤𑍍𑌸𑌾𑌰𑌯𑌨𑍍𑌪𑍂𑌰𑌿𑌤𑌂
𑌨𑍍𑌯𑌞𑍍𑌚𑌨𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑍁𑌪𑍈𑌤𑌿𑌬𑍋𑌧 𑌮𑌤𑍁𑌲𑌂𑌶𑌕𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌨𑍍𑌨𑌰𑌃 ॥

(இ-ள்) பதுமாசனத்தை மிகத்திடமாகச் சேர்த்துக், கைகளைச் சம்புடமாகச் செய்து மடியில் வைத்து, மார்பில் மோவாய்க்கட்டையைத் திடமாக நிறுத்தி (ஜாலந்தரபந்தத்தைச் செய்து தனது இஷ்டதேவதையை அல்லது பிரஹ்மத்தை)ச் சித்தத்தில் தியானித்துக்கொண்டு. அடிக்கடி அபானவாயுவை மேலெழுப்பி (மூலபந்தனஞ் செய்து), சுழுமுனைமார்க்கத்தால் பிராணனை மேற்கொண்டுபோய்ப் பூரகத்தால் உட்கொண்டபிராணனைக் கீட்செலுத்(பிராணாபான ஐக்கியம் செய்)தலால், புருஷன் ஆதாரசக்தியாகிய குண்டலியின் பிரபாவத்தால் (சாமர்த்தியத்தால்) நிகரற்ற ஞானத்தை † அடைகிறான்.

---

* இதனால் மூலபந்தஞ் சொல்லப்பட்டது. இதுவும் குருமுகமாகவே யறியத்தக்கதாம்.

† இதனை முக்தபதுமாசனமென்றும், பத்தபதுமாசனமென்றும் சிலர் கூறுவர். பத்மாசனத்தில் சிரமொழிந்தமற்றை யவயவங்கள் வக்கிரகதியின்றியிருத்தலின், சுவாசம் செவ்வையாய் வெளிப்படும், இரத்தம் அந்

“ ஓம் தத்ஸதிதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ்த்ரிவிதஃ ஸ்ம்ருதஃ

பிரஹ்மத்திற்கு ஓம் தத்ஸத் என்று மூன்றுவிதமாகிய நிர்த்தேசம் (பெயர்) சொல்லப்பட்டிருக்கின்றது” என்னும் பகவானது வாக்கியத்தால் தத்(அது) என்பதற்குப் பிரஹ்மமென்பது பொருள். மார்பில் மோவாய்க்கட்டையைத் திடமாக நிறுத்தியென்பதற்கு மார்பிற்குச் சமீபத்தில் நான்கங்குலம் இடையுள்ளதாக மோவாய்க்கட்டையை நிறுத்தியென்று யோகிகளின் சம்பிரதாயத்தாலறியவேண்டும். பிராணாபான ஐக்கியத்தால் குண்டலினிசக்தி விழிக்கின்றது. குண்டலினிசக்தி விழிக்குங்கால் பிராணன் சுழுமுனைமார்க்கமாகப் பிரஹ்மரந்திரத்தை யடைகின்றது. * பிரஹ்மரந்திரத்தை அடைந்தகாலத்துச் சித்தத்திற்கு ஸ்திரத்தன்மையுண்டாகின்றது. சித்தம் ஸ்திரமாகவே, சம்யமத்தால் ஆத்மசாக்ஷாத்காரம் உண்டாகின்றது என்பதுபொருள். (சஅ)

(அ-கை) இதுவுமது :—

பத்மாஸநே ஸ்திதோ யோகீ நாடீத்வாரேண பூரிதம்
மாருதம் தாரயேத்யஸ்து ஸ முக்தோ நாத்ர ஸம்சயஃ ||

(இ-ள்) பதுமாசனத்திலிருக்கும் எந்த யோகி (யோகப்பியாசி) பூரகத்தா லுட்செலுத்திய வாயுவைச் சுழுமுனைமார்க்கத்தால் கபாலத்திற் கொண்டுபோய் ஸ்திரமாக்குகின்றானோ, அவன் முக்தனாகின்றான். இதிற் சமுசயமில்லை. (சகூ)

## கள. சிம்மாசனம்.

(அ-கை) சிம்மாசனத்தைக் கூறுகின்றார் :—

---

தந்த நாடிகளில் செவ்வையாய் ஓடும்; கிரமமாகச் சுவாசம் வசப்பட்டு விருத்தி ஏகாக்கிரத்தையடையும். எல்லாரோகங்களும் நசித்துச்சரீரத்திற்காரோக்கியமுண்டாகும்; நித்திரை சோம்பல்கள் நீக்கிச் சுருசுருப்புண்டாகும்.

* இதனைத் தியானபிந்தூபநிஷதத்திற் காண்க.

* ஶாஷ்மஉவரிஷணஸ்யாத:
ஸீவந்யா:பார்ஶ்வயோ:க்ஷிபேத் ।
தக்ஷிணேஸவ்யஶாஷ்மம் து
தக்ஷ ஶாஷ்மம் து ஸவ்யகே ॥ ருO ॥

(இ-ள்) பரடுகளிரண்டையும் பீஜத்திற்குக் கீழ்ப்பாகத்தி லுள்ள நரம்பின் இருபக்கங்களிலும் சேர்க்கவேண்டும். அதாவது வலதுபுறத்தி லிடதுபரட்டையும் இடதுபுறத்தில் வலதுபரட்டையும் சேர்க்கவேண்டும். (ருO)

(அ-கை) இதுவுமது :—

* ஹஸ்தௌ ஜாந்வோ:ஸம்ஸ்தாப்ய
ஸ்வாங்குலீ:ஸம்ப்ரஸார்ய ச ।
வ்யாத்தவக்த்ரோ நிரீக்ஷேத
நாஸாக்ரம் ஸுஸமாஹித: ॥ ருக ॥

(இ-ள்) முழந்தாளின்பேரி லிரண்டு கைகளையும் நன்ருய்ப் பொருந்தும்படியாக வைத்துக், கைவிரல்களைச் செவ்வையாய் விரித்து, வாய்திறந்து நாக்கை நீட்டிக்கொண்டு, ஏகாக்கிரசித்தனுய் நாசிநுனியைப் பார்த்திருக்கவேண்டும். (ருக)

(அ-கை) இதுவுமது :—

* ஸிம்ஹாஸநம் பவேதேதத்
பூஜிதம் யோகிபி:ஸதா ।
பந்தத்ரிதயஸந்தாநம்
குருதே சாஸநோத்தமம் ॥ ருஉ ॥

(இ-ள்) யோகசிரேஷ்டர்களால் பூஜிக்கப்பட்டதும், சொல்லப்பட்ட ஆசனங்களெல்லாவற்றினும் சிரேஷ்டமானதுமாகிய இது சிம்மாசனமாம். இது மூன்று பந்தங்களையும் சமஸ்திதியாக்குகின்றது. (ருஉ)

---

* இக்குறியிட்டவை சாண்டில்யோபநிஷத் வாக்கியங்கள். சிம்மாசனம் திரிசிகி, வராகம், தர்சனம், சாண்டில்யமென்னும் உபநிஷத்துக்களிற் சொல்லப்பட்டுள்ளன,

## ௧௭. * பத்திராசனம்.

(அ-கை) பத்திராசனத்தைக் கூறுகின்றார் :—

* 𑌗𑍁𑌲𑍍𑌫𑍌 𑌚 𑌵𑍃𑌷𑌣𑌸𑍍𑌯𑌾𑌧𑌃
𑌸𑍀𑌵𑌨𑍍𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌯𑍋𑌃 𑌕𑍍𑌷𑌿𑌪𑍇𑌤𑍍 ।
𑌸𑌵𑍍𑌯𑌗𑍁𑌲𑍍𑌫𑌂 𑌤𑌥𑌾 𑌸𑌵𑍍𑌯𑍇
𑌦𑌕𑍍𑌷𑌗𑍁𑌲𑍍𑌫𑌂 𑌤𑍁 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍇 ॥ ௫௩ ॥

(இ-ள்) பீஜத்தின் கீழ்ப்பாகமாகிய நரம்பினிருபக்கங்களிலும் காற்பரடுகளைச் சேர்க்கவேண்டும். அதாவது இடதுபுறத்தில் இடதுபாட்டையும் வலதுபுறத்தில் வலதுபாட்டையும் சேர்க்கவேண்டும். (௫௩)

(அ-கை) இதுவுமது:—

* 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌪𑌾𑌦𑍌 𑌚 𑌪𑌾𑌣𑌿𑌭𑍍𑌯𑌾𑌂
𑌦𑍃𑌢𑌂 𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌮𑍍 ।
𑌭𑌦𑍍𑌰𑌾𑌸𑌨𑌂 𑌭𑌵𑍇𑌦𑍇𑌤𑌤𑍍
𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌵𑌿𑌨𑌾𑌶𑌨𑌮𑍍 ॥ ௫௪ ॥
𑌗𑍋𑌰𑌕𑍍𑌷𑌾𑌸𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑌿𑌦𑌂 𑌵𑍈 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ॥

(இ-ள்) இருபக்கங்களின் (பாரிசங்களின்) சமீபத்திலுள்ள இரண்டுபாதங்களையும் இரண்டு கைகளாற் பலமாகச்சேர்த்து (ஒன்றோடொன்று நெருங்கிய விரல்களுடையதும் வயிற்றோடொட்டியதுமாகிய கைகளாற்கட்டி)க்கொண்டு இருக்கவேண்டும். இது சகலவியாதிகளையும் நாசஞ்செய்யும் பத்திராசனமாம். சித்தர்களாகிய யோகிகள் இந்தப் பத்திராசனத்தைக் † கோரக்ஷாசனமென்று கூறுவர்.

பெரும்பாலும் கோரக்கரா லப்பியசிக்கப்பட்டமையால் இதனைக் கோரக்காசனமென்று கூறுவர். (௫௪௨)

---

* இக்குறிப்பிடப்பட்டவை சாண்டில்யோபநிஷத்வாக்கியங்கள். பத்திராசனம் திரிசிகி, வராகம், தர்சனம், சாண்டில்யம் என்னும் உபநிடதங்களிலும் சூதசங்கிதை, சநத்குமாரசங்கிதைமுதலிய புராணங்களிலும் கூறப்பட்டுளது.

† இந்நூலிற் சொல்லப்படாதனவாய் உருத்திரயாமளம் ஹடரத்நாவலிமுதலியவற்றிற் கூறப்பட்டுள்ள சில ஆசனங்கள் வருமாறு :—

### ககூ வல்லரியாசனம்.

சமமாகப் பதுமாசனத்தி லிருந்துகொண்டு, அப்பாதங்களை யும் தொடையையும் ஒட்டி முழங்கைகளைவைத்து, இரண்டுகை களையும் கோர்த்துச் சிரசின்பேரில்வைத்து, மோவாய்க்கட்டை யை மார்பில் பொருந்தச்சேர்த்து, வாயுவை நிரோதித்து, ஏகாக் கிரசித்தமாயிருக்கவேண்டும். இது வல்லரியாசனம்.

எப்போது சரீரத்தி லுதிரமுதித்து மிகுந்த தாகமும் வாயு கீழ்ச்செல்லுதலுமுண்டாகின்றதோ, அப்போது விவேகிகள் மெல்ல இவ்வாசனத்தை விடவேண்டும். இது மிக வுக்கிரமான சுரத்தைக் கெடுக்கும். உண்ட அன்னங்களை ஜீரணிப்பித்து ஜட ராக்கினியை விருத்திசெய்யும்.

### உ0. வீருச்சிகாசனம்.

இரண்டு கைகளையும் பூமியிலூன்றி, இரண்டு முழங்கைகளை யும் விலாப்பக்கத்திற் சேர்த்து, மோவாய்க்கட்டையைக் கீழே வைத்து, தேளின் கொடுக்குப்போன்றதாக இரண்டு பாதங்களை யும் சிரசின்பேரில் வைத்தல், விருச்சிகாசனமாம்.

### உக. குப்ஜிகாசனம்.

பாதங்களை மூலத்தில் மாறிவைத்து திரியக்கைப்போலக் கொஞ்சங்குனிந்து முழங்காலில் தலையை வைத்துக்கொண்டிருத் தல் குப்ஜிகாசனம். இது அக்கினியை விருத்திசெய்யும்.

### உஉ. பாரிசுவோபாதாசனம்.

சமானபூமியில் படுத்துக்கொண்டு, இரண்டுகைகளையும் இர ண்டுவிலாக்களினிடையாகிய முதுகிற்சேர்த்து, ஒன்றை யொன் றூற் செவ்வையாய்ப் பிடித்துக்கொண்டிருத்தல் பாரிசுவோபா தாசனமெனப்படும்.

### உங. யோகாசனம்.

"உத்தாநௌ சரணௌ க்ருத்வா ஸம்ஸ்தாப்ய ஜாநுநோபரி |
ஆஸநோபரி ஸம்ஸ்தாப்ய உத்தாநம் கரயுக்மகம் ||

முழந்தாள்களின்பேரில் மேனோக்கிய பாதங்களிரண்டையும் வைத்து ஆசனத்தின்பேரில் மேனோக்கிய கைத்தலமிரண்டனை யும் வைத்துப்.

வஂராலெகெவஂாயஂஜாகூஷ நாஸாமுஉவலொகயெக |
யொஜாஸநஂஹவெடெஉதஉஷாஜிநாஂ யொஜஸாயநஂ ||

பூரங்களால் வாயுவையிழுத்து நாசிநுனியைப் பார்க்கவேண்டும். இது யோகிகளின் யோகசாதனமான யோகாசனமாம்

முழங்காலுக்குக்கீழ் யோகபட்டையைச் சேர்த்து, இரண்டு பாதங்களேயும் பூமியில்வைத்து, இரண்டு முழங்கைகளேயும் தொடைகளுக்கு மத்தியில்வைத்து இரண்டு கைகளேயும் கன்னத்திற் சேர்த்திருத்தலும் யோகாசன மெனப்படும். குதத்தைக் கரடுகளால் அழுத்தி நேராக நிமிர்ந்திருத்தலேயும், யோகாசனமென்று கூறுவர். இவ்வாசனம் திரிசிகியுபநிஷதத்திற் கூறப்பட்டுளது.

## ௨௪. கபாலாசனம்.

தலேகீழா யிருத்தலாகிய விபரீதகரணியைக் கபாலாசனமென்றும், அதோமுகாசனமென்றும், ககாசனமென்றும் கூறுவர். இக்ககாசனத்தால் சிரமம் நீங்கும். அதனேயே மேலும் மேலும் செய்தலால் விஷயத்தினுலுண்டாகும் சிரமம் நீங்குகின்றது.

## ௨௫. டிட்டிபாசனம்.

கைகளே யூன்றி, இரண்டு பாதங்களேயும் சிரசின்பேரில் வைத்துப் பின்பாகத்தை யுயர்த்துதல், டிட்டிபாசனம்.

## ௨௬. பூர்வதானுசனம்.

கால்விரல்களே மடித்துப் பூமியிலூன்றிக், கடிதடங்களேப் பரடுகளில் வைத்துச், சிரசைக் கைகளாலும் இடையை முழங்கைகளாலும் அழுந்தப் பிடித்துக்கொண்டு இடுப்பு நிமிர்ந்திருத்தல், பூர்வதானுசனம்.

## ௨௭. அர்ப்பகாசனம்.

இரண்டுபாதங்களேயும் பூமியில் வைத்துக் கடிதடங்களேப் பூமியில் வைத்தாவது வைக்காமலாவது முழந்தாள்களின்பேரில் சிரசைவைத்து, முழந்தாள்களே இரண்டுகைகளாலும் சுற்றிப் பிடித்துக்கொண்டிருத்தல் அர்ப்பகாசனம்.

### உஅ. காமதகனுசனம்.

நுனிவிரல்களைப் பூமியிலூன்றி, முழுந்தாள்களைக் கீழூன்ருமல் குதிகளை யோனியிற் பொருத்தி, ஹம்ஸதண்டத்தின்பேரில் கைகளையூன்றிப் புருவநடுவைப் பார்த்திருத்தல் காமதகனுசனம்.

### உகூ. கேசரியாசனம்.

பீஜத்தின் கீழ்ச்சீவனியிடத்துப் பரட்டைவைத்து, முழங்கையை முழந்தாளில்வைத்து, அங்குலியை விரித்து நாசியைப் பார்த்திருத்தல் கேசரியாசனம்.

### நூo. சோபாசிரயாசளம்.

யோகப்பட்டை சேர்த்திருத்தல் சோபாசிரயாசனம். இதனை ஸ்திராசனமென்றும் கூறுவர்.

### நூக. பரியங்காசனம்.

பச்சிமதாணுசனத்தைப் பரியங்கமென்பதோடு முழந்தாள்களில் கைகளை நீட்டிச் சயனித்தலையும் பரியங்காசனமென்பர். சிலர் வீராசனத்தைப் பரியங்காசனமென்றுங் கூறுவர். வேறுவகையாகவும் மதங்கப்பாரமேசுவராகமத்தின் யோகபாதத்திற் கூறப்பட்டுளது. விரிவஞ்சிவிடுக்கப்பட்டது.

### நூஉ, பத்தாசனம்.

பிருஷ்டத்தில் இரண்டு பாதங்களையும் வைத்துப், பிடரியில் இரண்டுகைகளையும் வைத்துக் காயத்தைச் சுருக்கிப்பிடித்தல், பத்தாசனமாம்.

### நூநூ. லௌல்யாசனம்.

குக்குடாசனத்திலிருந்து தலையைக் கீழேசாய்த்தல், லௌல்யாசனம். இது சரீரத்திற்கு சீதளத்தையும் குண்டலியின் விழிப்பையுந் தரும்.

### நூச. பத்தயோனியாசனம்.

இலிங்கமென்னும் குஹ்யமுதலியவற்றைப் பந்தித்தலாகிய யோனியாசனத்தைச்செய்து, உதடுகளைச் சுண்டுவிரல்களாலும் நாசித்துவாரங்களை மோதிரவிரல்களாலும் நேத்திரங்களை நடு

விரல்களாலும் காதுகளைச் சுட்டுவிரல்களாலும் மூடுதல் பத்தயோனியாசனம்.

௩௫. பேகனாசனம்.

இரண்டு பாதங்களையும் தோளின்பேரில் வைத்து, அப்பாதங்களின்மேல் இரண்டு கைகளையும் வைத்திருத்தல் பேகனாசனம்.

௩௬. மகாபேகாசனம்.

சர்வாங்கங்களையும் ஆகாயத்தில் உயர்த்துதலாகிய கேசராசனம் மகாபேகாசனமெனப்படும்.

௩௭. பிராணாசனம்.

ஒரு பாதத்தைத் தொடையிலும் மற்றப்பாதத்தைத் தோளிலுமாகச் சேர்த்திருத்தல் பிராணாசனம். இதுசகல சித்திகளையும் தரும்.

௩௮. அபானாசனம்.

மூலத்தினின்றும் வாயுவை யெழுப்பிப் பரவச்செய்து, பிரயத்தினத்தால் ஒரு பாதத்தைத் தோளில்வைத்து, மற்றொருபாதத்தால் நிற்றல் அபானாசனம். இது சர்வபூரகங்களுக்கும் ஆசிரயமாம்.

௩௯. சமானாசனம்.

ஒரு பாதத்தைத் தொடையில்வைத்து, மற்றப் பாதத்தைக் குஹ்யமாகிய இலிங்கத்துவாரத்திற் சேர்த்தல் சமானாசனமாம்.

௪௦. பைரவாசனம்.

கரடுகளிரண்டையும் ஒன்றோடொன்று சேர்த்து நேராக நிமிர்ந்து, முழந்தாள்களுக்குப் பக்கத்தில் இரண்டுகைகளையும் தண்டம்போல் வைத்திருத்தல் பைரவாசனம்.

௪௧. உத்தான மண்டூகாசனம்.

𑌮𑌣𑍍𑌡𑍂𑌕𑌾𑌸𑌨𑌮𑌾𑌸𑍍𑌥𑌾𑌯 𑌕𑍂𑌰𑍍𑌪𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌂𑌧𑍃𑌤𑌂𑌶𑌿𑌰𑌃 |
𑌏𑌤𑌦𑍍𑌭𑍇𑌕𑌵𑌦𑍁𑌤𑍍𑌤𑌾𑌨𑌮𑍇𑌤𑌦𑍁𑌤𑍍𑌤𑌾𑌨𑌮𑌣𑍍𑌡𑍁𑌕𑌮𑍍 ||

மண்டூகாசனம் சேர்த்து முழங்கையிரண்டினாலும் சிரசைப் பற்றி இடதுகையினால் வலது புஜதண்டத்தையும் வலதுகையி

னால் இடது புஜதண்டத்தையும் பிடித்திருத்தல் உத்தான மண்டூகாசனமாம்.

### ௪௨. மர்க்கடாசனம்.

கைகளாற் பாதங்களைச் செவ்வையா யழுத்திப் பாதமத்தியில் சிரசை விற்போல் வைத்து அங்குஷ்டங்களைத் திடமாகப் பிடித்துக் கொண்டிருத்தல் மர்க்கடாசனம்.

### ௪௩. ஏகபாதவாசனம்.

ஒரு பாதத்தை நீட்டி, மற்றப்பாதத்தைக் கழுத்தின்பேரில் வைத்து, இரண்டு கைகளையும் கோர்த்து, அதின்மேல் வைத்துக்கொண்டிருத்தல் ஏகபாதவாசனம்.

### ௪௪. பணீந்திராசனம்.

இரண்டு கால்களையும் சுற்றிக்கொண்டு இரண்டு கைகளில் நிற்றல் பணீந்திராசனம்.

### ௪௫. யோகநித்திராசனம்

கால்களால் கழுத்தைச் சுற்றிக் கைகளைப் பின்புறம் கட்டிக்கொண்டு சயனித்தல் சுகத்தைத் தரும் யோகநித்திராசனமாம்.

### ௪௬. சுகாசனம்.

எப்படியிருந்தால் ஸ்திரமும் சுகமு முண்டாகுமோ, அப்படியிருத்தல் சுகாசனம். இதை அசக்தன் ஆசிரயிக்கவேண்டுமென்று திரிசிகிசாண்டில்யோபநிஷதங்களிலும் தரிசனோபநிஷதத்திலும் சூதசங்கிதையிலும் சொல்லியிருக்கின்றது.

### ௪௭. தண்டாசனம்.

உட்கார்ந்து விரல்களையும் பரடுகளையுஞ் சேர்த்துத் தொடைகணைக்கால் பாதமென்பவைகளைப் பூமியிற்பொருந்த நீட்டிக் கைகளைச் சிரசுக்குமேல் நீட்டித் தண்டத்தைப்போற் சயனித்தல் தண்டாசனம். இதனை ஜேஷ்டிகாசன மென்றும் கூறுவர்.

### ௪௮. சக்கிராசனம்.

வலதுகாற்பரட்டில் இடதுதொடையையும் இடதுகாற்பரட்டில் வலதுதொடையையும் வைத்து உடல் நிமிர்ந்திருத்தல் வராகோபநிஷதத்திற் கூறிய சக்கிராசனமாம்.

சகூ. வேறு சக்கிராசனம்.

குனிந்து இரண்டுபாதாங்குஷ்டங்களையும் இரண்டு கைகளாற் பிடித்திருத்தலையும் சிலர் சக்கிராசன மென்றும், வர்த்துலாசன மென்றும் கூறுவர். இதனால் பிராணவாயு அதோகதி அபானவாயு ஊர்த்துவகதியுமாய்க் குண்டலியின் விழிப்புண்டாம்.

௫0. அர்த்தாசனம்.

வீராசனமே ருத்திரகீதையில் அர்த்தாசனமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

௫க. பர்வதாசனம்.

மலைபோ லசையாதிருத்தல் பர்வதாசனம்.

இப்படியே பாதபீடாசனம், நிராலம்பம், கிரௌஞ்சநிஷதனம், ஹஸ்திநிஷதனம், பாதபந்தம், சமஜாநு, ஏகஜாநு, விதூனனம், விசித்திரகரணி, பிண்டமயூரம், அர்த்தசந்திரகம், தார்க்ஷியம், சூலம், கட்கம், முத்கரம், திரிபதம், காஷ்டம், தாணு, ஹஸ்திகர்ணிகம், பீமம், சர்வதோபத்திரம், ஆநாவிகம், மிருகவைணிகம், வராகம், வியாக்கிரம், குஞ்சரம், பீடம் என அநேக ஆசனங்களின் பெயர்கள்மாத்திரம் சாஸ்திரங்களிலும் சௌரமுதலிய புராணங்களிலும் காணப்படுகின்றன. முற்கூறிய ஆசனங்களை அப்பியசிக்குங்கால்ஒரு ஆசனத்திலிருந்து வேறு ஆசனத்தையாரம்பிக்கவேண்டும். ஒரு ஆசனத்தையே மாறுவதால் அது இரண்டாசனமாகின்றது. ஆசனங்களுள் சில தேகவியாதிகளை நீக்குவனவாயும் சில பிராணனைச் சுழுமுனைமார்க்கத்திற் செலுத்துவனவாயுமிருக்கின்றன.

ஆசனம் எவனால் ஜெயிக்கப்படுகின்றதோ, அவனால் மூன்றுலகமும் ஜெயிக்கப்படுமென்பது தரிசனோபநிஷத்தும் திரிசிகியுபநிஷத்துமாம்.

௫உ. யோனிமுத்ராசனம்.

இடதுபாட்டை குதத்திலும் வலதுபாட்டை துவஜ(லிங்க)த்தின்பேரிலும் வைத்து இவ்விதத்தால் உத்தமமான யோனிமுத்ராபந்தமென்னும் ஆசனமாகின்றது.

ருங. திருடாசனம்.

இடதுகையினை மடித்து முழங்கை பூமியிற்படும்படியாக உள்ளங்கையாதாரத்தில் சிரசு பொருந்தும்படிசெய்து இடது புறத்தில் திரும்பிப்படுத்து பீஜங்கள் நெருக்குப் படாமலிருக்கும்படி இரண்டு கால்களையும் நீட்டி அசையாது படுத்திருத்தல் திருடாசனம்.

சொப்பனம் வாராது ; இந்திரியஸ்கலனமாகாது, வாயுவின் கதி செவ்விதாயிருந்து ரோகமுண்டாக்காது ; ஜடராக்கினி விருத்தியாம். இவ்வாசனத்தில் தூங்கும்பக்ஷத்தில் வெகுகாலத் தூக்கத்தின் சுகத்தினைத் தருமாகலின் யோகாப்பியாசி இவ்வாசனத்தில் தூங்குதல் தகுதியாம். இவ்வாறே வலதுபக்கமும் திரும்பிப் படுக்கவேண்டும். இது சவ்வியாபசவ்ய(வலமிட)மாம்.

ருச பவனமுக்தாசனம்

வலதுகுதியினை வலதுபுட்டத்திலும் இடதுகுதியினை இடதுபுட்டத்திலும் பொருந்தும்படி பீஜங்களின் இருபுறத்திலும்வைத்து இரண்டு முழங்காலையும் நெருக்கி இருகைகளாலும் முழந்தாளின்மேலிருந்து கட்டியுட்கார்தல் பவனமுக்தாசனமாம். இதனால் மலாசயத்திருக்கும் அபானவாயு நசிக்கும்.

ருரு. வாமபாதபவனமுக்தாசனம்.

இடதுகாற்குதியினைக் குறுக்காகத்திருப்பி லிங்கஸ்தானத்தில்வைத்து வலதுகாலை நிற்கவைத்து அக்குதியினை இடதுகாற்பெருவிரலை யொட்டும்படிவைத்துட்கார்ந்து முழங்காலை வலதுகக்கத்தின் கீழ்ச்சேர்த்து இரண்டுகைகளாலும் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருத்தல் வாமபாதபவனமுக்தாசனமாம். இதனால் மலாசயம் சுத்தியாகும்.

ருசா. தக்ஷிணபாதபவனமுக்தாசனம்.

வாமபாதபவனமுக்தாசனத்திற்குச் சவ்யாபசவ்ய பேதமாய் வலதுக்கு இடமும் இடதுக்கு வலமுமாகக் கொள்ளவேண்டும்.

ருஎ. தீராசனம்.

இரண்டுகுதிகளையும் குதத்துவாரத்திற்கு இருபுறங்களிலும் வைத்து இரண்டு முழந்தாள்களையும் நுனிப்பாகம் பூமியில் படும்

படி உட்கார்ந்து வலது உள்ளங்கையினை இடது விலாவிலும் இடது உள்ளங்கையினை வலது விலாவிலும் வைக்கவேண்டும். இது நித்திரை சோம்பல்களைக் கெடுக்கும்.

௫அ. சுவாசகமனுசனம்.

வலதுகால் நுனிவிரலில் உட்கார்ந்து, சரீரபாரமுழுவதினை யும் அந்த நுனிவிரலில்வைத்து, வலது முழந்தாளை வலதுகக் கத்தின் கீழ்ச்சேர்த்து, அம்முழந்தாளினை இரண்டு கைகளாலும் பொருந்தத்தழுவி, இடதுகாலினை குறுக்காய் மடித்து, இடது பாதத்தினை வலது புறங்காலின்பேரில் வைத்துட்காருதல் தக்ஷி ணசுவாசகமனுசனமாம். இப்படியே வலமிடமாகச்செய்தால் வாமசுவாசகமனுசனமாம். வாமாசனத்தினால் வாமசுவாசாசய மும், தக்ஷிணாசனத்தினால் தக்ஷிணசுவாசாசயமும் சலித்துக்கொ ண்டிருக்கும். சுவாசகதிகளை மாற்றுவதற்கு இவ்வாசன முபயோகமாம்.

௫௯. வாதாயனுசனம்.

வலதுகாலின்பேரில் நின்று இடதுகாற்குதியினை வலது (தொடையின்மேலுள்ள) சந்திலும், இடது முழந்தாளை வலது குதிப்புறத்திலும்வைத்து இரண்டு கைகளையும் மார்பிற்சேர்த்து புருவநடுலக்ஷியத்தினைத் தியானித்திருத்தல் வாதாயனுசனமாம். இதனால் நித்திரை சோம்புல்நீங்கி சித்தம் ஏகாக்கிரத்தன்மை யினையடையும்.

௬0. அர்த்தபாதாசனம்.

ஒற்றைக்காலில் செவ்வையாய் நின்று இரண்டாவது காற் குதியினை முதல் முழந்தாளில் சேர்த்து இரண்டுகைகளை இருதய த்திற் சேர்த்தல் அர்த்தபாதாசனமாம். இதனால் சுவாசகதி குறைந்து சரீரத்திற்குப் பலமுண்டாகும்.

௬௧. ஊர்த்துவபத்மாசனம்.

அர்த்தபத்மாசனத்திலுட்கார்ந்து சிரசை பூமியில் வைத்த இரண்டு உள்ளங்கைகளின் பேரில்வைத்து சரீரமுழுவதையும் மேலுயர்த்தி அசையாதிருத்தல் ஊர்த்துவபத்மாசனமாம். இத னால் பிராணவாயு கீழ்நோக்கும் அபானவாயுமேல் நோக்குமா தலால் சுழுமுனைநாடியில் பிரவேசிக்கும்.

சுஉ. பூர்ணபாதாசனம்.

இரண்டு கால்களையும் பூமியின்பேரில்வைத்து கோணுமல் சரியாய் நின்று இரண்டு கைகளையும் முழந்தாளில் பொருந்தும் படி நீட்டியிருத்தல் பூர்ணபாதாசனமாம். இதனுல் நித்திரை சோம்பல் நீங்கும்.

சுங. தக்ஷிணுசனம்.

வலதுகையினைத் தலையின் கீழ்வைத்துக்கொண்டு வலதுபுற மாகத்திரும்பி கால்களை நீட்டிப்படுத்திருத்தல் தக்ஷிணுசனமாம். இதனுல் சுவாசகதி குறையும்.

சுச. அத்வாசனம்.

பூமியிற் குப்புறப்படுத்து இரண்டுகைகளையும் இரண்டுகால் களையும் நீட்டியிருத்தல் அத்வாசனமாம். இது கோஷ்டத்துத் தங்கியுள்ள வாயுவினைக் கெடுக்கும்.

சுரு. வாமதக்ஷிணபாதாசனம்.

வலதுகாலின்பேரில் நின்று இடதுகாலைக் கோணுது முன்னே நீட்டி இரண்டு கைகளையும் இருதயத்துப் பொருத்தியிருத்தல் வாமதக்ஷிணபாதாசனமாம். இதனுல் வலது சுவாசம் நடக்கும். இவ்வாறே இடதுகாலின்பேரில் நின்றுல் இடது சுவாசம் நடக் கும்.

சுசு. திவிபாதசிராசனம்.

உட்கார்ந்து இரண்டுபாதங்களையும் கழுத்தின்பேரில் வை த்து இருதயத்தில் கைகளைச் சேர்த்திருத்தல் திவிபாதசிராசன மாம். இதனைப் பாசினமுத்திரை யென்பர்.

வேறுவகை :- மேற்கூறியதுபோலத் தோளின்பேரில் பாதங் களைவைத்து இரண்டு கைகளையும் பூமியிலூன்றி அந்தப்பலத் தால் சரீரத்தினை மேலேயுயர்த்துதல் திவிபாதசிராசனமாம். இதனைச் சிலர் வஜ்ரோலிமுத்திரை யென்பர். வலது ஒன்றினை மாத்திரம் தோளில்வைத் துட்கார்ந்தால் தக்ஷிணபாதசிராசன மென்றும் இடதுபாதமொன்றனைமாத்திரம் தோளில் வைத்துட் கார்ந்தால் வாமபாதசிராசன மென்றும் சொல்லப்படும். இதனுல் குண்டலிவிழிப்பும் விந்து ஜயமுமுண்டாகும்.

### ௬௭. விருக்ஷாசனம்,

இரண்டு புறங்கைகளையும் பூமியிற்படும்படி கோர்த்துவைத்து அவ்வுள்ளங்கைகளின்மேல் சிரசை நிறுத்தி கால்களைமேலே ஆகாயத்தில் உயர்த்திவளையாது ஸ்திரமாக நின்று புருவநடுவைப் பார்த்திருத்தல் விருக்ஷாசனமாம்.

“ 𑌵𑌾𑌮𑍋𑌰𑍂𑌮𑍂𑌲𑌦𑍇𑌶𑍇𑌚𑌯𑌾𑌮𑍍𑌯𑌂𑌪𑌾𑌦𑌂 𑌨𑌿𑌧𑌾𑌯 𑌤𑍁 |
𑌤𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑍍𑌤𑍁𑌵𑍃𑌕𑍍𑌷𑌵𑌦𑍍𑌭𑍂𑌮𑌽 𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌸𑌨𑌮𑌿𑌦𑌂𑌵𑌿𑌦𑍁𑌃 ||

இடது தொடையினடியில் வலது பாதத்தினைவைத்து விருக்ஷம்போல் பூமியில் நிற்றல் விருக்ஷாசன மென்றறிவார்.

இதனால் பிராணவாயு சீக்கிரம் வசப்படுமாகலின் பிராணப்பியாசி இதனைத்தினமும் ஆசிரயிக்கவேண்டும். இவ்வாறே தலையினைக் கீழேவைத்து மேலுயர்த்தியகால்களை முழந்தாள்களின் மீது மடித்து குதிகளை புட்டங்களிற் பொருத்திய ஸ்திரமாயிருக்கின் அது அர்த்தவிருக்ஷாசன மெனப்படும்.

### ௬௮. தாடாசனம்.

இரண்டுபாதங்களின்பேரில் நேராக நின்று இரண்டுகைகளையும் மேலுயர்த்திநிற்றல் தாடாசனமாம். இதனால் சுவாசகதி குறையும்.

### ௬௯. ஊர்த்துவதநுராசனம்.

கும்பிடு போடுவதுபோல் இரண்டு கைகளையும் இரண்டு கால்களையும் பூமியிலூன்றி இடுப்பினையும் மற்றச்சரீரத்தினையும் மேலுயர்த்தி பின்புறமாய்க்குனிந்திருத்தல் ஊர்த்துவதநுராசனமாம். இதனால் நித்திரை சோம்பல் நீங்கும் அபானவாயு நசித்துப்போம்.

### ௭௰. வாமசித்தாசனம், தக்ஷிணசித்தாசனம்.

இடது பாதத்தினைச் சீவனியில் வைத்து வலதுபாதத்தினை நீட்டி எதிரில் வைத்து உட்காருதல் வாமசித்தாசனமாம். இப்படியே வலதுபாதத்தினை சீவனியிற் சேர்த்து இடது பாதத்தினை முன்னர் நீட்டி உட்காருதல் தக்ஷிணசித்தாசனமாம். இதனாற் கால்வலி நீங்கும், சரீரத்திற்குப் பலமுண்டாம்.

## எக. விவேகாசனம்.

வலது கையினை இடதுகக்கத்தின் கீழும் இடதுகையினை வலதுகக்கத்தின் கீழும் வைத்துப் பக்தியோடிருப்பதுபோல நிற்பது உத்திதவிவேகாசனமென்றும், இவ்வாறே கைகளைக்கட்டிச் சுவஸ்தி 'காசனத்திலுட்கார்ந்திருப்பது ஸ்திதிவிவேகாசனமென்றும் சொல்லப்படும். இதனாற் சித்தசாந்தியுண்டாகும்.

## எஉ. தர்க்காசனம்.

ஸ்வஸ்திகாசனத்திலுட்கார்ந்து இரண்டு முழங்கைகளையும் இரண்டு தொடைகளிலும் வைத்து இரண்டு உள்ளங்கைகளின் பேரில் சிரசைவைத்து விசாரணை செய்வதுபோலிருத்தல் பூர்வதர்க்காசனமாம். சுவஸ்திகாசனத்திருந்து இடது முழங்கையினை இடது தொடையில் வைத்து இடதுஉள்ளங்கையின்பேரில் சிரசைவைத்து வலதுகையினை வலதுதொடையில் வைத்து உட்காருதல் வாமதர்க்காசனமாம். இவ்வாறே வலதுகையில் தலையை வைத்து இடதுகையினை இடதுதொடையில் வைத்துட்காருதல் தக்ஷிணதர்க்காசனமாம். இதனாற் சித்தஏகாக்கிரமும் விசிராந்தியுமுண்டாம்.

## எங. நிசுவாசாசனம்.

இரண்டுகால்களையும் முன்னுக்குச்சரியாய் நீட்டி கால்விரல்கள் மேல்நிற்கும்படியாய்க் குதிகளைப் பூமியின்பேரில்வைத்து இரண்டுபெருவிரல்களையும் இரண்டு குதிகளையும் நெருங்கச்சேர்த்திருத்தல் நிசுவாசாசனமாம். இதனால் சுவாசகதிநின்றுபோகும் சரீரத்திற்குப்பலமுண்டாகும்.

## எச. அர்த்தகூர்மாசனம்.

புறங்கால் நிலத்திற் படும்படியாகவும், குதிகள் புட்டங்களிற் பொருந்தும் படியாகவும், முழந்தாள்களும் மார்பும் கீழேயிருந்து பூமியிற் பொருந்தும்படியாகவும், கால்களை மடித்துக் குப்புறப் படுத்து முழங்கைகள் முழந்தாள்களிற் படும்படியாகவும் உள்ளங்கைகளால் வாயினை மூடிப்படுத்திருத்தல் அர்த்தகூர்மாசனமாம். இந்திரிய ஜயமுண்டாகும்; சுவாசகதிகுறையும்.

### எரு. கருடாசனம்.

வலது காலின்பேரில் நின்று இடதுகாலை வலதுகாலின்மேலிருந்து சுற்றி இடதுகால் விரல்களை வலது புறங்கால்மீது ஊன்றி இரண்டுகைகளையும் சுற்றிக்கோர்த்து அவ்விரண்டு கைவிரல்களாலும் மூக்கினை மூடிக்கொண்டு நிற்றல் கருடாசனமாம். இதனால் பிராணவாயு சுழுமுனைநாடியிற் பிரவேசிக்கும் நித்திரை சோம்பல் நீங்கும். சித்த ஏகாக்கிரமுண்டாகும்.

வேறுவகை :—இரண்டு கால்விரல்களையும் முழந்தாள்களையும் பூமியின்பேரில்வைத்து, இரண்டு குதிகளின்பேரிலும் புட்டங்களைவைத்து, உள்ளங்கைகள் வெளியிலிருக்கும்படி இரண்டு முழங்கைகளையும் முழந்தாள்களின்பேரில் வைத்து கைகளைநீட்டியுட்கார்ந்திருத்தலும் கருடாசனமாம்.

### எகூ. திரிகோணாசனம்.

குந்தியுட்கார்ந்து வலதுகையினை வலது முழந்தாளின் பேரிலும் வலது உள்ளங்கையினை வலது கணைக்காலின்கீழும் பொருந்தும்படி வலதுகையினை மடக்கிவைத்து இடது முழங்கையினை இடதுமுழந்தாளில் பொருந்தும்படி இடதுகையினை நீட்டி உட்காருதல் தக்ஷிணதிரிகோணாசன மென்றும், இப்படியே இடது உள்ளங்கையின்பேரில் இடதுகணைக் காலைவைத்து வலதுகையினை நீட்டியுட்காருதல் வாமதிரிகோணாசன மென்றும் சொல்லப்படும். இதனால் அபானவாயு ஊர்த்துவகதியாகும்.

### எஎ. பிரார்த்தனாசனம்.

தீராசனத்துட்கார்ந்து இரண்டு கைகளையும் இருதயத்துச் சேர்த்தல் பிரார்த்தனாசனமாம். இதனால் நித்திரை சோம்பல் நீங்கும் குண்டலிப்பிரபோதமுண்டாம்.

### எஅ. பாதத்திரிகோணாசனம்.

வலதுகாற் குதியினைச்சிவனியிற் சேர்த்துட்கார்ந்து இடது முழந்தாளினை பூமியின்பேரில் வைத்து இடது இடைப்புறத்தினுக்குச்சமமாக உயர்த்தி ஒரு முழதூரத்தில் நிறுத்திச் சித்தாசனத்திற்போல கைகளை நாபியினிடத்து வைத்தல் வாமபாததிரிகோணாசன மெனப்படும். இப்படியே வலமிடமாய் மாற்றினால்

தக்ஷிண பாதத்திரிகோணுசன மெனப்படும். வாமாசனத்தில் வாமநாடியும் தக்ஷிணுசனத்தில் தக்ஷிணநாடியும் பந்தமாய்ச் சலிக்கும்.

இப்படியே இரண்டு முழந்தாளின் பேரிலும் நின்று இடது பாதத்தினை இடது இடைப்புறத்திற்குச் சமமாகவும், வலதுபாதத்தினை வலது இடைப்புறத்திற்குச் சமமாகவும் உயர்த்தி இடுப்பின்பக்கமாகிய விலாவிற்கு ஒவ்வொருமுழம் தூரமாகவைத்தல் பூர்ணபாததிரிகோணுசனமாம்.

எகூ. புஜாசனம்.

இடதுகாற்குதி சீவனியின் கீழிருக்கும்படி வைத்து வலது காற் குதியினை இடதுகாற் குதிப்புறத்தினை யொட்டியிருக்கும்படி நிறுத்திவைத்து வலது முழங்கையினை வலது முழங்காலின் பேரிலும் வலது உள்ளங்கையினை வலதுபுட்டத்தினை ஒட்டியும் வைத்து இடது முழங்கையினை இடதுபக்கத்தில் பூமியின்பேரில் வைத்து இடதுஉள்ளங்கையின் பேரில் மோவாய்க்கட்டையினை வைத்து இடதுபுறம் சாய்ந்து உட்கார்தல் வாமபுஜாசனமாம். இப்படியே வலமிடமாக மாற்றியுட்கார்தல் தக்ஷிணபுஜாசனமாம். வாமாசனத்திஞல் தக்ஷிணநாடியும் தக்ஷிணுசனத்தில் வாமநாடியும் சலித்துக்கொண்டிருக்கும்.

அ௦. ஹஸ்தாபயங்கராசனம்.

சுவஸ்திகாசனத்திலுட்கார்ந்து வலதுகையை வலதுமுழந்தாளிடத்துச் சின்முத்திரைமுடித்து இடதுகையினை மேற்பாகத்துயர்த்தி விரல்களை நீட்டியிருத்தல் வாமஹஸ்தாபயங்கராசனமாம். இப்படியே வலதுகையினை யுயர்த்தியிருத்தல் தக்ஷிணஹஸ்தாபயங்கராசனமாம். இதஞல் சுவாசங்கள் விபரீதகதியாய் நடக்கும்.

அக. அங்குஷ்டாசனம்.

தீராசனத்தினைப்போல வுட்கார்ந்து முழந்தாள்களைத்தரையிற் பொருத்தாது மேலுயர்த்திக் கைகளைமார்பிற் பொருத்தி பெருவிரல்களில் சரீரபாரத்தை வைத்துட்காருதல் அங்குஷ்டாசனமாம். இதஞல் அபானவாயு ஊர்த்துவகதியாகும். ஒருகாற்

பெருவிரலிற் சரீரபாரத்தை வைத்து மற்றக்காலினை அக்காற் றொடைமீது வைத்தல் வாமாங்குஷ்ட தக்ஷிணாங்குஷ்ட ஆசனங் களாம்.

அ௨. உத்கடாசனம்.

இருகால் விரல்களையும் பூமியில்வைத்துக் குதிகளை யுயர்த்தி நாற்காலியில் யுட்காருவதுபோல புட்டங்களும் முழந்தாள்களும் சரியாயிருக்கும்படி வளைத்திருத்தல் உத்கடாசனமாம். இது இந்நூலில் பஸ்திகர்மங்கூறிய விடத்தும் சொல்லப்பட்டுளது. இதனால் சுவாசம் ஸ்தம்பிக்கும் பிராணவாயு சுழுமுனையில் பிரவேசிக்கும்.

அ௩. அர்த்தபாதாசனம்.

வலதுகாலை மடக்கி வலதுகுதியினை வலது புட்டத்திற் பொருந்தும்படி வைத்து வலது முழந்தாளின்பேரில் இடது முழந்தாள் சந்திக்கும்படி வைத்து இரண்டுகைகளையும் முதுகின் பக்கமாக பூமியின்பேரில் ஊன்றியுட்காருதல் வாமார்த்தபாதாசனமாம். இப்படியே வலமிடமாயுட்கார்ந்தால் தக்ஷிணார்த்தபாதாசனமாம். இதனால் சுவாசகதிமந்தமாகும்.

அ௪. ஹஸ்தபுஜாசனம்.

இடதுகாலை இடதுபுஜத்திலிருந்து முன்னுக்குப்பாதம் வரும்படியாகவும், வலதுகாலை வலதுபுஜத்திலிருந்து முன்னுக்கு வலதுபாதம் வரும்படியாகவும் செய்து இரண்டுகைகளாலும் கழுத்தினைப்பிடித்துக் கொண்டுட்காருதல் ஹஸ்தபுஜாசனமாம். குண்டலிவிழிக்கும். ஒவ்வொருகாலினை மாத்திரம் பிடித்துக் கொண்டிருத்தல் அந்தந்த ஹஸ்தபுஜாசனமெனப்படும்.

அ௫. வாமவக்கிராசனம்.

வலதுகாலைமடக்கி வலதுகுதியை இடதுதொடையின் கீழ் வைத்து இடதுகாலினைக்கூட கோணலாய்மடக்கி இடதுகுதியினை இடது புட்டத்தினை யொட்டவைத்து இரண்டு பாதங்கட்கும் ஒருசாண் தூரத்திலிருக்கும் வண்ணம் பூமியின்பேரில் இருந்து சுவஸ்திகாசனத்திற்போலக் கையினைவைத்திருத்தல் வாமவக்கிராசனமாம். இதனால் சோம்பல் கெடும்.

## ௮௬. ஜாந்வாசனம்.

இடதுகாற்குதியினைக் குதத்துவாரத்தின் வலதுபக்கத்தில் வைத்து வலது முழந்தாளை இடதுமுழந்தாளின்பேரில்வைத்து வலதுகுதியினைக் குதத்துவாரத்தின் இடதுபக்கத்தில்வைத்து இரண்டு கைகளையும் மார்பிற்சேர்த் துட்காருதல் வாமஜாங்வாசன மெனப்படும். இவ்வாறே மாறியுட்கார்தல் தக்ஷிணஜாங்வாசனமாம். இதனால் அபானவாயு ஊர்த்துவகதியாகும். ஜாடராக்கினி விருத்தியடையும்.

## ௮௭. சாகாசனம்.

இடதுபாதத்தினை வலதுமுழந்தாட் சந்தினில்வைத்து வலதுபாதத்தினை இடதுகணைக்காலின்பேரில்வைத்து கைகளை நாபியினிடத்துச் சேர்த்திருத்தல் வாமசாகாசனமாம். இதனையே விபரீதமாகச்செய்தால் தக்ஷிணசாகாசனமாம். இது ஆரோக்கியத்தினை யுண்டுபண்ணுவதாம்.

## ௮௮. திரிஸ்தம்பாசனம்.

பிரார்த்தனாசனத்தி லுட்கார்ந்து இரண்டுகாற் பெருவிரல்களையும் தரையில் வைத்தற்குப்பிரதியாக மேலெடுத்துக் குதிகளைப் புட்டங்களை ஒட்டவைத்தல் திரிஸ்தம்பாசனமாம். இதனால் ஜாடராக்கினி விருத்தியடையும்.

## ௮௯. பாதஅபானகமனாசனம்.

சாகாசனத்தினைப்போ லுட்கார்ந்து வலதுகுதியினை நாபிப் பிரதேசத்தில் வைத்தல் தக்ஷிண அபானகமனாசனமாம். இடதுகுதியினைவைத்தல் வாமபாத அபானகமனாசனமாம். அபானவாயு வெளிச்செல்வதாகும்.

## ௯0. ஹஸ்தசதுஷ்கோணாசனம்.

வலதுகுதியினைக் குதத்துவாரத்தில் வைத்து வலதுகாலை முன்வளைத்து இடதுகுதியினை இடதுமுழங்கைச்சந்தில் வரும்படி வளைத்துயர்த்தி இரண்டுகைகளையும் கழுத்தின்பேரில் கோர்த்துட்காருதல் வாமஹஸ்தசதுஷ்கோணாசனமாம். இப்படியே மாற்றிச்செய்யின் தக்ஷிணஹஸ்தசதுஷ்கோணாசன மாகும்.

இதன் வாமாசனத்தால் வலதுநாடியும் தக்ஷிணாசனத்தால் இடது நாடியும் சலிக்கும்.

கூக. வேறு கூர்மாசனம்.

வலதுகுதியினைக் குதத்துவாரத்தின் இடது பாகத்திலும் இடதுகுதியினைக் குதத்துவாரத்தின் வலதுபாகத்திலும் வைத்துக் குதத்துவாரத்தினை மூடியுட்கார்ந்து இரண்டுகைகளையும் இடுப்பினிருபுறங்களிலும் வைத்து ஸ்திரமாயிருத்தலும் கூர்மாசனமாமென்று சிலர் கூறுவர். இதனால் அபானத்தோடு வீரியம் ஊர்த்துவகதியாகும். இந்திரியங்கள் பகிர்முகமாகா. சரீரத்தில் பலம் விருத்தியாகும். இதனையே கோமுகாசனமென்று சிலர் சொல்லுவர்.

கூஉ. கர்ப்பாசனம்.

உத்தான கூர்மாசனத்தினையே கர்ப்பாசனமென்பர். இதனால் நித்திரை சோம்பல் நீங்கும். இந்திரியாதி சாந்தியுண்டாகும்.

கூங. ஏகபாதவிருக்ஷாசனம்.

விருக்ஷாசனத்திருந்து ஒருபாதத்தினை மாத்திரம் விரித்து மற்றப்பாதத்தினை (தொடையின்பேரிலுள்ள) சந்திற்சேர்த்திருத்தல் ஏகபாதவிருக்ஷாசனமாம். இதில் அபானன் ஊர்த்துவகதியுடையதாகும்.

கூச. முக்தவிருக்ஷ ஹஸ்தவிருக்ஷாசனம்.

வலது உள்ளங்கையினை வலப்புறத்தும் இடது உள்ளங்கையினை இடதுப்புறத்தும் ஒரு முழதூரத்துத்தரையில் ஊன்றி இரண்டு உள்ளங்கைகளுக்கும் இடையில் சிரசினைவைத்துத் தலை கீழாகவும் கால்கள் மேலாகவும் பிராணன் அதோ (கீழ்) கதியாகவும் நேராய்க்கோணலின்றி யிருத்தல் முக்தஹஸ்தவிருக்ஷாசனமாம். இதில் அபானன் ஊர்த்துவகதியாகும்,

கூரு. திவிபாதபாரிசுவாசனம்.

இரண்டு முழந்தாள்களின் பேரிலும் நின்று இரண்டுபாதங்களையும் கட்பிரதேசங்களு கிருபக்கங்களிலும் நெருங்கவைத்து மார்பில் கைகளைச்சேர்த்து புருவநடுவில் லக்ஷியம்வைத்து நிற்றல் திவிபாதபாரிசுவாசனமாம். இதனால் அபானவாயும் சுக்கிலமும் ஊர்த்துவகதியாகும்.

### ௬௬. கந்தபீடாசனம்.

திவிபாதபாரிசுவபாதாசனம்போல முழந்தாள்களின்பேரில் நின்று இரண்டுபாதங்களையும் லிங்கஸ்தானத்திற்கு மேல் நாபி சமீபத்தில் கந்தஸ்தானத்தினை யொட்டியிருக்கவைத்தல் கந்த பீடாசனமாம். இவ்வாறு இரண்டுபாதங்களாலும் எழுபத்தீரா யிரம் நாடிகட்கும் ஸ்தானமாகும் கந்தப்பிரதேசத்தினை அழுத்து தலால் எல்லாநாடிகளிலும் மலசுத்தியுண்டாம். அபானவாயு சீர்ப்படும். இதனால் மிகவுஷ்ண முண்டாகிக் குண்டலிவிழித்துச் சுழுமுனை மார்க்கத்தில் பிராணவாயு சஞ்சரிக்கும்.

### ௬௭. பிரௌடபாதாசனம்.

இடது பாதத்தினை வலதுதொடையின் கீழ்வைத்து வலது பாதத்தினை இடதுதொடையின் பேரில்வைத்து உட்கார்ந்து சின் முத்திரைபிடித்து வலதுகையினை வலதுமுழந்தாளிலும் இடது கையினை இடதுமுழந்தாளிலும் வைத்திருத்தல் பிரௌடபாதா சனமாம். இது விசிராந்தியினை யுண்டுபண்ணுவதாம்.

### ௬௮. உபதானசனம்.

வலதுபக்கமாய்ப் படுத்து வலதுகாலினையும் வலதுகையினை யும் நீட்டி இடதுகாலைக்கழுத்தின்பேரில் வைத்துப் படுத்திருத் தல் உபதானசனமாம். இதனால் சுவாசகதிவிபரீதமாகும்.

### ௬௯. ஊர்த்துவசம்யுக்தபாதாசனம்.

விருக்ஷாசனத்தில் தலைகீழும் கால்மேலுமாக நின்று மேலு ள்ளகாலைக் குதத்தின்கண் வைத்து அங்கு இரண்டுபாதங்களை யும் பொருத்தியிருத்தல் ஊர்த்துவசம்யுக்தபாதாசனமாம். இத னல் பிராணவாயு அதோகதியும் அபானவாயு ஊர்த்துவகதியுமா ய்க் குண்டலிவிழிப்புண்டாகும்.

### ௭0. அர்த்தசவாசனம்.

சவாசனத்திற்படுத்து இரண்டு கால்களையும் பின்புறம் மடி த்து இரண்டு பாதங்களையும் இரண்டு புட்டங்களின் கீழ்வைத்து இரண்டுகைகளையும் மார்பில்வைத்திருத்தல் அர்த்தசவாசனமாம். இதனால் மலாசயத்து மலம் சீக்கிரமாய் வெளிப்பட்டுப்போகும். மலபந்தவியாதி நாசமாகும்.

### ௧0௧. அபானசனம்.

சுவஸ்திகாசனத்துட்கார்ந்து வலதுகைப்பெருவிரலிற்கும் மற்றவிரல்களுக்கு இடையிலுள்ள பாகத்தினால் வலதுகணைக்காலை யும் இடதுகை ஐந்துவிரல்களால் இடதுகணைக்காலையும் கெட்டி யாய் அழுத்துதல் அபானசனமாம். இதனால் அபானவாயு ஊர்த் துவகதியாகும்.

### ௧0௨. யோனியாசனம்.

சித்தாசனத்திலுட்கார்ந்து யோனிமுத்திரையினை இரண்டு கைகளாலும் பிடித்தல் யோனியாசனமாம். இந்திரியம் பிராணன் சித்தமென்பன நிரோதமாகும்.

### ௧0௩. மண்டூகாசனம்.

இரண்டு முழந்தாழ்களும் நிலத்திற்படும்படி இரண்டுபாதங் (உள்ளங்கால்)களால் குதத்துவாரத்தினை மூடி இரண்டுகைகளையும் முழந்தாள்களின்பேரில் வைத்துட்காருதல் மண்டூகாசனமாம். அபானவாயு ஊர்த்துவகதியாகும்.

### ௧0௪. பர்வதாசனம்.

பத்மாசனத்திலுட்கார்ந்து இரண்டுகைகளையும் மேலே சிரசின் மேலுக்குச்சரியாய் உயர்த்தி கைகுவித்திருத்தல் பர்வதாசன மாம். இதனால் உதானவாயு மிகப்பலமுடையதாம்.

### ௧0௫. சலபாசனம்.

ஊயஸ்ருமெலெதகூாயஹ்ரவக்ஷாஃ
வாணெர்ாஷஸாஹர்ாம்வபாயஶிவீம்வராவீஙா் ।
வாஉளவஊயவும்ஊவிதஷ்ரிோதும்
வஉஷிவீOம்ஶமஹம்ஊீநூாஃ ॥

குப்புறப்படுத்து மார்பின்கீழ் இரண்டுகைகளையும் வைத்து முகத்தினை நிலத்திற்படாது மேலுயர்த்திக் கால்களை நீட்டிப் படுத்திருத்தல் சலபாசனமாம். இது விசிராந்திதருவதாம்.

### ௧0௬. கோகிலாசனம்.

பதுமாசனத்திலுட்கார்ந்து இரண்டு முழங்கைகளையும் பூமியில் வைத்து வலதுகையினால் வலதுகாற் பெருவிரலையும், இடது

கையினல் இடதுகாற் பெருவிரலையும் பிடித்துக்கொண்டிருத்தல் கோகிலாசனமாம். இதனல் வயிறு சுருங்கிஜாடராக்கினி விருத்தியாகும்.

௧௦௭. லோலாசனம்.

பதுமாசனத்திலுட்கார்ந்து வலது உள்ளங்கையினை வலது புறத்தும் இடது கைவிரல்களை இடது பக்கத்தும் நிலத்தின்பேரில்வைத்து இவ்விரண்டு கைகளின்பேரிலும் பாரத்தைநிறுத்திச் சரீரத்தினை பூமியிற்படாது மேலுயர்த்துதல் லோலாசனமாம். இதனல் வாயு சலனமொழிந்து ஸ்திரமாகும்.

௧௦௮. உத்தமாங்காசனம்.

லோலாசனத்தினைப்போலுட்கார்ந்து கைகளை விலாப்புறங்களில் வைக்காது எதிரில்வைத்து அவற்றின்பேரில் சரீரபாரத்தினைவைத்து மேலெழுதல் உத்தமாங்காசனமாம். இதனற் சரீரத்தில் குளிர்ச்சியுண்டாம். குண்டலிவிழிப்புண்டாம்.

௧௦௯. உஷ்டிராசனம்.

𑌅𑌧𑍍𑌯𑌾𑌸𑍍𑌯𑌶𑍇𑌤𑍇𑌪𑌦𑌯𑍁𑌗𑍍𑌮𑌵𑍍𑌯𑌸𑍍𑌤𑌂
𑌪𑍃𑌷𑍍𑌠𑍇𑌨𑌿𑌧𑌾𑌯𑌾𑌪𑌿𑌧𑍃𑌤𑌂𑌕𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍 ।
𑌆𑌕𑍁𑌞𑍍𑌚𑍍𑌯𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌧𑍍𑌯𑍁𑌦𑌰𑌾𑌸𑍍𑌯𑌗𑌾𑌢𑌮𑍍
𑌔𑌷𑍍𑌟𑍍𑌰𑌂𑌚𑌪𑍀𑌠𑌂𑌯𑌤𑌯𑍋𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 ॥

குப்புறப்படுத்து முழந்தாள்களைப் பின்புறமாக மடித்துப் புட்டங்களை யொட்டியிருக்கும் பாதங்களில் இடது பாதத்தினை இடதுகையினலும் வலது பாதத்தினை வலதுகையினலும் பிடித்துக்கொண்டு முகத்தினை மேலுயர்த்திப் படுத்திருத்தல் உஷ்டிராசனமாம். இதனல் கமனசக்தி விருத்தியாகும். பசிதாகங்களைச் சகிக்கும் சக்தியுண்டாகும்.

௧௧௦. ஹம்ஸாசனம்.

மயூராசனம்போட்டுப் பின் இரண்டுபாதங்களின் பெருவிரல்களையும் நிலத்திற் பொருத்தியிருத்தல் ஹம்ஸாசனமாம்.

௧௧௧. பிராணசனம்.

வலதுகுதியின்பேரில் இடதுதொடையினைவைத்து வலது கையை வலது காலிலூன்றி இடதுகையை இடதுபக்கத்தில் பூமி

யின்பேரில்வைத்து இடது முழந்தாள் இடது புஜத்தின்மேபரி லிருக்கும்படியாகவும் இடதுபாதம் லிங்கஸ்தானத்தில் பூமியி லழுந்தும்படியாகவும்வைத்து வலதுபுறத்துச் சாய்ந்துட்காருதல் பிராணுசனமாம். இதனால் பிராணவாயு அதோகதிக்கு இழுக்கப் படும்.

ககஉ. கார்முகாசனம்.

பத்மாசனத்திலுட்கார்ந்து வலதுகையினால் இடதுகாற்பெரு விரலையும் இடதுகையினால் வலதுகாற் பெருவிரலையும் பிடித்துக் கொள்ளுதல் கார்முகாசனமாம். இது சரீரத்தில் உஷ்ணத்தினைக் குறைக்கும். அபானவாயு ஊர்த்துவகதியாயிழுக்கப்படும்.

ககங. ஆநந்தமந்திராசனம்.

வலதுகுதியினை வலது புட்டத்தின் கீழும் இடதுகுதியினை இடது புட்டத்தின்கீழும் வைத்து, வலதுகுதியினை வலதுகையினாலும், இடதுகுதியினை இடதுகையினாலும் பிடித்துக்கொண்டு இரண்டுகால்களின் விரல்களைமாத்திரம் பூமியின்பேரில் வைத்துச் சரீரபாரத்தை அதன் பேரில் நிறுத்தி நிமிர்ந்துட்காருதல் ஆநந்த மந்திராசனமாம். இதனால் மலாசய சுத்தியுண்டாகும்.

ககச. கம்புநாசனம்.

கோமுகத்திற்குச் சமானமாக வுட்கார்ந்து இரண்டு உள்ளங் கைகளையும் பூமியிலூன்றி அவற்றின்மேபரில் சரீரபாகத்தினை வைத்து உட்காருதல் கம்புநாசனமாம். இதில் அபானவாயு ஊர்த்துவகதியாகும்.

ககரு. கிரந்திபேதனாசனம்.

பத்மாசனத்திலுட்கார்ந்து இரண்டு முழந்தாள்களையும் நெருக்கி இரண்டுகைகளால் கோர்த்து வலது உள்ளங்கையினை இடது முழந்தாளிலும் இடதுஉள்ளங்கையினை வலதுமுழந்தாளி லும் வைத்து ஸ்திரமாயுட்காருதல் கிரந்திபேதனாசனமாம். இத னால் கைகால்களிலிருக்கும் நாடிகளின் கிரந்திகள் பேதிக்கப்படும்

ககசு. சர்வசங்காசனம்.

விபரீதகரணியாசனம்போல. இதனால் பிராணாபானன்களின் கதி விபரீதமாய் நடக்கும் அதனால் சரீரத்தில் எவ்விதரோகமு முண்டாகாது அரோக்கிய முண்டாகும்.

### ககஎ. சமாசனம்.

சுவஸ்திகாசனத்திலுட்கார்ந்து இரண்டுகைகளின் பெருவிரல் சுட்டுவிரல் நடுவிரல்களால் இடுப்பின் இருபுறங்களையும் பற்றி இரண்டுகைச்சுட்டு விரல்களால் நாபிப்பிரதேசத்தினைக் கெட்டியாய் அழுத்திக்கொண்டிருத்தல் சமாசனமாம். சமான வாயு பலவிருத்தியாகும்.

### ககஅ. புஜங்காசனம்.

அங்குஷ்டநாபிபர்யந்தமதோபூமௌ விநிந்யஸேத் |
கராப்யாம் தராம் த்ருத்வா ஊர்த்வஶீர்ஷம் பணீவ ஹி ||
தேஹாக்நிர்வர்த்ததே நித்யம் ஸர்வரோகவிநாஶநம் |
ஜாகர்தி புஜங்கீ தேவீ ஸாதநாத் புஜகாஸநாத் ||

குப்புறப்படுத்து இரண்டுகைகளையும் நாபியின் இருபுறங்களிலும் வைத்து நாபியிலிருந்து சிரசுபரியந்தமான மேற்பாகம் பூமியையொட்டாது பாம்பின் படம்போலுயர்த்தி நாபியிலிருந்து அங்குஷ்டபரியந்தமான கீழ்ப்பாகம் பூமியின்பேரில் பொருந்த வைத்தல் புஜங்காசனமாம். இதனல் குண்டலிவிழிக்கும் ஜடராக்கினி விருத்தியாகும். சகலவிதரோகங்களும் நசிக்கும். முன் சொல்லப்பட்ட பணீந்திராசனமும் இதனைப் போன்றதாம்.

### ககக பவனசனம்.

இரண்டு முழந்தாள்களின்பேரிலும் நின்று சமானசனத்திற் போல நாபியினை இரண்டு விரல்களாலும் அழுத்துதல் பவனசனமாம் இதனல் ஜடராக்கினிவிருத்தியாகும்.

### கஉ0. மச்சாசனம்.

முக்தபத்மாஸநம் க்ருத்வா
உத்தாநஶயநம் சரேத் |
கூர்பராப்யாம் ஶிரோ வேஷ்ட்ய
மத்ஸ்யாஸநம் து ரோகஹா ||

மேன்முகமாய்ப் படுத்து பதுமாசனம் போட்டு இரண்டு முழங்கைகளையும் சிரசின் மிதிருந்து கோத்துக்கொண்டு அசை

யாது படுத்திருத்தல் மச்சாசனமாம். இது மலசுத்தியாக்கி ஆரோக்கியத்தினை யுண்டுபண்ணும்.

### கஉக. மகராசனம்.

கயஸ்ஸெ தஹ்ரூர்ம்வவக்ஷ
ஹஸ்ளவவாதிளஹிவ்யஸாரரோணள |
ஶீஷெவயஸ்காகாரண்யாம்
தெஹா ஸ்ரீகாரம்கோராஸநம்தக ||

வயிறும் மார்பும் பூமிற்படும்படி படுத்து இரண்டுகால்களையும் விரித்து, சிரசில் கைத்தண்டிரண்டினையும் வைத்து வலதுகையினால் இடதுபுஜதண்டத்தினையும் இடதுகையினால் வலதுபுஜதண்டத்தினையும் பற்றியிருத்தல் மகராசனமாம். இது தேகத்தில் அக்கினியைச்செய்வதாம்.

### கஉஉ வீருஷாசனம்

வாஹெள்ளவாயஸெவ்ய வாஹொமெவதெதாரூ |
விவரீதம்ஷ்யஸெஹூஸிம்வ்ருஷாஸநமிதம்ஹவெத ||

இடதுகாற் பரட்டில் குதமூலத்தினை வைத்து வலதுபாதத்தினை தொடையின் மேலதாய் இடப்புறத்தில் வைத்து பூமியைப் பொருந்த விருத்தல் விருஷாசனமாம்.

### கஉங. சங்கடாசனம்.

வாவோதம்விதெதஸெவ்யம் ஸம்நஸ்யாணீதமெ
வாதஜ்ஞெநயாஸ்ரந வெஷ்யெயதாவோதகூ |
ஜாநுயுமெவாணியுமெதத்ஸங்கடாஸநம் ||

இடதுபாதத்தினைப் பூமியின்பேரில் நேராகவைத்து வலதுபாததண்டத்தினால் இடதுபாதத்தினைச் சுற்றவேண்டும். அதன்பின் முழந்தாளிரண்டின் பேரிலும் உள்ளங்கையிரண்டனையும் வைத்திருத்தல் சங்கடாசனமாம்.

### கஉச. ஸர்வாங்காசனம்.

மல்லாக்கப்படுத்து இரண்டு கைகளையும் பூமியில் நீட்டி வைத்து கால்களிரண்டையும் சேர்த்து மேலே நேராக உயர்த்திப் பின் சரீரம் பிடரியிலும் சிரசிலுமேநிற்கும்படியிருத்தல் ஸர்வாங்காசனமாம்.

## ஆசனங்களின் பெயர்கள்.

க. சுவஸ்திகாசனம்.
உ. கோமுகாசனம்.
௩. வீராசனம்.
ச. கூர்மாசனம்.
ரு. குக்குடாசனம்.
சு. உத்தான கூர்மாசனம்.
எ. தனுராசனம்.
அ. மச்சேந்திராசனம்.
கூ. பச்சிமதாஞசனம் (உக்கிராசனம்).
க0. மயூராசனம்.
கக. சவாசனம் (மிருதாசனம்).
கஉ. மச்சேந்திரசித்தாசனம் (வேறுசித்தாசனம்).
க௩. (க) மதாந்திர சித்தாசனம்.
(உ) வஜ்ஜிராசனம்.
(௩) முக்தாசனம்
வேறு விதமுக்தாசனம்.
(ச) குப்தாசனம்.
கச. பதுமாசனம் (சுபாசனம்).
கரு. மச்சேந்திரபதுமாசனம்.
கசு. வேறுவிதமான பதுமாசனம்.
(க) முக்தபதுமாசனம்.
(உ) பத்தபதுமாசனம்.
கஎ. சிம்மாசனம்.
கஅ. பத்திராசனம் (கோரக்ஷாசனம்).
ககூ. வல்லரியாசனம்.
உ0. விருச்சிகாசனம்.
உக. குப்ஜிகாசனம்.
உஉ. பாரிசுவோபாதாசனம்.
உ௩. (க) யோகாசனம்.
(உ) வேறுவிதமாக யோகாசனம்.
உச. கபாலாசனம் [ககாசனம்] (விபரீதகரணி, அதோமுகாசனம்).
உரு. டிட்டிபாசனம்.
உசு. பூர்வதாஞசனம்.
உஎ. அர்ப்பகாசனம்.
உஅ. காமதகஞசனம்.
உகூ. கேசரியாசனம்.
௩0. சோபாசிரயாசனம். (ஸ்திராசனம்).
௩க. பரியங்காசனம் (மதங்கபாரமேசுவராசனம்).
௩உ. பத்தாசனம்.
௩௩. லௌல்யாசனம்.
௩ச. பத்தயோனியாசனம்.
௩ரு. பேகஞசனம்.
௩சு. மகாபேகஞசனம் (கேசராசனம்).
௩எ. பிராஞசனம்.
௩அ. அபாஞசனம்.
௩கூ. சமாஞசனம்.
ச0. பைரவாசனம்.
சக. மண்டுகோசனம்.
சஉ. மர்க்கடாசனம்.
ச௩. ஏகபாதவாசனம்.
சச. பணீந்திராசனம்.

சரு. யோகநித்திராசனம்.
சசு. சுகாசனம்.
சஎ. தண்டாசனம் (ஜேஷ்டிகாசனம்).
சஅ. சக்கிராசனம்.
சகூ. வேறுவிதமாக சக்கிராசனம் (வர்த்துலாசனம்).
ரு0. அர்த்தாசனம் (வீராசனமே)
ருக. பர்வதாசனம்.
ருஉ. யோனிமுத்திராசனம்.
ருந. திருடாசனம்.
ருச. பவனமுக்தாசனம்.
ருரு. வாமபாதபவனமுக்தாசனம்.
ருசு. தக்ஷிணபாத ஷை
ருஎ. தீராசனம்.
ருஅ. சுவாசகமனுசனம்.
(க) வாமபாகசுவாசகமனுசனம்.
(உ) தக்ஷிணபாகசுவாசகமனுசனம்.
ருகூ. வாதாயனுயனுசனம்.
சு0. அர்த்தபாதாசனம்.
சுக. ஊர்த்துவபத்மாசனம்.
சுஉ. பூர்ணபாதாசனம்.
சுந. தக்ஷிணுசனம்.
சுச. அத்வாசனம்.
சுரு. வாமதக்ஷிணபாதாசனம்.
சுசு. திவிபாதசிராசனம் (பாசினமுத்திரை).
(க) வேறுவகை (வஜ்ரோலிமுத்திரை).
(உ) வாமபாதசிராசனம்.
(ந) தக்ஷிணபாதசிராசனம்.
சுஎ. விருக்ஷாசனம்.
(க) அர்த்தவிருக்ஷாசனம்.
சுஅ. தாடாசனம்.
சுகூ. ஊர்த்துவதனுராசனம்.
எ0. வாமசித்தாசனம்.
(க) தக்ஷிணசித்தாசனம்.
எக. விவேகாசனம்.
(க) உத்திதவிவேகாசனம்.
(உ) ஸ்திதிவிவேகாசனம்.
எஉ. தார்க்காசனம்.
(க) பூர்வதார்க்காசனம்.
(உ) வாமதார்க்காசனம்.
(ந) தக்ஷிணதார்க்காசனம்.
எந. நிசுவாசாசனம்.
எச. அர்த்தகூர்மாசனம்.
எரு. கருடாசனம்.
(க) வேறுவித கருடாசனம்.
எசு. திரிகோணுசனம்.
எஎ. பிரார்த்தனுசனம்.
எஅ. பாதத்திரிகோணுசனம்.
(க) வாமபாததிரிகோணுசனம்.
(உ) தக்ஷிணபாததிரிகோணுசனம்.
(ந) பூர்ணபாததிரிகோணுசனம்.
எகூ. புஜாசனம்.
(க) வாமபுஜாசனம்.
(உ) தக்ஷிணபுஜாசனம்.

அ௦. ஹஸ்தாபயங்கராசனம்.
(க) வாமஹஸ்தாபயங்கராசனம்.
(உ) தக்ஷிணஹஸ்தாபயங்கராசனம்.
அக. அங்குஷ்டாசனம்.
(க) வாமாங்குஷ்டாசனம்.
(உ) தக்ஷிணாங்குஷ்டாசனம்.
அஉ. உத்கடாசனம்.
அங. அர்த்தபாதாசனம். (கூ௦)
(க) வாமார்த்தபாதாசனம்.
(உ) தக்ஷிணார்த்தபாதாசனம்.
அச. ஹஸ்தபுஜாசனம்.
(க) வாமஹஸ்தபுஜாசனம்.
(உ) தக்ஷிணஹஸ்தபுஜாசனம்.
அரு. வாமவக்கிராசனம்.
அசு. ஜாங்வாசனம்.
(க) வாமஜாங்வாசனம்.
(உ) தக்ஷிணஜாங்வாசனம்.
அஎ. சாகாசனம்.
(க) வாமசாகாசனம்.
(உ) தக்ஷிணசாகாசனம்.
அஅ. திரிஸ்தம்பாசனம்.
அகூ. பாதஅபானகமனாசனம்.
(க) வாமபாத அபானகமனாசனம்.
(உ) தக்ஷிணபாதஅபானகமனாசனம்.
கூ௦. ஹஸ்தசதுஷ்கோணாசனம்.
(க) வாமஹஸ்தசதுஷ்கோணாசனம்.
(உ) தக்ஷிணஹஸ்தசதுஷ்கோணாசனம். வேறு.
கூக. கூர்மாசனம்.
கூஉ. கர்ப்பாசனம்.
கூங. ஏகபாதவிருக்ஷாசனம்.
கூச. முக்தஹஸ்தவிருக்ஷாசனம்.
கூரு. திவிபாதபார்சுவாசனம்.
கூசு. கந்தபீடாசனம்.
கூஎ. பிரௌடபாதாசனம்.
கூஅ. உபாதானாசனம்.
கூகூ. ஊர்த்துவசம்யுக்தபாதாசனம்.
க௦௦. அர்த்தசவாசனம்.
க௦க. வேறுஅபானாசனம்.
க௦உ. யோனியாசனம்.
க௦ங. வேறுபர்வதாசனம்.
க௦ச. பர்வதாசனம்.
க௦ரு. சலபாசனம்.
க௦சு. கோகிலாசனம்.
க௦எ. லோலாசனம்.
க௦அ. உத்தமாங்காசனம்.
க௦கூ. உஷ்டிராசனம்.
கக௦. ஹம்ஸாசனம்.
ககக. வேறுபிராணாசனம்.
ககஉ. கார்முகாசனம்.
ககங. ஆநந்தமந்திராசனம்.
ககச. கம்புநாசனம்.

கக௫. கிரந்திபேதனுசனம்.
கக௬. சர்வாங்காசனம்.
ககஎ. சமாசனம்.
ககஅ. புஜங்காசனம்.
கக௯. பவனுசனம்.
க௨0. மச்சாசனம்.
க௨க. மகராசனம்.
க௨௨. விருஷாசனம்.
க௨௩. சங்கடாசனம்.
க௨௪. சர்வாங்காசனம்.

என்னும் ஆசனங்கள் முடிந்தன.

(அ-கை) இனி ஆசனங்களிலிருந்துகொண்டு செய்யவேண்டியதைக்கூறுகின்றார்:—

ஏவமாஸநபந்தேஷு
யோகீந்த்ரோ விகதஶ்ரம꞉ |
அப்யஸேந்நாடிகாஶுத்திம்
முத்ராதிபவநக்ரியாம் ||

(இ-ள்) இப்படி ஆசனங்களிலிருந்து சிரமநீங்கிய யோகீந்திரன் நாடிகளின் சித்தியையும், "ப்ராணம் சேதிடயா பிபேந்நியமிதம்" என்று (இரண்டாமுபதேசத்தின் க0-வது சுலோகத்திற்) சொல்லப்படும் நாடிகளின் சுத்தியினையும் முத்திரையை ஆதியாகவுடைய சூரியபேதமுதலிய பிராணவாயுவின் கிரியையினை (பிராணுயாமத்தை)யும் அப்பியசிக்கவேண்டும். (௫௫)

(அ-கை) இனி ஹடாப்பியாசத்தின் கிரமத்தையும், ஹடசித்தியின் அவதி (எல்லை)யையும் கூறுகின்றார்:—

ஆஸநம் கும்பகம் சித்ரம் முத்ராக்யம் கரணம் ததா ||௫௬||
அத நாதாநுஸந்தாநமப்யாஸாநுக்ரமோ ஹடே |

(இ-ள்) முற்கூறிய ஆசனம், சித்திரமென்னும் நானுவிதகும்பகம், முத்திரையென்னும் மகாமுத்திரை முதலியகரணம் அதன்பின் நாதானுசந்தானம் என்னுமிவை, ஹடயோகாப்பியாசத்தின் முன்பின் கிரமங்களாம் (ஒழுங்காம்).

* ப்ரஹ்மசாரீ மிதாஹாரீ த்யாகீ யோகபராயண꞉ |
அப்தாதூர்த்வம் பவேத்ஸித்தோ நாத்ர கார்யா விசாரணா ||

---

* இது தியானபிந்தூபநிஷத் வாக்கியம்.

பிரஹ்மசாரியும், மிதாகாரியும், (வரையறையான ஆகார முடையவனும்), தியாகியு (தானசீலனும் அல்லது விஷயப்பரித் தியாகமுள்ளவனு)மாகிய யோகபராயணன் (யோகாப்பியாச பரன்), ஒருவருஷத்திற்குமேல் ஹடசித்தியை யடைகிறான். இதில் (முற்கூறியதில்) விசாரணை ஆகுமா ஆகாதாவென்னும் சமுசயத்தோடு கூடியதன்மை செய்யத்தக்கதன்று, (இது ஆகு தல் நிச்சயமே).　　　　　　　　　　　　　　　　(ருஎ)

மிதாகாரம்.

(அ-கை) முற்சுலோகத்தில் மிதாகாரியென்று சொல்லப்பட்டது. அதில் யோகிகளின் மிதாகாரம் எப்படிப்பட்டதென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

* ஸுஸ்நிக்³த⁴மது⁴ராஹாரஶ்சதுர்தா²ம்ஶவிவர்ஜித꞉ ।
பு⁴ஜ்யதே ஶிவஸம்ப்ரீத்யை மிதாஹாரஸ்ஸ உச்யதே ॥

(இ-ள்) மிகமிருதுவாயும் மதுரமாயுமுள்ள ஆகாரம் நான்காவது பாகந்தள்ளப்பட்டதாய் சிவப்பிரீதியாகப் புசிக்கப்படும். அது மிதாகாரமென்று சொல்லப்படுகின்றது.

நான்காவதுபாகம் தள்ளப்பட்டதாமென்பது அபியுக்தமென்னு நூலில்,

“ த்³வௌ பா⁴கௌ பூரயேத³ந்நை
ஸ்தோயேநைகம் ப்ரபூரயேத் ।
வாயோ꞉ ஸஞ்சரணார்தா²ய
சதுர்த²மவஶேஷயேத் ॥

இரண்டுபாகங்கள் அந்நத்தினாலும் ஒருபாகம் ஜலத்தினாலும் நிரைக்கப்பட்டு, நான்காவது பாகம் வாயு சஞ்சரிக்கும்பொருட்டு மிஞ்சியிருக்கவேண்டும்” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. சிவனென்பது ஜீவன் அல்லது,

“ போ⁴க்தா தே³வோ மஹேஶ்வர꞉ ॥

போக்தா (அநுபவிப்போன்) தேவனாகிய மகேசுவரன்” என்னும் வாக்கியத்தால் ஈசுவரனாவன்.　　　　　　　　　　(ருஅ)

* இது யோககுண்டலியுபநிஷத் வாக்கியம்.

## அபத்தியம்.

(அ-கை) யோகிகளுக்கு அபத்தியத்தைக் கூறுகின்றார்:—

𑌕𑌟𑍍𑌵𑌾𑌮𑍍𑌲𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌲𑌵𑌣𑍋𑌷𑍍𑌣𑌹𑌰𑍀𑌤𑌶𑌾𑌕
𑌸𑍌𑌵𑍀𑌰𑌤𑍈𑌲𑌤𑌿𑌲𑌸𑌰𑍍𑌷𑌪𑌮𑌦𑍍𑌯𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍 |
𑌅𑌜𑌾𑌦𑌿𑌮𑌾𑌂𑌸𑌦𑌧𑌿𑌤𑌕𑍍𑌰𑌕𑍁𑌲𑌤𑍍𑌥𑌕𑍋𑌲
𑌪𑌿𑌣𑍍𑌯𑌾𑌕𑌹𑌿𑌙𑍍𑌗𑍁𑌲𑌶𑍁𑌨𑌾𑌦𑍍𑌯𑌮𑌪𑌥𑍍𑌯𑌮𑌾𑌹𑍁𑌃 ‖ ௫௯ ‖

(இ-ள்) கைப்பு (பாகல்முதலியன), புளிப்பு (புளிமுதலியன), உறைப்பு (மிளகாய்முதலியன), உப்பு, உஷ்ணம் (வெல்லமுதலியன), கீரை, காடி, தைலம் (எள் கடுகுமுதலியவற்றின் நெய்), எள், கடுகு, கள், மீன், ஆடுமுதலியவற்றின் மாமிசம், தயிர், மோர், கொள்ளு, இலந்தைப்பழம், பிண்ணாக்கு, பெருங்காயம், வெள்ளைப்பூடு முதலியவற்றை யோகிகளுக்கு * அபத்தியமென்று கூறுவர்.

ஆடுமுதலியவற்றின் என்பதிலுள்ள முதலிய வெனுஞ்சொல்லால் பன்றி முதலியவற்றின் மாமிசங்களும் கொள்ளப்படும். வெள்ளைப்பூடு முதலியவற்றை யென்பதிலுள்ள முதலிய வெனுஞ்சொல்லால் வெண்காயமும், மதத்தையுண்டுபண்ணும் திரவியங்களாகிய உளுந்தந்நமுதலியவைகளும் கொள்ளப்படும்.()

(அ-கை) இதுவுமது.—

𑌭𑍋𑌜𑌨𑌮𑌹𑌿𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍
𑌪𑍁𑌨𑌰𑌸𑍍𑌯𑍋𑌷𑍍𑌣𑍀𑌕𑍃𑌤𑌂 𑌰𑍂𑌕𑍍𑌷𑌮𑍍 |
𑌅𑌤𑌿𑌲𑌵𑌣𑌮𑌮𑍍𑌲𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌕𑌦𑌶𑌨𑌶𑌾𑌕𑍋𑌤𑍍𑌕𑌟𑌂 𑌵𑌰𑍍𑌜𑍍𑌯𑌮𑍍 ‖ ௬௦ ‖

---

* "யோகவிக்கினத்தைச் செய்யும் ஆகாரங்களாகிய உப்பு, கடுகு, புளி, உஷ்ணமானது, நெய்முதலியவில்லாதது, உறைப்புள்ளது, காய் கீரையாதிகள், பெருங்காய முதலியன வெனுமிவற்றை யோகாப்பியாசி விலக்கவேண்டும். பிராதஸ்நானம் உபவாசமுதலிய காயக்கிலேச வியவகாரங்களையும் விலக்கவேண்டும்" என்று யோகதத்துவோபநிஷத்திலும் கூறியிருக்கின்றது.

(இ-ள்) மறுபடியும் சுடவைத்த (பருப்பு அந்நம் ரொட்டி முதலிய) வைகளும், நெய்முதலியவை யில்லாதவைகளும், அதிக உப்புள்ளதும், புளிப்புத்திரவியங்களோடு கூடியதும், தீய்ந்த அந்நமும், (விதிக்கப்பட்டவற்றிற் கந்யமாகிய சோளம் வரகு முதலிய) தானியங்களும், உறைப்புள்ளது (மிகக்காரமுள்ள மிளகாய் முதலியனவு) மாகிய இவைகள் தள்ளத்தக்கனவாம்.

* அதிக உப்புள்ளது என்றதனால் உப்பு எதிலதிகமாயிருக்கின்றதோ அது; அல்லது உப்பையதிகரித்த லவக்ஷாரமுதலியனவாம். இதில் உப்பு முற்றிலும் தள்ளத்தக்கதாயிருப்பதால். இரண்டாம்பக்ஷம் நன்று அப்படியே தத்தாத்திரேயரால்,

"கடுவஜ்ஃா நிவக்ஷாதி யொமவிவு கூாணிவ ।
லவணஂஸஷவஂவாஞு ரூஂதீக்ஷவாஹகஂ ॥

சுதீவஹொஜநஂதாஜாதிநிஷாதிஹாஷண ॥

இனியோகவிக்கினத்தைச் செய்வனவாகிய தள்ளத்தக்கவைகளைச் சொல்லுகின்றேன். அதாவது உப்பு, கடுகு, புளி, மிகுந்த உறைப்பு, நெய்யில்லாதவைகள், அதிகபோஜனம் அதிக நித்திரை, அதிகப்பேச்சு என்பவைகள் தள்ளத்தக்கனவாம்" என்றும், ஸ்கந்தபுராணத்தில்.

"† தாஜெத்ஷவணஂ க்ஷீரஹொஜீஸஷாஹவெகு ॥

கசப்புப் புளிப்பு உப்பு என்பவற்றைவிட்டு, எப்போதும் பால் போஜன முடையவனாகவேண்டும்" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. புளிப்புத்திரவியத்தோடு கூடியதும் தள்ளத்தக்கதாமெனின் புளியைப்பற்றிக் கேட்பானேன். இங்கே மூன்றுவதுபாதத்தை (அடியை),

"வஸஂவாதிஷவிஷஂ

---

* அதிக வுப்புள்ளது என்றமையால் அவசியமானாற் சிறியது உப்புஞ் சேர்த்துக்கொள்ளலா மென்பது சிலர் கொள்கை.

† இதுதியானபிந்தூபநிஷத்வாக்கியம்.

(மாமிசமல்லது பிண்ணாக்கு) என்னும் பாடமாகச் சிலர்கூறுவர். வர்ஜியமென்பதற்கு துஷ்டமென்னும் பாடத்தைக்கொள்ளும்பக்ஷத்தில் ஊசிய அன்னமுதலியவைகள் அபத்தியமென்று சேர்க்கவேண்டும்.

(அ-கை) இப்படியே யோகிகளாலெப்போதும் தள்ளத்தக்கவற்றைக்கூறி, இனியப்பியாசகாலத்தில் தள்ளத்தக்கவைகளையும் அதில் .பிரமாணமாயுள்ள கோரக்கநாதருடைய வசனத்தையும் கூறுகின்றார் :—

வஹ்நிஸ்த்ரீ வழிஸெவநா ஊாஉளவஜுநஊாவறெஸ ॥
தயா ஹிமொரக்ஷவசநம் ॥
" வஜ்யெதூ ஜுநப்ராஂதம் வஹ்நிஃஸ்த்ரீபயிஸெவநம் ।
ப்ராதஃஸ்நாநொவவாஸாதி காயக்லெஶவிதிம்தயா ॥ ௬௧ ॥

(இ-ள்) நெருப்புக்காய்தல், பெண்ணைக்கூடுதல், தீர்த்தயாத்திரை போதலாதிவழிநடப்பு முதலியவற்றின் நீக்கத்தை ஆதியில் (அப்பியாசகாலத்தில்) ஆசரிக்கவேண்டும். அதாவது இவற்றை நீக்கிவைக்கவேண்டும். அப்படியே கோரக்கரது வாக்கியமுமிருக்கின்றது. துர்ஜனசகவாசமும், * நெருப்புக்காய்தலும் ஸ்திரீ சங்கமும், வழிநடப்பும், [பிரதமாப்பியாசிகளுக்குச் சீத (குளிர்) விகாரத்தை யுண்டுபண்ணுவதா யிருத்தலால்] பிராதக்கால ஸ்நானமும், (பித்தமுதலியவற்றை யுண்டாக்குவதா யிருத்தலால்) உபவாசமுதலியவைகளும், அநேக சூரியநமஸ்காரஞ்செய்தல் மிகுந்தபாரங்களைச் சுமத்தலென்னும்) காயக்கிலேசத்தைத் தரும் விதி (கிரியை)களும் தள்ளத்தக்கனவாம்".

அப்பியாசஞ் சித்தித்தபின் ஒருகால் குளிரில் நெருப்புக்காய்தலும், கிரகஸ்தன் ருதுகாலத்தில் தனதுமனைவியோடு கூடுதலும், தீர்த்தயாத்திரையில் வழிநடத்தலும் நிஷேதிக்கப்படவில்லை யென்பது ஆதியிலென்னும் பதத்தால் குறிப்பிக்கப்பட்டது. (௬௧)

* நெருப்புக்காய்தல், ஸ்திரீசங்கமுதலியன கூடாதென்பது யோகதத்துவோபநிஷதத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

## பத்தியம்.

(அ-கை) இனி யோகிகளுக்குப் பத்தியத்தைக் கூறுகின்றார்:—

> கோதூமசாலியவஷாஷ்டிகசோபநாந்நம்
> க்ஷீராஜ்யகண்டநவநீதஸிதாமதூநி |
> ஶுண்டீபடோலகபலாதிகபஞ்சசாகம்
> முத்காதிதிவ்யமுதகஞ்ச யமீந்த்ரபத்யம் || ௬௨ ||

(இ-ள்) * கோதுமை, சாலி (நெல்), யவம் (வாற்கோதுமை) அறுபது நாளிற்பயிராகும் (குருவை முதலிய) தானியங்களென்னும் மிவற்றின் சோபனமாகிய அந்நம், பால், நெய், சர்க்கரை, வெண்ணெய், கற்கண்டு, தேன், சுக்கு, பேய்ப்புடல், பஞ்சசாகம்

---

* "கோதுமை, பாசிப்பயறு, நெல் என்பவற்றின் அன்னம் யோக விருத்தியைச் செய்வதாமென்றறிவர்" என்று யோகதத்துவோபநிஷத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அப்பியாசகாலத்தில் முதலில் பாலும் நெய்யும் புசித்தல் நலம். மிதமாய்ப்பாலும் நெய்யும் சாப்பிடுதலால், மலசுத்தி மூலபந்தத்தில் சக்தியும் திருப்தியும் பலமுமுண்டாம். பாலில் நீர் கலந்து காய்ச்சிக் கற்கண்டுசேர்த்துப் பக்குவமாயும் இதமாவும் கொள்ளவேண்டும். தனிப்பால் கொள்ளலாகாது. அப்படிக்கில்லையாயின், கற்கண்டு சேர்க்காமல் பாலைமாத்திரம் காய்ச்சிச் சாப்பிடலாம். பசுநெய்யாலாகிய அவிசன்னத்தைச் சாப்பிட்டுக்கொண்டு, எப்போதும் அப்பியாசத்தைச் செய்யவேண்டும். இப்படி உண்மையாய்ச் செய்துவந்தால், எட்டாவது நாளில் மலசுத்தியுண்டாம். பாலும் நெய்யுமகப்படாதபோது, அரிசி பச்சை (பாசி)ப் பயறு முதலியவற்றின் அந்நாதிகளைச் சேர்த்துக்கொள்க.

கும்பகவிருத்தியை யநுசரித்து, மெல்ல மெல்ல ஆகாரத்தைக் குறைப்பது உசிதம்; முதலிற் குறைப்பது உசிதமன்று. அப்பியாசத்தில் கும்பகம் விருத்தியாதலால், கும்பகத்தாலுண்டாகிய அக்கினியாற் கிரமமாக ஜெயிக்கப்பட்ட வாயுவின்வேகத்தினல் அக்கினி ஜெயிக்கப்படுகின்றது. அதனல் எவ்வளவுக்கெவ்வளவு கும்பகம் விருத்தியாகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு ஆகாரத்தைக் குறைத்தல், சாதகனுக்கு யோகாநுசாரமாக அநுகூலமும், ஆரோக்கியம் உற்சாகம் பலம் தேஜசுமுதலியவற்றைத்தருவதுமாகின்றது. ஆகையால் முதலிற் குறைக்கலாகாதென்பது சநாதனசித்தாந்த முதலிய நூல்களின் கருத்து.

பாசிப்பயறு முதலியன தோஷமில்லாத ஜலமென்னுமிவைகள் இயமத்தையுடையவர்களாகிய யோகீந்திரர்களுக்குப் பத்திய மாம்.

ஶாகம் பஞ்சவிதம் ப்ரோக்தம் பத்யம் ஶாகம் ந சாபரம் ।
ஜீவந்தீ வாஸ்து மூல்யாக்ஷீ மேகநாத புநர்நவா ॥

ஜீவந்தி (சீந்தில்), சக்கிரவர்த்திக்கீரை, பொன்னாங்காணி, சிறுகீரை, வெள்ளைச்சாரணையென்னும் பஞ்சசாகங்களும் விரும்பத்தக்கனவாம். மற்றெல்லாக்கீரைகளும் விரும்பத்தக்கனவாகா" என்று வைத்தியசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. பாசிப்பயறு முதலியன வென்பதிலுள்ள முதலியவெனுஞ் சொல்லால் துவரையுங் கொள்ளப்படும். (௬௨)

## போஜனநியமம்.

(அ-கை) இனி யோகிகளின் போஜனநியமத்தைக் கூறுகின்றார்:—

புஷ்டம் ஸுமதுரம் ஸ்நிக்தம் கவ்யம் தாதுப்ரபோஷணம் ।
மநோபிலஷிதம் யோக்யம் யோகீ போஜநமாசரேத் ॥ ௬௩ ॥

---

யோகியானவன் கிருஷ்ணபக்ஷத்தின் கலைக்கிரமமாகிய ஆகாரத்தைக் குறைக்கவேண்டும். சுக்கிலபக்ஷத்துச் சந்திரனைப்போல கும்பகத்தை விருத்திசெய்ய வேண்டுமென்பது மற்றொருவர் கருத்து. எப்போதும் அப்பியாசிகன் எந்தவுபாயத்தினாலாவது முயற்சித்துப் பித்தம் தேகத்தில் அதிகரிக்காமற் பாதுகாக்கவேண்டும். வாயு சூரியனிற் பிரவேசிக்குங்கால் அசனமு (உணவு)ம சந்திரப்பிரவேசமாகுங்கால் சயன ஜலபானங்களும் செய்தல் உசிதம்.

ஆகாரசுத்தியால் சத்துவ (சித்த)சுத்தியுண்டாகுமென்னும் சுருதியினாலும், மிதாகாரம் யோகத்திற்கு அங்கமாயிருத்தலாலும் யோகிகள் பத்தியமும் மிதமுமான ஆகாரத்தையே கொள்ளவேண்டும். இப்படியே மற்ற யோகாப்பியாசத்திற்கு இதமும் பத்தியமுமாயுள்ளவற்றைத் தமது யுத்தியால் விசாரித்துக் காண்க. உடலைப் பிரியத்தோடு வளர்க்கலாகாது. காணத்தை யதிகமாய்ப் பீடிக்கலாகாது அளவான ஆகாரமும் அளவான நித்திரையு மிருக்கவேண்டும். அசனபானக்கிரியை சுகத்தைத் தருவதாகலின் அது யோகத்திற்குச் சிறிதும் விக்கினமாகாது. இஃதொன்றே ஆரியசிரேஷ்டர்களால் அநுஷ்டிக்கத்தக்கது மற்ற மனக்கிலேசத்தையும் வியாதியையும் உண்டுபண்ணுங் கிரியைகள் தள்ளத்தக்கனவாம்.

(இ-ள்) தேகத்திற்குப் புஷ்டியைத்தருவனவும், (சர்க்கரை முதலியவற்ருேடுகூடிய) மதுரமுள்ளனவும், மிருதுவுள்ளனவும் (நெய்யோடுகூடியனவும்), பசும்பால் முதலியவற்ருேடுகூடியனவும், (இலட்டுகமுதலிய) மனதிற்குப் பிரியமுள்ளவைகளும், தாதுவைப் போஷிப்பனவும், யோக்கியமானவைகளுமாயிருக்கும் போஜனமே யோகிகள் புசிக்கவேண்டியதாம்.

மனதிற்குப் பிரியமுள்ளனவும் புஷ்டியைத்தருவனவுமாயிருப்பவைகளிலும் அபத்தியமானவை சாப்பிடத்தக்கவைகளன்றென்பார், யோக்கியமானவைகளு மென்ருர். சத்துமா (பொரிமா) முதலியவற்ருல் நிர்வாகம் செய்யலாகாதென்பது தாற்பரியம். (௬௩)

## யோகாப்பியாசாதிகாரி.

(அ-கை) யோகாப்பியாசிகளுக்கு வயதின்விசேஷம் ஆரோக்கியமுதலியவற்றின் அபேக்ஷை இல்லையெனக் கூறுகின்ருர்:—

𑌯𑍁𑌵𑌾 𑌵𑍃𑌦𑍍𑌧𑍋𑌽𑌤𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑍋 𑌵𑌾 𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌤𑍋 𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑍋𑌽𑌪𑌿 𑌵𑌾 |
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌗𑍇𑌷𑍍𑌵𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌤𑌃 || ௬௪ ||

(இ-ள்) தருணனுயினும், விருத்தனுயினும், அதிவிருத்தனுயினும், வியாதியுடையவனுயினும், துர்ப்பலமுடையவனுயினும், அவன் சர்வயோகங்களிலும் (யோகாங்கங்களிலும்) சோம்பலில்லாதவனுய் அப்பியசித்தலால் சித்தியை (சமாதியையு மதன் பலத்தையும்) அடைகிருன்.

ஜீவனத்திற்குச் சாதனமாகிய உழவுவிபாரமுதலியவற்றில் ஜீவனமென்னுஞ்சொல் பிரயோகிக்கப்படுவதுபோல, நேராகவாவது அல்லது பரம்பரையாகவாவது யோகத்திற்குச் சாதனங்களாகிய யோகாங்கங்களில் யோகமென்னுஞ்சொல் பிரயோகிக்கப்படுகின்றது. (௬௪)

(அ-கை) அப்பியாசத்தினுலேயே சித்தியுண்டாகிறதென்று திடமாகக் கூறுகின்ருர்:—

𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌦𑌕𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌕𑌥𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ||௬௫||

(இ-ள்) யோகாநுஷ்டானமாகிய கிரியையுடையவனுக்கு யோகசித்தியுண்டாகுமன்றி, அவ்வநுஷ்டான மில்லாதவனுக்கு எப்படியுண்டாகும்? (ஒருவிதத்தானு முண்டாகாதென்பது பொருள்.) (சுசஎ)

(அ-கை) யோகசாஸ்திரத்தைப் படித்தல் மாத்திரத்தால் யோகசித்தியுண்டாகாதென்று கூறுகின்றார்:—

நஶாஸ்த்ரபாடமாத்ரேண யோகஸித்தி: ப்ரஜாயதே ||சுரு||

(இ-ள்) * 'யோகசாஸ்திரத்தைப் படித்தல்மாத்திரத்தால் யோகசித்தியுண்டாகிறதில்லை. (சுரு)

நவேஷதாரணம் ஸித்தே: காரணம் நசதத்கதா || சுருஎ ||

காஷாயவஸ்திரமுதலிய வேஷம் தரித்தலும், யோகத்தைப் பேசுதலும் யோகசித்திக்குக் காரணமாகா. (சுருஎ)

---

* பிரஹ்மாவே! பிராணசித்தியுபாயமின்றித் "தர்க்கங்களாலும் பிதற்றுதலாலும் சாஸ்திர ஜாலங்களாலும் யுக்திகளாலும் மந்திரௌஷதங்களாலும் மனம் வசமாகிறதில்லை." என்று யோகசிகோபநிஷத்திலும்,

"அப்பியாசமில்லாதவனுக்கு வீண்வார்த்தைகளாற் சித்தியுண்டாகாதாகையால் சகலபிரயத்தினத்தி(முயற்சியி)னாலும் எப்போதும், யோகத்தையே அப்பியசிக்கவேண்டும்" என்று யோகதத்துவோபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியே "சாஸ்திரத்தைப்படித்தல் மாத்திரத்தினாற் சித்தியுண்டாகாது. மொட்டையன், தண்டதாரி, காஷாயவஸ்திரந் தரித்தவன், நாராயணவசனன், ஜடைமுடித்தவன், விபூதியணிந்தவன், பஞ்சாக்ஷரமுதலியவற்றையுச்சரிப்பவன், பாகியபூஜையுள்ளவன், துவாதசபுண்டரமுடையவன், அக்ஷம் துளசிகாஷ்டமுதலியவற்றின் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவனென்னும் இந்தக்கிரியையி (அப்பியாசமி)ல்லாத வாக்குச்சூரர்கள், எப்படிச் சித்தியையடைவார்கள்" என்று தத்தாத்திரேயராலும், "ஏகதண்டதிரிதண்டாதிகளாலும், ஜடை, பஸ்மம் (விபூதி) முதலியவற்றாலும், மொட்டையடித்துக்கொள்ளுதல், நிருவாணமாய்த்திரிதல், காஷாயந் தரித்தல், கந்தையுடுத்தல், உன்மத்தமாய்த்திரில் முதலியவற்றாலும் சித்தசுத்தியுண்டாகாது நிரந்தர அப்பியாசத்தாலுண்டாகும்" என்று வாமதேவ மகேசுவர சம்வாதமாகிய யோகாப்பியாசத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

### யோகசித்திகாரணம்.

(அ-கை) மற்றெதுதான் சித்திக்குக் காரணமெனக் கூறுகின்றார்:—

𑌕𑍍𑌰𑌿𑌯𑍈𑌵 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌃 𑌸𑌤𑍍𑌯𑌮𑍇𑌤𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ||௬௬||

(இ-ள்) அப்பியாசமாகிய கிரியையே சித்திக்குக் காரணம். இது சத்தியம். இதிற் சமுசயமில்லை. (௬௬)

(அ-கை) யோகாங்காநுஷ்டானத்தின் அவதி (எல்லை)யைக் கூறுகின்றார்:—

𑌪𑍀𑌠𑌾𑌨𑌿 𑌕𑍁𑌮𑍍𑌭𑌕𑌾𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌰𑌾 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌕𑌰𑌣𑌾𑌨𑌿 𑌚 |
𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍍𑌯𑌪𑌿 𑌹𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑍇 𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌫𑌲𑌾𑌵𑌧𑌿 ||௬௭||

(இ-ள்) ஆசனங்களும் சூரியபேதமுதலிய அநேகவித கும்பகங்களும், மஹாமுத்திரைமுதலிய மேன்மையான கரணங்களும், ஹடசித்தியில் மிகுந்த உபகாரமுள்ளனவாம். இவையாவும் இராஜயோக பலம்வரையிலும் செய்யத்தக்கனவாம். (௬௭)

முதல் உபதேசம்.

முடிந்தது.

---

# இரண்டாம் உபதேசம்.

(அ-கை) இனி (ஆசனம் உபதேசித்தபின்) பிராணயாமங் களைச் சொல்ல ஆரம்பிக்கின்றார்:—

அதாஸநே த்ருடே யோகீ வஶீ ஹிதமிதாஶந:।
குரூபதிஷ்டமார்கேண ப்ராணாயாமாந்ஸமப்யஸேத் ॥ க ॥

(இ-ள்) இனி * ஆசனம் திடமாகிய காலத்து யோகியான வன் இந்திரிய ஜயமுள்ளவனும், இதமும் (பத்தியமும்) மிதமு மாகிய ஆகாரமுடையவனும், குருவினுலுபதேசிக்கப்பட்ட வழி யாய் இனிச்சொல்லப்படும் பிராணயாமத்தைச் செவ்வையாய் (உற்சாகம் சாகசம் முதலியவற்றோடு) அப்பியசிக்கவேண்டும்.

† அத (இனி) என்பது மங்கலத்தின் பொருட்டாம். திட மென்பதற்குக் குக்குடமுதலியவைகள் நீங்கிய ஸ்திரமாகிய சித் தாசனமுதலியவற்றில் என்றும் பொருளாகும். (க)

பிராணயாமப்பிரயோஜனம்.

(அ-கை) "ப்ரயோஜநமநுத்திஶ்ய ந மந்தோऽபி ப்ரவர்ததே ॥

பிரயோசனத்தை யுத்தேசிக்காமல், மந்தனும் பிரவர்த்தி யான்" என்னும் பெரியோர் வாக்கியத்தின்படி பிரயோஜனமின்

---

* 'ஆசன அசனங்களின் யோகத்தால் பிராணஸ்பந்தம் (சலனம்) நிரோதி(தடு)க்கப்படுகின்றது' என்னும் சுருதியின்(அன்னபூரணோப நிஷத்தின்)படி மிதாகாரமுதலியன பிராணயாமத்திற்கு இன்றியமை யாதனவாமென்பதை வற்புறுத்தும் பொருட்டு அவற்றை அநுவதிக்கின்றார்.

† அத என்பது மங்கலத்தின் பொருட்டாமென்பதற்கு,

"ஓங்காரஶ்சாதஶப்தஶ்ச த்வாவேதௌ ப்ரஹ்மண: புரா ।
கண்டம் பித்த்வா விநிர்யாதௌ தஸ்மாந்மாங்கலிகாவுபௌ ॥

ஓங்காரமும் அத எனுஞ்சொல்லும் முன் பிரஹ்மாவின் கழுத்தைப் பேதித்துக்கொண்டு வெளிப்பட்டன. ஆதலால் இரண்டும் மங்கலமுடை யனவாம்" என்னும் ஸ்மிருதி பிரமாணம்.

றிப் பிரவிருத்தியுண்டாகாதாகலின், பிராணாயாமத்தின் பிரயோஜனத்தைக் கூறுகின்றார்:—

* चले वाते चलं चित्तं निश्चले निश्चलं भवेत् ।
योगी स्थाणुत्वमाप्नोति ततो वायुं निरोधयेत् ॥

இ-ள்) † வாயுவசைந்தால் சித்தமசைவுடையதாகின்றது. வாயுவசையாதிருந்தால் சித்தமும் அசைவில்லாததாகின்றது. வாயுவும் சித்தமும் அசையாதபோது யோகி ஸ்திரமாகிய நீண்டவாழ்நாளை அல்லது ஈசத்தன்மையை அடைகிறான். ஆகையால் வாயுவை (பிராணனை) நிரோதிக்க (கும்பிக்க) வேண்டும். ()

(அ-கை) இதுவுமது:—

* यावद्वायुः स्थितो देहे तावज्जीवनमुच्यते ।
मरणं तस्य निष्क्रान्तिः ततो वायुं निरोधयेत् ॥ ௩ ॥

(இ-ள்) தேகத்தில் எவ்வளவுகாலம் பிராணவாயு விருக்கின்றதோ, அவ்வளவு காலம் வரையில் ஜீவனம் உலகத்தாராற் சொல்லப்படுகின்றது. (ஜீவனமென்னுஞ் சொற்கிற்குச் சரீரப் பிராணசையோகம் பொருளாயிருத்தலால்) அந்தப் பிராணன் தேகத்தினின்றும் பிரிதல், மரணமெனப்படுகின்றது. ஆகையால் வாயுவை நிரோதிக்க(தடுக்க)வேண்டும். (௩)

(அ-கை) மலசுத்தி ஹடசித்தியை யுண்டாக்குவதாமென்பதை வெதிரேகமாக (எதிர்மறையாக)க் கூறுகின்றார்:—

मलाकुलासु नाडीषु मारुतो नैव मध्यगः ।
कथं स्यादुन्मनीभावः कार्यसिद्धिः कथं भवेत् ॥ ௪ ॥

(இ-ள்) நாடிகள் மலத்தால் வியாபிக்கப்பட்டிருக்குங்கால், பிராணன் சுழுமுனைமார்க்கத்திற் செல்வதாகாது. [மலஞ்சுத்

---

* இவை யோகசூடாமணியுபநிஷத்தின் வாக்கியங்கள்.

† "பிராணவாயுவின் அசைவு எதுவோ, அதுவே சித்தத்தினசைவுமாம். ஆகையால் மேலானபுத்திமான்கள் பிராணனது சலனத்தைஜெயித்தலில் முயற்சிசெய்யவேண்டு" மென்று அந்நபூர்ணோபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

தப்பட்டிருந்தால் மாத்திரம் சுழுமுனைமார்க்கத்திற் செல்வதாகும் என்பது பொருள்]. அப்போது உன்மனீபாவம் (உன்மனியின் இருப்பு) எப்படி யுண்டாகும்? (ஒருவிதத்தாலு மாகாதென்பது பொருள்). கைவல்யவடிவமாகிய காரியத்தின் சித்தி (பேறு) எப்படியுண்டாகும்? (ஒருவிதத்திலுமாகா தென்பது பொருள்). (ச)

(அ-கை). அந்வயத்தா (உடன்பாட்டா) லும் மலசுத்தி ஹடசித்திக் கேதுவா மென்பதைக் கூறுகின்றார் :—

ஶுத்திமேதி யதா ஸர்வம் நாடீசக்ரம் மலாகுலம் |

ததைவ ஜாயதே யோகீ ப்ராணஸங்க்ரஹணே க்ஷம: ||ரு||

(இ-ள்) எப்போது மலத்தினால் வியாபிக்கப்பட்ட சகல நாடிசக்கர (சமூக) ங்களும் சுத்தியடைகின்றனவோ, அப்போது தான் யோகாப்பியாசி பிராணனைக்கொள்ளுதலில் சமர்த்தனாகின்றான். (ரு)

(அ-கை) மலசுத்தி யெப்படி யுண்டாகிறதென்று கேட்குமிடத்து, அதைச் சோதிக்கும் (சுத்தப்படுத்தும்) பிராணாயாமத்தைக் கூறுகின்றார் :—

ப்ராணாயாமம் தத: குர்யாந் நித்யம் ஸாத்விகயா தியா |

யதா ஸுஷும்ணா நாடீஸ்தா மலா: ஶுத்திம் ப்ரயாந்தி ச || சு ||

(இ-ள்) (எதனால் மலசுத்தியின்றிப் பிராணனைக் கொள்ளுதலிற் சமர்த்தனாகவில்லையோ) அதனால் (ஈசுவரப்பிரணிதானம், உற்சாகம், சாகசமுதலியவற்றால் விக்ஷேபம் ஆலசிய முதலிய ராஜசதாமத தர்மங்கள் நீங்கிய) சாத்துவீகமாகிய (பிரகாசப் பிரசாதசீலமுடைய) புத்தியினால் சுழுமுனைநாடியிலுள்ள மலங்கள் சுத்தியாகும்(கெடும்)படியாகத் தினமும் பிராணாயாமம் செய்யவேண்டும். (சு)

## நாடிசோதனை.

(அ-கை) மலத்தைச் சோதிக்கும் பிராணாயாமத்தின் றன்மையை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

* 𑌬𑌦𑍍𑌧𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑍋 𑌯𑍋𑌗𑍀 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍇𑌣 𑌪𑍂𑌰𑌯𑍇𑌤𑍍 ।

𑌧𑌾𑌰𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌯𑌥𑌾𑌶𑌕𑍍𑌤𑌿 𑌭𑍂𑌯𑌃 𑌸𑍂𑌰𑍍𑌯𑍇𑌣 𑌰𑍇𑌚𑌯𑍇𑌤𑍍 ॥ எ ॥

(இ-ள்) † பதுமாசனம் சேர்ந்திருக்கும் யோகியானவன், பிராணவாயுவைச் சந்திரனென்னு மிடைகலையாற் பூரித்துச் சக்தியளவு கும்பித்து, மறுபடியும் சூரியனென்னும் பிங்கலையால் இரேசிக்கவேண்டும்.

---

* இது சாண்டில்யோபநிஷத்வாக்கியம் இந்நாடி சோதனை யோக தத்துவம், யோகசூடாமணி, தர்சனமுதலியவுபநிஷத்துக்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

† சிலயோகிகள், பிராணாயாமத்தினைச் சாதிப்பதற்கு முன்னரே கீழ்ச் சொல்லப்படும் மூவகைப்பிராணாயாமத்தினையப் பியசிக்கின் மிகச்சுலபமாய்க் கேவலகும்பகம் கைக்குவந்து சீக்கிரகாலத்திலேயே சமாதிசித்தித்துவிடு மென்பர். அவைவருமாறு :—

(க) பத்மாசனம் சேர்த்து குருத்தியானம் செய்து குருசொன்னபடி புகைவர்ணமுள்ள தேஜசுடைய 𑌯𑌂 (யம்) என்னும் வாயுபீஜத்தினைத்தியானித்து, அப்பீஜத்தினை கசு. முறை உச்சரிக்கும் காலபரியந்தம் வலது நாசியினை மூடி இடது நாசித்துவாரத்தினுல் வெளிவாயுவை உள்ளே இழுக்க வேண்டும். இதுவே பூரகம். இவ்வாறு இழுத்தபின்னர் இடதுநாசியினையும் மூடி 𑌯𑌂 என்னும் பீஜத்தினை சுச. முறை யுச்சரிக்கும் காலபரியந்தம் உள்வாயுவை வெளியில் வாரது நிறுத்தவேண்டும். இதுவே கும்பகம் இவ்வாறு கும்பகம் முடிந்தபின் இடது நாசியினைத்திறவாமல் வலதுநாசித் துவாரத்தினுல் உள்வாயுவை 𑌯𑌂 என்னும் பீஜத்தினை நஉ முறை உச்சரிக் கும் வரையில் வெளியில் மெல்லமெல்ல விடவேண்டும். இதுவே ரேசகம்.

(உ) நாபிஸ்தானத்தில் அக்கினிதத்துவத்தினை தேஜோரூபமாகத் தியானித்து 𑌰𑌂 (ரம்) என்னும் அக்கினிபீஜத்தினை கசு முறையுச்சரிக்கும் வரையில் இடதுநாசியினை மூடி வலதுநாசியினுல் வெளிவாயுவை உள்ளே இழுத்து வலதுநாசியினையும் மூடி 𑌰𑌂 என்னும் பீஜத்தினை சுச-முறையுச்சரிக்கும் காலம் வரையில் உள்வாயுவினைவெளிவராது தடுத்துப் பின் இடது நாசியினைமாத்திரம் திறந்து அதன்வழியாய் 𑌰𑌂 என்னும் பீஜத்தினை நஉ முறையுச்சரிக்குங்காலம் வரையில் உள்வாயுவை வெளியில் மெல்ல மெல்ல விடவேண்டும்.

(ந) நாசிநுனியில் பார்வையினை நிறுத்திச்சந்திரபிம்ப சமானமான காந்தியினைத்தியானித்து. 𑌠𑌂 (டம்) என்னும் பீஜத்தினை கசு-முறை யுச்சரிக்கும் காலம்வரையில் இரண்டு நாசித்துவாரங்களாலும் வெளிவாயுவினை

வெளிவாயுவைப் பிரயத்தினவிசேஷத்தா லிழுத்தல், பூரகம். ஜாலந்தரமுதலிய பந்தபூர்வகமாகப் பிராணனை நிறுத்துதல், கும்பகம். கும்பித்தவாயு பிரயத்தினவிசேஷத்தால் வெளிப்படுதல், இரேசகம். இது பிராணாயாமாங்கமாகிய இரேசக பூரகங்களுக்கு இலக்ஷணமாம்.

“ஹஸ்தாவஜ்ஜொஹகாரஸ்ய ரெசவுராளஸஸஂஜ்ஞா ||

கொல்லன் துருத்தியைப்போல் வேகமுள்ள இரேசகபூரகங்கள்” என்னும் கௌண ரேசக பூரகங்களில் * அவ்வியாப்தியில்லை; அவற்றிற்கு இலக்ஷியத்துவமில்லாமையால் (எ)

---

உள்ளே இழுத்து, இரண்டுமூக்கினையும் மூடி ௦ம் என்னும் பீஜத்தினை கூச-முறை யுச்சரிக்கும் வரையில் கும்பித்து, பின்பிருதிவிதத்துவமான லம் (லம்) என்னும் பீஜத்தினை கூஉ-முறை யுச்சரிக்கும் காலம்வரையில் உள்வாயுவை வெளியில் மெல்ல மெல்ல விடவேண்டும்.

இம்மூவகைப் பிராணாயாமங்களையும் விடாது நாளொன்றற்கு அ௦. வீதம் ஒருமாதபரியந்தம் அப்பியசிக்கும் பக்ஷத்தில் பிராணப்பியாசசித்தியுண்டாகி சமாதிஸ்திதிகிடைக்கும்.

* ஒரு இலக்கியத்திற்கு இலக்கணங் கூறுமிடத்து அதிவியாப்தி முதலிய மூன்று தோஷங்களுமில்லாதிருக்கவேண்டும். மூன்றுதோஷங்களாவன :— அதிவியாப்தி அவ்வியாப்தி அசம்பவமென்பனவாம்.

(க) அதிவியாப்தி :— ஓர் இலக்கியத்திற்குக் கூறிய இலக்கணம் இலக்கியமல்லாத மற்றோர்பொருளினுமிருத்தல்; அது ஆ கொம்புள்ளதெனல்.

(உ) அவ்வியாப்தி :— ஓர் இலக்கியத்திற்குக் கூறிய இலக்கணம் அவ்விலக்கியத்தின் ஏகதேசத்தில் இல்லாதிருத்தல்; அது ஆ கபிலநிறமுள்ளதெனல்.

(ங) அசம்பவம் :— கூறிய இலக்கணம் அவ்விலக்கிய முழுவதினுமில்லாதிருப்பது; அது ஆ ஒற்றைக்குளம்புடையதெனல்

இம்மூன்று குற்றங்களுமில்லாத தர்மமே, சிறப்பிலக்கணமாம்.

(அ-கை) இதுவுமது :—

ஶ்ராணஂஸஂயெ‌ஜ்ஞவா க்ஷ்ரஷ்ய வஂாயெதாஷாஂஸ்ஸெ நெ |
விபிவக்ஷாஂஹஷஂக்ஷ்ரக்ஷா வாஃவநெணரெசயெக || அ ||

(இ-ள்) சூரிய நாடியாகிய பிங்கலையால் பிராணனையிழுத்து, மெல்லமெல்ல வயிற்றை நிரப்பி, விதிப்படி பந்தபூர்வகமாகிய கும்பகம் செய்து, மறுபடியும் சந்திர நாடியாகிய இடைகலையால் இரேசிக்கவேண்டும். (அ)

(அ-கை) முற்கூறிய பிராணாயாமத்தில் விசேஷத்தைக் கூறுகின்றார் :—

யெந த்ய்ஜெத்தெந வீகூா யாரயெ டிநிரொாய தஃ |

ரெவயெது தொஃநெந்ந ஶநெநெரெவநவெஹ தஃ || கூ ||

(இ-ள்) (சந்திரனல்லது சூரியனென்னும்) எந்த நாடியால் இரேசிக்கிறானோ, அதினாலேயே பூரித்து, மிகுந்த நிரோதத்தால் (வேர்வை நடுக்க முதலியவையுண்டாகும் வரையில்) கும்பித்து, (எதினாற் பூரகம் செய்யப்பட்டதோ) அதற்கந்நியமாகிய நாடியால் வேகமில்லாமல் மெல்ல இரேசிக்கவேண்டும்.

வேகமாய் இரேசித்தால் பலக்குறைவுண்டாம். எதனாற் பூரகம் செய்யப்பட்டதோ, அதனால் இரேசகம் செய்யலாகாது ; எதனால் இரேசகம் செய்யப்பட்டதோ, அதனாலேயே பூரகம் செய்யவேண்டுமென்பது தாற்பரியம். (கூ)

(அ-கை) "பஜவதாஸநஃ || பதுமாசனம் சேர்த்துக் கொண்டிருக்கும் யோகி" யென்பவற்றாற் சொல்லப்பட்ட அர்த்தத்தை ஒன்றாய்த்திரட்டி அநுவதிக் (எடுத்துச்சொல்லு)கின்றவராய்ப், பிராணாயாமத்தின் * அவாந்தரபலத்தைக் கூறுகின்றார் :—

† ப்ராணம்வெதிஙயா விபெணிபதிதம்

ஹஸ்யொஃந்யாரெவயெ

தீகூா விஂமயயா ஸீரணஜயொ

ஸ்யா த்ய்ஜெஜாயோ |

* எதின் வாயிலாக முக்கியப் பிரயோஜனம் அடையப்படுகின்றதோ, அது அவாந்தரப்பிரயோஜனம்.

† இது சாண்டில்யோபநிஷத்வாக்கியம்.

ஸூர்யாசந்த்ரமஸோரநேந விதிநா

ப்யாஸம் ஸதா தந்வதாம்

ஶுத்தா நாடிகணா பவந்தி யமிநாம்

மாஸத்ரயாதூர்த்வத꞉ || ௧௰ ||

(இ-ள்) இடைகலையால் பிராணனைப் பூரிக்கின், கும்பிக்கப்பட்ட பிராணனைப் பின் மற்றக் (பிங்) கலையால் இரேசிக்கவேண்டும். பிங்கலையால் வாயுவைப் பூரித்து, அதன் பின் கும்பித்து இடைகலையால் இரேசிக்கவேண்டும். இவ்வண்ணம் (சந்திரனால் பூரித்துக் கும்பித்துச் சூரியனால் இரேசிக்கவேண்டும், சூரியனால் பூரித்துக் கும்பித்துச் சந்திரனால் இரேசிக்கவேண்டும் என்னும் வடிவினதாக) சூரியசந்திரநாடிகளின் அப்பியாசத்தைத் தினமும் விஸ்தரிக்கவேண்டும். இதனால் இயமமுடையவர்களுக்கு நாடிகள் மூன்று மாசத்திற்குமேல் சுத்தமாகின்றன. (௧௰)

(அ-கை) இனிப் பிராணயாமாப்பியாச காலத்தையும், அதன் அவதி (எல்லை)யையும் கூறுகின்றார்:—

* ப்ராதர்மத்யந்திநே ஸாயமர்தராத்ரே ச கும்பகாந் |
ஶநைரஶீதிபர்யந்தம் சதுர்வாரம் ஸமப்யஸேத் ||௧௧||

(இ-ள்) (அருணோதயமுதல் சூரியனுதித்து மூன்று நாழிகையளவினதாகிய) பிராதக்காலத்திலும், (ஐந்துவிதமாகப் பிரிக்கப்பட்ட பகலின் மத்தியபாகமாகிய) மத்தியானத்திலும், (அஸ்தமிக்கிறதற்கு முன்னும் பின்னுமாகிய மூன்று நாழிகையளவுள்ள) சாயங்காலத்திலும், (இரண்டு முகூர்த்த அளவினதாகிய) அர்த்தராத்திரியிலுமாக † நான்கு முறை எண்பது பிராணயாமம் வரையிலும் மெல்லமெல்ல நன்றாயப்பியசிக்கவேண்டும்.

---

* இது சாண்டில்யம், யோகதத்துவம், திரிசிகி என்பவற்றின் வாக்கியம்

† புருஷன் காலையில் ௩௰-ம், மத்தியானத்தில் ௰-ம், சாயங்காலத்தில் ௨௰-ம், அர்த்தராத்திரியில் ௨௰-மாகப் பிராணயாமஞ் செய்யவேண்டுமென்பது யோகசந்திரிகை.

நான்கு காலங்களிலும் ஒரு காலத்துக்கு எண்பது பிராணுயாமமாகச் செய்யவேண்டும். அர்த்தராத்திரியில் செய்யச் சக்தியில்லையாயின், மூன்று காலம் செய்யவேண்டுமென்பது சம்பிரதாயம். நான்கு முறை செய்வதனுல் தினந்தோறும் முந்நூற்றிருபது பிராணுயாமமாகின்றது. மூன்று முறை செய்தால் இருநூற்றுநாற்பது பிராணுயாமமாகின்றது. இங்கே ஒரு முகூர்த்தம் இரண்டு நாழிகையளவுள்ளகாலம். (கக)

(அ-கை) கனிஷ்டம், மத்திமம், உத்தமமென்னும் பிராணுயாமங்களின் விபாக விசேஷத்தைக் கிரமமாகக் கூறுகின்றுர்:—

* 𑌕𑌨𑍀𑌯𑌸𑌿 𑌭𑌵𑍇𑌤𑍍𑌸𑍍𑌵𑍇𑌦𑌃 𑌕𑌮𑍍𑌪𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌮𑌧𑍍𑌯𑌮𑍇 |
𑌉𑌤𑍍𑌤𑌮𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌤𑍋 𑌵𑌾𑌯𑍁𑌂 𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌯𑍇𑌤𑍍 ||கஉ

(இ-ள்) † கனிஷ்டப்பிராணுயாமத்தில் வியர்வையுண்டாம். மத்திமப் பிராணுயாமத்தில் நடுக்கமுண்டாம். உத்தமப் பிராணுயாமத்தில் பிரஹ்மரந்திரஸ்தானத்தை யடைகின்றது. ஆகையால் வாயுவைப் பந்திக்கவேண்டும்.

கனிஷ்டம் வியர்வையினுலும், மத்திமம் நடுக்கத்தினுலும், உத்தமம் ஸ்தானப்பிராப்தியினுலும் அநுமானிக்கத்தக்கனவாம். கனிஷ்டமுதலியவற்றி னிலக்ஷணம் இலிங்கபுராணத்தில்

"𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌸𑍍𑌯 𑌮𑌾𑌨𑌂 𑌤𑍁 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌕𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 |
𑌨𑍀𑌚𑍋 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑍁 𑌸𑌕𑍃𑌦𑍁𑌦𑍍𑌘𑌾𑌤 𑌈𑌰𑌿𑌤𑌃 ||

* இது சாண்டில்யோபநிஷத்வாக்கியம்.

† "மந்தப்பிராணுயாமம்வரில் வேர்வுதோன்று மத்திமமா; மந்தப்பிராணுயாமம்வரி லலையுமேனி யதன்பின்னே; சிந்தைமகிழ வுத்தமமாம் பிராணுயாமஞ் சேர்ந்திடிலோ; விந்துநிலத்தி னின்றுமெழுந் திடுமோலியாக்கை யியம்பிடினே" என்பது லிங்கபுராணம். "முதலில் வியர்வையும், இரண்டாவது நடுக்கமும், மூன்ருவது தவளைத்தத்தும், அதிக அப்பியாசத்தால் பதுமாசனத்திலிருக்கினும் பூமியினின்று ஆகாயத்திற் கிளம்புதலுமுண்டாகு" மென்று சிவசங்கிதையிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

* பிராணுயாமத்தின் அளவு பன்னிரண்டு மாத்திரையாம். தாழ்வாகிய பன்னிரண்டு மாத்திரையோ ஒரு முறை உத்காத மெனப்படுகின்றது.

---

* கநிஷ்டாதிகளின் அளவும் லக்ஷணமும்,

கநீயஸ் ஸக்ருதுத்காதஸ் ஸ வை த்வாதஸமாத்ரிக: |
மத்யமஸ்து த்விருத்காதஸ் சதுர்விம்ஸதிமாத்ரிக: ||

ஒரு முறை உற்காதம் கநிஷ்டமாம், அதுவும் பன்னிரண்டுமாத்திரையளவினதாம். இரண்டு உற்காதம் மத்தியமமாம். அது இருப்பத்துநான்கு மாத்திரையளவினது.

உத்தமஸ்த்ரிருத்காத: ஷட்த்ரிம்ஸந்மாத்ரிக: ஸ்ம்ருத: |
ஸ்வேதகம்பாதிஜநக: ப்ராணாயாமஸ்ததுத்தம: ||

மூன்று உற்காதம் உத்தமம். அது முப்பத்திரண்டு மாத்திரையளவினது; மேலானது; வியர்வை நடுக்க முதலியவற்றை யுண்டுபண்ணும் பிராணுயாமம் அதன் பிந்தியதாம்.

ஆநந்தோத்பவரோமாஞ்சநேத்ராஸ்ருவிமோசநம் |
ஜல்பப்ரமணமூர்ச்சாத்யம் ஜாயதே யோகிந: பரம் ||

யோகிக்கு ஆநந்தோற்பவம், மயிர்க்குச்சு, கண்ணீர் வெளிப்படுதல், பிதற்றல், மயக்கம், மூர்ச்சைமுதலியன உண்டாகின்றன." என்று சிவபுராணத்தும்,

"லகுர்த்வாதஸமாத்ரஸ்து த்விகுண: ஸது மத்யம: |
த்ரிகுணாபிஸ்து மாத்ராபிருத்தரீய உதாஹ்ருத: ||

பன்னிரண்டு மாத்திரையளவுள்ளது இலகுப்பிராணுயாமம். அது இருமடங்காயின் மத்தியமமாம். மும்மடங்கு மாத்திரைகளால் உத்தரீயம் (உத்தமம்) எனப்படும்.

நிமேஷோந்மேஷணே மாத்ரா தாலோ லகுக்ஷரோ மத: |
ப்ராணாயாமஸ்ய ஸங்க்யார்த்தம் ஸ்ம்ருதோ த்வாதஸமாத்ரிக: ||

கண் மூடித்திறத்தலும், தாளமும், இலகுவெழுத்தும் மாத்திரையாகக் கொள்ளப்பட்டுள்ளன. பிராணுயாமத்தினது சங்கையின்பொருட்டுப் பன்னிரண்டு மாத்திரையளவினது கருதப்படுகின்றது,

ப்ரதமேந ஜயேத் ஸ்வேதம் மத்யமேந ச வேபதும் |
விஷாதம்ஹி த்ருதீயேந ஜயேத்தோஷாநநுக்ரமாத் ||

முதலாவதால் (இலகுவால்) வியர்வை நசிக்கின்றது. மத்தியமத்தினல் நடுக்கம் நசிக்கின்றது. மூன்றுவதால் (உத்தமப்பிராணயாமத்தினல்) விஷாதம் (சோகம்) கெடுகின்றது." என்று மார்க்கண்டேய புராணத்தும்

"லகுர்த்வாதஶமாத்ரஸ்து ஸ்யாச்சதுர்விம்ஶதிக: பர: |
ஷட்த்ரிம்ஶந்மாத்ரிக: ஶ்ரேஷ்ட: ப்ரத்யாஹாரஸ்ச ரோதந: ||

பன்னிரண்டு மாத்திரையுடையது இலகுவாம். இருபத்தினலு மாத்திரையுடையது பரமாம் (மேலானதாம்). முப்பத்தாறு மாத்திரையுடையது சிரேஷ்டமாம். பிரத்தியாகாரமும் தடுத்தலாம்." என்று காருடத்தும்,

"மாத்ராத்வாதஶகோ மந்தஶ்சதுர்விம்ஶதிமாத்ரக: |
மத்ய: ப்ராணஸம்ரோத: ஷட்த்ரிம்ஶந்மாத்ரகோந்திம: ||

பன்னிரண்டு மாத்திரையளவினது மந்தம். இருபத்துநான்கு மாத்திரையளவினது மத்தியமம். முப்பத்தாறு மாத்திரையினது கடைசிப் பிராணயாமமாம்." என்று கூர்மபுராணத்தும், திரிசிகி, யோகசூடாமணி, தர்சன முதலியவுபநிடதங்களிலும் கூறப்பட்டுளது.

இப்படியே பிராணயாமத்தின் அளவு :—

"ஏறுதல் பூரக மீரெட்டு வாமத்தா
லாறுதல் கும்பக மறுபத்தி நாலதி
லூறுதல் முப்பத்திரண்டிரேசக
மாறுதலொன்றின் கண்வஞ்சகமாமே" என்று

திருமந்திரத்திலும், "அந்தப்பிராணயாமம் இரேசகபூரககும்பக பேதத்தால் மூன்றுவிதமாய் மூன்றுவருணவடிவமாயிருத்தலால், பிரணவமே பிராணயாமமெனப்படும்.

பதுமாசனத்திலிருக்கும் புருஷன், நாசிநுனியில் சந்திரபிம்பப்பிரகாசங்களால் விரிந்த அகாரமூர்த்தியானது இரக்தாங்கமுடையதும், ஹம்ஸ(அன்ன)வாகினியும், தண்டத்தைக் கரத்திலுடையதும், வாலையுமாகிய காயத்திரியாகின்றது ; உகாரமூர்த்தியானது வெண்ணிற அங்கமுடையதும், கருடவாகினியும், யௌவனமுள்ளதும், சக்கரத்தைக் கையிலுடை

யதுமாகிய சாவித்திரியாகின்றது; மகாரமூர்த்தியானது கருமையாகிய அங்கமுடையதும், இடபவாகினியும், வயதுசென்றதும் சூலத்தைத் தரித்துள்ளதுமாகிய சரஸ்வதியாகின்றது; அகாராதிமூன்றிற்குங் காரணம் பரஞ்சோதியாகிய ஏகாக்ஷரப்பிரணவமாகின்றது என்று தியானிக்கவேண்டும்.

இடையினால் வெளிவாயுவை ௧௬-மாத்திரையளவு பூரித்து அகாரத்தைச் சிந்தித்துப், பூரித்தவாயுவை ௬௪-மாத்திரையளவு கும்பித்து உகாரத்தைத் தியானித்துப், பூரித்ததைப் பிங்கலையால்-௩௨-மாத்திரையளவு இரேசித்து மகாரமூர்த்தியைத் தியானிக்கவேண்டும். இப்படியே கிரமமாக அடிக்கடி பூரிக்கவேண்டும்" என்று சாண்டில்யோபநிஷத்திலும், தர்சனோபநிஷத்திலும், சூதசங்கிதையிலும்,

ஏவம் ஜ்ஞாத்வா தியா தீர: ப்ரணவேந ஸமாஹித: |
ப்ராணாயாமத்ரயம் குர்யாத்பூரகரேசகை: ||

இவ்வாறு அறிந்து ஏகாக்கிரசித்தனாய்ப் பிரணவவிதியால் பூரகரேசகங்களால் மூன்று பிராணாயாமத்தினைச் செய்யவேண்டும்.

ஆக்ருஷ்ய ஶ்வஸநம் பாஹ்யாத்பூரயேதிடயோதரே |
ஶனை: ஷோடஶமாத்ராபி: இகாரம் தத்ர ஸம்ஸ்மரேத் ||

வெளியிலிருந்து சுவாசத்தை இழுத்து இடையினால் மெல்லப் பதினாறு மாத்திரையளவு இகாரத்தை ஸ்மரித்து வயிற்றில் பூரிக்கவேண்டும்.

மகாரம் மூர்த்திமத்ராபி ஸம்ஸ்மரேத் ப்ரணவம் ஜபேத் |
தாரயேத்பூரிதம் பஶ்சாச்சது:ஷஷ்ட்யா து மாத்ரயா ||

அங்கு மகாரத்தினையும் மூர்த்தியையும் ஸ்மரித்துப் பிரணவத்தை ஜபிக்கவேண்டும். பூரித்ததைப் பின் அறுபத்துநான்கு மாத்திரையளவு அல்லது சக்தியுள்ளபரியந்தம் மந்திரத்தோடு தரிக்கவேண்டும்.

யாவத்வா ஶக்யதே தாவத்தாரணம் ஜபஸம்யுதம் |
பூரிதம் ரேசயேத்பஶ்சாத் ப்ரணவம் ஹ்ருநிலாநிலம் ||

ஶனை: பிங்களயா புத்ர த்வாத்ரிம்ஶந்மாத்ரயா புந: |
ப்ராயந்நாத்யாக்ஷரம் தத்ர ப்ரணவஸ்ய ஸமாஹித: ||

பின் பூரித்ததை பிராணவமும் வாயுவோடுகூடியதுமாய்ப் பிங்கலையால் புத்திர! முப்பத்திரண்டு மாத்திரையளவினதாய் அங்கு மறுபடியும் பிராணவத்தின் முதலெழுத்தைத் தியானித்து ஏகாக்கிரனாய் மெல்ல இரேசிக்கவேண்டும்." என்று வசிஷ்டசம்ஹிதையிலும்,

"பிரஹ்மாவே இடையினல் வாயுவைப் பன்னிரண்டு மாத்திரையளவு பூரித்து அறுபத்துநான்கு மாத்திரையளவு கும்பித்து, பிங்கலையால் வாயுவை முப்பத்திரண்டு மாத்திரையளவு செவ்வையாய் இரேசிக்கவேண்டும். இப்படியே அடிக்கடி செய்யவேண்டு" மென்று திரிசிகியுபநிஷத்திலும், யோகதத்துவோபநிஷத்திலும், வாயுசங்கிதை வாசிஷ்ட முதலியவற்றிலும் சொல்லப்பட்டிருக்கின்றது, இங்கே பூரகத்தைவிட இரேசகத்திற்கு மாத்திரை யதிகமாய்ச் சொன்னது, இரேசகத்தை யவ்வளவு மெதுவாகச் செய்யவேண்டுமென்பதை முன்னிட்டாம். அன்றியும்,

"பூரகம் பன்னிரண்டு ஓங்காரமாகவும், கும்பகம் பதினறு ஓங்காரமாகவும், இரேசகம் பத்து ஓங்காரமாகவுஞ் செய்யவேண்டும். அது பிராணயாமமெனப்படு" மென்று யோகசூடாமணியுபநிஷத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்கள் முறையே பூரககும்பகரேசகங்களுக்குத் தேவதைக ளாவார்களென்பது தியானபிந்து உபநிஷத்து,

முற்கூறிய பிரணவாதிகளின் உச்சாரணத்தோடு செய்யும் பிராணயாமம் சகர்ப்பமென்றும், அஃதின்றிய பிராணயா மம் அகர்ப்பமென்றும் சொல்லப்படும். அதை "தெரித்தமறைமந் திரமோதிச் செய்யும் பிராணயாமத்தைக்; கருப்பப்பிராண யாமமெனக் கற்றல் செய்வார் காசின்றி; யுரைத்ததனிமந் திரமுள்ளத் துணாதியற்று கின்றதனே; விரித்தார் கருப்பமிலதாய பிராணயாம மெனமிக்கோர்" என்னும் இலிங்கபுராணவாக்கிய முதலியவற்றுற் காண்க. அதுவே, அகர்ப்ப சகர்ப்பபேதம்.

"ஓம் த்யாநயுக்தோ மநோஹாரீ விவஶீதோ ஹ்யகர்ப்பக꞉ |
ஸகர்ப்பஸ்து ஸகர்ப்ப꞉ ஸ்யாத் ப்ராணாயாமோ(அ)ஸ்தி தாதிக꞉ ||

மந்திரத்தியானத்தோடு கூடியது சகர்ப்பமாம். அதன் விபரீதமாகியது (மந்திரத்தியானமின்றியது) அகர்ப்பமாம். அவ்வகர்ப்பத்தினும் சகர்ப்பம் அதிகமானதாம்" என்று கருடபுராணம் உ௮-வது அத்தியாயத்திலும்,

"அகர்ப்பஶ்ச ஸகர்ப்பஶ்ச தயோராத்யோ(அ)ஜபஸ்ஸ்ம்ருத꞉ |
த்விதீயஸ்ஸஜப꞉ ப்ரோக்தோ வ்யாஹ்ருதிப்ரணவாந்வித꞉ ||

பிராணயாமம் அகர்ப்பமும் சகர்ப்பமுமாம். அவ்விரண்டனுள், முதலாவது அஜபம் என்று கருதப்படுகின்றது. இரண்டாவது வியாஹிருதி மந்திரங்களோடுகூடியதாய் ஸஜபமென்று சொல்லப்படுகின்றது." என்று ஸௌரபுராணத்திலும், சிவபுராணத்தில்

"அகர்ப்போ ஸகர்ப்போ ப்ராணாயாமோ த்விதா ஸ்ம்ருத: ।
ஜபத்யாநம் விநாऽகர்ப்ப: ஸகர்ப்பஸ் தத்ஸமந்வித: ॥

பிராணுயாமம் அகர்ப்பமும் ஸகர்ப்பமுமென இருவகையாகக் கருதப் படுகின்றது. ஜபத்தியானங்களின்றியது அகர்ப்பம். அவற்றேடுகூடியது ஸகர்ப்பமாம்.

அகர்ப்பாத் கர்ப்பஸம்யுக்த: ப்ராணாயாம: சதாதிக: ।
தஸ்மாத் ஸகர்ப்பம் குர்வந்தி யோகிந: ப்ராணஸம்யமம் ॥

அகர்ப்பத்தினும் ஸகர்ப்பப்பிராணுயாமம் நூறுமடங்கு அதிகமாம், ஆதலால் யோகிகள் ஸகர்ப்பப்பிராணுயாமத்தினைச் செய்கின்றனர்." என்றும் சொல்லப்பட்டுளது.

வியாகிருதிபிரணவங்களுடன் காயத்திரியைச் சிரசோடு மூன்றுமுறை ஜெபித்தல், கிருகஸ்தனது பிராணுயாமகாலவளவாம். இப்பிராணுயாமம் கிருகஸ்தர்களுக்குப் பாபசுத்தியின் பொருட்டும், யோகிகளுக்கு யோகசித்தியின் பொருட்டுமாம். "ஆனுல் கிருகஸ்தனும் சங்கத்தைவிட்டு ஏகாந்தத்திலிருந்து அப்பியாசம் செய்யவேண்டும். அதன்பின் வியவகாரத்தின் பொருட்டு வெளியே சங்கத்திற் பிரியமுடையவன்போல வியவகரிக்க வேண்டும். கர்மத்தினுல் உண்டானவைகள் யாவும் தத்தம் கர்மத்தின்படியிருக்கின்றன. நிமித்தமாத்திரமாக இவற்றைச் செய்வதில் ஒருகாலும் தோஷமில்லை யென்று நிச்சயித்து, நல்ல விவேகத்தினுல் இந்த யோகத்தை ஆசிரயிப்பானுயின், கிருகஸ்தனும் சித்தியை யடைகிருன். இதிற் சமுசயமில்லை

எவன் புண்ணிய பாபங்களினின்று விடுபட்டவனும் தேகாபிமானத்தை விட்டவனு மாகின்முனே, அந்தக் கிருகஸ்தன் எப்போதும் வீட்டிலிருந்து கொண்டே விமுக்தனுகின்முன். எப்போதும் யோகத்தோடுகூடியயோகியானவன் லோகசங்கிரக (லோகபரிபாலன) மாகிய தனது காரியத்தில் புண்ணியபாவங்களைச் செய்யினும், அப்புண்ணியபாவங்களாற் பற்றப் படான். கிடைத்ததிற் சந்தோஷமுடையவனுயும், உள்ளே கொஞ்சமும் பற்றில்லாதவனுயும், (காலவரம்பு, இடவரம்பு, நடைவரம்பு, கர்மவரம்பென்னும்) சகலவரம்புகளு முள்ளவனுயும் யோகசாதனத்திற் பொருந்தியிருக்க வேண்டும். யோகக்கிரியையோடு கூடிய கிருகஸ்தர்களுக்கு ஈசுவரனது (ஈசுரவாச்சியமாகிய பிரணவத்தினது) ஜபத்தால் சித்தியுண்டாகுமாகலின், கிருகஸ்தன் அதைச் செவ்வையாய் அப்பியசிக்கவேண்டும். கிருகஸ்தன் புத்திரதாராதிகளால் நிரம்பியவனுய் வீட்டிலிருந்துகொண்டு, உள்ளே பற்றில்லாமல் யோகமார்க்கத்தில் தன்னிடத்துச் சித்தியின் அடையாளங்களைக் கண்டு, பிறகு அவன் எனது ஆஞ்ஞையைச் சாதித்துக் கிரீடிப்பன்" என்னும் சிவசங்கிதையின் வாக்கியத்தால் கிருகஸ்தனுக்கும் சித்தியுண்டாமென்பது சித்திக்கின்றது.

[illegible] |
[illegible] ||

மத்திமமோ இருபத்துநான்கு மாத்திரையுள்ள இரண்டு உத்காத மெனப்படுகின்றது. முக்கியமானதோ முப்பத்தாறு மாத்திரையுள்ள மூன்று உத்காத மெனப்படுகின்றது.

[illegible] |
[illegible] ||

இவை கிரமமாக வியர்வை நடுக்கம், எழும்புதல் என்பவற்றை யுண்டாக்குவனவாம். அப்படியே இதில் ஆநந்தம், நித்திரை, தூமம்(சித்தத்தின் அசைவு)என்பவைகளுண்டாகின்றன.

[illegible] |
[illegible] ||

மயிர்க்கூச்சல், துவனிஞானம், சரீரக்குத்தல், நடுக்கம், இளைப்பு, வியர்வை, பிதற்றுதல் முதலியவைகளையும், அறிவின் மயக்கத்தையும் எப்போது ஜயிக்கின்றானோ

[illegible] || ”

அப்போது அந்த நல்ல சோபனமாகிய பிராணாயாமம் உத்தமமென்று சொல்லப்படுகின்றது” என்று கூறப்பட்டிருக்கின்றது.

கோரக்ஷரும்

“ [illegible] |
[illegible] ||

* பிராணாயாமத்தில் அதமம் பன்னிரண்டு மாத்திரையாகவும், மத்திமம் இரண்டு மடங்காகவும், உத்தமம் மூன்று மடங்காகவும் துவிஜோத்தமர்களாற் சொல்லப்பட்டிருக்கின்றது” என்று கூறியிருக்கின்றார்.

---

* இது யோகசூடாமணியிற் கூறப்பட்டுளது.

"[illegible] ॥

மேலெழுப்பிடும் பிராணனால் அபானன் பீடிக்கப்பட்டு எப்போது மேற்சென்று திரும்புகின்றதோ, அது உத்காதலக்ஷணமாம்" என்பது உத்காதலக்ஷணம்.

யாஞ்ஞவல்கியர்

"[illegible] ॥

மூன்று கைந்நொடியை (பெருவிரலை நடுவிரலோடு சேர்த்து மூன்றுதரஞ்சுண்டுதலை)யும், முழங்காலை மூன்றுதரம் துடைத்தலையும், மூன்றுதாளத்தையும் மாத்திரையென்று பிராஞ்ஞர் (மிக்க அறிவுடையோர்) கூறுகின்றனர்" என்று மாத்திரையைக் கூறுகின்றார்,

ஸ்கந்தபுராணத்தில்

"[illegible] ॥

* ஒரு சுவாசவடிவமாகிய மாத்திரை பிராணாயாமத்தில் சொல்லப்படுகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இது யோகசிந்தாமணியில் நித்திரைசெய்யும் புருஷனுக்கு எவ்வளவு காலம் ஒரு சுவாசம் போய்த்திரும்புகின்றதோ, அவ்வளவு காலம் பிராணயாமமாத்திரை யெனப்படுமென்று வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கின்றது. பன்னிரண்டரைச் சுவாச அளவுள்ளகாலம் பிராணயாமகாலமாம். ஆறுசுவாசங்களால் ஒரு பலமாகின்றது. ஆகையால் அரைச்சுவாசத்தோடு இரண்டு பல அளவுள்ள காலம் பிராணயாமகாலமென்பது சித்தித்தது. பன்னிரண்டரை மாத்திரையுள்ள பிராணயாமமே உத்தமப்பிராணயாமமெனப்படும். முன் உதாகரிக்கப்பட்ட இலிங்கபுராணத்திற்கும் கோரக்கர் வாக்கியத்திற்கும் விரோதமில்லை. அங்கே பன்னிரண்டரை மாத்திரையுள்ள பிராணயாமம் அதமமென்று சொல்லப்பட்டிருக்கின்றதென்று சங்கிக்கலாகாது.

---

* இவ்வபிப்பிராயம் யோகசூடாமணியிலுள்ளது.

"ஜாநும்வ்ருத்தக்ஷிணீக்ருத்ய நத்ருதம்நவிலம்பிதம் |
க்ரியதேஙிவோடநம் காயாமாத்ராமாத்ராவசிதீயதே ||

முழங்காலை விரைவும் தாமதமுமின்றிச் சுற்றிக் கைவிரல் களால் நொடித்தல்வேண்டும். அது மாத்திரையெனப்படுகின் றது" என்று யோகதத்துவோபநிஷத்தும் சிவபுராணமும் கூறு தலாலும்,

"ஜாநும்வ்ருதக்ஷிணீ க்ருயாபாணத்ருதம்நவிலம்பிதம் |
ப்ரத்ரா ஞோடிகாம் யாவத்தாவந்மாத்ரேதிதீயதே ||

முழங்காலை விரைவும் தாமதமு மில்லாமல் சுற்றி நொடித் தல் எவ்வளவோ, அவ்வளவு மாத்திரையெனப்படுகின்றது." என்றும்,

"க்ரியாஷோம்க்ரியிரோக்ஷம்வ ஜாநோஸ்துவபரிமார்ஜநம் |
ப்ரத்ரா ஞோடிகாம் யாவத்தாவந்மாத்ரேதிதீயதே ||

கைந்நொடித்தலும் முழங்காலைத் துடைத்துச் சுண்டுதலும் எவ்வளவோ, அவ்வளவு மாத்திரையெனப்படுகின்றது" என்றும் ஸ்கந்தபுராணத்திருத்தலாலும்,

"க்ரியாஷோமாத்ராஸம்ப்ராயதேததா ||

அப்போது அங்குஷ்டம் மாத்திரையென்று பெயரிடப்படு கின்றது" என்று தத்தாத்திரேயரது வசனமிருத்தலாலும், இலி ங்கபுராண கோரக்ஷாதிகளின் வாக்கியங்களில் ஒரு நொடியளவு காலம் மாத்திரையாகக் கருதப்பட்டிருத்தலாலும், யாஞ்ஞவல் கியர் முதலியோரது வாக்கியங்களில் மூன்று நொடியளவு காலம் மாத்திரையாகக் கருதப்பட்டிருத்தலாலும், மூன்று மடங்கதிக முள்ள அதமத்திற்கு உத்தமத்துவம் அங்கும் சொல்லப்பட்டி ருக்கின்றது. ஆதலால் விரோதமில்லை. சகல யோகாங்கங்களி னும் பிராணாயாமம் முக்கியம். அது சித்தித்தால் பிரத்தியாகா ரம் முதலியன சித்திக்கும். அது (பிராணாயாமம்) சித்திக்கா விட்டால் பிரத்தியாகார முதலியவைகள் சித்திக்கமாட்டா. ஆகையால் வாஸ்தவமாகப் பிராணாயாமமே பிரத்தியாகாரமுத லிய சப்தங்களாற் சொல்லப்படுகின்றது. அப்படியே யோகசிந்

தாமணியில் "பிராணாயாமமே அப்பியாசக்கிரமத்தால் விருத்தியாகிப் பிரத்தியாகாரதியானதாரணசமாதியெனுஞ் சொற்களாற் சொல்லப்படுகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

அது ஸ்கந்தபுராணத்தில்

* "ப்ராணாயாமத்³விஷட்கேந ப்ரத்யாஹார உதா³ஹ்ருத꞉ ।
ப்ரத்யாஹாரத்³விஷட்கேந தா⁴ரணா பரிகீர்திதா ॥

பிராணாயாமம் பன்னிரண்டால் பிரத்தியாகாரமும், பிரத்தியாகாரம் பன்னிரண்டால் தாரணையும் சொல்லப்படுகின்றது.

ப⁴வேதீ³ஶ்வரஸங்க³த்யை த்⁴யாநம் த்³வாத³ஶதா⁴ரணம் ।
த்⁴யாநம் த்³வாத³ஶகேநைவ ஸமாதி⁴ரபி⁴தீ⁴யதே ॥

தாரணை பன்னிரண்டு ஈசுவரச்சேர்க்கையின் பொருட்டு தியானமாகின்றது. தியானம் பன்னிரண்டினாலேயே சமாதி சொல்லப்படுகின்றது.

யத்ஸமாதௌ⁴ பரஞ்ஜ்யோதிரநந்தம் ஸ்வப்ரகாஶகம் ।
தஸ்மிந்த்³ருஷ்டே க்ரியா காண்ட³யாதாயாதம் நிவர்ததே ॥

சமாதியில் பரஞ்சோதியாகிய அநந்தச் சுவப்பிரகாசக (பிரஹ்ம)மிருக்கின்றது. அதைத் தரிசித்தலால் கிரியாகாண்டத்தின் போக்குவரத்து (அலைச்சல்) நீங்குகின்றது" என்றும் அப்படியே,

"தா⁴ரணாத்³வாத³ஶாயாமா த்⁴யாநம் த்³வாத³ஶதா⁴ரணம் ।
த்⁴யாநத்³வாத³ஶகம் யாவத்ஸமாதி⁴ரபி⁴தீ⁴யதே ॥

பன்னிரண்டு பிராணாயாமம் தாரணை. பன்னிரண்டுதாரணம் தியானமாம். பன்னிரண்ரண்டு தியானம் சமாதியெனப்படுகின்றது," என்பது சிவபுராண லிங்கபுராணவசனம்.

"தா⁴ரணாபஞ்சநாடீ³ ஸ்யாத்³த்⁴யாநம்ஸ்யாத்ஷஷ்டிநாடி³கா ।
தி³நத்³வாத³ஶகேநஸ்யாத்ஸமாதி⁴꞉ ப்ராணஸம்யமாத் ॥

* இது யோகசூடாமணியுபநிஷத் வாக்கியமுமாம்.

பிராணசம்மியமம் (பிராணாயாமம்) செய்யின், அது ஐந்து நாழிகைகளால் தாரணையும், அறுபது நாழிகைகளால் தியானமும், பன்னிரண்டு நாட்களினால் சமாதியுமாகின்றது'' என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. இப்படியே கோரக்கர் முதலியோர்களாலும் சொல்லப்பட்டிருக்கின்றது. இதிலிப்படி வியவஸ்தையிருக்கின்றது:—கொஞ்சங்குறைய நாற்பத்திரண்டு விபல அளவுள்ளது கனிஷ்டப்பிராணாயாமகாலமாம். இதுவே ஒரு நொடியளவுள்ள காலம் மாத்திரையாமென்னுங் கருத்தால் பன்னிரண்டு மாத்திரையளவுள்ள காலமாம். கொஞ்சங்குறைய எண்பத்து நான்கு விபல அளவுள்ளது மத்திமப்பிராணாயாமகாலமாம். இது ஒரு நொடியளவுள்ள காலம் மாத்திரையென்னுங் கருத்தால் இருபத்து நான்கு மாத்திரையளவுள்ள காலமாம். நூற்றிருபத்தைந்து விபல அளவுள்ளது உத்தமப்பிராணாயாமகாலமாம். இது ஒரு நொடியளவுள்ள காலம் மாத்திரையென்னுங் கருத்தால் முப்பத்தாறு மாத்திரையளவுள்ள காலமாம். மூன்று நொடியளவுள்ள காலம் மாத்திரையென்று கொள்ளுமிடத்து, அது பன்னிரண்டு மாத்திரை யளவுள்ளதேயாம். பந்தபூர்வகமாக நூற்றிருபத்தைந்து விபலம்வரையில் பிராணாயாமம் எப்போது ஸ்திரமாகின்றதோ, அப்போது பிராணன் பிரஹ்மரந்திரத்தையடைகின்றது. பிரஹ்மரந்திரத்தை யடைந்த பிராணன் இருபத்தைந்து பலம்வரையிலும் எப்போது நிற்கின்றதோ, அப்போது பிரத்தியாஹாரமாம். எப்போது ஐந்து கடிகை (நாழிகை) வரையில் நிற்கின்றதோ, அப்போது தாரணையாம். எப்போது அறுபது நாழிகைவரையில் நிற்கின்றதோ, அப்போது தியானமாம். எப்போது பன்னிரண்டு நாள்வரையில் நிற்கின்றதோ, அப்போது சமாதியாகின்றது. இப்படி யாவும் இரமணீயமாம். (கஉ)

(அ-கை) பிராணாயாமத்தை அப்பியசிக்கின்றவனுக்கு வியர்வைவுண்டாகுங்காலத்தில் விசேஷத்தைக் கூறுகின்றார்:—

* ஜலெநஶ்ரமஜாதெநமாத்ரயுங்நாவரொசு |

உத்தமாவமாதாவெவதெநமாத்ரஸ்ஜாயதெ ‖ கங ‖

---

* இது சாண்டில்யோபநிஷத் வாக்கியம் இவ்வர்த்தம் யோகசூடாமணி முதலிய உபநிஷதங்களிலும் சொல்லப்பட்டுளது.

(இ-ள்) பிராணயாமாப்பியாசத்தின் சிரமத்தாலுண்டாகிய வியர்வையினல் சரீரத்தில் (தைலாப்பியங்கனம்போல) தேய்க்க வேண்டும். அதனல் (தேய்த்தலால்) சரீரத்திற்குத் திடத்தன்மை யும் இலகுத்தன்மையும் (ஜாட்டியமின்மையும்) உண்டாகின்றது.

(அ-கை) இனி அப்பியாசத்திற்கு முன்னும் பின்னும் பால் முதலியவற்றின் நியமங்களைக் கூறுகின்ருர்:—

* 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌕𑌾𑌲𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑍇𑌶𑌸𑍍𑌤𑌂𑌕𑍍𑌷𑍀𑌰𑌾𑌜𑍍𑌯𑌭𑍋𑌜𑌨𑌂 ।
𑌤𑌤𑍋𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌦𑍃𑌢𑍀𑌭𑍂𑌤𑍇 𑌨 𑌤𑌾𑌦𑍃𑌙𑍍𑌨𑌿𑌯𑌮𑌗𑍍𑌰𑌹𑌃 ॥

(இ-ள்) அப்பியாசகாலத்தின் முதலில் பால்நெய்முதலிய வற்ருேடுகூடிய போஜனம் சிலாக்கியமாம். அதன்பின் அப்பி யாசம் திடமானகாலத்து அப்படிப்பட்ட நியமம் கொள்ளவேண் டியதில்லை.

கேவலகும்பகம் சித்தித்தபோது அப்பியாசம் திடமாகின் றது. (௧௪)

(அ-கை) சிங்கமுதலியவற்றைப்போல பிராணனை மெல்ல வே வசஞ்செய்யவேண்டும். விரைவாய்ச் செய்யலாகாதெனக் கூறுகின்ருர்:—

† 𑌯𑌥𑌾𑌸𑌿𑌂𑌹𑍋𑌗𑌜𑍋𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑍋
𑌭𑌵𑍇𑌦𑍍𑌵𑌶𑍍𑌯𑌃𑌶𑌨𑍈𑌃𑌶𑌨𑍈𑌃 ।
𑌤𑌥𑍈𑌵𑌸𑍇𑌵𑌿𑌤𑍋𑌵𑌾𑌯𑍁-
𑌰𑌨𑍍𑌯𑌥𑌾𑌹𑌨𑍍𑌤𑌿𑌸𑌾𑌧𑌕𑌂 ॥ ௧௫ ॥

(இ-ள்) சிங்கம் யானை புலி முதலியவைகள் எப்படி மெல்ல மெல்ல வசமாகப்படுகின்றனவோ, அதுபோல அப்பியசிக்கப் படும் வாயுவும் வசப்படும். அப்படிக்கில்லாமல் விரைவாகக்கொ ண்டால், அது சிங்கமுதலியவற்றைப்போல அப்பியாசியைக் கொல்லும். (௧௫)

---

* இது சாண்டில்யோபநிஷத் வாக்கியம் இது தத்துவோபநிஷத்து முதலியவற்றினும் சொல்லப்பட்டுளது.

† இது சாண்டில்யம், யோகசூடாமணி முதலிய வுபநிஷத்வாக்கியம் இது சிவபுராணம், மார்க்கண்டேயம், லிங்கபுராண முதலியவற்றிலும் கூறப்பட்டுளது.

(அ-கை) யுக்தாயுக்தங்களின் பலத்தைக் கூறுகின்றார்:—

* ப்ராணாயாமேந யுக்தேந ஸர்வரோகக்ஷயோ பவேத் |
அயுக்தாப்யாஸயோகேந ஸர்வரோகஸமுத்பவ: || கசு ||

(இ-ள்) யுக்தமாகிய பிராணாயாமத்தினால் சகல ரோகங்க களும் நாசமாகும். † அயுக்தமாகிய அப்பியாசத்தையுடைய பிராணாயாமத்தால் சகலரோகங்களு முண்டாகும்.

ஆகாரமுதலிய யுக்தி பூர்வகமும், ஜாலந்தரமுதலிய பந்த மாகிய யுக்தியோடு கூடினதுமாகிய பிராணாயாமம் யுக்தமெனப் படும். (கசு)

(அ-கை) அயுக்தப்பிராணாயாமத்தினால் என்னென்னரோகங் களுண்டாகுமென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

‡ ஹிக்கா ஶ்வாஸஶ்ச காஸஶ்ச ஶிர:கர்ணாக்ஷிவேதநா: |
பவந்தி விவிதா ரோகா: பவநஸ்ய ப்ரகோபத: || கஎ ||

(இ-ள்) விக்கல், சுவாசம், காசம், தலைவலி, காதுவலி, கண் வலி யென்னும் நாநாவிதரோகங்கள் வாயுவின் கோபத்தாலுண் டாகின்றன.

---

* இது யோகசூடாமணியுபநிஷத்வாக்கியம்.

† "பாதிர்யம் ஜடதா லோப: ஸ்ம்ருதேர்மூகத்வமந்ததா |
ஜ்வரஶ்ச ஜாயதே ஸத்யஸ்தத்வதஜ்ஞாநயோகிந: ||
ப்ரமாதாத்யோகிநோ தோஷா யத்யேதே ஸ்யுஶ்சிகித்ஸிதா:

செவிடு, உணர்ச்சியின்மை, ஞாபகக்குறைவு, ஊமை, குருடு, ஜ்வரம் என்பன யோகத்தினை யறியாது பழகுவோர்களுக்கு உடனேவரும். பிர மாதத்தினால்வரும் யோகிகளின் இத்தோஷங்கள் சிகிச்சிக்கத்தக்கனவாம்" என்று மார்க்கண்டேயம் நகூ-வது அத்தியாயத்தில் ஒழுங்குதவறிச் செய்வ தனால் வரும் தோஷங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றின் சிகிச் சைக் கிரமம் அதிற்றானே கூறப்பட்டிருக்கின்றது. அது தெளிந்த யோகி யைக்கொண்டு செய்துகொள்ளத்தக்கதாகலின் இங்கு எழுதப்படவில்லை. விருப்புடையோர் அங்குக்காண்க.

‡ இது யோகசூடாமணியுபநிஷத்வாக்கியம்.

நாநாவிதரோகங்க ளென்றமையால் சுரமுதலியவைகளுங் கொள்ளப்படும். (௧௭)

(அ-கை) வாயுன் பிரகோபத்தால் பலவிதரோகங்க ளுண் டாகின்றமையால், அதற்குச் செய்யவேண்டியது யாதெனக் கூறு கின்றார்:—

* 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑍍𑌯𑌜𑍇𑌦𑍍𑌵𑌾𑌯𑍁𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂𑌚 𑌪𑍂𑌰𑌯𑍇𑌤𑍍 |
𑌯𑍁𑌕𑍍𑌤𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂𑌚 𑌬𑌧𑍍𑌨𑍀𑌯𑌾 𑌦𑍇𑌵𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 ‖ ௧௮ ‖

(இ-ள்) வாயுவை யுக்தம்யுக்தமாக விடவேண்டும். (இரேசிக்குங்காலத்து மெல்ல மெல்லவே இரேசிக்கவேண்டும்; வேகமாக இரேசிக்கலாகாதென்பது பொருள்.) யுக்தம் யுக்தமாகப் (அற்பமுமதிகமுமில்லாமல்) பூரிக்கவேண்டும். யுக்தம் யுக்தமாக (ஜாலந்தரபந்தமுதலியவற்றோடு)கூடியதாகக் கும்பிக்கவேண்டும். இப்படி யப்பியசித்தலால் ஹடசித்தியை யடைகிறான். (௧௮)

(அ-கை) யுக்தமாகிய பிராணாயாமத்தை அப்பியசித்தலா லுண்டாகின்ற நாடிசுத்தியின் இலக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

† 𑌯𑌦𑌾 𑌤𑍁 𑌨𑌾𑌡𑍀𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃𑌸𑍍𑌯𑌾 𑌤𑍍𑌤𑌥𑌾 𑌚𑌿𑌹𑍍𑌨𑌾𑌨𑌿 𑌬𑌾𑌹𑍍𑌯𑌤𑌃 |
𑌕𑌾𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌶𑌤𑌾 𑌕𑌾𑌨𑍍𑌤𑌿 𑌸𑍍𑌤𑌦𑌾 𑌜𑌾𑌯𑍇𑌤 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 ‖ ௧௯ ‖

(இ-ள்) எந்தக்காலத்தில் நாடிகளுக்குச் சுத்தியுண்டாகின் றதோ, அந்தக்காலத்தில் வெளிச்சின்னங்கள் (இலக்ஷணங்கள்) உண்டாகின்றன, தேகத்தின் கிருசத்துவமு(மெலிவு)ம் காந்தியும் நிச்சயமாகவே யுண்டாகின்றன.

𑌤𑌥𑌾 (அப்படியே) என்னுஞ் சொல்லால் உட்சின்னங்களுமுண்டாகின்றன. (௧௯)

(அ-கை) இதுவுமது:—

‡ 𑌯𑌥𑍇𑌷𑍍𑌟𑌧𑌾𑌰𑌣𑌂 𑌵𑌾𑌯𑍋 𑌰𑌨𑌲𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌨𑌂 |
𑌨𑌾𑌦𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍋𑌗𑍍𑌯𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌨𑌾𑌡𑌿𑌶𑍋𑌧𑌨𑌾𑌤𑍍 ‖

---

* இது யோகசூடாமணி சாண்டில்யோபநிஷதங்களின் வாக்கியம்.

† இது தர்சனோபநிஷத்வாக்கியம். இவ்வர்த்தம் யோக தத்துவோபநிடதத்தும், சாண்டில்யோபநிஷதத்தும் கூறப்பட்டுளது.

‡ இது சாண்டில்யயோகசூடாமணியுபநிடதங்களின் வாக்கியம்.

(இ-ள்) வாயுவை அநேகமுறை (இஷ்டப்படி) கும்பகத்தில் தரித்தலும், ஜடராக்கினியின் தீபனமும் * நாதத்தின் பிரகடத் தன்மையும், ரோகமின்மையும் நாடிசோதனையா லுண்டாகின்றன.

(அ-கை) மேதசு முதலியவை அதிகரிக்கின், அதற்கு வேறு உபாயத்தைக் கூறுகின்றார்:—

𑌮𑍇𑌦𑌃𑌶𑍍𑌲𑍇𑌷𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌷𑌟𑍍𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ।
𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑍁 𑌨𑌾𑌚𑌰𑍇𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌦𑍋𑌷𑌾𑌣𑌾𑌂 𑌸𑌮𑌭𑌾𑌵𑌤𑌃 ॥ உக ॥

(இ-ள்) மேதசு (கொழுப்பு)ம் சிலேஷ்மமு (கோழையு)ம் அதிகமாயுள்ளவன் முன்னமே (பிராணாயாமப்பியாசகாலத்திலன்று; பிராணாயாமாப்பியாசத்திற்கு முன்னமே) இனிச்சொல்லப்படும் ஷட்(ஆறு) கருமங்களையும் செவ்வையாக ஆசரிக்கவேண்டும். தோஷங்கள் (வாதபித்தகபங்கள்) சமமாயிருத்தலால் மற்ற (மேதசும் சிலேஷ்மமும் அதிகமாயில்லாத)வன் அவற்றை (ஆறு கருமங்களையும்) ஆசரிக்கவேண்டியதில்லை. (உக)

ஷட்கர்மம்.

(அ-கை) ஷட்கர்மங்களின் பெயர்களைக் கூறுகின்றார்:—

𑌧𑍌𑌤𑌿𑌰𑍍𑌬𑌸𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌥𑌾 𑌨𑍇𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌟𑌕𑌂 𑌨𑍌𑌲𑌿𑌕𑌂 𑌤𑌥𑌾 ।
𑌕𑌪𑌾𑌲𑌭𑌾𑌤𑌿𑌶𑍍𑌚𑍈𑌤𑌾𑌨𑌿 𑌷𑌟𑍍𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 ॥ உஉ ॥

(இ-ள்) தௌதி, பஸ்தி, நேதி, திராடகம், நௌலிகம், கபாலபாதி என்னு மிவை ஷட்கருமங்க ளெனப்படுகின்றன. ()

(அ-கை) இது இரகசியமென்பதையும், அதன் ஹேதுவையுங் கூறுகின்றார்:—

𑌕𑌰𑍍𑌮𑌷𑌟𑍍𑌕𑌮𑌿𑌦𑌂 𑌗𑍋𑌪𑍍𑌯𑌂 𑌘𑌟𑌶𑍋𑌧𑌨𑌕𑌾𑌰𑌕𑌮𑍍 ।
𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌗𑍁𑌣𑌸𑌂𑌧𑌾𑌯𑌿 𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑍇 𑌯𑍋𑌗𑌿𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑍈𑌃 ॥

* "வாயுவின் இரேசகபூரககும்பகங்களால் சகலநாடிகளும் சுத்தியாகுங்காலத்து, உள்ளே எப்போதும் அநேகவிதமாகிய அநாகதமென்னும் நாதம் பிரவிருத்திக்கு" மென்று யோகசாராவளியிலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

இ-ள்) எதனால் விசித்திரகுணங்களைச் செய்யத்தக்கதாகிய இந்த ஷட்கருமம் யோகசிரேஷ்டர்களால் பூஜிக்கப்படுகின்றதோ அதனால், கடசோதனத்தை (சரீரசுத்தியை)ச் செய்யும் தௌதி முதலிய கர்மங்க ளாறும் மறைத்து (இரகசியமாய்) வைக்கத்தக்கனவாம்.

மறைத்து வைக்காவிடின், ஷட்கர்மம் அன்னியர்களாலும் செய்யப்படுவதாகின்றது. யோகிகளுக்குப் பூஜிக்கப்படுந்தன்மையின்மை பொருந்துகின்றதென்பது தாற்பரியம். இதனால் பிராணாயாமத்தினாலும் மேதைசிலேட்டுமமுதலியவற்றின் நாசம் சம்பவித்தலாலும், அப்படியே

"𑌷𑌟𑍍𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌵𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 ॥

பிராணாயாமாப்பியாசதற்பரன் ஷட்கர்மயோகத்தை யடைகிறான்" என்று சொல்லப்பட்டிருக்கும் பூர்வோத்தர கிரந்தத்திற்கும் இப்படியே சுவாரசிய மிருத்தலாலும் இதுவே (பூஜிக்கப்படுந்தன்மையே) ஷட்கருமத்தின் முக்கியபல மென்பது குறிப்பிக்கப்பட்டது. (௨௫)

## ௧. தௌதி.

(அ-கை) தௌதிகர்மத்தைக் கூறுகின்றார்:—

𑌚𑌤𑍁𑌰𑌙𑍍𑌗𑍁𑌲𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌹𑌸𑍍𑌤𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑌾𑌯𑌤𑌮𑍍 ।
𑌗𑍁𑌰𑍂𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌸𑌿𑌕𑍍𑌤𑌂 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌶𑌨𑍈𑌰𑍍𑌗𑍍𑌰𑌸𑍇𑌤𑍍 ॥
𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌚𑍍𑌚𑍈𑌤𑌦𑍁𑌦𑌿𑌤𑌂 𑌧𑍌𑌤𑌿𑌕𑌰𑍍𑌮 𑌤𑌤𑍍 ॥

(இ-ள்) * நான்கு அங்குல அகலமும் பதினைந்து முழநீளமும் உள்ள (கொஞ்சம் உஷ்ணமான ஜலத்தால் நனைத்த) ஈரவஸ்திரத்தைக் குருவினா லுபதேசிக்கப்பட்ட மார்க்கமாக மெல்ல மெல்லக் கொஞ்சங் கொஞ்சமாய் விழுங்கவேண்டும்.

---

* தௌதிக்குரிய வஸ்திரம் நான்கல்லது ஆறங்குல அகலமும், எட்டல்லது பதினாறுமுழ நீளமுமுள்ளதென்று சிலரும், இருபது அல்லது பதினைந்துமுழ நீளமும், நாலுவிரற்கடை யகலமுமுள்ளதென்று சிலருங் கூறுவர்.

மல்மல் அல்லது ஜெகந்நாதம் என்னும் மெல்லிய புதுத்துலைக் குட்டையின் பட்டி (ஓர் துண்டு வஸ்திரம்) கொள்ளவேண்டும். இரண்டாவதுநாள் இரண்டு முழமாகவும், மூன்றுவதுநாள் மூன்று முழமாகவும், இப்படி நாளுக்குநாள் ஒவ்வொரு முழம் அதிகமாக விழுங்கவேண்டும். அதன் நுனியை முன்பற்களாற் கடித்துக்கொண்டு, நௌலிகர்மத்தால் வயிற்றிலுள்ள வஸ்திரத்தைச் செவ்வையாய் அலசி மறுபடியும் மெல்ல தைரியமாக வெளியே யிழுக்கவேண்டும். இது * தௌதிகர்மமென்று சித்தர்களால் சொல்லப்படுகின்றது. (௨௪)

---

* (௧) ஜலதௌதி (௨) சூத்திரதௌதி (௩) வஸ்திரதௌதி (௪) பவனதௌதி யென்னும் வேறுபாட்டால் தௌதிக்கிரியை நாலுவகையாம்.

(௧) மிளகைத் தின்று கொஞ்சம் உஷ்ணமான ஒரு செம்பு ஜலத்தைச சாப்பிட்டு, மறுபடியும் யுக்தியால் யானையைப் போல ஜலத்தை வெளிப்படுத்துதல், ஜலதௌதி.

𑌭𑍋𑌜𑌨𑌾𑌨𑍍𑌤𑍇 𑌪𑌿𑌬𑍇𑌦𑍍𑌵𑌾𑌰𑌿 𑌚𑌾𑌕𑌣𑍍𑌠𑌪𑍂𑌰𑌿𑌤𑌂 𑌸𑍁𑌧𑍀𑌃 ।
𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌕𑍍𑌷𑌣𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌤𑌜𑍍𑌜𑌲𑌂 𑌵𑌮𑌯𑍇𑌤𑍍𑌪𑍁𑌨𑌃 ॥
𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑍇𑌨 𑌕𑌫𑌪𑌿𑌤𑍍𑌤𑌨𑌿𑌵𑌾𑌰𑌣𑌮𑍍 ॥

போஜனத்திற்குப் பின் முடிவில் கழுத்துவரையில் நீர்பருகிக் கணப்பொழுது மேலே பார்வைவைத்துப் பின் அந்த நீரை வாந்திசெய்யவேண்டும்.

நித்தியம் அப்பியசித்தலால் கபபித்தங்கள் நீங்கும் என்றும் ஜலதௌதி சொல்லப்பட்டுளது.

(௨) நூலால் திரிக்கப்பட்ட பாதமுதல் சிரசளவினதாகிய கயிற்றை வாயின்வழியாய் வயிற்றிலிறக்கி அலசி வெளிப்படுத்துதல், சூத்திரதௌதியாம்.

(௩) வஸ்திரதௌதி இது நூலாசிரியராற் சொல்லப்பட்டிருக்கிறது.

(௪) இரண்டு கால்களா லுட்கார்ந்துகொண்டு கழுத்தை நீட்டி, கொஞ்சம் வாயைத் திறந்து, வெளியிலுள்ள காற்றை யிழுத்து உள்ளே நிரப்பி, மறுபடியும் தைரியமாகவிடுதல், பவனதௌதி (பவனம்=காற்று). இந்தத் தௌதிக்கிரியை கோமுகாசனத்திலிருந்து செய்யத்தக்கதாம்

சிலர் இத்தௌதிக்கிரியையினை ௧. அந்தர்தௌதி, ௨. தந்ததௌதி ௩. ஹிருத் (இருதய) தௌதி, ௪. மூலசோதனதௌதி என்று நால்வகையாகக்கூறுவர். அவற்றுள்

க. அந்தர்தௌதியானது (க) வாதசாரம், (உ) வாரிசாரம், (ங) வன்னிசாரம், (ச) பஹிஷ்கிருதம் என்று நான்குவகைப்படும். அவற்றுள்

(க) வாதசாரதௌதி:—காக்கையினலகுபோல வாயைத் திறந்து வெளிவாயுவினை மெல்லமெல்ல உள்ளே இழுத்துப் பின் வாயைமூடி இழுத்த வாயுவினை வயிற்றினுள்விழுங்கி அதனால் வயிற்றினுள் கழுவினது போல இங்குமங்குமாக வியாபிக்கச்செய்து பின் குதத்துவாரத்தால் விட்டு விடவேண்டியது. இவ்வாறு அடிக்கடி அப்பியசித்துக்கொண்டிருத்தலால் இரக்தசுத்தியும் சர்வரோகக்ஷயமும், ஜடராக்கினி விருத்தியுமுண்டாம்.

(உ) வாரி (ஜல) சாரதௌதி:—கண்டம் வரையில் வாய்நிறைய தண்ணீரேனும் வெந்நீரேனும் பருகி அதனை மெல்லவிழுங்கி வயிற்றினுள் இங்குமங்குமாகக் கலக்கிக் குதத்துவாரத்தின்வழியாய் விட்டுவிடவேண்டும். இது நாடிகளிலுள்ள மலங்களைப்போக்கி, சரீரகாந்தியைக்கொடுத்து ரோகங்களை வாராமற்றடுக்கும்.

(ங) வன்னி (அக்கினி) சாரதௌதி:—நாபிபாகமாகிய வயிற்றினை முதுகெலும்பினை யொட்டும்படி இழுத்து மறுபடியும் உப்பும்படி செய்து கொண்டிருக்கவேண்டும். இது தினந்தோறும் நூறுகச் செய்யப்பட்ட போது சகல உதரரோகங்களையும் நீக்கி ஜாடராக்கினியை விருத்திசெய்து யோகாப்பியாசத்திற்குச் சகாயமுள்ளதாம்

(ச) பஹிஷ்கிருதமௌதி:-காக்கையின் அலகுபோல வாயைத்திறந்து வெளிவாயுவினை இழுத்து மூன்றேமுக்கால் நாழிகை (ஒன்றரை மணி) வரையில் வயிற்றிற் கும்பித்துப் பின் குதத்துவாரத்தினல் விட்டுவிடவேண்டும். இவ்வாறு மூன்றேமுக்கால் நாழிகைவரையில் வாயுதாரணஞ்செய்யச் சக்தியுண்டான பின் நாபியளவு ஜலத்தில் நின்று சக்திநாடியென்னும் கீழ் வயிறு முதல் மூலாதாரபரியந்தம் வியாபித்திருக்கும் பெரியபையினைக் குதத்துவாரத்தின் வழியாக மெல்ல ஜாக்கிரதையாய் வெளியில் வாங்கி நீரால் சுத்தமாய்க்கழுவிப் பின் மறுபடியும் குதத்துவாரத்தின் வழியாய் உள்ளே செலுத்தவேண்டும். இதனல் தேகத்திலிருக்கும் மலம்யாவும் நசித்துச் சரீரகாந்தியுண்டாகும். ரோகமுண்டாகாது.

உ. தந்ததௌதியானது (க) தந்தமூலதௌதி (உ) ஜிஹ்வாமூலதௌதி, (ங) கர்ணதௌதி, (ச) கபாலரந்திரதௌதியென்று நால்வகைப்படும். அவற்றுள்,

(க) கருவேலரஸத்தினலாவது, சுத்தமான மண்ணினலாவது தினந்தோறும் உதயத்தில் செவ்வையாய்ப் பற்களை விளக்குதல் தந்தமூலதௌதியாம். இது வாய் நாற்றத்தினை நீக்கிப் பற்களுக்குத் தெறிவையுண்டாக்கும்,

(உ) ஜிஹ்வாதௌதி:—சுட்டுவிரல் நடுவிரல் மோதிரவிரல் என்னும் மூன்றுவிரல்களாலும் நாவின்பேரில் தேய்த்து வெளிப்படும் கபத்தினைத் துப்பிவிட்டுப் பின் வெண்ணெயால் நாவினைத் தேய்த்து, நாவினுனியைச் சிறிய இருப்புக்குறடுபோன்ற சாதனத்தினுல் பிடித்துக்கொண்டு மெல்ல நாவானது வெளியில்வரும்படி இழுக்கவேண்டும். இவ்வாறு தினந்தோறும் சூரியோதய சூரியஸ்தமன காலங்களில் செய்துவரின், கேசரிமுத்திரைக்குச் சகாயமாய் மூப்பின்றிச் சரீரபடுத்துவமுண்டாய் நாவின் குற்றங்கள் எல்லாம் நீங்கும்.

(ங) கர்ணதௌதி:—இரண்டு செவித்துளைகளிலும் சுட்டுவிரல் மோதிரவிரல்களை நுழைத்துத் திருப்பிச் சுத்திசெய்தல் கர்ணதௌதியாம். இது கர்ணரோகங்களை நீக்கி, செவியுண்டாக்காது உள்ளே பிறக்கும் நாதத்தினைச் செவ்வையாய்க் கேட்பதற்குச் சக்தியுண்டாக்கும்.

(ச) கபாலரந்திரதௌதி:—வலதுகைப் பெருவிரல்நுனியால் மேல்வாயிலுள்ள உண்ணாக்கினைத் தேய்த்தல் கபாலரந்திரதௌதியாம். இவ்வாறு தினந்தோறும் தூங்கி விழித்தவுடனும், போஜனத்தின் பின்னும், சாயந்திரமும் தேய்க்கும்பக்ஷத்தில் கபதோஷங்கள் நீங்கி நாடிகள் சுத்தப்பட்டுத் திவ்யதிருஷ்டியுண்டாகும்.

ங. ஹிருத்தௌதியானது (க) தண்டதௌதி, (உ) வமனதௌதி, (ங) வஸ்திரதௌதி, என்று மூவகையாம் அவற்றுள்,

(க) தண்டதௌதி:—வாழைக்காம்பினையாவது மஞ்சட்காம்பினையாவது வேப்பமீர்க்கினையாவது வாயினுல் மெல்ல விழுங்கி இருதயபரியந்தம் சென்றபின் மறுபடியும் வெளியே வாங்குதல் தண்டதௌதியாம். இது வாதபித்தங்களை வெளிப்படுத்தி இருதய ரோகங்களை நீக்கி ஆரோக்கியத்தினைக் கொடுக்கும்

(உ) வமனதௌதி:—தினந்தோறும் போஜனத்திற்குப் பின் வாய் நிறைய ஜலம் குடித்து வானைப்பார்த்துக்கொண்டு சிறிதுநேரமிருந்து பின் அந்த ஜலத்தினைக்கலக்கித் துப்பிவிடவேண்டும். இதனுல் பித்தசிலேட்டுமங்கள் நசித்து ஆரோக்கியமுண்டாகும்.

(ங) வஸ்திரதௌதி:—இது இந்நூலிற் சொல்லப்பட்டதேயாம். இதனுல் குன்மம், ஜ்வரப்பிலீகம், குஷ்டம், கபம், பித்த முதலிய ரோகங்கள் நசிக்கும். சரீரத்திற்கு ஆரோக்கியத்தினையும் பலத்தினையுமுண்டு பண்ணும்.

ச. மஞ்சட்காம்பினுலாவது நடுவிரலினுலாவது குதத்துவாரத்தினுள் நீராற் கழுவிக்கொண்டிருத்தல் மூலசோதனதௌதியாம் இதனுல் மலபந்தம் அஜீர்ணம், ஆமதோஷம் இவை நீங்கி சரீரத்திற்குக் காந்தியும் பலமுமுண்டாகி ஜாடராக்கினி விருத்தியாகும்.

(அ-கை) தௌதிகர்மத்தின் பலத்தைக் கூறுகின்றார்:—

𑌕𑌾𑌸𑌶𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌲𑍀𑌹𑌕𑍁𑌷𑍍𑌠𑌂 𑌕𑌫𑌰𑍋𑌗𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌂𑌶𑌤𑌿𑌃 |
𑌧𑍌𑌤𑌿𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑍇𑌣 𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 ‖ ௨௫ ‖

(இ-ள்) காசம், சுவாசம், பிலீகம் (மண்ணீரல் உப்புதலா லுண்டாகும் வியாதி), குஷ்டம், இருபது கபரோகங்கள் என்னு மிவை தௌதிகர்மத்தின் பிரபாவத்தால் நாசமாகின்றன. இதிற் சமுசய மில்லை. (௨௫)

## பஸ்தி.

(அ-கை) இனிப் பஸ்திகர்மத்தைக் கூறுகின்றார்:—

𑌨𑌾𑌭𑌿𑌦𑌘𑍍𑌨𑌜𑌲𑍇 𑌪𑌾𑌯𑍌 𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌨𑌾𑌲𑍋𑌤𑍍𑌕𑌟𑌾𑌸𑌨𑌃 |
𑌆𑌧𑌾𑌰𑌾𑌕𑍁𑌞𑍍𑌚𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑍍𑌷𑌾𑌲𑌨𑌂 𑌬𑌸𑍍𑌤𑌿𑌕𑌰𑍍𑌮 𑌤𑌤𑍍 ‖ ௨௬ ‖

(இ-ள்) நாபியளவுள்ள (ஆறுமுதலியவற்றின்) ஜலத்திலிருந்து குதத்தில் நாளத்தை(குழலை)ச் செலுத்தி, * உத்கடாசனமாக வுட்கார்ந்துகொண்டு ஜலம் உள்ளே பிரவேசிக்கும்வண்ணம் ஆதார(குத)த்தைச் சுருக்கவேண்டும். பின் உட்சென்ற நீரை நௌலிகர்மத்தால் அலசி வெளியே விடவேண்டும்.

---

* மேற்கூறியபடி உத்கடாசனத்திலாவது கோமுகாசனத்திலாவது இருந்துகொண்டு, அபானத்துவாரத்தால் ஜலத்தைக் கொஞ்சம்மேலே யிழுக்கவேண்டும். அதன்பின் சுவஸ்திகாசனத்தி லிருந்துகொண்டு அந்த ஜலத்தைச் செவ்வையா யிழுத்து, நாபிக்குமேல் இருதயம்வரையில் செலுத்த வேண்டும். மறுபடியும் உத்கடாசனத்தால் ஜலத்தைக் கிரகித்து முன்போல் சுவஸ்திகத்திலிருந்து மேற்செலுத்தவேண்டும். இப்படி பஸ்தி சுவஸ்திகங்களால் வயிறுமுழுவதையும் ஜலத்தால் நிரப்பி வயிற்றை விசேஷமாய்ச் சுழற்றுவதனுல் (நௌலிகர்மத்தினுல்) குடலின் சந்துகளிலும் குடலிலு மிருக்கும் பக்குவமானவைகளும் பக்குவமாகாதவைகளும், இறுகினவைகளும், இளகினவைகளுமாகிய மலங்களைக் கரைத்துப், பின் வேகமில்லாமல் கிரமமாக வெளியே விடவேண்டும். இதனுல் வயிறு வெளுத்த வஸ்திரம்போல் தோஷநீங்கிப் பரிசுத்தமாகின்றது. பஸ்தியும், ஜலபஸ்தி வாயுபஸ்தியென இருவகையாம் ஜலத்தை யிழுத்தல் ஜலபஸ்தி வாயுவை யிழுத்தல் வாயுபஸ்தி. பச்சிமதானுசனத்துட்கார்ந்து அசுவினி முத்திரையால் வாயுவை ஆகுஞ்சனப் பிரசாரணங்(சுருக்குதல் விரித்தல்)களைச் செய்துகொண்டு வயிற்றினை நாற்புறத்திலும் சுற்றுதலை ஸ்தலபஸ்தி யென்றும்

இங்கே * நாளமென்றது மூங்கிற்குழல். அதைச் சுண்டு விரல் நுழையத்தக்க துவாரமுள்ளதும், ஆறங்குலம் நீளமுள்ளதுமாகக் கொண்டு, நான்கங்குல அளவு குதத்திற் செலுத்தி, இரண்டங்குல அளவு வெளியில் வைக்கவேண்டும். இரண்டு குதிகாலிலும் இரண்டு கடிதடங்களையும் வைத்துக் கால்விரல்களா லிருத்தல், உத்கடாசனமாம். அதாவது

ஸம்ஹதாங்குஷ்டாஹ்யாக்ரவதா ஹ்யாஸநம் வாதவிஷ்ணு தள |
தஸ்யோபரி ஸதேர்ஹோத்கடாஸனம் த்விதி ஜ்ஞேயம் ||

காற்பெருவிரல்களை பூமியிலூன்றிக் குதிகளை மேலெழுப்பி அதன்மேரில் குதத்தை வைத்துட்காருதல் உத்கடாசனமாம்.

தௌதி, பஸ்தியென்னு மிரண்டு கருமங்களையும் போஜனத்திற்கு முன்பே செய்யவேண்டும். அதன்பின் போஜனஞ்செய்யச் சிறிதும் தாமதிக்கலாகாது. சிலர் முன்னர் மூலாதாரத்தால் வாயுவை ஆகருஷி (இழு)த்தலை அப்பியசித்து, ஜலத்தில் நின்றுகொண்டு குதத்தில் நாளத்தைச் செலுத்தாமலே பஸ்திகர்மத்தை அப்பியசிக்கின்றார்கள். அப்படிச் செய்யுமிடத்து, ஜலமுழுவதும் வெளியில் வராது. அதனாற் பலரோகங்களும் தாதுக்ஷயமுதலியவைகளும் சம்பவிக்குமாகையால், அப்படிப் பஸ்திகர்மம் விதிக்கப்படவில்லை மற்றெப்படியெனின், சுவாத்மாராமர் குதத்தில் நாளத்தைச் செலுத்தி யென்று சொல்லியபிரகாரம் விதிக்கப்படுகின்றது.

(அ-கை) பஸ்திகர்மத்தின் குணங்களை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

குல்மப்லீஹோதரம் சாபி வாதபித்தகபோத்பவா: |
பஸ்திகர்மப்ரபாவேந க்ஷீயந்தே ஸகலாமயா: || உ௭ ||

---

வாயுபஸ்தி யென்றும் கூறுவர். இதனால் மலபந்தம் அஜீர்ணதோஷம் நீங்கும் ஜாடராக்கினி விருத்தியாகும். பஸ்திகர்மத்தில் கோமுகமே சிலாக்கியமாக அநுபவிக்கப்பட்டுளது.

* இங்கே பொதுவாக நாளமென்றமையாற் சிறிய வழவழப்புள்ள எந்நாளமும் கொள்ளலாம்.

(இ-ள்) குன்மமும், பிலீஹமும், ஜலோதரமும், வாதபித்தகபங்களா லுண்டாகும் சகல ரோகங்களும் பஸ்திகர்மப்பிர பாவ(சாமர்த்திய)த்தால் நசிக்கின்றன. (உஎ)

(அ-கை) இதுவுமது:—

யாத்யாத்யாக்ஷகரணவஹ்ஸாதம்
தத்யாத்ஸகாந்திதஹநவத்தீப்திம் |
க்ஷிஶேஷதோஷோபசயம் நிஹந்யா
தப்யஸ்யமாநம் ஜலபஸ்திகர்ம ‖ உஅ ‖

(இ-ள்) ஜலத்திலிருந்து அனுஷ்டிக்கப்படும் (அப்பியசிக்கப்படும்) பஸ்திகர்மமானது இரசம், தோல், மாமிசம், மேதசு, அஸ்தி, மச்சை, சுக்கிலம் என்னும் தாதுக்கள்; சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்நுவை, ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்கள்; வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்கள்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களென்னுமிவற்றின் பிரசாதத்தையும், காந்தியையும், ஜடராக்கினியின் தீப்தி(விருத்தி)யையும் தருகின்றது. வாத பித்த கபமென்னும் சகலதோஷங்களின் விருத்திக்ஷயங்களைக் கெடுக்கின்றது. (தோஷங்களின் சமத்தன்மையாகிய ஆரோக்கியத்தைச் செய்கின்றதென்பது பொருள்).

பரிதாபம், விக்ஷேபம், சோகம், மோகம், கௌரவம், ஆவரணம், தைந்நியம் (ஆசையாற்றாழ்தல்) முதலிய ராஜசதாமததர்மங்களை நிவர்த்தித்தலா லுண்டாகும் சுகம், பிரகாசம், இலாகவம் (சரீரகனமின்மை) முதலிய சாத்துவிக தர்மங்களின் ஆவிர்ப்பாவம், பிரசாதமாம். க்ஷயம் என்பது உபலக்ஷணத்தாற் கொள்ளப்பட்டது. (உஅ)

## நேதி.

(அ-கை) இனி நேதிகர்மத்தைக் கூறுகின்றார்:—

ஸூத்ரம் விதஸ்திஸுஸ்நிக்தம் நாஸாநாலே ப்ரவேசயேத் |
முகாந்நிர்கமயேச்சைஷா நேதிஸ்ஸித்தைர்நிகத்யதே ‖

(இ-ள்) ஒருசாண் அளவுள்ளது, முடிச்சுமுதலியவைகளில் லாததுமாகிய சூத்திரத்தை நாசித்துவாரத்திற் செலுத்தி வாயின்வழியாயும் இழுக்கவேண்டும். இது நேதிகர்மமென்று சித்தர்களாற் சொல்லப்படுகின்றது.

சாண் * என்னும் உபலக்ஷணம் அதிகத்திற்குமாம். ஒன்பது பத்து அல்லது பதினைந்து புரியாய்த் திரிக்கப்பட்டுத் திடமாயுள்ள சூத்திரம் கொள்ளத்தக்கது. சூத்திரத்தின் நுனியை நாசித்துவாரத்தில் நுழைத்து மற்ற நாசியை விரலாற்றடுத்துப் பூரகம் செய்யவேண்டும். மறுபடியும் வாயினால் இரேசிக்கவேண்டும். அடிக்கடி இப்படிச் செய்வதனால் வாயில் சூத்திரத்தினுனி வருகின்றது. அந்தச் சூத்திர நுனியையும், நாசிவெளியிலிருக்கும் சூத்திர நுனியையும் பிடித்துக்கொண்டு மெல்ல அசைக்கவேண்டும்.

சகாரத்தால் (உம்மையால்) ஒரு நாசித்துவாரத்திற் செலுத்தி. மற்ற நாசித்துவாரத்தால் வெளிப்படுத்தவேண்டு மென்பதும் சொல்லப்பட்டது. அதாவது ஒரு நாசித்துவாரத்தில் நூல் நுனியைச் செலுத்தி, மற்ற நாசித்துவாரத்தை விரலால் தடுத்துப் பூரகஞ்செய்ய(இழுக்க)வேண்டும். பிறகு மற்ற நாசித்துவாரத்தில் இரேசிக்க(வெளிப்படுத்த)வேண்டும். அடிக்கடி இப்படிச் செய்வதினால் மற்ற நாசித்துவாரத்தால் சூத்திரத்தின் நுனி வருகின்றது. அதை முன்போல சாலனஞ்செய்ய(அசைக்க)வேண்டும். இதுவும் அநேகமுறை செய்தால் ஒரு முறை யுண்டாகும். (உக)

(அ-கை) நேதியின் குணங்களைக் கூறுகின்றார்:—

கபாலஶோதிநீசைவ திவ்யத்ருஷ்டிப்ரதாயிநீ ।
ஜத்ரூர்த்வஜாதரோகௌகம் நேதிராஶு நிஹந்தி ச ॥௩௦॥

(இ-ள்) கபாலசுத்தியைச் செய்வதும் திவ்வியமாகிய திருஷ்டியைத் தருவதுமாகிய நேதிக்கிரியை தோளின் மேற்பாகத்திலுண்டாகும் வியாதிகளை விரைவிற் கெடுக்கின்றது.

---

* எலிவாலைப் போன்ற ஆறுசாணளவுள்ள கயிறென்று ஹடாத்தீனவலியிற் கூறியிருக்கின்றது.

சுலோகத்தின் முதல் சகாரத்தால் (உம்மையால்) நாசித்துவாரங்களின் சுத்தியும் கொள்ளப்படும். இரண்டாவது சகாரம் (உம்மை) அசை. (௩௦)

## திராடகம்.

(அ-கை) திராடகத்தைக் கூறுகின்றார்:—

நிரீக்ஷேந்நிஶ்சலத்ருஶா ஸூக்ஷ்மலக்ஷ்யம் ஸமாஹித꞉ |
அஶ்ருஸம்பாதபர்யந்தமாசார்யைஸ்த்ராடகம் ஸ்ம்ருதம் ||

(இ-ள்) ஏகாக்கிரசித்தனாய் நிச்சலமாகிய (அசைவற்ற) பார்வையால் சூக்ஷ்மமாகிய லக்ஷியத்தைக் கண்ணீர் விழும்வரையில் பார்க்கவேண்டும். இது * திராடகமென்று மச்சேந்திரர் முதலிய ஆசாரியர்களால் சொல்லப்படுகின்றது.

((அ-ம) திராடகத்தின் குணங்களைக் கூறுகின்றார்:—

மோசநம் நேத்ரரோகாணாம் தந்த்ராதீநாம் கவாடகம் |
யத்நதஸ்த்ராடகம் கோப்யம் யதா ஹாடகபேடகம் || ௩௨ ||

(இ-ள்) நேத்திரரோகங்களைக் கெடுப்பதாயும், தந்திரை முதலியவற்றை அடக்குவதாயுமுள்ள திராடகமானது பிரயத்

* பிராதக்காலத்தி லெழுந்து சுகாசனத்திலிருந்துகொண்டும், கண்களைத் திறந்து திராடகமொன்றனையே யப்பியாசிக்கவேண்டும் மிக நின்மலமாகிய அந்த இலட்சியத்தைச் சிந்தைகள் நீங்கியவனாயிருந்து பார்க்கவேண்டும். இவ்வப்பியாசத்தால் வாயுவும் நேத்திரமும் ஸ்திரத்தன்மையையடைகின்றன. இப்படி இலக்ஷிய தீக்ஷையைச் செய்து, சிறிதுநேரம் கண்களை மூடிப், பிறகு திடீரெனத் திறந்து, எதிரில் நிச்சலமாகிய ஆகாயத்தை ஏகாக்கிரசித்தனாய் சூரியபிம்பம் தோற்றும்வரையில் பார்க்கவேண்டும். இதனால் மிகநின்மலமாகிய திருஷ்டியுண்டாம். இத்திராடகம் நாசிநுனியிற் சித்திக்கின், சாதகன் க்ஷணத்தில் தேகவியாதியின் கிலேசங்களில்லாதவனாகின்றான். புருவநடுவில் நிறுத்தி எப்போதும் அப்பியசித்தால், கேசரியையும், திவ்வியதிருஷ்டியையும், யோகிகளுக்கு யோகபலமாகிய சித்தியையும் தரும். இதனால் சிரோகமலத்திலுள்ள வாயுவும் இருதயமும் திரும்பி ஒழுங்குடையனவாகின்றன. திராடகத்தின் திடாப்பியாசத்தால் கூர்மவாயுவும், மூலபந்தத்தால் அபானவாயுவும், ஜாலந்தரத்தால் உதானவாயுவும் சாலனத்தால் சமானவாயுவும் பிராணவாயுவும் ஜயிக்கப்படுகின்றன.

தனத்தால் பொன்வைத்திருக்கும் பெட்டி மறைத்து வைக்கப் படுவதுபோல இரகசியமாய் வைக்கத்தக்கதாம்.

நித்திரைக்குமுன் வரும் சோம்பலாகிய தாமதசித்தவிருத்தி தந்திரையெனப்படும். (௩௨)

நௌலி.

(அ-கை) இனி நௌலிகர்மத்தைக் கூறுகின்றார்:—

அமந்தாவர்த்தவேகேந துந்தம் ஸவ்யாபஸவ்யத꞉ |
நதாம்ஸோ ப்ராமயேதேஷா நௌலி꞉ ஸித்தை꞉ ப்ரசஸ்யதே ||

(இ-ள்) தோள்களை வளைத்துக்கொண்டு வயிற்றை வலமிடமாக நீர்ச்சுழியைப்போல் அதிவேகமாய்ச் சுற்றவேண்டும். இது சித்தர்களால் * நௌலியென்று சொல்லப்படுகின்றது. (௩௩)

(அ-கை) நௌலியின் குணங்களைக் கூறுகின்றார்:—

மந்தாக்நிஸந்தீபநபாசநாதி
ஸந்தாபிகாநந்தகரீ ஸதைவ |
அசேஷதோஷாமயசோஷணீ ச
ஹடக்ரியாமௌலிரியம் ச நௌலி꞉ || ௩௪ ||

(இ-ள்) இந்த நௌலி அக்கினிமந்தத்தைக் கெடுத்தல் (ஜடராக்கினியைச் செவ்வையா யெழுப்புதல்), ஜீரணஞ்செய்தல் முதலியவற்றைச் செய்வதாயும், எப்போதும் ஆநந்தத்தைச் செய்வதாயும், (வாதாதி) சகல ரோகங்களையும் கெடுப்பதாயும், (தௌதிபஸ்தியென்னு மிரண்டுக்கும் இது வேண்டியதாயிருத்தலால்) தௌதியாதி ஹடக்கிரியைகளுக்கு முடி(கிரீடம்)போல் உத்தமமாயு மிருக்கின்றது.

---

* பாகியம் ஆந்தரமென நௌலி யிரண்டுவகையாம். அவற்றுள் பாகியநௌலி நூலாசிரியாற் சொல்லப்பட்டது. ஆந்தரநௌலியை ஹடாரத்நாவளியில், "இடைகலையினுல் வேகமாய்ச் சுழற்றி, அப்படியே பின்கலையினுலுஞ் சுழற்றிப், பின் அவ்விரண்டினுலும் சுழற்றவேண்டும். இவ்வாந்திரநௌலி யென்னுற் சொல்லப்பட்டது" என்று ஸ்ரீநிவாச யோகீந்திரர் கூறியிருக்கின்றனர். நௌலியைச் சுவஸ்திகாசனத்திலிருந்து செய்யவேண்டும்.

முதலியவெனுஞ் சொல்லால் மலசுத்திமுதலியவைகளும் கொள்ளப்படும். (௩௪)

### கபாலபாதி.

(அ-கை) இனிக் கபாலபாதியையும் அதன் குணத்தையும் கூறுகின்றார்:—

ஹஸ்த்ராவல்லோஹகாரஸ்ய ரேசபூரஸஸம்ப்ரமௌ |
கபாலபாதிர்விக்யாதா கபதோஷவிசோஷணீ ||௩௫||

(இ-ள்) கொல்லன் துருத்தியைப்போல் வேகத்தோடு இரேசகபூரகம் செய்தல் * கபாலபாதி யெனப்படும். அது இருபது கபரோகங்களையும் கெடுக்கும்.

"கபரோகாஸ்து விம்சதி: || கபரோகங்களிருபதாம்" என்று நிதானமென்னும் நூலில் சொல்லப்பட்டிருக்கின்றது. (௩௫)

(அ-கை) ஷட்கருமங்கள் பிராணாயாமத்திற்கு உபகாரமுள்ளனவா மென்பதைக் கூறுகின்றார்:—

ஷட்கர்மநிர்கதஸ்தௌல்யகபதோஷமலாதிக: |
ப்ராணாயாமம் தத: குர்யாதநாயாஸேந ஸித்யதி ||

---

* கபாலபாதியானது வியுத்க்கிரமம், வாமக்கிரமம், ஸிதக்கிரமம், என்று மூன்றுவிதமாமென்று சிலர் கூறுவர். அவற்றுள்,

க. வியுத்க்கிரமகபாலபாதி:-நாசிகாரந்திரத்தினுல் ஜலத்தை இழுத்து வாயினுல் வெளியேவிடுதல் வியுத்க்கிரமகபாலபாதியாம். இதனுல் சிலேட்டுமரோகம் நிவிருத்தியாகும்.

உ வாமக்கிரமகபாலபாதி:—இடது நாசித்துவாரத்தினுல் வெளி வாயுவினை உள்ளே இழுத்து வலது நாசித்துவாரத்தினுல் வெளியில்விடுதலும் மறுபடியும் வலது நாசித்துவாரத்தினுல் உள்ளே வாங்கி இடது நாசி வழியாக வெளியில்விடுதலுமாக அப்பியசிப்பது வாமக்கிரமகபாலபாதியாம். இதனுல் சிலேஷ்மாதிரோகங்கள் நீங்கும்.

௩. ஸீதக்கிரமகபாலபாதி:—வாயினுற் பருகிய ஜலத்தினை நாசித்துவாரவழியாய் வெளிப்படும்படி கக்குதல் ஸிதக்கிரமகபாலபாதியாம். இது சிலேஷ்மாதிரோகங்களை நீக்கும்.

(இ-ள்) தௌதிமுதலிய * ஷட்கருமங்களால் ஸ்தூலத்தன்மையும் கபதோஷமுதலிய மலங்களும் நீங்கியபின் பிராணயாமம் செய்யவேண்டும். அதினால் (ஷட்கர்மபூர்வகமாகிய பிராணயாமத்தால்) யோகம் வருத்தமில்லாமற் சித்திக்கின்றது.

கபதோஷமுதலிய என்பதிலுள்ள முதலியவென்னுஞ் சொல்லால் பித்தமுதலியவைகளும் நீங்கியபின் என்று கொள்க. ஷட்

* "ஷட்கர்மங்களோடு சக்கிரிகர்மம் ஸ்ரீ சுவாத்மாராமயோகீந்திரரால் சொல்லப்படாவிடினும், அப்பியாசிகளுக்குச் சாதகமாக என்னுற் சொல்லப்படுகின்றது" என்று ஹடரத்னவளியிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

சக்கிரிகருமம் :—நடுவிரலிரண்டையும் நகங்களைச்சீவி ஆமணக்கெண்ணெயிலாவது நெய்யிலாவது தோய்த்துக், குதத்துவாரத்துட் செலுத்தி, மெல்ல வாயுவை இருதயம்வரையி லிழுத்துக், குதம் அசலமாகும்படி மூன்று நான்கு முறை செவ்வையாய்ச் சுழற்றவேண்டும். இப்படி அஜீரணாதி தோஷங்கள் நீங்கும்வரையிற் செய்யவேண்டும். இது சக்கிரிகர்ம மெனப்படும். இதனால் குடலில் தங்கியிருக்கும் நாற்றமுள்ள துர்மலங்களின் நீக்கமும், மூலசக்கரத்தின் விரிவும், சூலை, குன்மமுதலிய ரோகங்களின் நாசமும், தீபனமும் உண்டாகும். இதிற் சம்சயமில்லை.

கிலிகர்மம் :—சுட்டுவிரல் நடுவிரல்களால் உண்ணாக்கைப் பிடித்து அடிக்கடி மத்தித்தல், கிலிகர்மமாம். இது சந்துக்களி லொட்டியிருக்கும் கபதோஷங்களை நீக்கும். வஜ்ரோலி, சங்கப்பிரக்ஷாளனமுதலியவற்றையும் இக்கிரியைகளோடு சேர்த்துக் கூறுவர்.

வஜ்ரோலி :— இலிங்கத்துவாரத்தால் ஜலமுதலியவற்றை உள்ளேயிழுத்து விடுதல், வஜ்ரோலியாம்.

சங்கப்பிரக்ஷாளனம் :—வாயினால் நீரைக்குடித்து மூலத்துவாரத்தால் வெளிப்படுத்துதல், அல்லது மூக்குத்துவாரத்தால் ஜலத்தை யிழுத்து வாயின் வழியாய் விடுதல், அல்லது மூக்கின் ஒரு துவாரத்தால் ஜலத்தையிழுத்து மற்றொரு துவாரத்தால் விடுதல், சங்கப்பிரக்ஷாளன மெனப்படும். இது கப பித்தங்களைக் கெடுக்கும்

இக்கருமங்களுள் தௌதிமுதலிய ஆறு அல்லது எட்டு யோகத்திற்கு முதலிலேயே பிரயோசனமுடையனவாம். வீரியஸ்தானத்தைச் சோதிக்கும்பொருட்டு வஜ்ரோலியும், சமாதிகாலத்தில் மிஞ்சியிருக்கும் மலத்தை நிவர்த்தித்தலால், வெகுகாலம் வரையிலும் சமாதி நிலைக்கும் பொருட்டு சங்கப்பிரக்ஷாளனமும் வேண்டப்படும். கும்பகத்தின் விருத்தியின்பொருட்டு கபாலபாதி விரும்பப்படும்.

கர்மம் செய்யாவிடின் பிராணாயாமத்தி லதிகவருத்த முண்டாகு மென்பது தாற்பரியம். (௩௬)

(அ-கை) மதபேதத்தால் ஷட்கருமங்களி னுபயோகமின் மையைக் கூறுகின்றார்:—

ப்ராணாயாமைரேவ ஸர்வே ப்ரஶுஷ்யந்தி மலா இதி |
ஆசார்யாணாம் து கேஷாஞ்சிதந்யத் கர்ம ந ஸம்மதம் ||

(இ-ள்) பிராணாயாமத்தினாலேயே சகலமலங்களும் கெடுகின்றன வென்னு மேதுவால் யாஞ்ஞவல்யர் முதலிய சில ஆசாரியர்களுக்கு அந்நியமாகிய ஷட்கர்மங்கள் சம்மதமில்லை.

ஆசாரியலக்ஷணம்.

" ஆசிநோதி ஹி ஶாஸ்த்ரார்த்தாநாசாரே ஸ்தாபயத்யபி |

ஸ்வயமாசரதே யஸ்மாதாசார்யஸ்தேந கத்யதே ||

சாஸ்திரார்த்தங்களை விரித்து (பரவச்செய்து) உலகத்தாரையும் சாஸ்திரத்திற் கூறிய ஆசாரத்தில் ஸ்தாபித்துத் தாமும் அவ்வாசாரத்தை யாசரிக்கின்றமையால் ஆசாரிய ரெனப்படுகின்றனர்" என்று வாயுபுராணத்திற் சொல்லப்படுகின்றது.

கஜகரணி.

(அ-கை) கஜகரணியைக் கூறுகின்றார்:—

உதரகதபதார்த்தமுத்வமந்தி
பவநமபாநமுதீர்ய கண்டநாலே |
க்ரமபரிசயவஶ்யநாடிசக்ரா
கஜகரணீதி நிகத்யதே ஹடஜ்ஞை: || ௩அ ||

(இ-ள்) யோகிகள் அபானவாயுவைக் கண்டநாளத்தில் எழுப்பிச் சாப்பிட்ட அந்நத்தையும் குடித்தஜலத்தையும் வாந்தி செய்கின்றார்கள். கிரமமாக * அப்பியசித்தலால் நாடிச்சக்கரங்

* கிரமமாக அப்பியசித்தலாவது:— முன்னே உத்கடாசனத்தில் சமசரீரமாயிருந்துகொண்டு, நௌலியால் அனலை யெழுப்பித் தொண்டையை அபானனை எழுப்பும்வழியாக்கி, முன் உட்கொண்ட அன்னபானங்களை

கள் சுவாதீனமாகும். இந்தக்கிரியை ஹடயோகமுணர்ந்தவர்களால் கஜகரணியென்று சொல்லப்படுகிறது.

க்ரமேண ஶங்கி²நீநாடீ³மார்க³: || என்று சிலபாடம் உண்டு

அதன் பொருள்:—கிரமமாகிய அப்பியாசத்தால் எதில் சங்கினி நாடியின் மார்க்கம் கழுத்தளவும் வசமாகின்றதோ, அப்படிப் பட்ட இந்தக்கிரியை என்பதாம். (௩௮)

பிராணயாமாப்பியாசாவசியகத்துவம்.

(அ-கை) சர்வோத்தமர்களால் அப்பியசிக்கப்பட்டதாயும், மேலான பிரயோஜனமுடையதாயு மிருத்தலால், பிராணயாமம் அவசிய மப்பியசிக்கத்தக்கதாமெனச் சூசிப்பித்துக் கூறுகின்றார்:-

ப்³ரஹ்மாத³யோऽபி த்ரித³ஶா: பவநாப்⁴யாஸதத்பரா: |
அபூ⁴வந்நந்தகப⁴யாத் தஸ்மாத் பவநமப்⁴யஸேத் || ௩௯ ||

(இ-ள்) * பிரஹ்மாதிதேவர்களும் காலனது பயத்தால், இரேசகபூரககும்பகபேதமென்னும் பின்னப்பிராணயாமாநுஷ்டானத்தில் தற்பரர்களாயிருந்தார்கள். ஆகையால் பிராணயாமத்தை யப்பிக்கவேண்டும்.

---

வாந்திசெய்யவேண்டும். அதாவது உத்கடாசனத்திலிருந்துகொண்டு கைகளை மூடி முழந்தாள்களின்மேல் செவ்வையாய் வைத்து, அதன்பின் குனிந்து வாயுவை மேலிழுத்து வேகமாய் உட்கொண்டவற்றைக் கக்கவேண்டும். உட்கொண்டவைகள் ஒருகால் வராவிடின், அப்போது வளைந்த கடிப்பிரதேசத்தை எழுப்பியிருந்துகொண்டு, இரண்டு முழந்தாள்களையும் முன்கைகளாற் பிடித்துக்கொண்டு முன்போல் வாந்திசெய்க. இது கஜகரணியை யப்பியசிக்கும் கிரமம்.

* இது "அற்பகாலபயத்தினுல் பிரஹ்மாவானவர் பிராணயாமப் பழக்கஞ்செய்தார். ஆகையால் யோகிகளும் முனிகளும் பிராணயாமம் செய்யவேண்டும்" என்று யோகசூடாமணியுபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. அன்றியும் "நாநாவிதயோகங்கள் பிராணயாமத்தினுற் சித்திக்கின்றன. பிராணயாமமில்லாத சகலயோகங்களும் நிஷ்பலமா"மென்னும் இராஜசித்தாந்தாராஜயோகத்தின் வாக்கியத்தாலும் பிராணயாமம் அப்பியசிக்கத்தக்கதாம்.

பிரஹ்மாதிகளும் அப்பியசித்தார்களெனின் மற்றவர்களுக்குக் கேட்பானேன் (நகூ)

(அ-கை) இதுவுமது:—

* யாவத்பத்தோ மருத்தேஹே யாவச்சித்தம் நிராகுலம் |
யாவத்த்ருஷ்டிர் ப்ருவோர்மத்யே தாவத்காலபயம் குத꞉ ||

(இ-ள்) எவ்வளவு காலம் வரையிலும் † பிராணவாயு சரீரத்திற் கட்டுப்பட்டு (சுவாச, உசுவாசக்கிரியைகளில்லாததாய்) இருக்கின்றதோ, எவ்வளவு காலம் அந்தக்கரணம் வியாகூலமில்லாமல் (ஏகாக்கிரமாய்) இருக்கின்றதோ, எது வரையில் புருவ்மத்தியில் திருஷ்டி (அந்தக்கரணவிருத்தி) இருக்கின்றதோ, அவ்வளவு காலம் வரையில் காலனினின்றும் அச்சமேது ? ஒருவிதத்தானுமில்லை.

---

* இது யோகசூடாமணியுபநிஷத்வாக்கியம்.

† "கத்வா கத்வா நிவர்த்தந்தே சந்த்ரஸூர்யாதயோ க்ரஹா꞉ |
அத்யாபி ந நிவர்த்தந்தே ப்ராணாயாமபராயணா꞉ ||

சந்திரசூரியாதி கிரகங்கள் சென்று சென்று திரும்புகின்றன. பிராணாயாமப் பழக்கமுடையோர் இதுவரையிலும் திரும்புகிறதில்லை.

ஶதவர்ஷம் தபஸ்தப்த்வா குஶாக்ரேணாம்பு ய꞉ பிபேத்த்விஜ꞉ |
தத்பவேத்து ஶ்ருதம் தேவி ப்ராணாநாம் தாரணைகயா ||

துவிஜன் நூறுவருஷம் தவஞ்செய்து தருப்பைநுனி நீரைப்பருகுகின்றான். தேவி! அப்பயனைப் பிராணங்களைத் தரித்தலொன்றினாலேயே அடைகின்றான்.

யோ த்விஜ꞉ ப்ராதருத்தாய ப்ராணாயாமைகமாசரேத் |
ஸர்வபாபம் நிஹத்யாஶு ப்ரஹ்மலோகம் ஸ கச்சதி ||

எந்தத் துவிஜன் காலையில் எழுந்து பிராணாயாமமொன்றை ஆசரிக்கின்றானோ, அவன் எல்லாப் பாபங்களையும் கெடுத்து, விரைவில் பிரஹ்மலோகத்தையடைகின்றான்.

யோ(அ)தந்த்ரித꞉ ஸதைகாந்தே ப்ராணாயாமபரோ பவேத் |
ஜராம்ருத்யும் விநிர்ஜித்ய வாயுவத்வ்யோமநி ஸஞ்சரேத் ||

அப்படியே

"வாஞ்ஹ்யதே நவகாலேந பாய்யதே நவகர்மணா |
ஸாத்யதே நவகேநாபி யோகீயுக்தஸ்ஸமாதிநா ||

சமாதியோடுகூடிய யோகியானவன் காலனுலுண்ணப்பட டான். கர்மத்தால் பாதிக்கப்படான். எதனுலும் சாதிக்கப் படான்" என்று (௪-ம் உபதேசம் ௧௦௭-வது சுலோகத்தில்) சொல்லப்படும். இதனுல் சுவாதீனமுடையவ னுகின்றுனென் பது பொருள். இங்கே திருஷ்டி யென்பது ஞானசாமானியம். ()

(அ-கை) இதுவுமது :—

* விதிவத்ப்ராணஸம்யாமை நாடீசக்ரே விஶோதிதே |
ஸுஷும்நாவதநம் பித்வா ஸுகாத்விஶதி மாருதஃ || ௪௧ ||

(இ-ள்) ஆசனம் ஜாலந்தரபந்தமுதலிய விதியோடுகூடிய பிராணுயாமத்தால் நாடிசமூகங்கள் நிர்மலமானுல், வாயு இடை பிங்கலைகட்கு மத்தியிலுள்ள சுழுமுனைநாடியின் முக(துவார)த் தைத்திறந்துகொண்டு அநாயாசமாகச் சுழுமுனைக்குட்பிரவேசிக் கும். (௪௧)

(அ-கை) இதுவுமது :—

* மாருதே மத்யஸஞ்சாரே மந:ஸ்தைர்யம் ப்ரஜாயதே ||
யோமந:ஸுஸ்திரீபாவ: ஸைவாவஸ்தா மநோந்மநீ ||௪௨||

---

எவன் சோம்பலின்றியவனுய் எப்போதும் ஏகாந்தத்தில் பிராணுயாம பரனுகின்றுனே, அவன் மூப்பினையும் மரணத்தினையும் ஜயித்து வாயுவழி யாய்ச் செல்லுபவனுய் ஆகாயத்துச்சரிப்பவனுகின்றுன் என்க.

ஸித்தஸ்ய ஜாயதே காந்திர்மேதா ச ப்ராக்ரம: |
ஶௌர்யம் வாயுஸமோ கத்யா ஸௌக்யம் ஶ்லாக்யம் ஸுராதிபி:

சித்தனுக்கு அழகு, காந்தி, மேதை (ஞாபகசக்தி), பராக்கிரமம், சௌரி யம், கதியினுல் வாயுவினுக்குச் சமமும், சௌக்கியமும், தேவர்முதலியோ ரால் சிலாகிக்கத்தக்க தன்மையும் உண்டாகின்றது." என்று பிராணுப்பி யாசிகட்குக் காலபயமின்மை சிவபுராணத்திலும் சொல்லப்பட்டிருக்கின் றது.

* இவை சாண்டில்யோபநிஷத்வாக்கியங்கள்.

(இ-ள்) பிராணவாயு சுழுமுனைமத்தியில் சிரசுபரியந்தம் செவ்வையாகச்செல்லுமாயின், அப்போது மனதின் ஸ்திரத் தன்மை (தியேயவடிவமாகிய விருத்திப்பிரவாகம்) உண்டாகின் றது. மனதின் ஸ்திரத்தன்மை யெதுவோ, அதுவே மனோன் மனியவஸ்தையாம்.

மனோன்மனியென்னுஞ் சொல் உன்மனியின் பரியாயமாம். அவ்வாறு மேல் "ராஜயொமஸமாயிஶ்ச — இராஜயோகசமாதி யும்" என்பவற்றாற் சொல்லப்படும். (சஉ)

## கும்பகப்பிரயோஜனங்கள்.

(அ-கை) விசித்திரமாகிய கும்பகங்களில் பிரவிருத்தியை யுண்டாக்குதற்கு, அவற்றின் முக்கியபலத்தையும் அவாந்தரபலத் தையும் கூறுகின்றார்:—

தஸிஜயெவியாநஜ்ஞா ஸ்ரீதாநுகூவடிகிகாஂஹகாநு |
விவித் கூஂஹகாஹ்யாஸாத் விவித் ாஂஸிஜிாவநூயாத் ||

(இ-ள்) கும்பகாநுஷ்டானத்தின் விதான (பிரகார)ங்களை அறிந்தவர்கள் அவ்வுன்மனியவஸ்தை சித்திக்கும்பொருட்டுச் சூரியபேதமுதலிய நாநாவிதகும்பகங்களைச் செய்கின்றார்கள். விசித்திர (நாநாவித) கும்பகங்களினப்பியாசத்தால் விசித்திர (அணிமாமுதலிய நாநாவிதவிலக்ஷணமாகிய அல்லது ஜன்மம், ஓஷதி, மந்திரம், தவமென்பவைகளாலாகிய) சித்தியை யடை கிறான்.

அது "ஜநௌஷயிதவொஂமெஞ்
யடூாவதீஸிஹஸிஜய: |
யொமெநாவொதிதா:ஸவடூா:
நாநெநாயெடூாமமதிஂவஜெத் ||

பிறப்பு, ஔஷதம், தவம், மந்திரம் என்பவற்றால் இங்கே எவ்வளவு சித்திகளுண்டாகின்றனவோ, அவை யெல்லாவற்றை யும் யோகத்தினு லடைகிறான், யோககதியை (யோகத்தினாலடை வதை) மற்றவைகளா லடையான்" என்று பாகவதத்தில் சொல்

லப்பட்டிருக்கிறது. பிரத்தியாகாரமுதலியவற்றின் பரம்பரையாக அடைகிறுனென்பது தாற்பரியம். (சங)

## அஷ்டகும்பகம்.

(அ-கை) இனி அஷ்டகும்பகங்களின் பெயர்களைக் கூறுகின்றார்:—

ஸூர்யபேதநமுஜ்ஜாயீ ஸீத்காரீ ஸீதலீ ததா ।
பஸ்த்ரிகா ப்ராமரீ மூர்ச்சா ப்லாவிநீத்யஷ்டகும்பகா: ।

(இ-ள்) சூரியபேதநம், உஜ்ஜாயி, சீத்காரி, சீதலி, பஸ்திரிகை, பிராமரி, மூர்ச்சை, பிலாவினிஎனக் * கும்பகங்கள் எட்டாம். (சச)

## சகலகும்பகசாதாரணயுக்தி.

### க. பந்தங்களின்காலம்.

(அ-கை) இனி ஹடசித்தியில் அநந்நியசித்தமாகிய மேன்மையுள்ள சகலகும்பகங்களின் சாதாரணயுக்தியை மூன்று சுலோகங்களாற் கூறுகின்றார்:—

† பூரகாந்தே து கர்தவ்யோ பந்தோ ஜாலந்தராபிதஃ ।
கும்பகாந்தே ரேசகாதௌ கர்தவ்யஸ்தூட்டியாநகஃ ॥ சரு ॥

(இ-ள்) (கழுத்தைச் சுருக்கி மோவாய்க்கட்டையை இருதயத்தில் ஸ்தாபித்தலாகிய) ஜாலந்தரமென்னும் பந்தம், பூரகம் செய்தபின் சடிதியிற் செய்யவேண்டும். உட்டியானபந்தம் கும்

---

* இவற்றுள் சூரியபேதனம், உஜ்ஜாயி, சீதளி, பஸ்திரி என்னும் நான்கும் யோகதண்டலியுபநிஷத்திலும், யோகதத்வோபநிஷத்திலும், உஜ்ஜாயி, சீதளிகளுடன் சீத்காரியென்பது சாண்டில்யோபநிஷத்திலும், அவ்வெட்டுடன் புஜகீகரண மொன்ருக ஒன்பது கும்பகங்கள் ஹடரத்நாவளியிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஹடரத்நாவளியிற் கூறிய ஒன்பதாவது புஜகீகரணமென்னும் கும்பகம் யாதெனின், "கண்டத்தால் வாயுவைப் பூரித்துக் கண்டநாளத்தினுலேயே வாயுவை இரேசித்தல், புஜகீகரணமெனும் ஒன்பதாவது கும்பக மெனப்படு" மென்பதாம்.

† இது சாண்டில்யயோகதண்டலி யோகசிகோபநிடதங்களின் வாக்கியம்.

பகத்தின் அந்தத்தில் அதாவது சிறிது கும்பகமிருக்குங்கால் இரேசகத்தின் ஆதியில் (இரேசித்தற்குமுன்) செய்யவேண்டும்.

வஂரகாஹெத என்பதிலுள்ள த (து) சப்தத்தால் கும்பகத்தின் ஆதியில் எனப்படும். பிரயத்தின விசேஷத்தால் நாபிப்பிரதேசத்தைப் பின்புறமாக இழுத்தல், உட்டியான பந்தமாம். (சரு)

உ. பந்தங்களின்சொரூபம்.

(அ-கை) இதுவுமது :—

* ஸத்யஸ்ஸாத்க்ஷணேநைநாஸ: கண்டஸங்கோசநேநது |
ஐயேர்வஷ்சு உட்டியாநேந ஸ்யாத்ப்ராணோ ப்ரஹ்மநாடிக: ||

(இ-ள்) கண்டத்தைச் சுருக்கு (ஜாலந்தரபந்தத்தைச்செய்) வதாலும், விரைவாய் ஆதாரத்தைச் சுருக்கு (மூலபந்தஞ் செய்) வதாலும், நாபிப்பிரதேசத்தைப் பின்புறமாக இழுத்தலா (உட்டியானபந்தத்தினு) லும் (இம்மூன்று பந்தத்தையுஞ் செய்தலால்) பிராணவாயு பிரஹ்மநாடியென்னுஞ் சுழுமுனையை யடைகின்றது.

இங்கே இது இரகசியம் :— ஸ்ரீ குருமுகமாக ஜிஹ்வாபந்தம் செவ்வையாயறியப்படின், ஜிஹ்வாபந்தபூர்வகமாகிய ஜாலந்தர பந்தத்தினாலேயே பிராணாயாமம் சித்திக்கும். இல்லாவிடின், வாயுவினது பிரகோபத்தா லுண்டாகத்தக்கனவாகிய தாதுக்ஷயம், தேகமெலிவு, முகத்தில் பிரசன்னத்துவமுதலிய சகல லக்ஷணங்களு முண்டாகின்றன. மூலபந்த உட்டியான பந்தங்க ளிரண்டும் உபயோகமுள்ளனவல்ல; அவை யிரண்டும் ஜிஹ்வாபந்தபூர்வகமாகிய ஜாலந்தரபந்தத்தினாலேயே வேறு விதமாய்ச் சித்தித்தலால், ஜிஹ்வாபந்தத்தைத் தெரிந்து கொள்ளாவிடின், ஆதாரத்தை யிழுத்தலா லென்று கூறியவண்ணமாகிய பிராணாயாமம் செய்யவேண்டும். மூன்றுபந்தங்களும் குருமுகமாகவே தெரியத்தக்கனவாம். மூலபந்தத்தைச் செவ்வையாகத் தெரியாவிடின், அது நானாரோகங்களை யுண்டாக்கும். அதெப்படியெனின், மூலபந்தஞ்செய்தலால் தாதுக்ஷயமும், நீர

* இது சாண்டில்யயோகசிகோபநிடதங்களின் வாக்கியம்.

டைப்பும், அக்கினிமந்தமும், நாதமந்தமும், ஆட்டுப்புழுக்கையைப் போல மலமிறுகுதலும் உண்டாகும். அப்போது மூலபந்தம் செவ்வையாக அறியப்படவில்லை யென்றறிக. தாதுபுஷ்டியும், செவ்வையாக மலசுத்தியும் ஜாடராக்கினியின் விருத்தியும், நன்ருய் நாதப்பிரகடனமும் உண்டாகுமாயின் அப்போது மூலபந்தம் செவ்வையா அறியப்பட்ட தென்றறிக. (சசு)

ரூ. பந்தங்களின் பிரயோஜனம்.

(அ-கை) இதுவுமது:—

* 𑌅𑌪𑌾𑌨𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍁𑌤𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌕𑌣𑍍𑌠𑌾𑌦𑌧𑍋 𑌨𑌯𑍇𑌤𑍍 ।
𑌯𑍋𑌗𑍀 𑌜𑌰𑌾𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌨𑍍 𑌷𑍋𑌡𑌶𑌾𑌬𑍍𑌦𑌵𑌯𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥ சஎ ॥

(இ-ள்) அபானவாயுவை மேலெழுப்பி ஆதாரத்தை யிழுத்தலால், பிராணவாயுவைக் கண்டத்திற்குக் கீழ்பாகத்தில் எவன் கொண்டுபோகிருனே, அந்த யோகி (யோகாப்பியாசி) ஜரையி (மூப்பி)னின்றும் விடுபட்டவனுய்ப் பதினாறு வயதுள்ளவ னுகின்ருன்.

"𑌬𑌨𑍍𑌧𑌕𑌾𑌂𑌶𑍍𑌚𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑍁 𑌵𑍍𑌯𑌃" என்பவை (சடு-வது முதலிய சுலோகங்)களால் ஒரு அர்த்தமே நிச்சயிக்கப்படுகின்றது. என்ருலும் "𑌬𑌨𑍍𑌧𑌕𑌾𑌂𑌶𑍍𑌚𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑍁 𑌵𑍍𑌯𑌃" என்பதனுல் (சடு-வது சுலோகத்தால்) பந்தங்களின் காலமும், "𑌸𑌯𑌹𑌾𑌤𑍍𑌤𑍍𑌰𑌂𑌭𑌨𑍇𑌨" என்பதனுல் (சசுவது சுலோகத்தால்) பந்தங்களின் சொரூபமும், "𑌅𑌪𑌾𑌨𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍁𑌤𑍍𑌥𑌾𑌪𑍍𑌯" என்பதனுல் (சஎ-வது சுலோகத்தினுல் பந்தங்களின் பலமும் சொல்லப்பட்டதென்பது விசேஷம். ஜாலந்தர பந்தமும் மூலபந்தமும் செய்வதனுல் நாபியை அதோ (பின்) பாகத்தில் இழுத்தலெனப்படும். பந்தமாகிய உட்டியானபந்தம் உண்டாகின்றது. ஆதலால் இந்தச் சுலோகத்தில் உட்டியானபந்தம் சொல்லப்படவில்லை. அப்படியே ஞானேசுவரரால் "மூலபந்தஜாலந்தரபந்தங்களைச் செய்தால் நாபியைப் பின்னிழுத்தலென்னும் பந்தம் (உட்டியானபந்தம்) தானே உண்டாகின்றது". என்று கீதையினது ஆருவது அத்தியாயத்தின் வியாக்கியானத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. (சஎ)

* இது சாண்டில்யோபநிஷத்வாக்கியம்.

## யோகாப்பியாசக்கிரமம்.

### க. சூரியபோதினி.

(அ-கை.) யோகிகளுக்கு யோகம் சித்திக்கும்பொருட்டு யோகாப்பியாசக் கிரமத்தைச் சொல்லுகிறேன்:—

𑌯𑍋𑌗𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌰𑌮𑌂𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂𑌯𑍋𑌗𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 |
𑌉𑌷𑌃𑌕𑌾𑌲𑍇𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑌾𑌯 𑌪𑍍𑌰𑌾𑌤𑌃𑌕𑌾𑌲𑍇𑌽𑌥𑌵𑌾𑌬𑍁𑌧𑌃 ‖ க ‖

விவேகியானவன் உஷத்காலத்திலா (அருணோதயத்திற்கு முன்னு)வது அல்லது பிராதக்(அருணோதய)காலத்திலாவது எழுந்து

𑌗𑍁𑌰𑍁𑌂𑌨𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌵𑌶𑌿𑌰𑌸𑌿 𑌹𑍃𑌦𑌯𑍇𑌚𑍇𑌷𑍍𑌟𑌦𑍇𑌵𑌤𑌾𑌂 |
𑌶𑍌𑌚𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌨𑍍𑌤𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌦𑌧𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑌸𑍍𑌮𑌧𑌾𑌰𑌣𑌂 ‖ உ ‖

இஷ்டதேவதையாகிய குருவை உள்ளத்தில் நினைந்து தலைவணங்கி, சௌமும் தந்தசுத்தியும் செய்துகொண்டு பஸ்ம(விபூதி) தாரணம் செய்யவேண்டும்.

𑌶𑍁𑌚𑍌𑌦𑍇𑌶𑍇𑌮𑌠𑍇𑌰𑌮𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯𑌾𑌸𑌨𑌂𑌮𑍃𑌦𑍁 |
𑌤𑌤𑍍𑌰𑍋𑌪𑌵𑌿𑌶𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌮𑌨𑌸𑌾𑌗𑍁𑌰𑍁𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 ‖ ங ‖

சுத்தமாகிய தேசத்திலிரம்மியமான மடத்தில் * மிருதுவாகிய ஆசனம் பரப்பி அதிலுட்கார்ந்துகொண்டு குருவையும் ஈசுவரனையும் மனத்திற் செவ்வையாக நினைத்து,

𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑍌𑌚𑌸𑌂𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 |
𑌸𑌮𑌾𑌧𑌿𑌤𑌤𑍍𑌫𑌲𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍈 𑌆𑌸𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌨𑍍
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌾𑌦𑍀𑌨𑍍𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 |
𑌅𑌨𑌨𑍍𑌤𑌂𑌪𑍍𑌰𑌣𑌮𑍇𑌦𑍍𑌦𑍇𑌵𑌂 𑌨𑌾𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂𑌪𑍀𑌠𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 ‖ ச ‖

𑌅𑌦𑍍𑌯 (இன்று) என்பது முதல் பரமேசுவரப்பிரசாதபூர்வகமாகச் சமாதியும் அதின் பலமும் சித்திக்கும்பொருட்டு, ஆசனபூர்வகமாய்ப் பிராணயாம முதலியவற்றைச் செய்கிறேன் என்பதீருகத் தேசகாலங்களைச் சொல்லி, விதிபூர்வகமாகச் சங்கற்

* மிருதுவெனும் பதத்தைக்கொண்டு சிலர் இலவம்பஞ்சு முதலியவற்றாற் செய்யப்பட்ட ஆசனங்களையுங் கொள்வர்.

பித்து இரத்தினங்கள் பிரகாசியாநின்ற ஆயிரம் பணமுடிகளால் பூமண்டலத்தைத் தாங்கியிருக்கும் நாகராஜ(ஆதிசேஷ)னுக்கு நமஸ்காரம் என்று பீடம் (ஆசனம்) சித்திக்கும்பொருட்டு அநந்தனுகிய நாகேசனை நமஸ்கரிக்கவேண்டும்.

[illegible] |
[illegible] ||

அதன்பின் ஆசனங்களை அப்பியசிக்கவேண்டும். சிரமமுண்டானல் கடைசியில் சவாசனம் அப்பியசிக்கவேண்டும். சிரமமில்லாவிட்டா லப்பியசிக்கலாகாது.

[illegible] |
[illegible] || ௬ ||

கும்பகத்திற்குமுன் யோகமாக விபரீதகரணியை ஜாலந்தரப்பிரசாதனத்தின்பொருட்டுக் கும்பகத்திற்குமுன் அப்பியசிக்கவேண்டும்.

[illegible] |
[illegible] || ௭ ||

பிராணுயாமம் செய்யக் கர்மாங்கமாகிய ஆசமனத்தைச் செய்து, கூர்மபுராணத்தின் சிவவாக்கியத்தின்படி யோகீந்திரர்முதலியோரை நமஸ்கரித்து,

(கூர்மபுராணத்தில் சிவவாக்கியம்.)

[illegible] |
[illegible] ||௮||

சிஷர்களுடன் யோகீந்திரர்களையும் விநாயகரையும் குருவையும் நமஸ்கரித்து யோகியானவன் என்னைத் தியானிக்கக்கடவன்.

[illegible] |
[illegible] || ௯ ||

அப்பியாசத்தில் சித்தாசனத்தைச் சேர்த்துப் பந்தபூர்வகமாக * முதலில் பத்துக் கும்பகங்கள் செய்யவேண்டும். பின் ஒவ்வொருநாளும் ஐந்தைந்து அதிகமாய்ச் செய்யவேண்டும்.

> காயகுாகூஸீ திவயகூoதo கூ¬oஹகா:ஸ¬ஸாஹிஜெதஃ |
> யொதீநஃவ்யஶoகூ¬யகூா ஊஹ்ராவஸoவநூஸ௱யகூயொஃ ||

ஏகாக்கிரசித்தமுடையவர்களால் என்பது பரியந்தங் கும்பகங்கள் செய்யத்தக்கனவாம். யோகீந்திரர்கள் சந்திரசூரியர்களின் அப்பியாசத்தை முதலிற் செய்யவேண்டும்.

> சுநெ¬ஜொஸவ் திஜொஸாவ்ர ஜெதoவ ா.ஹ¬ஜகூநீஷிணஃ |
> ஸ௱யகூஹெஊநஜெஹ்ரவஸ்ர பoயவ௱வகூகஜெகூயீஃ |

இதை விவேகிகள் அநுலோமப் பிரதிலோமம் (ஒழுங்குள்ளது ஒழுங்கில்லாதது) என்று கூறுவர். ஒரேபுத்தியாயு (ஏகாக்கிரசித்தமு)ள்ளவன் பந்தபூர்வகமாகச் சூரியபேதனத்தை யப்பியாசித்து,

> உஜ்ஜாயிநoததஃகூயகூா ஸீத்காரீoஸீதலீoததஃ |
> ஹஸ்திகாணுவஸஹெஹ்ரவஸ்ர கூ¬யகூாஊநீராணுவாவராநு ||கஉ||

அதன்பின் உஜ்ஜாயினியையும், அதன்பின் ஸீத்காரியையும் அதன்பின் ஸீதலியையும், அதன்பின் பஸ்திரிகையையும் செவ்வையா யப்பியசிக்கவேண்டும். மற்றவற்றைச் செய்க, அல்லது செய்யாதிருக்க.

> ஜ¬ஊரா:ஸஹெஹ்ரவெஸ ஊ¬ய்வா ரு¬ர¬வத்ராஊர்யாகூஜo |
> ததஃவத்ரவஸநoவய்வா கூ¬யகூாணாஊாந¬ஷிoதநo ||கங||

முத்திரைகளைக் குருமுகமாகக்கேட்டுக் கிரமப்படி சேர்த்து அப்பியசிக்கவேண்டும். அதன்பின் பதுமாசனஞ் சேர்த்து நாதாநுசிந்தனம் செய்யவேண்டும்.

---

* முதல் நாளில் (சூரியபோதினி, உஜ்ஜாயி, சீதளி, பஸ்திரியென்னும்) நான்கு கும்பகங்களையும் ஒவ்வொன்றிற்கும் பத்துக்கணக்காகவும் மறுநாளில் பதினைந்தும் மூன்றுநாளிருபதுமிருபத்தைந்துமாகத் தினத்திற்கு ஐந்து விருத்திசெய்யவேண்டுமென்று யோகதீபிகையிலும் யோகதுண்டலியுபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌂 𑌸𑌕𑌲𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌰𑍍𑌪𑌣𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑌃 ।
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌦𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌃 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍁𑌷𑍍𑌣𑍇𑌨 𑌵𑌾𑌰𑌿𑌣𑌾 । ௧௪

ஆதரவோடு சகல அப்பியாசத்தையும் ஈசுவரார்ப்பணம் செய்யவேண்டும். அப்பியாசத்தினின்று மெழுந்து * வெந்நீரால் ஸ்நாநஞ் செய்யவேண்டும்.

𑌸𑍍𑌨𑌾𑌤𑍍𑌵𑌾𑌽𑌽𑌵𑌶𑍍𑌯𑌕𑌕𑍃𑌤𑍍𑌯𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑌃 𑌸𑍁𑌧𑍀𑌃 ।
𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑍇𑌽𑌪𑌿 𑌤𑌥𑌾𑌭𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌰𑌮𑍍𑌯 𑌭𑍋𑌜𑌨𑌂 ॥௧௫॥

ஸ்நாநஞ் செய்து விவேகியானவன் நித்தியகர்மத்தைச் சுருக்கமாய் முடிக்கவேண்டும். மத்தியானத்திலும் அப்படியே அப்பியாசித்துக் கொஞ்ச மிளைப்பாறிப் போஜனஞ் செய்யக்கடவன்.

𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾 𑌪𑌥𑍍𑌯𑌮𑌪𑌥𑍍𑌯𑌂 𑌨 𑌕𑌦𑌾𑌚𑌨 ।
𑌏𑌲𑌾𑌂 𑌵𑌾 𑌲𑌵𑌙𑍍𑌗𑌂 𑌵𑌾 𑌭𑍋𑌜𑌨𑌾𑌨𑍍𑌤𑍇 𑌚 𑌭𑌕𑍍𑌷𑌯𑍇𑌤𑍍 ॥ ௧௬ ॥

யோகிகள் பத்தியமாகவே சாப்பிடவேண்டும். அபத்தியம் ஒருநாளும் செய்யலாகாது. போஜனம் செய்தபின் ஏலமாவது இலவங்கமாவது தின்னவேண்டும்.

𑌕𑍇𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌪𑍂𑌰𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌤𑌾𑌮𑍍𑌬𑍂𑌲𑌂 𑌶𑍋𑌭𑌨𑌂 𑌤𑌥𑌾 ।
𑌚𑍂𑌰𑍍𑌣𑍇𑌨 𑌰𑌹𑌿𑌤𑌂 𑌶𑌸𑍍𑌤𑌂 𑌪𑌵𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 ॥௧௭॥

சிலர் கற்பூரமும் சோபனமாகிய தாம்பூலமும் இச்சிக்கிறார்கள். பிராணாயாமாப்பியாசிகளுக்குச் சுண்ணம்பில்லாதது சிலாக்கியம்.

𑌇𑌤𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌮𑌣𑍇𑌰𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌾𑌰𑌸𑍍𑌯𑌂 𑌭𑌜𑌤𑍇 𑌨 𑌹𑌿 ।
𑌕𑍇𑌚𑌿𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌾𑌤𑍍𑌤𑍁 𑌤𑌯𑍋𑌃 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌹𑍇𑌤𑍁𑌨𑌾 ॥

என்னும் இச்சிந்தாமணியின் வாக்கியம் சிலரென்னும் பதத்தால் சுவாரஸ்ய(சிலாக்கிய)ப்படவில்லை. ஏனெனின், அவ்விரண்டும் சீதோஷ்ணங்களுக்கு ஏதுவாயிருத்தலால்.

---

* 'பிராதக்காலத்தில் ஸ்நாநஞ் செய்தல் ஆரூடயோகிக்கும் உருசிக்காது. அவசியமாயின் உஷ்ணஜலத்தால் ஸ்நாநஞ் செய்யவேண்டும். குளிர்ந்த ஜலத்தால் ஸ்நாநஞ் செய்யலாகாது. பிராதக்கால ஸ்நாநம் அநிஷ்டமாம். மத்தியானத்தில் கண்டஸ்நாநஞ் செய்யலாம்' என்பது மேலோர்மொழி.

𑌭𑍋𑌜𑌨𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌂 |
𑌪𑍁𑌰𑌾𑌣𑌶𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌾𑌪𑌿 𑌨𑌾𑌮𑌸𑌂𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌂 𑌵𑌿𑌭𑍋𑌃 ‖௧௯‖

போஜனம் செய்தபின் மோக்ஷசாஸ்திரங்களைப் பார்க்கவே வேண்டும். அல்லது புராணசிரவணமாவது ஈசுவரநாமகீர்த்தனமாவது செய்யவேண்டும்.

𑌸𑌾𑌯𑌂𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌵𑌿𑌧𑌿𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌯𑍋𑌗𑌂𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌦𑌭𑍍𑌯𑌸𑍇𑌤𑍍 |
𑌯𑌦𑌾𑌤𑍍𑌰𑌿𑌘𑌟𑌿𑌕𑌾𑌶𑍇𑌷𑍋 𑌦𑌿𑌵𑌸𑍋𑌽𑌭𑍍𑌯𑌾𑌵𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ‖௨௦‖

சாயந்திரம் சந்தியாவிதியைச் செய்து முன்போல யோகமப்பியசிக்கவேண்டும். மூன்றுநாழிகைப்பொழுதிருக்க அப்பியாசம் செய்யவேண்டும்.

𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂𑌕𑌾𑌰𑍍𑌯𑌾 𑌸𑌾𑌯𑌂𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌸𑌦𑌾𑌬𑍁𑌧𑍈𑌃 |
𑌅𑌰𑍍𑌧𑌰𑌾𑌤𑍍𑌰𑍇 𑌹𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌂 𑌵𑌿𑌦𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌦𑍍𑌯𑍋𑌗𑍀 ‖௨௧‖

அப்பியாசஞ் செய்தபின் சாயஞ்சந்தி சதா (எப்போதும்) விவேகிகளால் செய்யத்தக்கதாம். யோகிகள் அர்த்தராத்திரியில் முன்போல ஹடாப்பியாசத்தைச் செய்யவேண்டும்.

𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌂𑌤𑍁𑌕𑌰𑌣𑍀𑌂 𑌸𑌾𑌯𑌂𑌕𑌾𑌲𑌾𑌰𑍍𑌧𑌰𑌾𑌤𑍍𑌰𑌯𑍋𑌃 |
𑌨𑌾𑌭𑍍𑌯𑌸𑍇𑌦𑍍𑌭𑍋𑌜𑌨𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌯𑌤𑌃𑌸𑌾𑌨𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌯𑌤𑍇 ‖

விபரீதகரணியானது போஜனத்திற்குப்பின் சிலாக்கியப்படாதாகையால் சாயங்காலத்திலும் அர்த்தராத்திரியிலும் அப்பியசிக்கலாகாது.

இனி * உத்தேசாநுக்கிரமமாகக் கும்பகங்களைச் சொல்லக் கருதி, அவற்றுள் முதலிற் சொல்லப்பட்ட † சூரியபோதனத்தையும் அதன் குணங்களையும் கூறுகின்றார்:—

𑌆𑌸𑌨𑍇𑌸𑍁𑌖𑌦𑍇𑌯𑍋𑌗𑍀 𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾𑌚𑍈𑌵𑌾𑌸𑌨𑌂𑌤𑌤𑌃 |
𑌦𑌕𑍍𑌷𑌨𑌾𑌡𑍍𑌯𑌾𑌸𑌮𑌾𑌕𑍃𑌷𑍍𑌯 𑌬𑌹𑌿𑌃𑌸𑍍𑌥𑌂𑌪𑌵𑌨𑌂𑌶𑌨𑍈𑌃 ‖௪௮‖

* உத்தேசம் பெயர்மாத்திரஞ் சொல்லுதல்.

† இது சாண்டில்யம், யோககுண்டலி, யோகதத்துவோபநிடதங்களிற் கூறப்பட்டுளது.

(இ-ள்) "ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந꞉ |
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ||

சுபாவமாகவாவது சம்ஸ்காரத்தினலாவது சுசியாகிய தேச (சுத்தமுள்ள இட)த்தில் குசம், மான்தோல், வஸ்திர மென்பவற்றை (ஒன்றன்மேலொன்ருக) விரித்த உயரமும் தாழ்வுமில்லாத தனது ஸ்திராசனத்தை ஸ்தாபித்து" என்று கீதையிற் சொல்லப்பட்ட லக்ஷணமுடைய ஏகாந்தஸ்தானத்தில்

"ஸுகாஸநஸ்த꞉ ஶுசி꞉ ஸமக்ரீவ꞉ ஶிரஶ்ஶரீர꞉ ||

சுகாசனத்திலிருப்பவனாய்ச் சுசியாய்ச், சமமானகழுத்தும் சிரசும் சரீரமுள்ளவனாய்" என்னும் சுருதியினல் குசம் மான்றோல் வஸ்திரமென்பவற்றைக் கிரமமாக ஒன்றன்மேலொன்ருக விரிக்கப்பட்ட சுகத்தைக் தருமாசனத்திலிருந்து, ஆசனத்தை (சுவஸ்திகம், வீரம், சித்தம், பதுமமுதலியவற்று ளொன்றை யாவது அல்லது முக்கியமாயிருத்தலால் சித்தாசனத்தையேயாவது) சேர்த்து, அதன்பின் வலதுநாடி (பிங்கலை)யால் தேகத்திற்கு வெளியிலுள்ள வாயுவை மெல்லமெல்ல இழுத்து (பூரித்து), (சஅ)

(அ-கை) இதுவுமது :—

* ஆகேஶாதாநகாக்ராச்ச நிரோதாவதி கும்பயேத் |
தத꞉ ஶநை꞉ ஸவ்யநாட்யா ரேசயேத்பவநம் ஶநை꞉ ||

(இ-ள்) சிகைவரையிலும் நகம்வரையிலும் வாயுவின் நிரோதஅளவு உண்டாகும்படி கும்பிக்கவேண்டும். அதன்பின் மெல்லமெல்ல இடதுநாடி (இடைகலை) யால் வாயுவை இரேசிக்கவேண்டும்.

அப்படியானல்,

ஹாநிர்ஜா꞉ ப்ராணாயாமம் ரோகௌகவிஷம் நிஸ்ஸரேத் |
தேஹம் விஶாரயேத் க்ஷோபாதிஜநயத்யபி ||

* இது சாண்டில்யுபநிஷத்திலுள்ளது.

ஹடத்தால் நிரோதிக்கப்பட்ட இப்பிராணன் உரோமத் துவாரங்களில் வெளிப்படும். அது தேகத்தைக் கிழித்துக் குஷ்ட முதலியவற்றையும் உண்டாக்கும்.

ततः प्रत्यावितव्योऽसौ क्रमेणारण्यहस्तिवत् ।
वन्यो गजो गजारिर्वा क्रमेण मृदुतामियात् ॥

அதனால் இதைக் காட்டானையைப்போல் கிரமமாகத்திருப்ப வேண்டும். காட்டானை சிங்கமுதலியவை கிரமமாக வசமாகும்.

करोति शास्तृनिर्देशं स एव तं वशं नयेत् ।
तथा प्राणो हृदिस्थोऽयं योगिनां क्रमयोगतः ।
गृहीतः सेव्यमानस्तु विश्रम्भं समधिगच्छति ॥

ஆகவே ஏவுகிறவனது சொற்படி நடக்கின்றன. அவன் வார்த்தையைக் கடக்கிறதில்லை. அப்படியே யோகிகளது இருதயத்திலுள்ள இப்பிராணன் கிரமயோகத்தாற் கிரகித் தப்பியசிக்கப்பட்டதாய் விசிராந்தியை யடைகின்றது" என்னும் வாக்கியத்திற்கு விருத்தமாகுதலால், பிரயத்தினத்தால் கும்பகம் செய்யவேண்டுமென்று எங்கே சொல்லப்பட்டிருக்கின்றதெனின், அப்படியன்று 'ஹடத்தினால் நிரோதிக்கப்பட்ட இப்பிராணன், என்னும் வாக்கியம் பலமாகச் சீக்கிரமாய்ப் பிராணஜயம் செய்வேன் என்னும் புத்தியாக ஆரம்பிக்கும் அதிக அப்பியாசத்தில் ஆசக்தியுடையவனைப் பற்றியதாயிருத்தலாலும், காட்டானையைப்போல வென்னும் திருஷ்டாந்தத்தின் மேன்மையாலும் அப்படி யாகாது. இதனாற்றான், சூரியசந்திரர்களது அப்பியாசத்தில் பூரித்து இயன்ற அளவு நிரோதிக்கவேண்டு மென்றும், நிரோதத்தினால் என்றும் கூறியிருப்பது பொருந்துகின்றது. ஆகையால் கும்பகம் மிகப்பிரயத்தினபூர்வகமாகச் செய்யவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு கும்பகம் மிகுந்த பிரயத்தினமாகச் செய்யப்படுகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அதில் குணாதிக்கியம் (குணமிகுதிப்பாடு) உண்டாகின்றது. எவ்வளவுக்கெவ்வளவு தளர்ந்த கும்பக முண்டாகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு குணக்குறை வுண்டாகின்றது. இதில் யோகிகளது அநுபவமும் பிரமாணமாம். பூரகமோ, வேகமாய்ச் செய்தாலும் தோஷ

மில்லாமையால், மெல்லவாவது வேகமாயாவது செய்யத்தக்க தாம். இரேசகம் வேகமாய்ச்செய்யின் பலங்குறையும். ஆகை யால் மெல்லமெல்லவே செய்யவேண்டும்; வேகமாய்ச் செய்ய லாகாது, என்றிப்படி அநேகவிதமாய்க் கிரந்தகாரர் கூறியிருத் தலானும் மெல்லமெல்ல இரேசிக்கவேண்டும்.

மெல்லமெல்லவென்று இரட்டித்துக்கூறியது மெல்லவே இரேசிக்கவேண்டு மென்னும் துணிவின் பொருட்டாம். அது,

"விஸ்மயெ வவிஷாதெ வ ஓெஹ நிர்ணெ வேவாவயாரணெ ।
தயாவ ஸாதெ நஹஷெ ச வாக்யெகம் த்விராவ்ருதெ ॥

வியப்பிலும், விசனத்திலும், இழிவிலும், துணிவிலும், தேற்றுதலிலும், உவகையிலும் ஒரேவாக்கியம் இரட்டித்துச் சொல்லப்படுகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது. (சக)

(அ-கை) இதுவுமது:—

* கபாலஶொய நம் வாத தொஷம் க்ருமிதொஷஹ்ருத் ।
வுநவுநரிதம் காய்ம் ஸுயவெஹநம் நுத்தம் ॥ ருo ॥

(இ-ள்) கபாலசுத்தி செய்வதும், (எண்பதுவிதமாகிய) வாததோஷங்களைக் கெடுப்பதும், வயிற்றி லுண்டாகும் கிருமி தோஷங்களைக் கெடுப்பதுமாகிய இந்த உத்தமமான சூரியபே தனம் அடிக்கடி செய்யத்தக்கதாம். (ருo)

உ. உஜ்ஜாயினி.

(அ-கை) உஜ்ஜாயினியைக் கூறுகின்றார்:—

† முவம் ஸம்யம்ய நாஹிப்யா மாக்ருஷ்ய வவநம் ஶனைஃ ।
யதாஸ்திக்ணா து ஹ்ருதயாவயிஸஸ்நம் ।
வூவம் க்ஷம் ஹயெ த்ராணம் ரேவயெதிடயா ததஃ ॥ ருக ॥

(இ-ள்) வாயை மூடி (முத்திரைசெய்துகொண்டு) கழுத்து முத லிருதயம் வரையிலும் வாயு பொருந்தும்படியாக சப்தத்

* இது சாண்டில்யோபநிஷத்வாக்கியம்.

† இது யோகதண்டலியுபநிஷத் வாக்கியம். சாண்டில்யயோகசி கோபநிஷதங்களிலும் கூறப்பட்டுளது.

தோடு இடை பிங்கலைகளால் வாயுவை ஆகருஷித்து(பூரித்து) முன்போல் [சூரியபேதனத்திற்குச் சரியாக,

"आकेशादानखाग्राच्च निरोधावधि कुम्भयेत् ॥"

என்று (௪௯-வது சுலோகத்திற்) சொல்லியபடி] கும்பிக்க வேண்டும். அதன்பின் இடைநாடியினுல் விரேசிக்கவேண்டும். ()

(அ-கை) உஜ்ஜாயினியின் குணங்களைக் கூறுகின்றார் :—

* श्लेष्मदोषहरं कण्ठे देहानलविवर्धनम् ।
नाडीजलोदराधातुगतदोषविनाशनम् ।
गच्छता तिष्ठता कार्यमुज्जाय्याख्यं तु कुम्भकम् ॥५२॥

(இ-ள்) கண்டத்திலுள்ள கபமுதலிய சிலேஷ்மதோஷங்களைக் கெடுக்கின்றது. ஜாடராக்கினியை விருத்தி செய்கின்றது. நாடிகள், ஜலோதரம் (பருகப்பட்ட நீரையுடையவயிறு) தேகத்திலுள்ள சர்வதாதுக்கள் என்னு மிவற்றிலுள்ள தோஷங்களை நிவர்த்தி செய்கின்றது. உஜ்ஜாயினியென்னும் கும்பகமோ நடந்துகொண்டும், நின்றுகொண்டும் செய்யத்தக்கதாம்.

௫. சீத்காரி.

(அ-கை) † சீத்காரியென்னும் கும்பகத்தையும் அதன் சிலாக்கியத்தையும் கூறுகின்றார் :—

सीत्कां कुर्यात्तथा वक्त्रे घ्राणेनैव विजृम्भिकाम् ।
एवमभ्यासयोगेन कामदेवो द्वितीयकः ॥ ५३ ॥

(இ-ள்) வாயினால் சீத்காரஞ்செய்து (உதடுகளின் இடையிற் சேர்க்கப்பட்ட நாக்கினால் சீத்காரம் செய்தல் பூர்வமாக வாயினாற் பூரித்து), கிராண(நாசித் துவார)த்தினாலேயே இரேசகம் செய்யவேண்டும். இப்படி அடிக்கடி பழகும் யோகத்தால் (மிகுந்த ரூபலாவண்ணியத்தால் மன்மதனுக்குச் சமானமாகுதலால்) இரண்டாவது காமதேவனாகின்றான்.

---

* இது யோககுண்டலியுபநிஷத் வாக்கியம். இவ்வர்த்தம் சாண்டில்யயோகசிகோபநிஷத்துக்களிலும் கூறப்பட்டுளது.

† இதன் லக்ஷணம் சாண்டில்யயோகசிகோபநிடதங்களிலும் கூறப்பட்டுளது.

மூலத்தில் கிராணத்தினுலேயே என்றதனுல் நாசித்துவார மிரண்டினுலும் என்று கொள்க. ஏகாரம்—வாயின் இயைபு (சம்பந்தம்) நீக்குதற் பொருட்டு. வாயினுல் வாயுவை வெளிவிடுதல் பலக்குறைவைச் செய்வதாயிருத்தலால், அப்பியாசத்திற்குப் பின்னும் அதைச் செய்யலாகாது. கும்பகம் சொல்லாவிடினும், சித்காரியைக் கும்பகமுடையதாக அறியவேண்டும். (ருந)

(அ-கை) இதுவுமது :—

பொமி நீவகரூஷாோநூ: ஸுஷீஸஂஹாாகாாக: |
நக்ஷுயா நதூஷாநிஷூா நைவாலஸ்யஂவ ஜாயதெ ||

(இ-ள்) யோகினிசமூகங்களைச் செவ்வையாக அப்பியாசித்தவனும், பிரபஞ்சத்தின் உற்பத்திலயங்களுக்குக் கர்த்தாவுமாகின்றான். பசி, தாகம், நித்திரை, ஆலசியம் என்பவை உண்டாகிறதில்லை.

ஆலசியம், காயசித்தங்களின் கௌரவத்தால், பிரவிருத்தியில்லாமை. காயகௌரவம் (திண்மை) கபமுதலியவற்றுலும், சித்தகௌரவம் தமோகுணத்தினுலு முண்டாகின்றன. (ருச)

(அ-கை) இதுவுமது :—

ஹவெத்ஸுவஂவஜெஹஸ்ய ஸவொவஷவஜிதக: |
அநெநவிதிநாஸதூஂ யொதீநெஹூமிணுலெ || ருரு ||

(இ-ள்) தேகத்தின் சத்துவ(பல)மும் உண்டாகின்றது. இவ்வப்பியாசவிதியால் யோகீந்திரன் பூமண்டலத்தில் சகல உபத்திரவங்களும் இல்லாதவனுகிறுன். இது சத்தியமே.

## ச. சீதலி.

(அ-கை) சீதலியென்னும் கும்பகத்தைக் கூறுகின்றார் :—

* ஜிஹ்வயாவாயுாகூஷ்ய வஂவெவஹஂஹஸாயநஂ |
ஶநகெவுாணாஂயாஹ்யாஂ ரெவயெத்வநஂஸுயீ: ||

---

* இது யோகதண்டலி வாக்கியம், இச்சீதலி சாண்டில்யம், யோகதத்துவோபநிஷதம், சிவபுராண முதலியவற்றிலும் கூறப்பட்டுளது.

(இ-ள்) (பக்ஷியின் அலகைப்போல உதடுகளுக்கு வெளியில் நீண்ட) நாக்கினால் வாயுவைப் பூரித்து, முன்போல (சூரியபேதனம்போல்) கும்பகசாதனத்தை (விதானத்தை)ச் செய்து, நல்ல விவேகியானவன் நாசித்துவாரங்களால் வாயுவை மெல்லவே இரேசிக்கவேண்டும். (௫௬)

(அ-கை) சீதலியின் குணங்களைக் கூறுகின்றார் :—

* 𑌗𑍁𑌲𑍍𑌮𑌪𑍍𑌲𑍀𑌹𑌾𑌦𑌿𑌕𑌾𑌨𑍍𑌰𑍋𑌗𑌾𑌨𑍍 𑌜𑍍𑌵𑌰𑌂𑌪𑌿𑌤𑍍𑌤𑌂𑌕𑍍𑌷𑍁𑌧𑌾𑌂𑌤𑍃𑌷𑌾𑌂
𑌵𑌿𑌷𑌾𑌣𑌿𑌶𑍀𑌤𑌲𑍀𑌨𑌾𑌮 𑌕𑍁𑌮𑍍𑌭𑌿𑌕𑍇𑌯𑌂𑌨𑌿𑌹𑌨𑍍𑌤𑌿𑌹𑌿 ॥ ௫௭ ॥

(இ-ள்) குன்மம் பிலீகமுதலிய ரோகங்களையும், சுரத்தையும், பித்தவிகாரங்களையும், பசியையும், தாகத்தையும், விஷங்களையும் சீதலியென்னும் இக்கும்பகம் கெடுக்கின்றது.

௫. பஸ்திரிகை.

(அ-கை) பஸ்திராவென்னும் கும்பகம் பதுமாசன பூர்வகமாகவே அநுஷ்டிக்கத்தக்கதா யிருத்தலால், அதன் ஆதியில் பதுமாசனத்தைக் கூறுகின்றார் :—

𑌊𑌰𑍍𑌵𑍋𑌰𑍁𑌪𑌰𑌿𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌉𑌭𑍇𑌪𑌾𑌦𑌤𑌲𑍇𑌉𑌭𑍇 ।
𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌂𑌭𑌵𑍇𑌦𑍇𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑌪𑍍𑌰𑌣𑌾𑌶𑌨𑌂 ॥ ௫௮ ॥

(இ-ள்) இரண்டு தொடைகளின்பேரிலும் இரண்டு பாதங்களையும் செவ்வையாக வைத்தல், பதுமாசனமாகின்றது. இது சகலபாவங்களையும் நாசஞ்செய்வதாம். (௫௮)

(அ-கை) பஸ்திரிகை யென்னும் கும்பகத்தைக் கூறுகின்றார் :—

* 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌂𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌸𑌮𑌗𑍍𑌰𑍀𑌵𑍋𑌦𑌰𑌂𑌸𑍁𑌧𑍀𑌃 ।
𑌮𑍁𑌖𑌂𑌸𑌂𑌯𑌮𑍍𑌯𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂𑌘𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑌰𑍇𑌚𑌯𑍇𑌤𑍍 ॥

(இ-ள்) கழுத்தும் வயிறும் சமமாய் வைத்திருக்கும் ஸ்திரபுத்தியுள்ளவன் செவ்வையாகப் பதுமாசனம் சேர்த்து வாயை மூடி, தேகத்திற்குள்ளிருக்கும் வாயுவைப் பிரயத்தினத்தோடு நாசியின் ஒருதுவாரத்தால் இரேசிக்கவேண்டும். (௫௯)

* இவை யோகதுண்டலியுபநிஷத் வாக்கியங்கள். பஸ்திரிகை யோகசிகோபநிஷத்திலும் கூறப்பட்டுளது.

(அ-கை) இரேசகத்தின் தன்மையைக் கூறுகின்றார்:—

* யதா லகதி ஹ்ருத்கண்டே கபாலாவதி ஸஸ்வநம் |
வேகேந பூரயேத்கிஞ்சித் ஹ்ருத்பத்மாவதி மாருதம் |
புநர்விரேசயேத்தத்வத் பூரயேச்ச புந: புந: || சூ௦௩ ||

(இ-ள்) இருதயத்திலும் கழுத்திலும் கபாலம்வரையிலும் வாயு பொருந்தும்படி இரேசிக்கவேண்டும். அப்படியே இருதய தாமரைவரையிலும் வாயுவை வேகமாய்ப் பூரிக்கவேண்டும். அதுபோல மறுபடியு மிரேசிக்கவேண்டும். மறுபடியும் பூரிக்க வேண்டும். (சூ௦௩)

(அ-கை) முற்கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

† " யதைவ லோஹகாரேண பஸ்த்ரா வேகேந சால்யதே |
ததைவ ஸ்வசரீரஸ்தம் சாலயேத்பவநம் தியா || சூ௧௩ ||

(இ-ள்) எப்படிக்கொல்லனால் துருத்தி வேகமாய் அசைக்கப்படுகின்றதோ, அப்படியே தனதுசரீரத்திலுள்ள வாயுவைப் புத்தியினால் அசைக்கவேண்டும். (சூ௧௩)

(அ-கை) இரேசக பூரகங்களை நிரந்தரம் அப்பியசித்தலால் சாலனத்தின் (அசைத்தலின்) அவதி (எல்லை)யைக் கூறுகின்றார்:-

யதா ஶ்ரமோ பவேத்தேஹே ததா ஸூர்யேண பூரயேத் |
யதோதரம் பவேத்பூர்ணம் அநிலேந ததா லகு || சூ௨௩ ||

(இ-ள்) எப்போது தேகத்தில் இரேசக பூரகங்களை நிரந்தரம் அப்பியசித்தலால் ஆயாசமுண்டாகின்றதோ, அப்போது எவ்விதமாக வாயுவினால் வயிறு இலகுவாய்ப் பூரணமாகுமோ, அவ்விதமாகச் சூரியநாடியினால் பூரிக்கவேண்டும். (சூ௨௩)

(அ-கை) பூரகத்திற்குப்பின் எது செய்யவேண்டியதோ அதைக் கூறுகின்றார்:—

---

* இது யோகதண்டலிவாக்கியம். இது யோகசிகையிலும் கூறப்பட்டுளது.

† இது யோகதண்டலி யோகசிகோபநிஷதங்களின் வாக்கியம்

* தாரயேந்நாஸிகாம் மத்யதர்ஜநீப்யாம் விநா த்ருடம் |
விதிவத்கும்பகம் க்ருத்வா ரேசயேதிடயாநிலம் || ௬௰௨ ||

(இ-ள்) நடுவிரல் சுட்டுவிரல்களை விட்டு (மற்றப் பெருவிரல் மோதிரவிரல் சுண்டுவிரல்களால்) நாசியைத் திடமாகப் பிடிக்கவேண்டும். [அதாவது பெருவிரலால் வலது நாசியை யழுத்தியும் அநாமிகை (மோதிரவிரல்) கனிஷ்டிகை (சுண்டுவிரல்)களால் இடது நாசியை யழுத்தியும் மூக்கைத் திடமாகப் பிடிக்கவேண்டுமென்பது பொருள்.] விதிப்படிக் கும்பகஞ்செய்து சந்திரநாடியால் வாயுவை இரேசிக்கவேண்டும்.

பஸ்திராவென்னும் கும்பகத்தின்பரிபாடி(மாதிரி)யிதுவாம்: இடதுநாசியை வலதுகையின் மோதிரவிரல் சுண்டுவிரல்களால் தடுத்து, வலது நாசியால் துருத்தியைப்போல் இரேசகபூரகங்கள் செய்யவேண்டும். சிரமமுண்டான காலத்தில் அந்தநாசியினாலேயே பூரகம்செய்து, அங்குஷ்டத்தால் வலதுநாசியை நிரோதித்து, இயன்றளவு கும்பகஞ் செய்யவேண்டும் பின் இடது நாடியினால் இரேசிக்கவேண்டும். மறுபடியும் வலதுநாசியை அங்குஷ்டத்தால் (பெருவிரலால்) நிரோதித்து, இடதுநாசியால் துருத்திபோல விரைவாய் இரேசக பூரகங்கள் செய்யவேண்டும். சிரமமுண்டானால் அந்த நாசியினாலேயே பூரகஞ்செய்து, அநாமிகை கனிஷ்டிகைகளால் இடதுநாசியை நிரோதித்து, இயன்றளவு கும்பகஞ்செய்து பிங்கலையினால் இரேசிக்கவேண்டும். இது ஒருவிதம்.

வாம(இடது)நாசியை அநாமிகை கனிஷ்டிகைகளால் நிரோதித்து, வலதுநாசியால் பூரித்து, உடனே அங்குஷ்டத்தால் நிரோதித்து வாமநாசியால் இரேசிக்கவேண்டும். இப்படி நூறுமுறை செய்து சிரமமுண்டான காலத்து அதனாலேயே பூரிக்கவேண்டும். பந்தபூர்வகமாகச் செய்து இடதுநாடியால் இரேசிக்கவேண்டும். மறுபடியும் வலதுநாசியை அங்குஷ்டத்தால் நிரோதித்து இடது நாசியால் பூரகம்செய்து, விரைவாய் இடதுநாசியை அநாமிகை கனிஷ்டிகைகளால் நிரோதித்துப் பிங்கலையால் துருத்திபோல

* இது யோகதண்டலியுபநிஷத்வாக்கியம்.

இரேசிக்கவேண்டும். மறுபடியும் மறுபடியும் இப்படிச்செய்து இரேசக பூரகங்களின் ஆவிருத்தியால் (பழக்கத்தால்) சிரமமுண்டானல் இடதுநாசியாற் பூரித்து, அநாமிகை கனிஷ்டிகைகளால் பிடித்துக் கும்பகஞ்செய்து, பிங்கலையால் இரேசிக்கவேண்டும். இது மற்றொருவிதமாம். (சூஉ௪)

(அ-கை) பஸ்திரிகையின் குணங்களைக் கூறுகின்றார்:—

* 𑌵𑌾𑌤𑌪𑌿𑌤𑍍𑌤𑌶𑍍𑌲𑍇𑌷𑍍𑌮𑌹𑌰𑌂 𑌶𑌰𑍀𑌰𑌾𑌗𑍍𑌨𑌿𑌵𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑌂 |
𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀𑌬𑍋𑌧𑌕𑌂 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌪𑌵𑌨𑌂 𑌸𑍁𑌖𑌦𑌂 𑌹𑌿𑌤𑌂 |
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌾𑌡𑍀𑌮𑍁𑌖𑍇 𑌸𑌂𑌸𑍍𑌥𑌕𑌫𑌾𑌦𑍍𑌯𑌰𑍍𑌗𑌲𑌨𑌾𑌶𑌨𑌂 || சூரு ||

(இ-ள்) இப்பஸ்திரிகை வாதபித்த சிலேஷ்மங்களைக் கெடுப்பதாயும், சரீராக்கினியை (ஜாடராக்கினியை) விருத்திசெய்வதாயும், சீக்கிரம் குண்டலியை விழிப்பிப்பதாயும், பவித்திரம் செய்வதாயும், சுகத்தைத் தருவதாயும், (மூன்றுதோஷங்களையும் கெடுப்பதாயிருத்தலால் எப்போதும் எல்லாவற்றிற்கும்) இதமாயும் (பிரஹ்மத்தை யடைவிப்பதா யிருத்தலால்) பிரஹ்மநாடியெனப் படுகின்ற சுழுமுனையின் முகத்தில் (மேற்பாகத்தில்) செவ்வையாயிருக்கும் கபமுதலியவடிவினதாகிய தடையை) பிராணவாயுவின் போக்கிற்குப் பிரதிபந்தமாயுள்ளதை) நாசஞ்செய்வதாயு மிருக்கின்றது.

எல்லாக் கும்பகங்களும் எப்போதும் இதமுள்ளனவாயினும், உஷ்ணமாகிய சூரியபேதனம் உஜ்ஜாயினி யென்னுமிரண்டும் பெரும்பாலும் சீதளமுள்ளபோது இதமாம். சீதளமாகிய சீத்காரி சீதலி யென்னுமிரண்டும் பெரும்பாலும் உஷ்ணமுள்ளபோது இதமாம். சீதோஷ்ணசமமாகிய பஸ்திராவென்னும் கும்பகம் எப்போதும் இதமாம். சகலகும்பகங்களும் சகலரோகங்களையும் போக்குகின்றவைகளாயிருக்கினும், சூரியபேதனம் பெரும்பாலும் வாதத்தைக் கெடுப்பதாயும், உஜ்ஜாயி பெரும்பாலும் சிலேஷ்மத்தைக் கெடுப்பதாயும், சீத்காரி சீதலி யென்னுமிரண்டும் பெரும்பாலும் பித்தத்தைக் கெடுப்பனவாயும் பஸ்திரையென்னும் கும்பகம் மூன்றுதோஷங்களையும் போக்குவதாயுமிருக்

* யோகதண்டலி யோகசிகோபநிஷதங்களின் வாக்கியம்.

கின்றனவென்று அறிக. பிரஹ்மநாடி பிரஹ்மத்தை யடைவிப்பதாமென்பது,

" 𑌶𑌤𑌂 𑌚𑍈𑌕𑌾 𑌚 𑌹𑍃𑌦𑌯𑌸𑍍𑌯 𑌨𑌾𑌡𑍍𑌯𑌃
𑌤𑌾𑌸𑌾𑌂 𑌮𑍂𑌰𑍍𑌧𑌾𑌨𑌮𑌭𑌿𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑍈𑌕𑌾 |
𑌤𑌯𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑌾𑌯𑌨𑍍𑌨𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍇𑌤𑌿
𑌵𑌿𑌷𑍍𑌵𑌙𑍍𑌙𑌨𑍍𑌯𑌾 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑌣𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ||

இருதயத்தின் நாடிகள் நூறுமொன்றுமாம். அவற்றுள் கபாலத்தைப் பேதித்துச் சென்றிருப்பது ஒன்று (சுழுமுனே). அதனுல் (அந்நாடியினுல்) மேற்சென்று அமிர்தத்துவத்தை (மரணமின்மையை) அடைகிறுன். சுற்றிலுமுள்ள மற்றவைகள் பிராணனது கமனத்தில் நிமித்தமாகின்றன (சம்ஸாரத்தையடையும் பொருட்டேயாகின்றன)" என்று கடவல்லிசுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றது. (௬௫)

(அ-கை) இதுவுமது:—

* 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌗𑌾𑌤𑍍𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌤𑍍𑌰𑌯𑌵𑌿𑌭𑍇𑌦𑌕𑌮𑍍 |
𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣𑍈𑌵 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌭𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌖𑍍𑌯𑌂 𑌕𑍁𑌮𑍍𑌭𑌕𑌂 𑌤𑍍𑌵𑌿𑌦𑌮𑍍 ||

(இ-ள்) திடமாய்ச் சரீரமத்தியில் (சுழுமுனேயிலே) செவ்வையாயுண்டாகிய பிரஹ்மகிரந்தி விஷ்ணுகிரந்தி உருத்திரகிரந்தியென்னும் மூன்றுகிரந்திகளின் பேதத்தை விசேஷமாய்ச் செய்வதாயுமிருக்கின்றது. இதனுலேயே இந்தப் பஸ்திரையென்னும் கும்பகத்தை விசேஷமாகவே செய்யவேண்டும். அதாவது பஸ்திரை அவசியம் செய்யத்தக்கதும், சூரியபேதன முதலியவைகள் நேரிட்டபடி செய்யத்தக்கனவுமாம். (௬௬)

## ௬. பிராமரீ.

(அ-கை) பிராமரீ கும்பகத்தைக் கூறுகின்றுர்:—

𑌵𑍇𑌗𑌾𑌦𑍍𑌘𑍋𑌷𑌂 𑌪𑍂𑌰𑌕𑌂 𑌭𑍃𑌙𑍍𑌗𑌨𑌾𑌦𑌂
𑌭𑍃𑌙𑍍𑌗𑍀𑌨𑌾𑌦𑌂 𑌰𑍇𑌚𑌕𑌂 𑌮𑌨𑍍𑌦𑌮𑌨𑍍𑌦𑌮𑍍 |
𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑍇𑌵𑌮𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌾𑌤𑍍
𑌚𑌿𑌤𑍍𑌤𑍇 𑌜𑌾𑌤𑌾 𑌕𑌾𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑍀𑌲𑌾 || ௬௭ ||

---

* யோககுண்டலி யோகசிகோபநிஷதங்களின் வாக்கியம்.

(இ-ள்) வேகமாய்ச் சப்தத்துடன் ஆண்வண்டின் நாதம் போன்ற நாதம் உண்டாகும் வண்ணம் பூரகஞ்செய்து, பெண்வண்டின் நாதம்போன்ற நாதமுண்டாகும் வண்ணம் மெல்லமெல்ல இரேசிக்கவேண்டும். இப்படி அப்பியாசிக்கும் அப்பியாச யோகத்தால் யோகீந்திரர்களது சித்தத்தில் அநிர்வாச்சியமாகிய ஆநந்தலீலையுண்டாகின்றது.

பூரகத்தின்பின் கும்பகம், வண்டுகள் கும்பகமுடையனவாயிருத்தலினாலேயே சித்தித்தது; விசேஷமில்லாமையினாலும் சொல்லப்படவில்லை. பூரகஇரேசகங்களுக்கு விசேஷமிருத்தலால், அவை சொல்லப்பட்டன. (௬௭)

## ௭. மூர்ச்சை.

(அ-கை) மூர்ச்சையென்னும் கும்பகத்தைக் கூறுகின்றார் :—

𑌪𑍂𑌰𑌕𑌾𑌨𑍍𑌤𑍇 𑌗𑌾𑌢𑌤𑌰𑌂 𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌜𑌾𑌲𑌨𑍍𑌧𑌰𑌂 𑌶𑌨𑍈𑌃 ।
𑌰𑍇𑌚𑌯𑍇𑌨𑍍𑌮𑍂𑌰𑍍𑌛𑌨𑌾𑌖𑍍𑌯𑍇𑌯𑌂 𑌮𑌨𑍋𑌮𑍂𑌰𑍍𑌛𑌾 𑌸𑍁𑌖𑌪𑍍𑌰𑌦𑌾 ॥

(இ-ள்) பூரகத்தின்முடிவில் மிக அழுத்தமாகிய ஜாலந்தரபந்தத்தைச்சேர்த்து மெல்லமெல்ல இரேசிக்கவேண்டும். மனதை மூர்ச்சிப்பிப்பதும் சுகத்தைதருவதுமாகிய இது மூர்ச்சையென்னும் பெயருடையதாம்.

மனதை மூர்ச்சிப்பிப்பது என்பதனால் மூர்ச்சையின் விக்கிரகத்தைக்காணுதல் பூர்வகமாகிய பலம் சொல்லப்பட்டது.

## ௮. பிலாவினி.

(அ-கை) பிலாவினியென்னுங் கும்பகத்தைக் கூறுகின்றார்:—

𑌅𑌨𑍍𑌤𑌃𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍋𑌦𑌾𑌰 𑌮𑌾𑌰𑍁𑌤𑌾𑌪𑍂𑌰𑌿𑌤𑍋𑌦𑌰𑌃 ।
𑌪𑌯𑌸𑍍𑌯𑌗𑌾𑌧𑍇𑌽𑌪𑌿 𑌸𑍁𑌖𑌾𑌤𑍍𑌪𑍍𑌲𑌵𑌤𑍇 𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰𑌵𑌤𑍍 ॥ ௬௯ ॥

(இ-ள்) சரீரத்திற்குள் பிரவர்த்தித்த (பூரிக்கப்பட்ட) வயிற்றிலுள்ள வாயுவால் நிரம்பப்பூரிக்கப்பட்ட வயிற்றையுடையவன் ஜலத்தின் ஆழத்திற்சென்றாலும் தாமரையிலைபோல் சுகமாக மிதக்கிறான்.

## கூ. பிராணுயாமபேதம்.

(அ-கை) இனிப் பிராணுயாமத்தின் பேதங்களைக் கூறுகின்ருர் :—

ப்ராணாயாமஸ்த்ரிதா ப்ரோக்தோ ரேசபூரககும்பகை: |
* ஸஹித: கேவலஸ்சேதி கும்பகோ த்விவிதோ மத: || எ0 ||

(இ-ள்) சரீரத்திற் சஞ்சரிக்கும் வாயுவைத்தடுத்தலென்னும் பிராணுயாமம் இரேசகபூரககும்பகமென † மூன்றுவிதமாகச்

---

* இது யோககுண்டலியுபநிஷத் வாக்கியம்.

† "பிராணுயாமம் இரேசகம் பூரகம் கும்பகம் சூனியகமென விவேகிகளாற் சொல்லப்படும். என்று நாரதீயத்திலும், ஸௌரபுராணத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கே கூறிய சூனியகமென்பது இந்நூலிலும் வசிஷ்டர்முதலியோராலும் கேவலகும்பகமென்னும் பெயரால் வழங்கப் பட்டிருக்கின்றது.

அது "பாஹ்யாப்யந்தரவிஷயாக்ஷேபீ சதுர்த்த: ||

உள்ளும் வெளியு மிருப்பனவாகிய இரேசக பூரகங்களை யதிக்கிரமித்து (விட்டு)த்தானுயிருப்பது நான்காவதா (கேவல கும்பகமா)ம்" என்று பதஞ்சலிபகவானுற் சொல்லப்பட்டிருக்கின்றது.

மற்ருேர் எண்வகைப் பிராணுயாமம் அந்நபூர்ணேபநிஷத்திலும், வாசிட்டத்தில் புசுண்டர் கதையிலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

அஃது வருமாறு :— (க-உ) வாயு நாசிநுனிமுதல் சிரசுவரையிலும் சிரசுமுதல் இருதயம் வரையிலுமாகச் செல்லுதல், இருவகை உட்பூரகமாம்.

(ங) அபானன் ஒடுங்கிப் பிராணன் இருதயத்திலுண்டாகாதிருக்கும் பூரணுவஸ்தை, உட்கும்பகமாம்.

(ச) இருதயத்தினின்றும் பிராணன் தோற்றுவதற்கு வாயு வெளிநோக்குதல் (சிரசுபரியந்தம் செல்லுதல்), உள்இரேசகமாம்.

(ரு-சு) வாயு சிரசுமுதல் நாசிநுனிவரையிலும், நாசிநுனிமுதல் வெளியிற் பன்னிரண்டங்குலம் வரையிலுமாகச் செல்லுதல், இருவகைப் புறப்பூரகமாம்.

(எ) பிராணன் ஒடுங்கி அபானன் துவாதசாந்தத்தி லுண்டாகாதிருக்கும் பூரணுவஸ்தை, புறக்கும்பகமாம்.

(அ) வெளியிலிருந்தும் அபானன் தோற்றுவதற்கு வாயு உள்நோக்கு தல், புறஇரேசகமாம்.

இருதயத்தினின் றுதித்து வெளியிற் பன்னிரண்டங்குல அளவி லொடுங்கும் வாயு இரவியெனும் பிராணனும். துவாதசாந்தத்திலிருந்துண் டாய் இருதயகமலத்திலொடுங்கும் வாயு மதியெனும் அபானனும். மேற் கூறிய பிராணுபானகதிகளில் நடக்கும்போதும் இருக்கும்போதும் கன விலும் நனவிலும் எப்போதும் இடைவிடாது மனதைச் செலுத்தினுல், அப்போது நீண்ட ஆயுளும், பிராணன் ஒடுங்கி அபானன் உண்டாகமலிருப் பதும் அபானன் ஒடுங்கிப் பிராணன் தோற்ருதிருப்பதுமாகிய மத்தியகத சிற்பரநிலை (ஜீவன் முக்தி) யுண்டாகும்.

அஜபை :-- பூரகரேசகங்களைச் செய்யுங்கால் 'ஹம்ஸ:, ஸோஹம்' என்று நேராகவும் தலைகீழாகவும் பிரகாசிக்கிற அஜபாமந்திரத்திஞல் தத்துவ மசி யென்னும் மகாவாக்கியத்திற் சொல்லப்பட்டிருக்கும் ஜீவப்பிரஹ்மைக் கியம் அடிக்கடி சிந்திக்கப்படுகின்றது.

இந்த ஸோஹ மென்னும் அஜபாகாயத்திரியை ஈசுவரநாமத்தைப் போல் ஜபித்தல் சித்தசுத்திக்கு ஏதுவாம். வெகுகாலம்வரையில் ஜபஞ் செய்யின் விருத்தி அந்தர்முகப்படும். அப்போது சுவாசம் வெளிப்படுங் கால் ஸகாரத்தை (ஸோவென்பதை)யும், சுவாசம் உட்பிரவேசிக்குங்கால் ஹகாரத்தை (ஹம்என்பதை)யும் தியானிக்கவேண்டும். இதை,

ஹகாரேண பஹிர்யாதி ஸகாரேண விஶேத்புந: |
ஹம்ஸஹம்ஸேத்யமும் மந்த்ரம் ஜீவோ ஜபதி ஸர்வதா ||

'ஹகாரத்தால் வெளியிற் சென்று ஸகாரத்தால் மறுபடியும் உட்செல்லு கின்றது. ஹம்ஸம்ஹம்ஸமெனும் இம்மந்திரத்தை ஜீவன் எப்போதும் ஜெபிக்கிருன்.

குருவாக்யாத் ஸுஷும்நாயாம் விபரீதோ பவேஜ்ஜப: |
ஸோஹம் ஸோஹமிதி ப்ரோக்தோ மந்த்ரயோக: ஸ உச்யதே ||

குரு வாக்கியத்திஞல் (இம்மந்திர)ஜபம் சுழுமுனையில் விபரீதமாயுண் டாகின்றது. அது ஸோஹம் ஸோஹமென்றடையப்பட்டதாய் மந்திர யோகமெனப்படுகின்றது'.

ஸகார: ஶக்திரூபோக்த: ஶம்போரஹமிதி ஸ்மிருத: |
ஹகார: பரமேஶஸ்ய தத்ஸோஹமிதி ஸ்மிருத: ||

சொல்லப்பட்டிருக்கின்றது. * கும்பகம் சகிதகும்பகம் கேவல கும்பகமென இரண்டுவிதமென்பது யோகிகளது கொள்கை.

" வ்ராணஃஸ்வெ்டஹஸுவாயுー ஙாயாஙஸ நிரொய்நம் ॥

பிராணனென்பது தனது தேகத்தில் ஜீவித்திருக்கும்வாயு; ஆயாமம் அதைத்தடுத்தல்" என்று கோரக்கநாதரால் பிராணுபாமலக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

"வஹியுஜெவநம்வா்யொ ரூஉராஜெ வகஃஸூரதஃ ॥

வயிற்றினின்றும் வாயுவை வெளியில் இரேசித்தல் (விடுதல்) இரேசகமாம்" என்று யாஞ்ஞவல்கியரால் இரேசகலக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

---

ஸகாரம் கேசரி யெனப்படுகின்றது. துவம்பத மென்றும நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. ஹகாரம் பரமேசுவரனுகின்ருர். தத்பதமென்றும் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

ஸகாரம்யாயதொஜநு ஹுகாரொஹிஹவெஞுவழு ॥

ஸகாரத்தைத் தியானிக்கும் ஜந்து நிச்சயமாய் ஹகாரமேயாகின்ருன்'. என்னும் யோகபீஜம், யோகசூடாமணியுபநிஷத்து, யோகதத்துவோபநிஷத்துமுதலிய வற்ருற் காண்க. இந்தஹம்ஸமந்திரத்தினைத் தரிசனம் தியானபிந்து பிரஹ்மவித்தியை முதலிய உபநிஷதங்களிலும், சூதசங்கிதை முதலிய புராணங்களிலும் காண்க. இது அஜபாகாயத்திரியாம். இதற்கு முக்கியமாக நிவிருத்தியுடைய சந்நியாசி அதிகாரியாவன். இது சோபாதிகதியானம். இவற்றுணின்றும் ஸகாரம்ஹகாரமென்னும் மெய்யெழுத்துக்களையும் நீக்கி எஞ்சிநிற்கும் 'ஓம்; என்னும் அக்ஷரத்தைத் தியானித்தல் நிருபாதிகமாம். 'ஓம்' 'ஸொஹம்' என்னுமிவ்விரண்டு சப்தங்களும் பிரத்தியகாத்மாவோடு அபின்னமாகிய பிரஹ்மமென்னும் ஒரே அர்த்தமுடையன. சுத்தமாயிருத்தலால் நிருபாதிகமாயினும், 'ஓம்' என்னும் அக்ஷரத்தில் ஸகாரம் ஹகாரமென்னும் உபாதிகளைச்சேர்த்தலால் 'ஸொஹம்' என்னும் சப்தமுண்டாகின்றது. ஆகையால் அது சோபாதிகமெனப்படுகின்றது. இவ்வோங்காரத்தின் உபாசனை மாண்டூக்கியாதி உபநிஷத்துகளிலும் அப்படியே விசாரசாகரம், பதார்த்தமஞ்சூஷாமுதலிய நூல்களிலும் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

* இது சாண்டில்யத்தும் கூறப்பட்டுளது.

"𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯𑌨𑌾𑌸𑌾𑌵𑌿𑌵𑌰𑌾𑌦𑌶𑍇𑌷𑌂
𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌬𑌹𑌿𑌃𑌶𑍂𑌨𑍍𑌯𑌮𑌿𑌵𑌾𑌨𑌿𑌲𑍇𑌨 ।
𑌨𑌿𑌰𑍁𑌚𑍍𑌛𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌂𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌰𑍁𑌦𑍍𑌧𑌵𑌾𑌯𑍁𑌃
𑌸 𑌰𑍇𑌚𑌕𑍋 𑌨𑌾𑌮 𑌮𑌹𑌾𑌨𑌿𑌰𑍋𑌧𑌃 ॥

நாசித்துவாரத்தால் வாயுமுழுவதையும் வெளியில் செலுத்திக் காற்றுற் சூனியம்போல் நிரோதித்து, நிரோதிக்கப்பட்ட வாயு செவ்வையாக நிற்றல், இரேசகமென்னும் மகாநிரோதமாம்" என்பது இரேசகப் பிராணாயாமலக்ஷணம்.

"𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌦𑌾𑌪𑍂𑌰𑌣𑌂 𑌵𑌾𑌯𑍋𑌰𑍁𑌦𑌰𑍇 𑌪𑍂𑌰𑌕𑍋 𑌹𑌿 𑌸𑌃 ॥

வெளியினின்றும் வாயுவை வயிற்றில் நிரம்பப்பூரித்தல், பூரகமாம்" என்பது பூரகலக்ஷணம்.

"𑌬𑌾𑌹𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌘𑍍𑌰𑌾𑌣𑌪𑍁𑌟𑍇𑌨 𑌵𑌾𑌯𑍁𑌮𑍍
𑌆𑌕𑍃𑌷𑍍𑌯 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌶𑌨𑍈𑌃 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 ।
𑌨𑌾𑌡𑍀𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑌯𑍇𑌦𑍍𑌯𑌃
𑌸 𑌪𑍂𑌰𑌕𑍋 𑌨𑌾𑌮 𑌮𑌹𑌾𑌨𑌿𑌰𑍋𑌧𑌃 ॥

வெளியில் உள்ள வாயுவை நாசித்துவாரத்தால் மெல்ல இழுத்து, அதனாலேயே எல்லா நாடிகளையும் நிரப்புவது எதுவோ, அது பூரகமென்னும் மகாநிரோதமாம்" என்பது பூரகப்பிராணாயாமலக்ஷணமாம்,

"𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌯 𑌕𑍁𑌮𑍍𑌭𑌵𑌦𑍍𑌵𑌾𑌯𑍋𑌰𑍍𑌧𑌾𑌰𑌣𑌂 𑌕𑍁𑌮𑍍𑌭𑌕𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

கும்பத்தைப்போல செவ்வையாய்ப் பூரித்து வாயுவைத் தரித்தல் கும்பகமாகின்றது" என்பது கும்பகலக்ஷணம். இக்கும்பகம் பூரகப்பிராணாயாமத்திற்கு அபின்னமாம். பின்னமோ

"𑌨 𑌰𑍇𑌚𑌕𑍋 𑌨𑍈𑌵 𑌚 𑌪𑍂𑌰𑌕𑍋𑌽𑌤𑍍𑌰
𑌨𑌾𑌸𑌾𑌪𑍁𑌟𑍇 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍇𑌵 𑌵𑌾𑌯𑍁𑌮𑍍 ।
𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌂 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣
𑌕𑍁𑌮𑍍𑌭𑌾𑌖𑍍𑌯𑌮𑍇𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌃 ॥

இதில் இரேசகமுமில்லை. பூரகமுமில்லை. நாசியிற் பொருந்தி யுள்ள வாயுவைக் கிரமமாய் அசைவில்லாததாகச் செய்தலாகிய இதைக் கும்பகமென்று அறிஞர் கூறுவர்" என்பதாம். சகித மென்பதனுல் வேறுவிதமாகப் பிராணுயாமத்தை பிரிக்கின்ருர். சகிதகும்பகமானது இரேசகபூர்வகம், கும்பகபூர்வகமென இர ண்டுவிதமாம். அது

"ரேசகம் பூரகம் வா குர்யாத் ஸஹிதம் [illegible]

அந்தச் சகிதகும்பகம் இரேசித்தாவது பூரித்தாவது செய்ய வேண்டும்" என்பதனுற் சொல்லப்பட்டிருக்கின்றது. அவற்றுள் இரேசகபூர்வககும்பகம் இரேசகப்பிராணுயாமத்திற்கு வேறன்று. பூரகபூர்வககும்பகம், பூரகப்பிராணுயாமத்திற்கு வேறன்று. கேவலகும்பகம் கும்பகப்பிராணுயாமத்திற்கு வேறன்று. முற்கூறிய சூரியபேதன முதலியவைகள் பூரகபூர்வக கும்பகத்தின் பேதங் களென அறிக. (எ௦)

(அ-கை) * சகித கும்பகாப்பியாசத்தின் அவதி (எல்லை) யையும் கேவலகும்பகத்தின் இலக்ஷணத்தையும் கூறுகின்ருர்:—

---

* "[illegible] ப்ராணாயாமோ [illegible] |
[illegible] ||

வியர்வையை யுண்டுபண்ணும் பிராணுயாமம் எதுவோ அதுவே அத மம். நடுக்கமுண்டாவது மத்தியமமெனப்படும் எழும்புதல் உத்தமத்தி லுண்டாம்.

[illegible] |
[illegible] ||

உத்தமம் சம்பவிக்கும் வரையில் முன்முன் பிராணுயாமம் செய்ய வேண்டும். நிசுவாம் உச்சுவாசமிரண்டும் தேகத்தில் சுவாபாவிக (இயல் பாய) குணங்களாம்.

[illegible] ப்ராணாயாமோ [illegible] |
[illegible] ||

அவ்வாருயினும் அவ்வுத்தமப் பிராணுயாமத்தினுல் அவ்விரண்டும் காணப்படுகிறதில்லை. அவ்விரண்டன் நாசத்தில் கேவல கும்பகத்தைச் செய்ய சமர்த்தனுவன்.

யாவத் கேவலஸித்தி꞉ ஸ்யாத் ஸஹிதம் தாவதப்யஸேத் |
ரேசகம் பூரகம் முக்த்வா ஸுகம் யத்வாயுதாரணம் ||
ப்ராணாயாமோ(அ)யமித்யுக்த꞉ ஸ வை கேவலகும்பக꞉ ||

(இ-ள்) * கேவல கும்பகத்தின் சித்தியுண்டாகும் வரையி லும் சூரியபேதாதி சகிதகும்பகத்தை யப்பியசிக்கவேண்டும். † இரேசக பூரகங்களைவிட்டு வருத்தமுண்டாகாதபடி வாயுவைத் தரித்தல் எதுவோ, அந்த இதுவே கேவலகும்பகப்பிராணயாம மெனப்படும்.

சுழுமுனையைப் பேதித்தபிறகு எப்போது சுழுமுனைக்குள் கடசப்தங்கள் உண்டாகின்றனவோ, அப்போது கேவலகும்பகம் சித்திக்கின்றது. அதன்பின் சகிதகும்பகங்கள் பத்து அல்லது இருபது செய்யவேண்டும். எண்பது எண்ணிக்கைவரையில் கேவலகும்பகங்களினாலேயே செய்யவேண்டும். சாமர்த்தியமிருந்தால் கேவலகும்பகங்கள் எண்பதிற்குமேலும் செய்யத்தக்கனவாம். (எகஉ)

---

ரேசகம் பூரகம் த்யக்த்வா ஸுகம் யத்வாயுதாரணம் |
ப்ராணாயாமோ(அ)யமித்யுக்த꞉ ஸ வை கேவலகும்பக꞉ ||

ரேசகத்தினையும் பூரகத்தினையும் விட்டு முக்கியமான வாயுதாரணம் எதுவோ அது கேவலகும்பகமாம்.

ஸஹிதம் கேவலம் வாபி கும்பகம் நித்யமப்யஸேத் |
யாவத் கேவலஸித்தி꞉ ஸ்யாத் தாவத் ஸஹிதமப்யஸேத் ||

ஸஹிதகும்பகமாவது நித்தியம் அப்பியசிக்கவேண்டும். கேவலசித்தி வரையில் ஸஹிதமப்பியசிக்கவேண்டும்.

கேவலே கும்பகே ஸித்தே ரேசபூரகவர்ஜிதே |
ந தஸ்ய துர்லபம் கிஞ்சித் த்ரிஷு லோகேஷு வித்யதே ||

ரேசகபூரக மின்றிய கேவலகும்பகம் சித்திக்குமாயின் அவனுக்கு மூன்றுலகத்திலும் பெறுதற்கரிது சிறிதுமில்லை" என்பது புராணம்

* இது சாண்டில்ய யோகதண்டலியுபநிஷதங்களிற் கூறப்பட்டுள்ளது.

† இது சாண்டில்யத்தில் கூறப்பட்டுள்ளது.

(அ-கை) கேவலத்தைப் புகழ்கின்றார்:—

கும்பகே கேவலே ஸித்தே ரேசபூரகவர்ஜிதே ।
ந தஸ்ய துர்லபம் கிஞ்சித் த்ரிஷு லோகேஷு வித்யதே ॥

(இ-ள்) இரேசக பூரகங்களில்லாத * கேவலகும்பகம் சித்திக்குமாயின், அந்த யோகிக்கு மூன்று உலகத்திலும் அடைதற்கரிய தொன்றுமில்லை. (அவனுக்கு எல்லாம் சுலபமென்பது பொருள்.)

ஶக்த: கேவலகும்பேந யதேஷ்டம் வாயுதாரணாத் ।
ராஜயோகபதம் சாபி லபதே நாத்ர ஸம்ஶய: ॥ எ௩ ॥

கேவலகும்பகாப்பியாசத்தால் சாமர்த்தியமுடையவன் இஷ்டப்படி வாயுவைக்கொள்ளுதலால், இராஜயோகபதத்தை யடைகிறான். இதிற் சமுசயமில்லை. (இது நிச்சயமே).

(அ-கை) கும்பகாப்பியாசம் பாரம்பரையாய்க் கைவல்லியத்திற்கு ஏதுவாமென்பதைக் கூறுகின்றார்:—

கும்பகாத் குண்டலீபோத: குண்டலீபோததோ பவேத் ।
அநர்களா ஸுஷும்நா ச ஹடஸித்திஶ்ச ஜாயதே ॥ எ௪ ॥

(இ-ள்) கும்பகாப்பியாசத்தால் * குண்டலியென்னும் ஆதாரசக்திக்கு விழிப்பு (நித்திராபங்கம்) உண்டாகின்றது. குண்டலியின் விழிப்பால் சுழுமுனைநாடி, கபமுதலிய பிரதிபந்தங்களில்லாததாகின்றது. பிரத்தியாகாரமுதலிய பாரம்பரையால் கைவல்யவடிவமாகிய ஹடாப்பியாசத்தின் சித்தியுமுண்டாகின்றது. ()

(அ-கை) ஹடயோக இராஜயோகங்களிரண்டும் ஒன்றற்கொன்று உபகாரியும் உபகாரகமுமா மென்பதைக் கூறுகின்றார்:-

ஹடம் விநா ராஜயோகோ ராஜயோகம் விநா ஹட: ।
ந ஸித்யதி ததோ யுக்மமாநிஷ்பத்தே: ஸமப்யஸேத் ॥ எரு ॥

(இ-ள்) ஹடயோக மின்றியில் இராஜயோகமும், இராஜயோகமின்றியில் ஹடயோகமும் சித்தியாது. அதனால் (இரண்

---

* இவை சாண்டில்யத்திற் கூறப்பட்டுளது.

டிலொன்று சித்தியாதாகலின்) இராஜயோகஞ் சித்திக்குமள வும் ஹடயோக இராஜயோகங்க * ளிரண்டையு மப்பியசிக்கவே ண்டும்.

ஜீவனத்திற்குச் சாதனமாகிய உழவில் ஜீவனசப்தம் பிர யோகிக்கப்படுவதுபோல, இங்கே ஹடயோகத்திற் கந்நியமான சாக்ஷாத் அல்லது பரம்பரையாகிய இராஜயோகசாதனத்தில் இராஜயோகசப்தம் பிரயோகிக்கப்படுகின்றது. நான்காவது உப தேசத்தில் சொல்லப்படும் உன்மனி சாம்பவி முத்திரை முதலிய வடிவினது, அல்லது அபரோக்ஷாநுபூதியிற் சொல்லப்பட்டிருக் கும் † பதினைந்து அங்கவடிவினது, அல்லது வாக்கியசுதையில் சொல்லப்பட்டிருக்கும் திருசியாநுவித்தமுதலிய வடிவினது, இராஜயோகசாதனமாம். (எரு)

(அ-கை) ஹடயோகத்தால் இராஜயோகத்தை யடையுந் தன்மையைக் கூறுகின்றார்:—

𑌕𑍁𑌂𑌭𑌕𑌪𑍍𑌰𑌾𑌣𑌰𑍋𑌧𑌾𑌨𑍍𑌤𑍇 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌮𑍍 ।
𑌏𑌵𑌮𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑍇𑌨 𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌪𑌦𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ॥ எசு ॥

(இ-ள்) கும்பகத்தினு லுண்டாகும் பிராணநிரோதத்தின் மத்தியில் சித்தத்தை (அந்தக்கரணத்தை) நிராசிரயம் (ஆசிரய மில்லாததாகச்) செய்யவேண்டும். அதாவது சம்பிரஞ்ஞாத சமாதியுண்டாகுங்கால் பிரஹ்மாகாரஸ்திதிக்கு அந்நியமானவை

* "காமக்குரோதமுதலிய இத்தோஷங்களினின்றும் நீங்கிய அந்த ஜீவன் சிவனெனப்படுவேன். ஆகையால் அந்தத்தோஷங்கள் நசிக்கும் பொருட்டு உனக்கு உபாயம் சொல்லுகிறேன்,— ஞானம் உபாயமா மென்று சிலர் சொல்லுவர். ஆனல் இங்கே கேவலம் ஞானம் சித்தி யைத் தராது. யோகமின்றிய ஞானம் இங்கே எப்படி மோக்ஷத்தைத் தருவதாம். யோகமும் ஞானமின்றி மோக்ஷகர்மத்தில் சாமர்த்திய முடைய தாகாது. ஆகையால் ஞானத்தையும் யோகத்தையும் முமுக்ஷுக்கள் திட மாய்ப்பியசிக்கவேண்டும்" என்று யோகசிகோநிஷத்திலும் சொல்லப் பட்டிருக்கின்றது.

† பதினைந்து அங்கங்களின் லக்ஷணத்தினை தேஜோபிந்தூபநிஷதம், சர்வவேதாந்த சித்தாந்தசாரசங்கிரக மென்பவற்றிலும் காணலாம்.

களை வைராக்கியத்தால் விலயஞ்செய்யவேண்டு மென்பதாம். இப்படி அப்பியாசத்தின் யோகத்தால் (யுக்தியால்) இராஜயோகபதத்தை யடைகிறான்.

"பொ௱ஹலூ ஹஹெநொவாய யூ௱நஸ௱ஹதிபு¬க்ஷு ‖

யோகமென்பது கவசமுதலியன, உபாயம், தியானம், சேர்க்கை, யுக்தியென்பவற்றிற்குப் பெயர் என்பது அமரம் (நிகண்டு)

(அ-கை) ஹடசித்தியின் ஞாபக(அடையாள)த்தைக் கூறுகின்றார்:—

வவு:க்ரூஶக்ஷம் வஃநெ நிவு ஸஹதா

நாஃஸூ¬டிஸ்வம் நயநெ நிஸு நிராமயெ ।

கூஹோ ஹதா ஸிநு ஜயொாரதீவநம்

நாஷீவிஶு௱ஷி ஹரயொ ஹலக்ஷணம் ‖ எஎ ‖

(இ-ள் * தேகமெலிவு, முகமலர்ச்சி, நாதத்தின் பிரகடத்தன்மை, நேத்திரத்தின் தெளிவு, ரோகமின்மை, விந்து (தாது) ஜயம், உதராக்கினி தீபனம், நாடிசுத்தி யென்பவை ஹடயோக லக்ஷணமாம். (எஎ)

## இரண்டாம் உபதேசம்.

### முடிந்தது.

---

* இது சாண்டில்யோபநிஷத்திற் கூறப்பட்டுளது. சுவேதாசுவதரோபநிஷத்திலும் கூறப்பட்டுளது. ஹடாப்பியாசஞ்செய்யுங்கால் கிரமக்கிரமமாக உண்டாகும் ஹடசித்தியின் சிந்நங்கள் யோகதத்துவோபநிஷதத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டுளது. சிவபுராணத்திலும்.

வூாணெ தூ விஜிதெ ஸஃவு தத்விநாநஹூ வலக்ஷயெக ‖

பிராணன் செவ்வையாய் ஜெயிக்கப்பட்டபோது அக்குறிகள் காணப்படுகின்றன :—

விண௴ூத்ரெஶ்லெஷ்ணாம் தாவ ஃவூஹாவஃவு ஜாயதெ ।

ஹைஹொஜநஸா௺ூம் விராஃூஸநம் தயா ‖

மலமூத்திர சிலேஷ்மங்களுக்கு அற்பபாவமுண்டாகின்றது. வெகு போஜனசாமர்த்தியம், நெடுநேரத்திற்கு மூச்சுவிடுதல்,

𑌲𑌘𑍁𑌤𑍍𑌵𑌂 𑌶𑍀𑌘𑍍𑌰𑌗𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑌮𑍁𑌤𑍍𑌸𑌾𑌹𑌃𑌸𑍍𑌵𑌰𑌸𑍌𑌷𑍍𑌠𑌵𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌰𑍋𑌗𑌕𑍍𑌷𑌯𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌬𑌲𑌂 𑌤𑍇𑌜𑌃𑌸𑍁𑌰𑍂𑌪𑌤𑌾 ॥

இலகுத்துவம், விரைவாய் நடக்குந்தன்மை, உற்சாகம், சுவரநலம், சர்வரோகக்ஷயம், பலம், தேஜசு, அழகு,

𑌧𑍃𑌤𑌿𑌰𑍍𑌮𑍇𑌧𑌾 𑌵𑌯𑌃𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌤𑌾 𑌵𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌤𑌾 ।
𑌤𑌪𑌾𑌂𑌸𑌿 𑌪𑌾𑌪𑌕𑍍𑌷𑌯𑌤𑌾 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌵𑍍𑌰𑌤𑌾𑌦𑌯𑌃 ॥

தைரியம், மேதை (புத்திநுட்பம்), இளமை, ஸ்திரத்துவம், தெளிவு, தவம், பாபங்குறைதல், யஞ்ஞதான விரதாதிகள் என்பன.” கூறப்பட்டுளது. அவ்வாறே.

“ 𑌅𑌲𑍌𑌲𑍍𑌯𑌮𑌾𑌰𑍋𑌗𑍍𑌯𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑍁𑌰𑌤𑍍𑌵𑌂
𑌗𑌨𑍍𑌧𑌃 𑌶𑍁𑌭𑍋 𑌮𑍂𑌤𑍍𑌰𑌪𑍁𑌰𑍀𑌷𑌮𑌲𑍍𑌪𑌮𑍍 ।
𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 𑌸𑍍𑌵𑌰𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑌾 𑌚
𑌯𑍋𑌗𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌹𑌿 𑌚𑌿𑌹𑍍𑌨𑌮𑍍 ॥

பற்றின்மை, ரோகமின்மை, நிஷ்டூரமின்மை, நல்லகந்தம், மலமூத்திரமற்பமாதல், காந்தி, பிரசாதம், சுவர நலமென்பவை யோகப்பிரவிருத்தியின் முதல் அடையாளங்களாம்.

𑌅𑌨𑍁𑌰𑌾𑌗𑌂 𑌜𑌨𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑍇 𑌗𑍁𑌣𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌮𑍍 ।
𑌨 𑌬𑌿𑌭𑍍𑌯𑌤𑌿 𑌚 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥

ஜனங்களுக்குப் பிரியமுண்டாகின்றது. பரோக்ஷத்தில் குணங்களைக் கீர்த்தித்தல், சத்துவங்கள் (ஜீவர்) பயப்படுகிறதில்லை. இவை சித்தியின் உத்தமலக்ஷணம்.

𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑌤𑍍𑌯𑍁𑌗𑍍𑌰𑍈𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑌾𑌧𑌾 𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌨 𑌭𑍀𑌤𑌿𑌮𑍇𑌤𑌿 𑌚𑌾𑌨𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 ॥ ”

உக்கிரமான சீதோஷ்ணங்களால் எவனுக்கு வாதையுண்டாகிறதில்லையோ பிறவற்றினின்றும் பயப்படுகிறதில்லையோ அவனுக்குச் சித்தி நிலைத்ததாம்.” என்று மார்க்கண்டேயத்தும் யோகசித்தி சின்னங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

# மூன்றும் உபதேசம்.

(அ-கை) இனிக் குண்டலி சர்வயோகத்திற்கும் ஆசிரயமா மென்பதைக் கூறுகின்றார்:—

𑌸𑌶𑍈𑌲𑌵𑌨𑌧𑌾𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂 𑌯𑌥𑌾𑌧𑌾𑌰𑍋𑌽𑌹𑌿𑌨𑌾𑌯𑌕𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂𑌯𑍋𑌗𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌤𑌥𑌾𑌧𑌾𑌰𑍋𑌹𑌿𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀 ‖க‖

(இ-ள்) மலை, காடு முதலியவற்றோடுகூடிய பூமிகளுக்கு எப்படி ஆதிசேஷன் ஆதாரமாயிருக்கின்றானோ, அப்படியே யெல்லா யோகதந்திர (அப்பியாச)த்திற்கும் குண்டலி ஆதாரசக்தி (ஆசிரயம்) ஆகும்.

பூமி ஒன்றாயினும் தேசபேதத்தால் பேதமாவதைக்கொண்டு, அது பன்மையாகச் சொல்லப்பட்டது. குண்டலியின் விழிப்பின்றியில் சர்வ யோகோபாயங்களும் வியர்த்தமாகுதலால், அது அவற்றிற்கு ஆதாரமாகுமென்றார். (க)

(அ-கை) குண்டலி விழித்தலாலுண்டாகும் பிரயோசனத்தைக் கூறுகின்றார்:—

𑌸𑍁𑌪𑍍𑌤𑌾 𑌗𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇𑌨 𑌯𑌦𑌾𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀 |
𑌤𑌦𑌾𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿𑌪𑌦𑍍𑌮𑌾𑌨𑌿 𑌭𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌯𑍋𑌽𑌪𑌿𑌚 ‖ உ ‖

(இ-ள்) நித்திரைசெய்யும் குண்டலியானது குருப்பிரசாதத்தாலெப்போது விழிக்கின்றதோ, அப்போது சகல பதுமங்களும் (* ஆறு சக்கரங்களும்) பிரஹ்மகிரந்தி, விஷ்ணுகிரந்தி உருத்திர கிரந்தி என்னும் மூன்று கிரந்திகளும் பேதத்தை யடைகின்றன.

---

* இவ்வாதாரங்களின் இலட்சனம் யோகசூடாமணி, யோகசிகை, ஷட்சக்கர நிருபணமுதலிய நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது. அது இங்கே சுருக்கமா யெழுதப்படுகின்றது :—

(க) யோனிஸ்தானத்திலுள்ள மூலாதார சக்கரம் இரக்தவர்ணமாகிய நான்கு இதழையும், வஶஷஸ என்னும் சுவர்ணமயமாகிய நான்கு வர்ணங்களையும் உடையதாம். இக்கமலத்தின் கர்ணிகையில் நாற்கோண

முள்ளதும், எட்டுச் சூலங்களாற் சூழப்பட்டதும், மஞ்சள்நிறமுள்ளது மான பூமண்டலமிருக்கின்றது. அதன் மத்தியில் நான்கு புஜங்களையுடையதும், கையில் வஜ்ஜிராயுதத்தை யுடையதும், ஐராவதத்திலேறியதுமாகிய பொன்னிறமான * ணம் என்னும் பூமிபீஜ மிருக்கின்றது. அப்பீஜமாகிய விந்துவின் மத்தியில் நான்குமுகங்களும் நான்கு புஜங்களு முள்ளவரும், தண்டம் கமண்டலம் அக்கமாலை அபயமென்பவற்றைத் தரித்தவரும், இரக்தவர்ணமுள்ளவருமாகிய சிசுவடிவப்பிரஹ்மா விருக்கின்றார். அந்த இரக்தபதுமத்தில் இரக்தவர்ணமுள்ளதும்' நான்கு புஜங்களுடையதும், சூலம், கட்டுவாங்கம், வாள், சஷகம் (பானபாத்திரம்) என்பவற்றைக் கையிலுடையதுமாகிய சக்கரத்தை நடத்தும் ஜடாகினி சக்தியிருக்கின்றது. கர்ணிகையின் மத்தியில் மின்னல் வடிவமாகிய திரிகோணமிருக்கின்றது. அதன் மத்தியில் காமவாயுவும் இரக்த வர்ணகாமபீஜமுமிருக்கின்றது. அதன்பேரில் கருநிறமுள்ள சுயம்புலிங்கமிருக்கின்றது. அதற்குமேல் மூன்றரை வலயவடிவமாயிருக்கும் குண்டலிசக்தியிருக்கின்றது. அதன்மேல் இலிங்கத்தின்மீது தண்டாகாரமாக சித்கலையிருக்கின்றது.

(உ) இலிங்கமூலத்திலுள்ள சுவாதிஷ்டான சக்கரம் மின்னலொளி போன்ற விந்துவோடுகூடிய ப ஹ ம ய ர ல என்னும் ஆறு வர்ணங்களுள்ள சிந்தூரநிறமுடைய ஆறு இதழ்களையுடையதாம். அந்தக் கர்ணிகையில் அர்த்தசந்திரவடிவமாய் எட்டுத்தளங்களையுடைய வெண்ணிற ஜலமண்டல மிருக்கின்றது. அதன் மத்தியில் பாசத்தைக் கையிலுடையதும் மகாவாகனத்தி லேறியதுமாகிய வம் என்னும் அப்பு பீஜமிருக்கின்றது. அதன்மத்தியில் விஷ்ணு சதுர்ப்புஜராய், சங்கு சக்கர கதாபத்மதாரியாய், பீதாம்பரராய், வனமாலை ஸ்ரீவற்சம் கௌஸ்துபம் என்பவற்றைத் தரித்தவராய்க் கருடாரூடராய், யௌவன வடிவரா யிருக்கின்றார். அக்கர்ணிகையில் இரக்த பதுமத்தின்பேரில் கருநிறமும், நான்கு புயங்களும், மூன்று நேத்திரங்களும், வளைந்த பற்களுமுடைய பயங்கரமான ராகினி யென்னும் சக்தியானது வெள்ளையன்னம் இரக்ததாரை யென்பவற்றிற் பிரியமுடையதாய்ச், சூலம் சங்கு உடுக்கை உளியென்பவற்றைத் தரித்திருக்கின்றது.

(ங) நாபிமூலத்திலுள்ள மணிபூரகம் மேகநிறமுள்ள ட ட ண த த த த ந ப ப என்னும் பத்து வர்ணங்களோடுகூடிய பத்து தளமுடையதாம். அக்கர்ணிகையில் திரிகோணவடிவமும், அத்திரிகோ

* ஓம் என்னும் பீஜமென்றும் கூறுவர்.

ணத்திற்கு வெளியில் மூன்று சுவஸ்திகைகளோடு கூடியதும் இரக்தவர்ண முள்ளதுமாகிய அக்கினிமண்டலமு மிருக்கின்றது. (இங்கே மத்தியில் மேல்நோக்கிய நாலு வாயில்களையுடைய இரண்டு ரேகை சுவஸ்திகை யெனப்பட்டது) அதன் மத்தியில் சதுர்ப்புஜமுள்ளதும், வஜ்ஜிரம் சக்தி வரம் அபயமென்பவற்றைத் தரித்ததும், மேஷத்திலேறியுள்ளது மாகிய ரம் என்னும் அக்கினிபீஜ மிருக்கின்றது. அதில் விருஷபா ரூடரும், செந்நிறமுள்ளவரும், இரண்டு புஜங்களுடையவரும், வரம் அபய மென்பவற்றைத் தரித்தவரும், வெண்ணீறு மெண்மையான ஆபரண முதலியவற்றால் வெண்மையாக்கப்பட்ட தேகமுடையவரும், விருத்தரு மாகிய உருத்திரன் இருக்கிறார். கர்ணிகையில் இரக்தபதுமத்தில் மூன்று முகம் மூன்றுகண் நான்குபுயம் கோரைப்பற்கள் என்பவற்றை யுடைய தும், நீலவர்ணமுள்ளதும், வஜ்ரம் சக்தி அபயம் வரதம் என்பவற்றைத் தரித்ததும், இரக்தத்தோடுகூடிய கேசரான்னம் மாமிசமென்பவற்றை விரும்பியதுமாகிய லாகினியென்னும் சக்தி யிருக்கின்றது.

(ச) இருதயஸ்தானத்திலுள்ள அநாகதசக்கரம் உச்சித்திலகப் புஷ் பம்போன்ற சிந்தூரவர்ணமுள்ள விந்துவோடுகூடிய க வ ம வ ஊ வ ஹ ஜ ஸ ஞ ட ○ என்னும் பன்னிரண்டு வர்ணங்களோடுகூடிய பன் னிரண்டு இதழ்களை யுடையது. அக்கர்ணிகையில் புகைநிறமுள்ள அறு கோண வடிவமான வாயுமண்டல மிருக்கின்றது. அதன்மேல் கோடி மின்னல் ஒளிபோன்ற திரிகோணமிருக்கின்றது. அதின்மேல் கறுமானி லேறியதும், புகைபோன்ற கறுநிறமுள்ளதும், நாற்புயமுடையதும், அங்குசத்தைக் கையிலுடையதுமாகிய யம் என்னும் வாயுபீஜ மிருக் கின்றது. அதன் மத்தியில் இரண்டு புயங்களும் வராபயகரமும் திரிநேத் திரமுமுள்ள ஹம்சநிறமான ஈசனிருக்கின்றார். அக்கர்ணிகையில் இரக்த பதுமத்தின் பேரில் மஞ்சள்நிறமுள்ளதும். நான்குபுயங்களுடையதும். பாசம் கபாலம் வரம் அபயமென்பவற்றைக் கையிலுடையதும், மஞ்சள் வஸ்திரமுடுத்துச் சர்வாலங்காரத்தோடு கூடியதும், அமிர்தத்தால் நனைக் கப்பட்ட இருதயமுடையதும், கங்காளமாலை தரித்ததுமாகிய காகினி யென்னும் சக்தி யிருக்கின்றது. மத்திய திரிகோணத்தில் அர்த்த சந்திர விந்துரூப மஸ்தகமுடையதும், காமத்தைக் கக்கும் பிரகாசமுடை யதுமான சுவர்ணவர்ண பாணலிங்கமாகிய சிவமிருக்கின்றது. அதன் கீழ் மிக ஸ்திரமுள்ள தீபமொட்டு வடிவமான ஹம்ஸரூபியாகிய ஜீவாத் மாவிருக்கின்றது. இக்கர்ணிகையின் கீழ் இரக்தவர்ணமுள்ள ஊர்த்து வமுகமாகிய அஷ்டதள (எட்டிதழ்ப்) பதும மிருக்கின்றது. அதில் கற்பகவிருக்ஷம், இரத்தினவேதி (மேடை), சந்திரன், சூரியன், கொடி

முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட மானசபூஜைக்குரிய ஸ்தானமிருக்கின்றது.

(ரு) கண்டத்தினடியிலுள்ள விசுத்தசக்கரம் இரக்தநிறமான கேசரந்தமுள்ளதும், இரக்தவர்ணமான அ ஆ இ ஈ உ ஊ ஋ ௠ ஌ ௡ எ ஏ ஐ ஒ ஓ ஔ அம் அ: என்னும் பதினாறு வர்ணங்களோடுகூடிய பதினாறு இதழ்களையுடையதுமாம். கர்ணிகையில் வட்டவடிவமாகிய வெண்ணிறமான ஆகாயமண்டலமிருக்கின்றது. அதன் மத்தியில் திரிகோணமும் அதில் சந்திரமண்டலமுமிருக்கின்றது. அதன்மேல் வெள்ளை வஸ்திரமுடுத்ததும், நான்குபுயங்களுடையதும், பாசம் அங்குசம் வரம் அபயம் என்பவற்றைத்தரித்ததும், வெள்ளைநிறமுடையதும், வெள்ளையானையிலேறியதுமாகிய ஹம் என்னும் ஆகாயபீஜமிருக்கின்றது. அதன் மத்தியில் இடபத்தின் பேரிலுள்ள மகாசிங்காசனத்தில் சதாசிவன் அர்த்தநாரீசுவரராயிருத்தலால் பாதியங்கம் சுவர்ணநிறமும் பாதியங்கம் வெண்ணிறமுமாக விளங்குகிறவராய், ஐந்துமுகங்களும் மூன்று நேத்திரமும் பத்துப்புஜங்களுமுடையவராய், சூலம், டங்கம் (கல்லுளி), வாள், வஜ்ஜிரம், எரி, நாகம், மணி, அங்குசம், பாசம், அபயம் என்பவற்றைப் பத்துக் கையிலுமுடையவராய்ப், புலித்தோலாடையுடுத்தவராய், சர்வாங்கமும் விபூதியணிந்தவராய், நாகாபரணசோபிதராய், அமுதத்தை யொழுக்கும் அதோமுகமாகிய பாதிப்பிறையைச் சூடியவராயிருக்கின்றார். இக்கர்ணிகையில் சந்திரமண்டலமத்தியில் இதன்பேரிலிருக்கும் ஸாகினியென்னும் சக்தியானது வெண்ணிறமும் நான்கு புயங்களும் பாசம் அங்குசம் தனுசு பாணமென்பவற்றையுடைய கைகளும் பீதாம்பரமும் ஐந்துமுகமும் மூன்று நேத்திரமுமுடையதாயிருக்கின்றது.

(சு) புருவநடுவிலுள்ள ஆஜ்ஞாசக்கரம் சித்திரவர்ணமுள்ள ஹ க்ஷ என்னும் இரண்டு வர்ணங்களோடுகூடிய வெண்ணிறமான இரண்டு இதழ்களையுடையது. கர்ணிகையின் மத்தியில் சக்கரத்தைச் செலுத்தும் ஹாகினி சக்தியானது வெண்ணிறமுள்ளதாயும், செந்நிறமான ஆறு முகங்களும் மூன்றுநேத்திரமும் ஆறுபுஜங்களுமுடையதாயும், வரம் அபயம் அக்கமாலை கபாலம் உடுக்கை புத்தகமென்பவற்றைத் தரித்ததாயும் சுக்கிலபதுமத்தின் பேரிலிருக்கின்றது. அதற்குமேல் திரிகோணத்தில் மின்னல் வடிவான வெண்ணிறமுள்ள இதரவென்னும் இலிங்கமிருக்கின்றது. அதற்குமேல் திரிகோணத்தில் பிரணவவடிவமாகிய அந்தராத்மா தீபத்தைப்போன்ற ஜோதியாயிருக்கின்றது. அதன் நான்கு திக்குகளிலும் அந்தரிக்ஷ(ஆகாய)த்தில் பொறிபிம்பங்களாற் சூழப்பட்டதும்

(அ-கை) இதுவுமது:—

ப்ராணஸ்ய ஶூந்யபதவீ ததா ராஜபதாயதே ।
ததா சித்தம் நிராலம்பம் ததா காலஸ்ய வஞ்சநம் ॥ ௩ ॥

(இ-ள்) சூனியபதவியெனும் சுழுமுனை பிராணவாயுவின் இராஜமார்க்கமாக ஆசரிக்கப்படுகின்றது. (சுகமாகப் போக்குச் சம்பவித்தலால்). அப்போது சித்தம் நிராலம்ப(நிர்விஷய)மாகின்றது. அப்போது (சித்தம் நிராலம்பமாகுங்கால்) காலனை வஞ்சி(கட)த்தலு முண்டாகின்றது. (௩)

---

எரிகின்ற விளக்குப்போன்ற தனது தேஜசால் மூலமுதல் பிரஹ்மாரந்திரம் வரையிலும் பிரகாசிப்பதுமாகிய ஜோதியிருக்கின்றது. அதன்பேரில் சூக்ஷ்மவடிவமாகிய மனமிருக்கின்றது. அதன்பேரில் சந்திரமண்டலத்தில் சக்தியோடுகூடிய ஹம்ஸமாகிய பரமசிவமிருக்கின்றது. இதற்குமேல் காரண அவாந்தரசரீரம் சகஸ்ரதளகமலமுதலியவற்றின் ஸ்தானம் சொரூபமுதலியன சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வாறு ஆருதாரங்களின் இலக்ஷணம் சொல்லப்பட்டது. இவ்வாருதாரங்கட்கும் முறையே கணபதி, பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுவரன், சதாசிவன் இவர்களை அதிபதிகளாகச் சொல்லுவது முண்டு. இதை விரிவா யறியவிரும்புவோர் ஷட்சக்ரநிருபணமுதலிய நூல்களிற் காண்க.

"க. மூல்தாரம் நாலிதழ்க்கமலமுடையது. உ. கந்தஸ்தானம் (சுவாதிஷ்டானம்) ஆறிதழ்க்கமலமுடையது. ௩. நாபி (மணிபூரகம்) பத்திதழ்க்கமலமுடையது. ௪. இருதயம் (அநாஹதம்) எட்டிதழ்க்கமலமுடையது. ரு. கண்டஸ்தானம் (விசுத்தி) பதினாறிதழ்க்கமலமுடையது. சு. தாலுஸ்தானம் (அண்ணம்) இருபத்து நாலிதழ்க்கமலமுடையது. எ. புருவநடு (ஆஞ்ஞை) நாலிதழ்க்கமலமுடையது. அ. பிரஹ்மாந்திரம் பதினாறிதழ்க்கமலமுடையது. ௯ சிரஸுக்குமேல் ஸ்தானம் ஒன்பதிதழ்க்கமலமுடையது. ௧௦. துவாதசாந்தஸ்தானம் ஆயிரமிதழ்க்கமலமுடையது. இக்கமலம் வாமாதி நவசக்திகளாகிய கேசரங்களையும், சமனையாகிய ஐந்து கர்ணிகைகளையுமுடையதாய் சூரியன் சந்திரன் அக்கினியென்பவர்களின் மண்டலங்களை யடைந்ததாயிருக்கும். அம்மூன்று மண்டலங்களுக்கு மே உன்மனியந்தமாகிய சக்திமண்டலாந்தத்தில் சாவவியாபகமான சிவமிருக்கின்றது." என்று பத்தாதாரம் சித்தாந்தசாராவளியிற் சொல்லப்பட்டுளது. இதன் விரிவை ஆகமங்களிற் காண்க.

(அ-கை) சுழுமுனையின் பரியாயங்களைக் கூறுகின்றார்:—

ஸுஷும்ணா ஶூந்யபதவீ ப்ரஹ்மரந்த்ரம் மஹாபத: ।
ஶ்மஶாநம் ஶாம்பவீ மத்யமார்கஶ்சேத்யேகவாசகா: ॥

(இ-ள்) சுழுமுனை, சூனியபதவி, பிரஹ்மரந்திரம், மகாபதம் (பெருவழி), மயானம், சாம்பவி, மத்தியமார்க்கமென்னுமிவை ஏகவாசகங்க(பரியாயங்க)ளாம். (ச)

(அ-கை) இதுவுமது:—

தஸ்மாத்ஸர்வப்ரயத்நேந ப்ரபோதயிதுமீஶ்வரீம் ।
ப்ரஹ்மத்வாரமுகே ஸுப்தாம் முத்ராப்யாஸம் ஸமாசரேத் ॥

(இ-ள்) ஆதலால் (குண்டலிபோதத்தினாலேயே ஷட்சக்ர பேதமுதலியவை யுண்டாகின்றமையால்) முழுமுயற்சியோடும் பிரஹ்மத்துவாரத்தின் (சச்சிதானந்தலக்ஷணப் பிரஹ்மத்தை யடைதற் குபாயமாகிய சுழுமுனையின்) முகத்தில் [சுழுமுனைவாயிலை முகத்தால் மூடிக்கொண்டு] நித்திரைசெய்யு மீசுவரியாகிய குண்டலியை விழிப்பிக்க மகாமுத்திரை முதலியவற்றைச் செவ்வையா யாசரிக்கவேண்டும். (ரு)

## முத்திரை.

(அ-கை) முத்திரைகளின் பெயர்களைக் கூறுகின்றார்:—

மஹாமுத்ரா மஹாபந்தோ மஹாவேதஶ்ச கேசரீ ।
உட்யாநம் மூலபந்தஶ்ச பந்தோ ஜாலந்தராபித: ॥
கரணீ விபரீதாக்யா வஜ்ரோலீ ஶக்திசாலநம் ॥ சு-எ ॥

(இ-ள்) மகாமுத்திரை, மகாபந்தம், மகாவேதம், கேசரி, உட்டியானம், மூலபந்தம், ஜாலந்தரபந்தம், விபரீதகரணி, வஜ்ரோலி, சக்திசாலனம் என்னுமிவை * முத்திரைகளாம்.

---

* இம்முத்திரைகள் சாண்டில்யம் தியானபிந்து யோகதண்டலி யோகசூடாமணி யோகதத்துவமுதலிய உபநிஷத்துக்களிலும், சிவசம்ஹிதைகோரக்ஷசம்ஹிதை முதலியவற்றிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. வாசிட்டத்திலும் "அபானனைச் சுருக்குதலும பிராணனைத்தடுத்தலும் அண்ணாக்கின்மேல் நாக்கை வைத்தலும் யோகசாதனமாம்" என்னும் வாக்கியத்தால் மூலபந்த கேசரிமுத்திரைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

இங்கு சொல்லப்படாத சிலமுத்திரைகளும் பிறநூல்களிற் காணப்படுகின்றன. அவைவருமாறு :—

**தடாகமுத்திரை :—** பச்சிமதானுசனத்தி லுட்கார்ந்து வயிற்றினைப் புடைக்கச்செய்து தடாகத்தினைப்போல வைத்தல். இதனால் ஜராமரணம் நீங்கும்.

**மண்டூகமுத்திரை :—** வாய் மூடிக்கொண்டு நாநுனியை மேலுயர்த்தி இங்குமங்குமாய்த் திருப்பி மேலிருந்தொழுகும் அமிருதத்தினை விழுங்கிக் கொண்டிருத்தல். இது சரீரத்தில் எவ்விதரோகமும் உண்டாகவிடாது மூப்புண்டாகாமற்றடுத்து சரீரத்தினை ரக்ஷிக்கும்.

**அசுவினிமுத்திரை :—**

ஆகுஞ்சயேத்குதத்வாரம் ப்ரகாசயேத்புந: புந: ।
ஸாபவேதச்விநீமுத்ரா சக்திப்ரபோதகாரிணீ ॥
பலம்புஷ்டிகரீசைவ அகாலமரணம்ஹரேத் ॥

குதத்துவாரத்தினை அடிக்கடி மூடித்திறத்தல். இது குதரோகங்களைப் போக்கிச்சரீரபலத்தையும் சுருசுருப்பினையும் கொடுத்து குண்டலியினை விழிப்பித்து அகாலமரணம் வராது தடுக்கும்

**பாசினிமுத்திரை :—** இரண்டுகால்களையும் எடுத்து கழுத்தின்பேரில் வைத்து தொங்கவிட்டிருத்தல். இது குண்டலியை விழிப்பித்து சரீரத்திற்குப் புஷ்டியையும் பலத்தையும் கொடுக்கும்.

**காகிமுத்திரை :—**

காகசஞ்சுவதாஸ்யேந பிபேத்வாயும்சநைச்சநை: ।
காகீமுத்ராபவேதேஷா ஸர்வரோகவிநாசிநீ ॥

உதடுகளை காக்கையலகுபோற் செய்து வாயுவை மெல்லமெல்ல உள்ளே வாயினாலிழுத்தல், இது சகலரோகங்களையும் நீக்கி காக்கையினைப்போல் சிரஞ்சீவியாக்கும்.

**மாதங்கினீமுத்திரை :—** கழுத்தளவு ஜலத்தில் நின்று, மூக்குத்துவாரங்களால் ஜலத்தினை இழுத்து, வாயினால் வெளிப்படுத்தலும், வாயினாற் பருகி மூக்குத்துவாரத்தினால் வெளிப்படுத்துதலுமாம். இப்படித்தினமும் அநேகமுறை அடிக்கடி ஏகாந்தஸ்தானத்திருந்து பழகினால் யானைபோன்ற பலசாலியாய் எவ்விதரோகமுமில்லாது மிருத்தியுவை ஜயிப்பன்.

**புஜங்கினீமுத்திரை :—** கழுத்தினை முன்னே சாய்த்து வாயினால் வாயுவை உள்ளே இழுத்துக்கொண்டிருத்தல். இது அஜீர்ணம், அக்கினி மாந்தியமுதலிய உதரரோகங்களை நீக்கிச் சுகத்தினைக்கொடுக்கும்.

(அ-கை) முத்திரையின் பலத்தைக் கூறுகின்ருர்:—

ஏதா ஹி முத்ரா: ஸகலா ஜராமரணநாஶநா: ॥ எ ॥

(இ-ள்) இப்பத்து முத்திரைகளும் ஜராமரணங்களைப் போக்குகிறவைகளாயும். (எ)

ஆதிநாதோதிதா திவ்யா அஷ்டைஶ்வர்யப்ரதாயகா: ।
வல்லபா: ஸர்வஸித்தாநாம் துர்லபா மருதாமபி ॥ அ ॥

ஆதிநாதரால் சொல்லப்பட்டவைகளாயும், திவ்விய(உத்தம, மாயும், அணிமாதியஷ்டைசுவரியங்களைத் தருகின்றவைகளாயும்) கபிலாதி சகலசித்தர்களுக்கும் பிரியமுள்ளனவாயும், தேவர்களாலும் அடைதற்கரியவாயு மிருக்கின்றன. (அ)

கோபநீயம் ப்ரயத்நேந யதா ரத்நகரண்டகம் ।
கஸ்யசிந்நைவ வக்தவ்யம் குலஸ்த்ரீஸுரதம் யதா ॥ கூ ॥

இவை இரத்தினங்களின் சிமிழைப்போல மிகுந்த பிரயத்தினத்தால் மறைத்துவைக்கத்தக்கனவாம். குலஸ்திரீ சங்கமத்தைப்போல ஒருவருக்கும் சொல்லத்தக்கனவன்று. (கூ)

அஷ்ட ஐசுவரியங்களாவன:- அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்பனவாம்.

அவற்றுள், க. சங்கற்பமாத்திரத்தால் பிரகிருதியை (சுபாவத்தை)க் கெடுத்தலால் பரமாணுவைப்போல தேகம் சூக்ஷமமாதல், அணிமா.

உ. பிரகிருதியைப் பூரித்தலால் ஆகாயாதிகளைப்போல தேகம் பெரிதாதல், மகிமா.

ங. மிக இலகுத்துவமு(எண்மையு)டையனவாயிருக்கும் பஞ்சுமுதலியவை மலைமுதலியவற்றைப்போல குருத்துவமு(திண்மையு)டையவாதல், கரிமா.

ச. மிகக்குருத்துவமுடைய பர்வதமுதலியவை பஞ்சுமுதலிவற்றைப்போல இலகுத்துவமுடையவாதல், இலகிமா.

ரு. சகலமும் முன்னிற்றல், பிராப்தி. அது பூமியிலிருந்துகொண்டே விரல்நுனியால் சந்திரனைத் தொடுத்தல்போல.

௬. இச்சித்தபடி முடித்தல், பிராகாமியம். அது ஜலத்திற் போல பூமியிலும் முழுகியெழும்புதல் முதலியன.

௭. பூதபௌதிகங்களைச் சிருஷ்டித்தல் திதித்தல் சங்கரித்தலாகிய விசேஷசாமர்த்தியம், ஈசித்துவம்.

௮. பூதபௌதிகங்களைச்சுவாதீனம் (வசம்) செய்தல், வசித்துவம்.

மகாமுத்திரை.

(அ-கை) பத்துவிதமுத்திரைகளில் முதலில் கூறியிருக்கும் மகாமுத்திரையை முதலிற் கூறுகின்றார்:—

𑌪𑌾𑌦𑌮𑍂𑌲𑍇𑌨 𑌵𑌾𑌮𑍇𑌨 𑌯𑍋𑌨𑌿𑌂 𑌸𑌂𑌪𑍀𑌡𑍍𑌯 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 ।

𑌪𑍍𑌰𑌸𑌾𑌰𑌿𑌤𑌂 𑌪𑌦𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌧𑌾𑌰𑌯𑍇𑌦𑍍𑌦𑍃𑌡𑌮𑍍 ॥௧௦॥

(இ-ள்) * சுருக்கிய இடது காற்குதியால் யோனியைச் செவ்வையாய்ப் பீடித்து, வலது காலை நீட்டிப் பூமியில் செவ்வையாய்ப் பொருத்தி, விரல்களை நீட்டிக் கைகளால் (சம்பிரதாயத்தாற் சுருக்கிய சுட்டு விரல்களால்) திடமாகக் காற்பெருவிரலைப் பிடிக்கவேண்டும். (௧௦)

(அ-கை) இதுவுமது:—

𑌕𑌣𑍍𑌠𑍇 𑌬𑌂𑌧𑌂 𑌸𑌮𑌾𑌰𑍋𑌪𑍍𑌯 𑌧𑌾𑌰𑌯𑍇𑌦𑍍𑌵𑌾𑌯𑍁𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌤𑌃 ।

𑌯𑌥𑌾 𑌦𑌣𑍍𑌡𑌹𑌤𑌃 𑌸𑌰𑍍𑌪𑍋 𑌦𑌣𑍍𑌡𑌾𑌕𑌾𑌰𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌤𑍇 ॥ ௧௧ ॥

(இ-ள்) (இரண்டு துவாரங்களாலும் பூரித்து) கண்டத்தில் பந்தனம் செய்து அதாவது ஜாலந்தரபந்தம் செய்து வாயுவை மேலே (சுழுமுனையிற்) கொள்ளவேண்டும். தடியினு லடிக்கப்பட்ட பாம்பு எப்படித் தண்டவடிவ மாகின்றதோ, (௧௧)

𑌋𑌜𑍍𑌵𑍀𑌭𑍂𑌤𑌾 𑌤𑌥𑌾 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀 𑌸𑌹𑌸𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍 ।

𑌤𑌦𑌾 𑌸𑌾 𑌮𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌦𑍍𑌵𑌿𑌪𑍁𑌟𑌾𑌶𑍍𑌰𑌯𑌾 ॥ ௧௨ ॥

அப்படி குண்டலியென்னு மாதாரசக்தி சீக்கிரமாகவே சரளமா(நிமிர்)கின்றது அப்போது இடைபிங்கலைகளை ஆசிரயித்திருக்கும் மரணாவஸ்தை யுண்டாகின்றது. (௧௨)

---

* இது சாண்டில்யதியானபிந்து யோகசூடாமணி யுபநிஷதங்களிற் கூறப்பட்டுளது.

𑌤𑌤𑌃 𑌶𑌨𑍈𑌶𑍍𑌶𑌨𑍈𑌰𑍇𑌵 𑌰𑍇𑌚𑌯𑍇𑌨𑍍𑌨𑍈𑌵 𑌵𑍇𑌗𑌤𑌃 ।
𑌮𑌹𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌂 𑌚 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌵𑌿𑌬𑍁𑌧𑍋𑌤𑍍𑌤𑌮𑌾𑌃 ।
𑌇𑌯𑌂 𑌖𑌲𑍁 𑌮𑌹𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌮𑌹𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑍈𑌃 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌾 ॥ கங ॥

அதன்பின் வாயுவை மெல்லமெல்லவே இரேசிக்கவேண்டும். பலங்குறையுமாகலின், வேகமாயிரேசிக்கலாகாது. இந்த மகா முத்திரை மகாசித்தர்களாகிய ஆதிநாதர் முதலியோராற் காட்டப்பட்டதாம். (கங)

வாயுவை மேலே கொள்ளவேண்டுமென்பதனுல் மூலபந்தம் சூசிப்பிக்கப்பட்டது. அதுவோ யோனியைப் பீடித்தலாலும் ஜிஹ்வாபந்தத்தினுலும் செய்யப்பட்டதாமென்று சம்பிரதாயமுடையோர் கூறுவர். குண்டலி விழிக்குங்கால் பிராணன் சுழுமுனையிற் பிரவேசித்தலால், இரண்டும் பிராணயோகத்தை யடைதலின், இடைபிங்கலைகளை யாசிரயித்திருக்கும் மாணுவஸ்தை யென்ருர்.

(அ-கை) மகாமுத்திரை யென்னும் பெயர்ப்பொருளைக்கூறுகின்ருர்:—

𑌮𑌹𑌾𑌕𑍍𑌲𑍇𑌶𑌾𑌦𑌯𑍋 𑌦𑍋𑌷𑌾𑌃 𑌕𑍍𑌷𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌰𑌣𑌾𑌦𑌯𑌃 ।
𑌮𑌹𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌂 𑌚 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌵𑌿𑌬𑍁𑌧𑍋𑌤𑍍𑌤𑌮𑌾𑌃 ॥ கச ॥

(இ-ள்) அவித்தைமுதலிய பஞ்சக்கிலேசமுதலியனவும் அவற்றின் காரியமாகிய சோக முதலியனவுமாகிய மகாகிலேசாதிதோஷங்களும் மரணமுதலியனவும் நசிக்கின்றன. இதனுற்ருன் இதனை மகாமுத்திரையென்று விசேஷ ஞானேத்தமர்கள் கூறுகின்றனர்.

மகா கிலேசங்களும் மரணமுதலியனவுமாகிய தோஷங்களை முத்திரிப்பது (சமிப்பது-கெடுப்பது) மகாமுத்திரையாமென்பது பதப்பொருள். (கச)

(அ-கை) மகாமுத்திரையை யப்பியாசிக்குந் தன்மையைக் கூறுகின்ருர்:—

* சந்த்ராங்கே து ஸமப்யஸ்ய ஸூர்யாங்கே புநரப்யஸேத் |
யாவத்துல்யா பவேத்ஸங்க்யா ததோ முத்ராம் விஸர்ஜயேத் ||

(இ-ள்) சந்திரநாடியால் உபலக்ஷிக்கப்பட்ட வாமாங்கத்தில் செவ்வையா யப்பியசித்து, மறுபடியும் இடது அங்கத்தில் செய்த கணக்களவு சூரியநாடியா லுபலக்ஷிக்கப்பட்ட வலது அங்கத்தில் அப்பியசிக்கவேண்டும். கணக்குச் சரிப்பட்டவுடன் முத்திரையைவிடவேண்டும்.

இதில் இது கிரமமாம்:—காலை மடித்து இடது குதியை யோனிஸ்தானத்தில் சேர்த்து, வலதுகாலை நீட்டி அதன் பெருவிரலைக் கைச்சுட்டுவிரலாற் பிடித்துக்கொண்டு அப்பியசித்தல், வாமாங்காப்பியாசமாம். இவ்வப்பியாசத்திற் பூரித்த வாயு வாமாங்கத்தில் நிற்கும். காலை மடித்து வலது குதியை யோனிஸ்தானத்திற் சேர்த்து, இடதுகாலைநீட்டி அதன் பெருவிரலைக் கைச்சுட்டுவிரலாற் பிடித்து அப்பியசித்தல் வலது அங்க அப்பியாசமாம். இவ்வப்பியாசத்திற் பூரித்த வாயு வலதங்கத்தில் நிற்கும். (௧௫)

(அ-கை) மகாமுத்திரையின் குணங்களைக் கூறுகின்றார்:—

† நஹி பத்யமபத்யம் வா ரஸா: ஸர்வே(அ)பி நீரஸா: |
அபி புக்தம் விஷம் கோரம் பீயூஷமிவ ஜீர்யதி || ௧௬ ||

(இ-ள்) மகாமுத்திரையை அப்பியசிப்பவர்களுக்குப் பத்தியாபத்திய விசாரமில்லாமையால், சாப்பிட்ட கசப்புப்புளிப்பு முதலிய சகல ரசங்களும், இரசமற்ற பதார்த்தங்களும் ஜீரணமாகின்றன. சாப்பிட்ட அந்நம் கோரமாகிய விஷமானாலும் அமிர்தம்போல ஜீரணமாகின்றது. (எனின், மற்றவைகளுக்குக் கேட்பானேன் என்பது தாற்பரியம்) (௧௬)

(அ-கை) இதுவுமது:—

† க்ஷயகுஷ்டகுதாவர்த்தகுல்மாஜீர்ணபுரோகமா: |
தஸ்ய தோஷா: க்ஷயம் யாந்தி மஹாமுத்ராம் து யோ(அ)ப்யஸேத் ||

---

* இது யோகசூடாமணி வாக்கியம்.

† இவை யோகசூடாமணியுபநிஷத வாக்கியம்.

(இ-ள்) மகாமுத்திரையினை யப்பியசிப்பவன் எவனோ அவனுக்கு க்ஷயம் (இராஜரோகம்), குஷ்டம், மூலம், குன்மம், அஜீரணத்தாலுண்டாகும் மகோதரம் சுரமுதலியனவுமாகிய தோஷங்கள் நசிக்கின்றன. (௧௭)

(அ-கை) மகாமுத்திரையை முடித்து, அது இரகசியமாய் வைக்கத்தக்கதா மென்பதைக் கூறுகின்றார்:—

* 𑌕𑌥𑌿𑌤𑍇𑌯𑌂 𑌮𑌹𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌮𑌹𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑌾 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍 ।
𑌗𑍋𑌪𑌨𑍀𑌯𑌾 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌨 𑌦𑍇𑌯𑌾 𑌯𑌸𑍍𑌯 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 ॥ ௧௮ ॥

(இ-ள்) அப்பியாசிக்கும் புருஷர்களுக்கு மகாசித்தியைத் தரும். இம்மகாமுத்திரை என்னுற் சொல்லப்பட்டது. இது பிரயத்தினத்தால் இரகசியமாய் வைக்கத்தக்கதாம். அதிகாரிகளல்லாதா ரொருவருக்குந் தரத்தக்கதன்று. (௧௮)

மகாபந்தம்.

(அ-கை) மகாபந்தத்தைக் கூறுகின்றார்:—

† 𑌪𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑌿𑌂 𑌵𑌾𑌮𑌸𑍍𑌯 𑌪𑌾𑌦𑌸𑍍𑌯 𑌯𑍋𑌨𑌿𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑍇𑌤𑍍 ।
𑌵𑌾𑌮𑍋𑌰𑍂𑌪𑌰𑌿 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 𑌚𑌰𑌣𑌂 𑌤𑌥𑌾 ॥ ௧௯ ॥

(இ-ள்) இடதுகாற் குதியை யோனிஸ்தானத்தில் சேர்த்து, இடது தொடையின்பேரில் வலதுபாதத்தைச் செவ்வையாய் வைத்து. (௧௯)

(அ-கை) இதுவுமது:—

𑌪𑍂𑌰𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌵𑌾𑌯𑍁𑌂 𑌹𑍃𑌦𑌯𑍇 𑌚𑍁𑌬𑍁𑌕𑌂 𑌦𑍃𑌢𑌮𑍍 ।
𑌨𑌿𑌷𑍍𑌪𑍀𑌡𑍍𑌯 𑌵𑌾𑌯𑍁𑌮𑌾𑌕𑍁𑌞𑍍𑌚𑍍𑌯 𑌮𑌨𑍋𑌮𑌧𑍍𑌯𑍇 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑍇𑌤𑍍 ॥ ௨௰ ॥

(இ-ள்) அதன்பின் வாயுவைப் பூரித்து, மோவாய்க்கட்டையை இருதயத்தில் செவ்வையாய் ஸ்தாபித்து, யோனிஸ்தான (ஆதாரத்)த்தைச் சுருக்கி மனதை மத்தியநாடியிற் சேர்க்கவேண்டும்.

---

* இது யோகசூடாமணி வாக்கியம்.

† இதனைச் சாண்டில்யோபநிஷத்திற் காண்க.

மோவாய்க்கட்டையை இருதயத்தில் வைத்து என்பதனால் ஜாலந்தரபந்தமும், யோனிஸ்தானத்தைச் சுருக்கி யென்பதனால் மூலபந்தமும் சூசிப்பிக்கப்பட்டது. அது ஜிஹ்வாபந்தத்தாற் செய்யப்பட்டதாயிருத்தலால் செய்யவேண்டியதில்லை. (௨௦)

(அ-கை) இதுவுமது :—

தாரயித்வா யதாஶக்தி ரேசயேதநிலம் ஶநை꞉ |
ஸவ்யாங்கே து ஸமப்யஸ்ய தக்ஷாங்கே து புநரப்யஸேத் ||

(இ-ள்) இயன்றமட்டும் கும்பித்து மெல்ல மெல்ல வாயுவை இரேசிக்கவேண்டும். இடது அங்கத்தில் செவ்வையா யப்பியசித்து, மறுபடியும் வலது அங்கத்திலும் அதற்குச் சரியான கணக்கு வருமளவும் அப்பியசிக்கவேண்டும். (௨௧)

(அ-கை) இனி ஜாலந்தரபந்தத்தில் கழுத்தை சுருக்குதல் உபயோகமில்லையென்பதைக் கூறுகின்றார் :—

அத்ர கேஷாஞ்சித் கண்டபந்தம் விவர்ஜயேத் |
ராஜதந்தஸ்தஜிஹ்வாயாம் பந்த꞉ ஶஸ்தோ பவேதிதி ||
அயம் து ஸர்வநாடீநாமூர்த்வம் கதிநிரோதக꞉ || ௨௨ ||

(இ-ள்) முன்பற்களில் நிற்கும் நாவை அதன்மேற்பாகத்தில் சம்பந்தித்தலாகிய(ஜிஹ்வா)பந்தம், கழுத்தைச் சுருக்குதலை விட சிலாக்கியமாகுமென்னும் ஏதுவால், இங்கே (ஜாலந்தரபந்தத்தில்) கழுத்தைச் சுருக்குதலாகிய பந்தத்தை நீக்கவேண்டுமென்பது சிலர் கொள்கை. இந்த ஜிஹ்வா(சிங்குவை)பந்தம் சுழுமுனைக்கன்னியமாகிய சகல நாடிகளிலும் வாயு மேற்செல்லுதலைத் தடுப்பதாம்.

சகல நாடிகளிலும் வாயு மேற்செல்லுதலைத் தடுப்பதாம் என்பதனால், "நாடிக் கூட்டங்களைக் கட்டுகின்றது" என்னும் ஜாலந்தரத்தில் கூறிய பலம் இதனாலேயே சித்திக்கின்றது என்பது சூசிப்பிக்கப்பட்டது. (௨௨)

(அ-கை) மகாபந்தத்தின் பலத்தைக் கூறுகின்றார் :—

அயம் கலு மஹாபந்தோ மஹாஸித்திப்ரதாயக꞉ || ௨௩ ||

𑌕𑌾𑌲𑌪𑌾𑌶𑌮𑌹𑌾𑌬𑌨𑍍𑌧 𑌵𑌿𑌮𑍋𑌚𑌨𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌃 |
𑌤𑍍𑌰𑌿𑌵𑍇𑌣𑍀𑌸𑌂𑌗𑌮𑌂𑌧𑌤𑍍𑌤𑍇 𑌕𑍇𑌦𑌾𑌰𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑌯𑍇𑌨𑍍𑌮𑌨𑌃 || ௨௪ ||

(இ-ள்) இந்தப் பிரசித்தமாகிய மகாபந்தம் மகா சித்திகளை விசேஷமாய்த் தருவதும் காலபாசத்தின் மகாபந்தத்தை (பெரிய கட்டை) நீக்குவதிற் சாமர்த்திய முடையதுமாய்த் * திரிவேணி சங்கமத்தைத் தருகின்றது. மனதைக் கேதாரமென்னும் சப்தத்திற்கு வாச்சியமாகிய சிவஸ்தானமாகிய புருவமத்யத்திற் சேர்ப்பிக்கின்றது.

திரி-மூன்று ஆறுகளின், வேணி-சமூகமாகிய, சங்கமத்தை (பிரயாகையை)த் தருகின்றது என்பது பதார்த்தம். (௨௪)

## மகாவேதம்.

(அ-கை) மகாவேதத்தைச் சொல்லுதற்கு, முதலில் அதன் மேன்மையைக் கூறுகின்றார் :—

𑌰𑍂𑌪𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌾 𑌯𑌥𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌰𑍁𑌷𑌂𑌵𑌿𑌨𑌾 |
𑌮𑌹𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌮𑌹𑌾𑌬𑌨𑍍𑌧𑍌 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑍌𑌵𑍇𑌧𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑍌 || ௨௫ ||

(இ-ள்) ரூபலாவண்ணிய (சௌந்தரியமும் காந்தியு) முள்ள ஸ்திரீ, புருஷனில்லாமையால் எப்படி பிரயோஜனமற்றவளாகின்றாளோ, அதுபோல மகாவேதமில்லாத மகாமுத்திரையும் மகாபந்தமும் பிரயோசன மற்றவைகளாம்.

சுலோகத்தில் மகாவேதத்தை வேதமென்றது முதற் குறை. (௨௫)

(அ-கை) மகாவேதத்தைக் கூறுகின்றார் :—

𑌮𑌹𑌾𑌬𑌨𑍍𑌧𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌯𑍋𑌗𑍀 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌪𑍂𑌰𑌕𑌮𑍇𑌕𑌧𑍀𑌃 |
𑌵𑌾𑌯𑍂𑌨𑌾𑌂𑌗𑌤𑌿𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌨𑌿𑌭𑍃𑌤𑌂𑌕𑌣𑍍𑌠𑌮𑍁𑌦𑍍𑌰𑌯𑌾 || ௨௬ ||

---

* சுரோத்திரத் துவாரங்களும் கந்தத்துவாரங்களும் எவ்விடத்திற் சேருகின்றனவோ, அது நாற்பீடம், சிருங்காடம், திரிகூடம், திரிவேணி சங்கமமென்னும் பெயர்களாற் சொல்லப்படுகின்றது. என்பது சிவயோக தீபிகை. இதனை நாற்றுவாரத்தின் என்று தியானபிந்தூபநிஷதம் கூறுகின்றது. கேதாரம் புருவநடுவென்பதற்கு "இலலாடத்தில் கேதார" மென்னும் தரிசனேபநிஷத்துப் பிரமாணமாம்.

(இ-ள்) மகாபந்தமென்னும் முத்திரையிலிருக்கும் ஏகாக்கிர சித்தமுள்ள யோகாப்பியாசி, வாயுவைப் பூரித்து, கண்ட முத்திரையென்னும் ஜாலந்தர முத்திரையால் பிராணவாயுவின் கதியை (மேலுங்கீழுமாகச் செல்லுதலை) நிச்சலமாகும் வண்ணம் நிரோதித்து (கும்பித்து). (உசு)

(அ-கை) இதுவுமது :—

ஸமஹஸ்தயுகோ பூமௌ ஸ்ஃபிசௌ ஸந்தாடயேச்சநை: |
புடத்வயமதிக்ரம்ய வாயு: ஸ்ஃபுரதி மத்யக: ‖ உஎ ‖

(இ-ள்) இரண்டுகைகளையும் சமமாய்ப் பூமியில் ஊன்றி (யோனிஸ்தானத்தில் குதியைச் சேர்த்துள்ள இடதுகாலோடு) இரண்டு கடிப்பிரதேசத்தையும் (சிறிது பூமியினின்றும் மேலெழுப்பிப் பூமியிலேயே) மெல்ல அடிக்கவேண்டும். அப்போது வாயு, இடை பிங்கலை யென்னு மிரண்டு நாடிகளையும் கடந்து சுழுமுனையென்னும் மத்தியநாடியிற் செல்வதாகின்றது, (உஎ)

(அ-கை) இதுவுமது :—

ஸோமஸூர்யாக்நிஸம்பந்தோ ஜாயதே சாம்ருதாய வை |
ம்ருதாவஸ்தா ஸமுத்பந்நா ததோ வாயும் விரேசயேத் ‖உஅ‖

(இ-ள்) (வாயு சம்பந்தத்தா லுண்டாகும்) சோமசூரியாக்கினி நாடிகளின் சம்பந்தம் (ஐக்கியம்) அமுக (மோக்ஷ)த்தின் பொருட்டேயாம். இடைபிங்கலைகளில் (பிராணசஞ்சார மில்லாமையால் பிராணவியோகாவஸ்தை யுண்டாகின்றது, அதன் பின் வாயுவை நாசித்துவாரங்களால் மெல்ல விட (இரேசிக்க) வேண்டும்.

சோமசூரியாக்கினி யென்னும் சப்தத்தால், அவற்றை யதிஷ்டித்துள்ள நாடிகளாகிய இடைபிங்கலை சுழுமுனைகள் கொள்ளப்படுகின்றன. (உஅ)

(அ-கை) இதுவுமது :—

மஹாவேதோ(அ)யமப்யாஸாந் மஹாஸித்திப்ரதாயக: |
வலீபலிதவேபக்ந: ஸேவ்யதே ஸாதகோத்தமை: ‖உகூ‖

(இ-ள்) இம்மகாவேதம், அப்பியாசத்தால் அணிமாதி சித்திகளைத்தருவதாயும் திரை நரை நடுக்கங்களைக் கெடுப்பதாயு மிருத்தலால், சாதகோத்தமர்களால் அப்பியசிக்கப்படுகின்றது. (௨௯)

(அ-கை) மகாமுத்திரை முதலியமூன்றும் மிக இரகசியமாய் வைக்கத்தக்கனவா மென்பதைக்கூறுகின்றார்:—

ஸதத்ரயம் ஹாமுத்ரம் ஜராம்ருத்யுவிநாஸநம் |
வஹ்நிவ்ருத்திகரஞ்சைவ ஹ்யணிமாதிகுணப்ரதம் ‖ ௩௦ ‖

(இ-ள்) ஜராமரணங்களைப் போக்குவனவும், ஜடராக்கினியை விருத்திபண்ணுவனவும், அணிமாதிகுணங்களைத் தருவனவுமாகிய இம்மகாமுத்திரைமுதலிய மூன்றும் மிகவும் இரகசியமாய் வைக்கத்தக்கனவாம்.

இதிலுள்ள விசேஷணங்கள் ஏதுகர்ப்பங்களாம். சகாரம் (உம்மை) ஆரோக்கியம் விந்துஜயமுதலியவற்றையும் சேர்த்தற்பொருட்டாம். (௩௦)

(அ-கை) இனி இம்மூன்றின் வேறு விசேஷத்தைக் கூறுகின்றார்:—

அஷ்டதா க்ரியதே சைவ யாமே யாமே திநே திநே |
புண்யஸம்பாரஸந்தாயி பாபௌகபிதுரம் ஸதா |
ஸம்யக்சிக்ஷாவதாமேவம் ஸ்வல்பம் ப்ரதமஸாதநம் ‖ ௩௧ ‖

(இ-ள்) இம்மூன்றும் நாளுக்கு நாள் யாமத்திற்கு யாமமாக எட்டுமுறை செய்யப்படுகின்றது. புண்ணியக் கூட்டங்களைத் தருவதாயும் சதா பாபக்கூட்டங்களுக்கு வஜ்ஜிராயுதம்போன்றுமிருக்கின்றது. (எப்போது அப்பியசிக்கப்படுகின்றதோ, அப்போதுதான் பாபத்தைக் கெடுப்பதாகின்றது.) சம்பிரதாய சிக்ஷையு(குருபதேசமு)டையவர்கள் இப்படி (நாடோறும் யாமத்திற்கு யாமம் எட்டு முறையென்று சொல்லியபடி) பூர்வசாதனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகவே செய்யவேண்டும். (௩௧)

கஂஜஹூாநஂஉநுஷூாணாஂ ஜெஹஙயூாநவாஂஹுலழ் |
வதுரஂஹுலவிஹூாா உாயாஉஞ தமாவியஜ் ||

கந்தஸ்தானம், மனிதர்களுக்குத் தேகமத்திய(மூலாதார)த்தினின்றும் ஒன்பதங்குலம் மேல், நான்கு அங்குலமகலமு நீளமுமுள்ளதாய்,

கணுாக்ரு திவஉகாா ஹூஷிதஞகூமாதிஹஃ |
வதுஷூஉாஂதிரஸ்ூாஞ ஙிஜாநாஂதுநூஙயூமழ் ||

முட்டைபோன்ற வடிவுடையதாய்த் துவக்கு (தோல்) முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. நாற்காலிகளுக்குந் திரியக்குகளுக்கும் பக்ஷிகளுக்கும் வயிற்றின் நடுவிலிருக்கும்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. குதத்திற்கிரண்டங்குலத்திற்கு மேல்தேகமத்தியபாகம், ஒரு அங்குலம். அதிலிருந்து ஒன்பதங்குலம்கந்தஸ்தானமாம். ஆகப்பன்னிரண்டங்குலப் பிரமாணம். அதாவது ஒருசாண்மாத்திரமாயிற்று. விஸ்தாரமென்பது உயரத்திற்கும் உபலக்ஷணமாம். (கககூ)

(அ-கை) இதுவுமது :—

† ஸதிவஜ்ராஸநெவாஉள கஶாஹ்யாஂயாரயெஜ்ரூஙழ் |
ஹுஷூஜெஶஸஙீவெவ கநஂதத்ரவ்ரவீஙயெக || ககச ||

(இ-ள்) வஜ்ஜிராசனம் சேர்த்து இரண்டுகைகளாலும் காற்பரடுகளுக்குச் சமீபத்தில் அதாவது கொஞ்சம் மேல் இரண்டு பாதங்களையும் திடமாய்ப்பிடித்து, அவ்விரண்டு பாதங்களாலும் அந்தக்கந்தஸ்தானத்திலுள்ள கந்தத்தைச் செவ்வையாய்ப் பீடிக்கவேண்டும். (காற்பரட்டிற்குமேல் இரண்டுகைகளாலும் இரண்டு பாதங்களையும் பிடித்து நாபியின் கீழ்ப்பாகத்திலுள்ள கந்தத்தைப் பீடிக்கவேண்டுமென்பது பொருள்). (ககச)

---

லும் சூதசங்கிதம், சித்தாந்தசாராவளிமுதலிய மற்றச்சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

† இது யோகதண்டலியுபநிஷத் வாக்கியம்

(அ-கை) இதுவுமது :—

* 𑌵𑌜𑍍𑌰𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌯𑍋𑌗𑍀 𑌚𑌾𑌲𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀𑌂 |
𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌭𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌂 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀𑌮𑌾𑌶𑍁 𑌬𑍋𑌧𑌯𑍇𑌤𑍍 ||௧௧௫||

(இ-ள்) வஜ்ஜிராசனத்திலிருக்கும் யோகி குண்டலியைச் சாலனஞ்செய்து (சக்திசாலன முத்திரையைச்செய்து), அதன் பின் (சக்திசாலனஞ்செய்தபின்) பஸ்திரையென்னும் கும்பகஞ் செய்யவேண்டும். இப்படிக் குண்டலிசக்தியைச் சீக்கிரம் விழிப் பிக்கவேண்டும்.

வஜ்ஜிராசனம் சக்திசாலனத்திற்கு முன் விதிக்கப்பட்டிருக் கினும் மறுபடியும் அதனையே கூறுதல், சக்திசாலனத்திற்குப் பின் பஸ்திரையில் வஜ்ஜிராசனமே செய்யவேண்டும் என்னும் நியமத்தின் பொருட்டாம். (௧௧௫)

(அ-கை) இதுவுமது :—

𑌭𑌾𑌨𑍋𑌰𑌾𑌕𑍁𑌞𑍍𑌚𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀𑌂 𑌚𑌾𑌲𑌯𑍇𑌤𑍍𑌤𑌤𑌃 |
𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌗𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌭𑌯𑌂 𑌕𑍁𑌤𑌃 ||௧௧௬

(இ-ள்) நாபிதேசத்திலுள்ள சூரியனை யிழுத்தல் செய்ய வேண்டும். அதாவது நாபியை இழுத்தலினாலேயே சூரியனை யிழுத்தலுண்டாகின்றது. அதனால் (சூரியனை இழுத்தலால்) குண்டலிசக்தியைச் சாலனஞ்செய்யவேண்டும். இப்படிச்செய்ப வன் காலன்வாயில் அகப்பட்டவனாயினும் அவனுக்குக் காலபய மேது? எவ்விதத்தினாலுமில்லை. (௧௧௬)

(அ-கை) இதுவுமது :—

† 𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑌦𑍍𑌵𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌨𑌿𑌰𑍍𑌭𑌯𑌂 𑌚𑌾𑌲𑌨𑌾𑌦𑌸𑍌 |
𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑌾𑌕𑍃𑌷𑍍𑌯𑌤𑍇 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾𑌯𑌾𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌗𑌤𑌾 ||

(இ-ள்) இரண்டு முகூர்த்தம் வரையில் (நான்கு கடிகைவரை யில்) சங்கையில்லாமல (நிர்ப்பயமாய்ச்) சாலனஞ் செய்தலால்,

---

* இது யோகசிகோபநிஷத்வாக்கியம்.

† இது யோககுண்டலியுபநிஷத்வாக்கியங்கள்.

இந்தச் சக்தி சுழுமுனையில் பொருந்தியதாய்க் கொஞ்சம் மேலே இழுக்கப்படுகின்றது. (ககஎ)

(அ-கை) இதுவுமது :—

𑌤𑍇𑌨 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌿𑌨𑍀 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾𑌯𑌾 𑌮𑍁𑌖𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 ।
𑌜𑌹𑌾𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑍋𑌽𑌯𑌂 𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾𑌂 𑌵𑍍𑌰𑌜𑌤𑌿 𑌸𑍍𑌵𑌤𑌃 ॥

(இ-ள்) அதனால் (மேலிழுத்தலால்) குண்டலி, அந்தப் பிரசித்தமாகிய சுழுமுனையின் முகத்தை (பிரவேசமார்க்கத்தை) நிச்சயமாக விடுகின்றது. அதனால் (மார்க்கத்தை விடுதலால்) அந்தப் பிராணவாயுதானே சுழுமுனையை யடைகின்றது.

குண்டலினி சுழுமுனைமுகத்தினின்றும் முன்னமே விலகியிருத்தலால் பிராணன் சுழுமுனையை யடைகின்றதென்பது தாற்பரியம். (ககஅ)

(அ-கை) இதுவுமது :—

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌂𑌚𑌾𑌲𑌯𑍇𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑍁𑌖𑌸𑍁𑌪𑍍𑌤𑌾𑌮𑌰𑍁𑌨𑍍𑌧𑌤𑍀𑌮𑍍 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌃𑌸𑌂𑌚𑌾𑌲𑌨𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍀 𑌰𑍋𑌗𑍈𑌃 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

(இ-ள்) (எதனால் சக்திசாலனத்தால் பிராணன் சுழுமுனையை யடைகின்றதோ) அதனால் சுகமாய்த்தூங்கும் அருந்ததி யென்னும் சக்தியைத் தினந்தோறும் செவ்வையாய்ச் சாலனஞ் செய்ய வேண்டும். அந்தச் சக்தியைச் செவ்வையாய்ச்செய்தலினாலேயே யோகி, காசம்சுவாசம்சுரமுதலிய ரோகங்களினின்றும் விடுபடுகிறான். (கககூ)

(அ-கை) இதுவுமது :—

𑌯𑍇𑌨 𑌸𑌂𑌚𑌾𑌲𑌿𑌤𑌾 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌭𑌾𑌜𑌨𑌮𑍍 ॥
𑌕𑌿𑌮𑌤𑍍𑌰 𑌬𑌹𑍁𑌨𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌕𑌾𑌲𑌂 𑌜𑌯𑌤𑌿 𑌲𑍀𑌲𑌯𑌾 ॥ கஉ௦ ॥

(இ-ள்) எந்த யோகியால் குண்டலிசக்தி செவ்வையாய்ச் சாலனஞ் செய்யப்பட்டதோ, அந்த யோகி அணிமாதிசித்திகளுக்குப் பாத்திரனாகிறான். இதில் அதிகமாய்ச் சொல்லுவதினால் என்? ஒன்றுமில்லை. காலனை விளையாட்டாகவே (அநாயாசமாகவே) ஜயிக்கிறான்.

(அ-கை) இதுவுமது :—

ப்ரஹ்மசர்யரதஸ்யைவ நித்யம் ஹிதமிதாஶிந: |
மண்டலாத்த்ருஶ்யதே ஸித்தி: குண்டல்யப்யாஸயோகிந: ||

(இ-ள்) சுரோத்திரமுதலியவற்றோடு உபஸ்தேந்திரியத்தையும் அடக்குதலில் தற்பரனும், ஹிதமும் (பத்தியமும்) மிதமு (நான்காவது பாகம் நீங்கியது) மான போஜனமுள்ளவனுமாகிய குண்டலியப்பியாச(சக்திசாலனப்பியாச)முடைய யோகிக்கு ஒரு மண்டல(நாற்பது தின)த்திற்குமேல் பிராணயாமசித்தி காணப்படுகின்றது.

“ நாஸாதக்ஷிணமார்கவாஹிபவநாத்
ப்ராணோऽதிதீர்கீக்ருத
ஶ்சந்த்ராம்ப:பரிபூரிதாம்ருததநு:
ப்ராக்கண்டிகாயா ஸ்தித: |
பித்வா காலவிஶாலவஹ்நிவஶகம்
ப்ரஹ்மண்ய நாடீகதம்
த்யக்த்வாயம் குருதே வபுர்நவதரம்
பிண்டம் ப்ரவம் க்ஷயவத் ||

நாசியின் வலதுமார்க்கமாகச் செல்லும் வாயுவால் பிராணன் மிக நீட்டப்பட்டதாகின்றது. சரீரம் உண்ணாக்கிற்குமேலுள்ள சந்திரப்பிரபையினால் பூரிக்கப்பட்ட அமிர்தத்தையுடையதாகின்றது. அதனால் காலனது விசாலமாகிய அக்கினியின் வசமாயிருப்பதைச் சேதித்து, அச்சரீரத்தைப் பிரஹ்மரந்திர நாடியிலுள்ளதாகச் செய்து மறுபடியும் ஒன்பதுதரம் அடிமரத்தைப்போல் நிச்சயமாகவே சேதிக்கப்படுகின்றது ” (கஉக)

(அ-கை) இதுவுமது:—

குண்டலீம் சாலயித்வா து பஸ்த்ராம் குர்யாத்விஶேஷத: |
ஏவமப்யஸ்யதோ நித்யம் யமிநோ யமபீ: குத: || கஉஉ ||

(இ-ள்) குண்டலியைச் சாலனம் செய்து, அதன்பின் பஸ்திரையென்னும் கும்பகத்தை விசேஷமாகச் செய்யவேண்டும். இப்

படித் தினந்தோறும் அப்பியாசித்தால் யோகிகளுக்கு இயமபய மேது ? (யோகிகளுக்குத் தேகநீக்கம் சுவாதீனமாயிருத்தலால், ஒரு விதத்தாலும் பயமில்லை யென்பது தாற்பரியம்.) (௧௨௨)

(அ-கை) இதுவுமது:—

𑌦𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌤𑌤𑌿𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌨𑌾𑌡𑍀𑌨𑌾𑌂𑌮𑌲𑌶𑍋𑌧𑌨𑍇 ।
𑌕𑍁𑌤𑌃𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑌨𑍋𑌪𑌾𑌯𑌃 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍍𑌯𑌭𑍍𑌯𑌸𑌨𑌾𑌦𑍃𑌤𑍇 ॥

(இ-ள்) எழுபத்தீராயிரம் நாடிகளின் மலத்தைச் சோதிக்க வேண்டுமாயின், அதற்குச் சக்திசாலனமாகிய குண்டலியப்பியாசமின்றி வேறு சுத்திசெய்யு முபாயமேது? (வேறு உபாயமில்லை. சக்திசாலனத்தினாலேயே சகல நாடிகளுக்கும் மலசுத்தியுண்டாகின்றதென்பது கருத்து.) (௧௨௩)

(அ-கை) இதுவுமது:—

𑌇𑌯𑌂𑌤𑍁𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌡𑍀 𑌦𑍃𑌢𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌆𑌸𑌨𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑌂𑌯𑌾𑌮 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌃𑌸𑌰𑌲𑌾𑌭𑌵𑍇𑌤𑍍 ॥ ௧௨௪ ॥

(இ-ள்) இந்த மத்திமை நாடியாகிய சுழுமுனையானது யோகிகளுக்குத் திடாப்பியாசத்தாலும், சுவஸ்திகாதி ஆசனங்களாலும், பிராணாயாமத்தாலும் மகாமுத்திரைமுதலிய முத்திரைகளாலும் சரளமுடையதாகின்றது. (௧௨௪)

(அ-கை) இதுவுமது:—

𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌤𑍁𑌵𑌿𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍋𑌧𑍃𑌤𑍍𑌵𑌾𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌣𑍀𑌵𑌾𑌪𑌰𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌭𑌦𑍍𑌰𑌾𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 ॥௧௨௫॥

(இ-ள்) சமாதியினால் அந்நியவிருத்தி நிரோதவடிவமாகிய ஏகாக்கிரத்தன்மையால் மனதை (அந்தக்கரணத்தை) தாரணை செய்து, அப்பியாசத்தி (மனதை நிலைப்பிக்கும் முயற்சியி)ல் நித்திரையில்லாதவர்களுக்குச் சாம்பவிமுத்திரையாவது, அல்லது அந்நியமாகிய உன்மனிமுதலிய முத்திரைகளாவது பத்திரையாகிய (சுபமுள்ள) யோகசித்தியைத் தருகின்றன.

இதனால் ஹடயோகத்திற்கு உபகாரமான இராஜயோகம் சொல்லப்பட்டது. இங்கே நித்திரையென்னுஞ் சொல் ஆலசியத்திற்கு உபலக்ஷணமாம். (௧௨௫)

(அ-கை) இராஜயோகமில்லாவிடின், ஆசனமுதலியவை வியர்த்தமாமென்பதை ஔபசாரிகச் சிலேடையாகக் கூறுகின்றார்:—

𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌪𑍃𑌥𑍍𑌵𑍀 𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌨𑌿𑌶𑌾 ।

𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌨 𑌶𑍋𑌭𑌤𑍇 ॥ ௧௨௬

(இ-ள்) இராஜயோகமின்றிப் பிருதிவியென்னு மாசனமும், இராஜயோகமின்றி நிசாவென்னுங் கும்பகமும், இராஜயோகமின்றி மகாமுத்திரைமுதலிய முத்திரைகளும் வெவ்வேறுவிதமுள்ளனவாயினும், அல்லது விலக்ஷணமுடையனவாயினும் சோபிக்கமாட்டா. வேறுபக்ஷத்தில் (ஆளுவோனின்றிப் பூமியில் பற்பல உபத்திரவம் சம்பவித்தலால்) இராஜாவாகிய அரசனது சம்பந்தமின்றிப் பூமி இரத்தினமுதலியவற்றை விளைவித்தலால் விலக்ஷணமுடையதாயினும் சோபிக்காது.

[“𑌸𑍋𑌮𑍋𑌽𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌂 𑌰𑌾𑌜𑌾—சோமன் (சந்திரன்) பிராஹ்மணர்களாகிய எங்களுக்கு இராஜா” வென்னும் சுருதியால்,] இராஜாவாகிய சந்திரனது சம்பந்தமின்றி, நிசி (இராத்திரி) கிரகநக்ஷத்திரமுதலியவற்றால் விசித்திரமுடையதாயினும் சோபிக்காது. இராஜனாகிய அரசனது சம்பந்தமின்றி இராஜர்களால் பத்திரங்களில் செய்யப்படும் குறிவிசேஷமாகிய முத்திரை இரேகைமுதலிய விசித்திரமுடையதாயினும் சோபிக்காது.

அந்நிய விருத்திகளின் நிரோதபூர்வகமாக ஆத்மாவைக் கோசரிக்கின்ற தாரையாகச்செல்லும் நிருவிகற்பவிருத்தி, அல்லது ‘ஹடயோகமின்றி இராஜயோகஞ்சித்தியா’ தென்னுமிடத்துக் குறிப்பிக்கப்பட்ட அதன் சாதனாப்பியாசம், இராஜயோகமாம். பிருதிவி ஸ்திரத்தன்மையாகிய குணமுடையதாயிருத்தலால், பிருதிவிசத்தத்தால் ஆசனம் குறிப்பிக்கப்படுகின்றது. இராஜயோகமின்றிப் பரமபுருஷார்த்தபலம் சித்தியாமையால் என்னும் ஏது, மேலும் பொருத்திக்கொள்ளத்தக்கது. நிசியில் பெரும்பாலும் இராஜர்களின் சஞ்சாரமில்லாமையால், நிசாவென்

னுஞ்சொல்லினல் பிராணசஞ்சாரமில்லாமையை இலக்ஷணமாகவுடைய கும்பகம் குறிப்பிக்கப்படுகின்றது. (௧௨௬)

(அ-கை) இதுவுமது:—

மாருதஸ்ய விதிம் ஸர்வம் மநோயுக்தம் ஸமப்யஸேத் |
இதரத்ர ந கர்தவ்யா மநோவ்ருத்திர் மநீஷிணா || ௧௨௭ ||

(இ-ள்) வாயுவின் (கும்பகமுத்திரைவிதானமாகிய) சகல விதிகளையும் மனதோடு செவ்வையாக அப்பியசிக்கவேண்டும். புத்திமான்கள் வாயுவின் விதிக்கு அந்நியமாகிய விஷயத்தில் மனோவிருத்தியைச் செலுத்தலாகாது. (௧௨௭)

(அ-கை) முத்திரையை முடிக்கின்றார்:—

இதி முத்ரா தச ப்ரோக்தா ஆதிநாதேந சம்புநா |
ஏகைகா தாஸு யமிநாம் மஹாஸித்திப்ரதாயிநீ ||௧௨௮||

(இ-ள்) ஆதிநாதரென்னும் சர்வேசுவரனாகிய சம்புவால் முற்கூறியவண்ணம் பத்துமுத்திரைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள் ஒவ்வொரு முத்திரையும் யோகிகளுக்கு மகாசித்தியையாவது அல்லது அணிமாதிகளையாவது தருவதாம். (௧௨௮)

(அ-கை) முத்திரையை யுபதேசிக்கும் குருவைத் துதிக்கின்றார்:—

உபதேசம் ஹி முத்ராணாம் யோ தத்தே ஸாம்ப்ரதாயிகம் |
ஸ ஏவ ஶ்ரீகுரு: ஸ்வாமீ ஸாக்ஷாதீஶ்வர ஏவ ஸ: || ௧௨௯ ||

(இ-ள்) எவர் யோகிகளின் குருபரம்பரையாகிய சம்பிரதாயத்தால் வந்த சாம்பிரதாயிகமாகிய மகாமுத்திரைமுதலியவற்றின் உபதேசத்தைத் தருகின்றாரோ, அவரே ஸ்ரீகுரு (சகலகுருக்களுக்கும் சிரேஷ்டமானவர்); அவரேபிரபு; அவரே * சாக்ஷாத் (பிரத்தியக்ஷ) ஈசுவரன் அதாவது அவரே ஈசுவராபின்னர். ()

* குருவே ஈசுவரனென்பது "குருவே பிரஹ்மா; குருவே விஷ்ணு; குருவே தேவனாகிய சதாசிவன்; குருவைவிட மேலானதொன்று மூன்றுலகத்திலுமில்லை. திவ்வியஞானத்தை யுபதேசிக்கும் தேசிகராகிய பரமேசு

(அ-கை) இதுவுமது:—

𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾𑌕𑍍𑌯𑌪𑌰𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 |
𑌅𑌣𑌿𑌮𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑍈𑌃 𑌸𑌾𑌰𑍍𑌧𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌕𑌾𑌲𑌵𑌞𑍍𑌚𑌨𑌮𑍍 || க௬0 |

(இ-ள்) அவரது (முத்திரைகளை யுபதேசிக்குங் குருவினது) வாக்கியத்தில் (ஆசனகும்பகமுதலிய அநுஷ்டான விஷயத்தையும், யுக்த ஆகார விகார சேஷ்டைமுதலிய விஷயங்களையும் கூறும் வசனத்தில்) ஆதரவுடையவனாய் முத்திராப்பியாசத்தில் சாவதானமுள்ள புருஷன் அணிமாதிசித்திகளோடு காலவஞ்சித்தலையு மடைகிறான். (க௬0)

## மூன்றும் உபதேசம்.

முடிந்தது.

---

---

வரனை மேலான பக்தியோடு பூஜிக்கவேண்டும். அவனுக்கு (அப்படிப் பூஜிக்கின்றவனுக்கு) ஞானமாகிய பலமுண்டாம். எப்படிக் குருவோ அப்படியே ஈசுவரன்: எப்படி ஈசுவரனோ அப்படியே குரு; இவ்விருவருக்கும் பேதமில்லை. ஆகையால் குருவானவர் மகாபக்தியோடு பூஜிக்கத் தக்கவராவர். குருவோடு ஒரிடத்தும் அத்வைதவாதஞ் செய்யலாகாது. குரு தெய்வம் ஆத்மா என்பவற்றின் அத்வைதம் பக்தியால் பாவிக்கவேண்டும்." என்று யோகசிகோபநிஷத்தின் ஐந்தாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

# நான்காம் உபதேசம்.

மங்கலாசரணம்.

(அ-கை) முதலாவது இரண்டாவது மூன்றாவதுபதேசங்களிற் சொல்லப்பட்ட ஆசனம் கும்பகம் முத்திரையென்பவற்றின் பலமாகிய இராஜயோகத்தைச் சொல்லக்கருதிய சுவாத்துமாராமர், சிரேயசுள்ளவைகள் வெகுவிக்கினமுடையனவா மென்னும் நியாயத்தால், விக்கினம் மிகுதியாகச் சம்பவித்தலால் அதன் நிவருத்தியின்பொருட்டுச் சிவனுக்கபின்னமாகிய குருநமஸ்காரவடிவமாகிய மங்கலத்தை ஆசரிக்கின்றார் :—

நமஃஶிவாய கு³ரவே நாத³பி³ந்து³கலாத்மநே |
நிரஞ்ஜநபத³ம் யாதி நித்யம் யத்ர பராயண꞉ ‖ க ‖

(இ-ள்) சிவமா(சுகவடிவா)கிய அல்லது ஈசுவராபின்னமாகிய குருவிற்கு அல்லது சர்வாந்தரியாமித் தன்மையால் சகலஜகத்திற்கும் உபதேசிக்கும் சிவமென்னும் ஈசுவரனாகிய நாதபிந்துகலாசொரூபமாகிய குருவிற்கு நமஸ்காரம். அவரி (நாதவிந்துகலாத்மவடிவாகிய சிவமென்னும் குருவினி)டத்துப் பிரதிதினமும் கவனமுள்ள புருஷன் நிரஞ்சன(அஞ்சனமென்னும் மாயோபாதியில்லாத)மதமாகிய பிரஹ்மத்தையடைகிறான்.

குரு ஈசுவராபின்னர் என்பது

“ நமஸ்தே நாத² ப⁴க³வந் ஶிவாய கு³ருரூபிணே ‖

சிவமென்னும் குருவடிவாகிய பகவானே! நாதனே! உமக்கு நமஸ்காரம்” என்பதிற் சொல்லப்பட்டிருக்கின்றது. ஈசுவரன் குருவென்பது பாதஞ்சலசூத்திரத்தில்,

“ ஸ ஏ[ஷ] பூர்வேஷாமபி கு³ரு꞉
காலேநாநவச்சே²தா³த் ‖

அந்த(ஈசுவரனாகிய)இவர் காலத்தினால் அவச்சேதமாகா(கண்டிக்கப்படா)மையின் முன்சிருஷ்டிகளிலிருந்தவர் (பிரஹ்ம

விஷ்ணுமகேசுவரர்)களுக்கும் குரு" வென்றுசொல்லப்பட்டிருக்கின்றது. நாதமென்பது வெண்கலமணியடித்தபின் கலீரென்றுண்டாகும் பொதுச்சத்தம் போன்ற தொடர்ச்சியாகிய சத்தமாம். விந்துவாவது அநுஸ்வாரத் (ஂஎன்ப)திற்குப் பின் உண்டாகும் துவனி. கலையாவது நாதத்தின் ஏகதேசம். நாதபிந்துகலாத்மவடிவாகிய சிவமென்னும் குருவினிடத்து என்பதனுல் நாதாநுசந்தான முடையவனெனப்பட்டது. பூர்வபாதத்தால் குருவிற்கும் சிவனுக்கும் அபேதம் சூசிப்பிக்கப்பட்டது. (௧)

சமாதிக்கிரமம்

(அ-கை) சமாதிக்கிரமத்தைப்பிரதிஞ்ஞைசெய்கின்றார் :—

அதேதா³நீம் ப்ரவக்ஷ்யாமி ஸமாதி⁴க்ரமமுத்தமம் |
ம்ருத்யுக்⁴னம் ச ஸுகோ²பாயம் ப்³ரஹ்மானந்த³கரம் பரம் ||௨||

(இ-ள்) இனி(ஆசனகும்பக முத்திரைகளைச் சொன்னபின்) இப்போது உத்தமமும், மிருத்தியுவைக் கெடுப்பதும், சுகோபாயமும், பரப்பிரஹ்மாநந்தத்தைத் தருவதுமாகிய பிரத்தியாகாராதிரூப சமாதிக்கிரமத்தை நன்றாய்ப் பிரித்துக் கூறுகின்றேன்.

ஸ்ரீ ஆதிநாதரால் சொல்லப்பட்ட கோடிசமாதிக்கிரமங்களில் உத்கிருஷ்டமானதென்பார், உத்தமமென்றார். சுவேச்சையாகத் தேகத்தை விடுந்தன்மையைத் தருவதென்பார், மிருத்தியுவைக் கெடுப்பதென்றார். தத்துவஞானோதய மனோநாசவாசனக்ஷயங்களால் ஜீவன்முக்தி சுகத்தையடைதற்குச் சாதனமாமென்பார், சுகோபாயமென்றார். பிராரப்தகர்மம் க்ஷயமாகுங்கால் ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தால் அத்தியந்த பிரஹ்மாநந்தப் பிராப்தியாகிய விதேகமுக்தியைத் தருவதென்பார், பரப்பிரஹ்மாநந்தத்தைத் தருவதென்றார். அதில் சாந்த கோர மூடமென்னும் சித்தத்தின் சகலவிருத்திகளும் சம்ஸ்காரத்துடன் சமாதியினுல் நிரோதமாகுங்கால்,

"ஜீவந்நேவ ஹி வித்³வான் ஹர்ஷஶோகாப்⁴யாம் விமுச்யதே ||

வித்துவான் இங்கே ஜீவனோடிருந்து கொண்டே ஹர்ஷசோக (சுகதுக்க)ங்களினின்றும் விடுபடுகிறான்" என்னும் சுருதியிற்

கூறிய நிர்விகாரசொரூபத்தால் நிலைக்கும் வடிவினதாகிய ஜீவன் முக்தியுண்டாகின்றது.

பரமமுக்தியோ கிடைத்த போகத்தினந்தத்தில் அந்தக்கரணகுணங்களின் பிரளயத்தால் ஔபாதிகரூப அத்தியந்தநிவர்த்தியில், அத்தியந்த சொரூபாவஸ்தானமா(சொரூபநிலையா)கிய பிரளயத்தால் சித்திக்கின்றது. எழுச்சியை (விழித்தலை)நிரோதிக்கும் சமாதிசம்ஸ்காரங்கள் மனதில் இலயமாகின்றன. மனம் அஸ்மிதையிலும், அஸ்மிதை மஹத்திலும், மஹத்து பிரதானத்திலுமாக இவ்வாறு சித்தகுணங்களின் பிரதிசர்க்கம் (தமதுகாரணத்திலொடுங்குதல்) உண்டாகின்றது.

அப்படியானால் ஜீவன்முக்தனுக்கு விழித்தகாலத்து 'நான் பிராஹ்மணன்' 'நான்மனிதன்' என்னும் வியவகாரம் காணப்படுதலால், சித்தமுதலியவற்றால் ஔபாதிகத்தன்மை யுண்டாதலால், புளியால் பாலிற்கு நழுவுதல் உண்டாதல்போலச் சொரூபத்திற்கு நழுவுதலுண்டாமெனின், அப்படியல்ல; சம்பிரஞ்ஞாதசமாதியி லநுபவிக்கப்பட்ட ஆத்மசம்ஸ்காரம் தாத்துவிக(யதார்த்த)மாமென்னும் நிச்சயமிருத்தலாலும், அதாத்துவிகமாகிய அந்நியதாபாவம் (வேற்றுத்தன்மை) அவிகாரித்துவ அப்பிரயோஜகமா யிருத்தலாலும், புளியால் பால் தயிராதல் தாத்துவிகமாமென்னும் திருஷ்டாந்தம் வேறுபடுதலாலும், புருஷனுக்கு அந்தக்கரண உபாதியையுடைய நான் பிராஹ்மணன் என்னும் வியவகாரம் ஸ்படிகத்திற்குச் செவ்வரத்தம் பூவின் சந்நிதானமாகிய உபாதிவடிவம்போலத் தாத்துவிகமன்று. செவ்வரத்தம் பூ நீங்கியகாலத்து ஸ்படிகத்திற்குச் சுவரூபஸ்திதி நழுவாதிருத்தல்போல புருஷனுக்கு அந்தக்கரணத்தின் சகலவிருத்திகளும் நிரோதமாகியகாலத்துச் சொரூபநிலை நழுவாமலேயிருக்கும். (உ)

சமாதிபரியாயம்.

(அ-கை.) சமாதியின் பரியாயங்களை விசேஷமாகக் கூறுகின்றார்:—

ராஜயோக꞉ ஸமாதிஶ்ச உந்மநீ ச மநோந்மநீ ।
அமரத்வம் லயஸ்தத்வம் ஶூந்யாஶூந்யம் பரம் பதம் ॥ ௩ ॥

(இ-ள்) இராஜயோகம், சமாதி, உன்மனி, மனோன்மனி, அமரத்துவம், இலயம், தத்துவம், சூனியாசூனியம், பரமபதம். ()

ஊ௨நஸ்ஷஷயா௵ைதம் நிராலம்பம் நிரஞநஃ।
ஜீவநுக்ஷிஸ்ச ஸஹஜா தூயா௬ெஸ ஏகவாசகாஃ ॥ ச ॥

அமனஸ்கம், அத்வைதம், நிராலம்பம், நிரஞ்சனம், ஜீவன் முக்தி, சகஜம், துரியமெனுமிவை ஒருபொருட்கிளவிகளாம். (ச)

சமாதி.

(அ-கை) மூன்று சுலோகங்களால் சமாதியைக் கூறுகின்றார் :—

* ஸலிலெஸைந்தவம்யத்ஸாம்யம்ஹஜதியோகதஃ।
தயாத்மமநஸோரைக்யம் ஸமாதிரபிதீயதே ॥ ரு ॥

(இ-ள்) ஜலத்தில் சைந்தவம்(உப்பு),கலப்பால் எப்படி நீரின் சாம்மிய(ஐக்கிய)த்தையடைகின்றதோ, அப்படியே ஆத்மாவிற்கும் மனதிற்குமுண்டாகும் ஐக்கியம் சமாதியெனப்படும். (ரு)

யதாஸம்க்ஷீயதே ப்ராணோ மாநஸஞ்ச ப்ரலீயதே।
ததாஸமரஸத்வஞ்ச ஸமாதிரபிதீயதே ॥ சு ॥

எப்போது பிராணன் தேய்ந்து மனதும் ஒடுங்குகின்றதோ, அப்போதுண்டாகும் சமரசத்துவமும் சமாதியெனப்படும். (சு)

தத்ஸமஞ்சயொரைக்யம் ஜீவாத்மபரமாத்மநஃ।
ப்ரநஷ்டஸர்வஸங்கல்பஃ ஸமாதிஸ்ஸோபிதீயதே ॥ எ ॥

ஜீவாத்மா பரமாத்மாவென்னும் இரண்டன் ஐக்கியமாகிய சமத்தன்மையுண்டாய்ச் சகலசங்கற்பங்களும் நஷ்டமாதல், சமாதியெனப்படும். (எ)

(அ-கை) இராஜயோகத்தைக் கீர்த்திக்கின்றார் :—

ராஜயோகஸ்ய மாஹாத்ம்யம் கோவாஜாநாதி தத்வதஃ।

(இ-ள்) இராஜயோகத்தின் பிரபாவத்தை உண்மையாக எவன் அறிவான்? ஒருவனுமறியான். (எ൧)

* இது வராகோபநிஷத்வாக்கியம்.

(அ-கை) இராஜயோகத்தின் பிரபாவம் (மகிமை) வாஸ்தவமாகச் சொல்லக்கூடியதன்றாயினும், அதனை ஏகதேசமாகக் கூறுகின்றார் :—

ஜ்ஞாநம் முக்தி: ஸ்திதி: ஸித்தி: குருவாக்யேந லப்யதே ॥அ॥

(இ-ள்) இராஜயோகத்தால் சுவசொரூபாபரோக்ஷாநுபவமாகிய ஞானமும், விதேகமுக்தியும், நிர்விகாரசொரூபஸ்திதியும், அணிமாதி சித்திகளும், குருவாக்கியத்தாலடையப்படுகின்றன.

(அ-கை) இதுவுமது :—

* துர்லபோ விஷயத்யாகோ துர்லபம் தத்த்வதர்ஸநம் ।
துர்லபா ஸஹஜாவஸ்தா ஸத்குரோ: கருணாம் விநா ॥ கூ ॥

(இ-ள்) சற்குருவின் கிருபையின்றித் (தாரமுதலிய இகலோகத்தனவும் அமிர்தமுதலிய பரலோகத்தனவுமாகிய) விஷயங்களின் தியாகமும் (போகேச்சையின்மையும்), ஆத்மாபரோக்ஷாநுபவமாகிய தத்துவதரிசனமும் (ஆத்மசாக்ஷாத்காரமும்), துரியாவஸ்தையென்னும் சகஜாவஸ்தையும் துர்லபமாம் (அடைதற்கரிதாம்).

விஸேஷேண ஸிநோதீதி ஸ்வவஸ்யம் ப்ரமாதாரம் ஸ்வஸங்கேநேதி விஷயா: ॥

தனது சங்கத்தால் பிரமாதாவைவிசேஷமாகக் கட்டுகின்றமையால் விஷயங்களெனப்படும். குருகிருபையால் சகலமும் சுலபமாமென்பது கருத்து. (கூ)

(அ-கை) இதுவுமது:—

விவிதைராஸநை: கும்பை:
விசித்ரை: கரணைரபி ।
ப்ரபுத்தாயாம் மஹாஸக்தௌ
ப்ராண: ஸூந்யே ப்ரலீயதே ॥ ௰ ॥

(இ-ள்) நாநாவித (மச்சேந்திரமுதலிய) ஆசனங்களாலும், நாநாவிதகும்பகங்களாலும், (ஹடசித்தியில் மிக்க உபயோக

* இது வாராகோபநிஷத் மஹோபநிஷத்துக்களின் வாக்கியம்.

முள்ள மகாமுத்திரைமுதலிய) நாநாவிதகரணங்களாலும் குண்டலியென்னும் மகாசக்தி விழிக்குங்கால், பிராணவாயு சூனியமென்னும் பிரஹ்மரந்திரத்தில் ஒடுங்குகின்றது.

“ விவிதைஃ ॥ நாநாவித” என்பது * காகாக்ஷிகோளகநியாயத்தால் இரண்டிடத்தும் பொருந்துகின்றது. வியாபாரமில்லாமை பிராணனது பிரளயம் (ஒடுக்கம்). (௧௦)

(அ-கை) இதுவுமது:—

† உத்புத்தசக்திபோதஸ்ய த்யக்தநிஶ்ஶேஷகர்மணஃ ।
யோகிநஸ்ஸஹஜாவஸ்தா ஸ்வயமேவ ப்ரஜாயதே ॥ ௧௧ ॥

(இ-ள்) குண்டலிசக்தியின் விழிப்புள்ளவனும், சகலகர்மங்களினின்றும் விடுபட்டவனுமாகிய யோகிக்குத் துரியாவஸ்தையென்னும் சகஜாவஸ்தையாகிய ஜீவன்முக்தி தானே (பிரயத்தினமின்றியே) உண்டாகின்றது.

ஆசனத்தால் காயிகவியாபார நீங்கும்போது, பிராணேந்திரியங்களில் வியாபாரம் நிற்கின்றது. பிரத்தியாகார தாரண தியான சம்பிரஞ்ஞாதசமாதிகளால் மானசீகவியாபாரம் நீங்கும்போது, புத்தியில் வியாபாரம் நிற்கின்றது.

“ அஸங்கோ ஹ்யயம் புருஷஃ ॥

இப்புருஷன் அசங்கன்” என்னும் சுருதியால் பரிணாமமில்லாத சுத்தன், புருஷன். சத்துவகுண சுவரூபமாகிய பரிணாமுடையது புத்தி. பரவைராக்கியத்தினலேயாவது, நீண்டகாலத்துச் சம்பிரஞ்ஞாத சமாதியப்பியாசத்தினலேயாவது புத்தியின் வியாபாரம் நீக்குங்கால், நிர்விகார சுவரூபஸ்திதி யுண்டாகின்றது. அதுவே சகஜாவஸ்தையென்னும் ஜீவன் முக்தியாம்.

---

* காகாக்ஷிகோளகநியாயமென்பது காக்கைவிழி திருஷ்டாந்தமாம். அதாவது காக்கைக்குள்ள ஒருவிழியே இருபக்கத்துக் கோளகைகளிலும் எந்தப்பக்கம் திரும்புகின்றதோ அந்தப்பக்கத்திற்குப் பார்வை தருகின்றது. அதுபோல என்பதாம்.

† இது வராகோபநிஷத் மஹோபநிஷதங்களின் வாக்கியம்.

“யேந த்யஜஸி தத்த்யஜேதி நிஃஸங்கஃ ப்ரஜ்ஞயா பவேத் ॥

எதனுல் விடுகிருயோ அதை விடுக என்னும் பிரஞ்ஞையால் நிஸ்ஸங்க(சங்கமில்லாதவ)னுகின்ருன்” என்னும் சுருதியினுல். ()

(அ-கை) இதுவுமது:—

ஸுஷும்நாவாஹிநி ப்ராணே ஶூந்யே விஶதி மாநஸே ।
ததா ஸர்வாணி கர்மாணி நிர்மூலயதி யோகவித் ॥ கஉ ॥

(இ-ள்) பிராணவாயு சுழுமுனையாகிய மத்தியநாடியிற்செல்லுவதாகுங்கால், அந்தக்கரணம் சூனிய(தேசகாலவஸ்து பரிச்சேதமில்லாத பிரஹ்ம)த்தில் பிரவேசிக்கின்றது. அப்போது (சித்தநிரோதமுள்ள) யோகவித்தானவன் பிராரத்தத்தோடு சகலகர்மங்களையும் நிர்மூலமாக்குகிருன். (கஉ)

(அ-கை) சமாதியப்பியாசத்தால் பிராரப்தகர்மத்தையும் ஜெயித்தலாற் காலனை வென்ற யோகிகளை நமஸ்கரிக்கின்ருர்:—

அமராய நமஸ்துப்யம் ஸோऽபி காலஸ்த்வயா ஜிதஃ ।
பதிதம் வதநே யஸ்ய ஜகதேதச்சராசரம் ॥ கங ॥

(இ-ள்) சிரஞ்சீவிகளாயிருக்கும் யோகிகளாகிய உங்களுக்கு நமஸ்காரம். இந்தச்சராசரமாகிய ஜகத்து எவனுடைய வாயில் விழுந்திருக்கிறதோ, அப்படிப்பட்ட நீக்கற்கரிய ஜகத்பக்ஷகனுகிய காலனும் உங்களால் ஜயிக்கப்பட்டிருக்கிருன். (இவ்வாக்கியம் நமஸ்கரித்ததற் கேதுவைக் கூறியதாம்.) (கங)

(அ-கை) முற்கூறிய அமரோலிமுதலியவை சமாதிசித்தித்தாற்ருன் சித்திக்குமென்று சமாதியை நிரூபித்தபின், சமாதிசித்தியில் அவை சித்திக்கின்றனவெனக் கூறுகின்ருர் :—

சித்தே ஸமத்வமாபந்நே வாயௌ வ்ரஜதி மத்யமே ।
ததாமரோலீ வஜ்ரோலீ ஸஹஜோலீ ப்ரஜாயதே ॥ கச ॥

(இ-ள்) அந்தக்கரணத்தில் சமத்தன்மை (தியானிக்கப்படுபொருள்வடிவமாகிய விருத்தியின் பிரவாகத்தன்மை)வாய்த்தகாலத்து வாயு சுழுமுனையிற் செல்லுகின்றது. (இது சித்தத்தின்

சமத்தன்மையிலேதுவாம்). அப்போது முற்கூறப்பட்ட அமரோலிவஜ்ரோலிசகஜோலி என்பவையுண்டாகின்றன.

பிராணஜயமும் சித்தஜயமுமில்லாதவனுக்கு அவை(அமரோலிமுதலியன)சித்தியாவென்பது தாற்பரியம். (கச)

(அ-கை) ஹடாப்பியாச மின்றி ஞானமும் மோக்ஷமும் சித்தியாதெனக் கூறுகின்றார் :—

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌕𑍁𑌤𑍋𑌮𑌨𑌸𑌿𑌸𑌂𑌭𑌵𑌤𑍀𑌹𑌤𑌾𑌵
𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑍋𑌽𑌪𑌿𑌜𑍀𑌵𑌤𑌿𑌮𑌨𑍋𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌨𑌯𑌾𑌵𑌤𑍍 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑍋𑌮𑌨𑍋𑌦𑍍𑌵𑌯𑌮𑌿𑌦𑌂𑌵𑌿𑌲𑌯𑌂𑌨𑌯𑍇𑌦𑍍𑌯𑍋
𑌮𑍋𑌕𑍍𑌷𑌂𑌸𑌗𑌚𑍍𑌛𑌤𑌿𑌨𑌰𑍋𑌨𑌕𑌥𑌂𑌚𑌿𑌦𑌨𑍍𑌯𑌃 ॥ கரு ॥

(இ-ள்) எதுவரையில் பிராணனும் இந்திரியங்களும் ஜீவித்திருக்கின்றனவோ(இறக்கவில்லையோ), எதுவரையில் மனம் இறக்கவில்லையோ (ஜீவித்துக்கொண்டேயிருக்கிறதோ), அது வரையில் (சொரூபமாக அவைகள் கெடாதவரையில்) மனதில் (அந்தக்கரணத்தில்) ஞானம் (ஆத்மாபரோக்ஷாநுபவம்) எப்படியுண்டாம்? (பிராணேந்திரிய மனோவிருத்திகள் ஞானப்பிரதிபந்தகமா யிருத்தலால் உண்டாகாதென்பது கருத்து.) பிராணன்மனமென்னு மிவ்விரண்டையும் எவன் விலயமாக்கு (கெடுக்)கின்றானோ, அப்புருஷன் (ஆத்தியந்திக சொரூபாவஸ்திதியாகிய) மோக்ஷத்தையடைகிறான். மற்றவன் (பிராணமனோலயங்களில்லாதவன்) எவ்விதத்திலும் (அநேகமாயிரம் உபாயங்களைச் செய்யினும்) மோக்ஷத்தையடையான் என்பதுபொருள்.

கவி (உம்) என்னும் சொல்லால் இந்திரியங்கள் கொள்ளப்பட்டன. இங்கே இடைபிங்கலையாற் செல்லுதல் பிராணனது ஜீவனமும், தத்தம் விஷயங்களைக் கிரகித்தல் இந்திரியங்களின் ஜீவனமும், நாநாவிஷயாகாரவிருத்தியுண்டாதல் மனதின் ஜீவனமும், அவையவையில்லாதிருத்தல் அவ்வவற்றின் மரணமுமாமென்பது கருத்து. பிரஹ்மரந்திரத்தில் நிர்வியாபாரமாக நிலைத்தல் பிராணனது இலயம். தியேயாகாரமாக (தியானிக்கப்படு

பொருள் வடிவமாக)ப் பிரவேசித்தலால் வேறு விஷயாகாரமாகா திருத்தல், மனதின் இலயம். பிராணமனோலயங்களுக் கந்நிய மான உபாயங்களால் அடையானென்பது யோகபீஜத்தில்,

“ * நாநாவிதைர்விசாரைஸ்து நஸாத்யம் ஜாயதே மந꞉ ।
தஸ்மாத்தஸ்ய ஜய꞉ ப்ராய꞉ ப்ராணஸ்ய ஜய ஏவ ஹி ॥

நாநாவிதவிசாரங் (ஆராய்ச்சி)களால் மனம் சாதிக்கப்படு கிறதில்லை. ஆகையால் அதன்ஜயம் பெரும்பாலும் பிராணஜயமே யாம்” என்றும்,

“ * நாநாமார்கைஸ்து துஷ்ப்ராப்யம்
கைவல்யம் பரமம் பதம் ।
ஸித்திமார்கேண லப்யேத
நாந்யதா ஶிவபாஷிதம் ॥

நாநாமார்க்கங்களால் ஏராளமான சுகதுக்கங்கள் உண் டாகின்றன. கைவல்லியமாகிய பரமபதம் சித்த(யோக)மார்க் கத்தால் அடையப்படும். வேறுவிதத்தால் அடையப்படாதென் று ஈசுவரனால் கூறப்பட்டிருக்கின்றது” என்றும்சொல்லப்பட்டி ருக்கின்றது. இதனால் யோகமின்றி ஞானமும் மோக்ஷமும் சித் தியாதென்பது சித்தித்தது. சுருதிஸ்மிருதி இதிகாஸ புராண ங்களிலும் இது பிரசித்தம். அஃதெப்படி யெனின்,

“ அத² தத்த்வத³ர்ஶநோபாயோ யோக³꞉ ॥

இனி அதன் ஆத்மாவின் த்ரிசனத்திற்கு உபாயம்(சாதனம்,) யோகமாம்” என்பதும்,

அத்⁴யாத்மயோகா³தி⁴க³மேந தே³வம்
மத்வா தீ⁴ரோ ஹர்ஷஶோகௌ ஜஹாதி ॥

அத்தியாத்மயோகத்தை யடைதலால் தெய்வத்தை(ஆத்து மாவை)யறிந்து தீரன் இன்பத்துன்பங்களை நீக்குகிறான், என் பது”

* இவை யோகசிகோபநிஷத்வாக்கியங்கள்.

"ஶ்ரத்தாபக்தித்யானயோகாதவேஹி ||

சிரத்தை பக்தி தியானயோகங்களால் அறிக" என்பதும்,

"யதா பஞ்சாவதிஷ்டந்தே ஜ்ஞாநாநி மநஸா ஸஹ |
புத்திஶ்ச ந விசேஷ்டதே தாமாஹு: பரமாம் கதிம் |
தாம் யோகமிதி மந்யந்தே ஸ்திராமிந்த்ரியதாரணாம் ||
அப்ரமத்தஸ்ததா பவதி ||

எப்போதும் ஐந்துஞானேந்திரியங்களும் மனதோடு (ஆத்மாவில்) நிலைக்கின்றனவோ, புத்தியும் (தனதுவியாபாரத்தில்) சேஷ்டிக்கிறதில்லையோ, அந்த அவஸ்தையை யோகிகள் பரம கதியென்று கூறுவர். அதனை யோகமென்று மதிக்கின்றனர். எப்போது ஸ்திரமாகிய இந்திரிய தாரணையில் பிரமாதமில்லாதவனாகின்றானோ அப்போது (யோகத்தில் பிரவிருத்தன்) ஆகின்றான்" என்பதும்,

"யதாத்மதத்த்வேந து ப்ரஹ்மதத்த்வம்
தீபோபமேநேஹ யுக்த: ப்ரபஶ்யேத் ||

எப்போது இங்கே யோகி ஆத்மதத்துவமாகப் பிரஹ்மதத்துவத்தைத் தீபஉவமமாகக் காணுகின்றானோ" என்பதும்,

"அஜம் த்ருவம் ஸர்வதத்த்வைர்விஶுத்தம்
ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாஶை: ||

பிறப்பில்லாததும் என்றுமுள்ளதும் சகல தத்துவங்களினும் சுத்தமானதுமாகிய தெய்வத்தை (ஆத்மாவை) யறிந்து சகலபாசங்களினின்றும் விடுபடுகிறான்" என்பதும்,

"ப்ரஹ்மண்யாத்மாநம் ஓமிதி த்யாயீத ||

அறிவாகிய பிரஹ்மத்தில் ஓமென்று ஆத்மாவாகிய உன்னைத் தியானஞ் செய்வாயாக" என்பதும்,

த்ரிருந்நதம் ஸ்தாப்ய ஸமம் ஶரீரம்
ஹ்ருதீந்த்ரியாணி மநஸா ஸந்நிவேஶ்ய

ஙு ஹ்ஹாஙுவெநவு தரெ தவிஙாநு
ஹொ தாஂஙிஸவ ாணிஹயாவஹாநி ||

(சிரசும் கழுத்தும் உடலுமாகிய) மூன்றும் செவ்வையாய் நிமிர்ந்து சமசரீரனுப், இதயத்தில் மனதோடு இந்திரியங்களைப் பிரவேசிக்கச்செய்து, பிரஹ்மமென்னும் தெப்பத்தால் வித்து வான் பயங்கரமான சகல ஆறுகளை (இந்திரிய மார்க்கங்களை)யும் செவ்வையாய்க் கடக்கின்றான்" என்பது,

ஓஙிதெவாயாயயகூதாநு ||

ஓமென்றிப்படி ஆத்மாவை தியானிக்கக்கடவாய்" என்பது மாகிய இவைமுதலியன, சுருதிகள். மநு கூறிய யதிதர்மப்பிர கரணத்திலுள்ள

"ஹஂதஹாவு நவெக்ஷ தயொமெநவாஙோதநஃ |
தெஹஙயஂவிஹாயாஙு ஙுக்ஷொஹவதிஙாஙநாக ||

பரமாத்மாவின் [...]கத்தாற் சென்றவைகளையும் வருபவை களையும் காண்[...] இரண்டு தேகங்களையும் விட்டு விரைவில் பந்தத்தி[...]றும் முக்தனுகின்றான்" என்பதும்,

யாஞ்ஞவல்கியஸ்மிருதியிலுள்ள

"இஜ்ஞாவாஙஙாஹிஂஸா தாநஸ்வாயாயகஙணாழ |
கயஞுவாஙொயஙெ யஷாமெநாதஙஙநழ ||

யாகம், ஆசாரம், தமம், அஹிம்சை, தானம், சுவாத்தியா யம் (வேதமுதலியவற்றை யோதுதல்) முதலிய கர்மங்களினும் யோகத்தினல் ஆத்மாவை தரிசித்தலாகிய இது மேலாகிய தர்ம மாம்" என்பதும், மஹாிஷிமாதங்கர் கூறிய

"கஹ்ஷொஙாஙிகாநு ஸவாநு விஹாயஙிஜஸதஃ |
யொமாஹுாஸாதஃஙாஙஃ வாஙஹாயிமஹுதி |

துவிஜோ[...]தமன் அக்கினிஷ்டோமமுதலிய எல்லாவற்றை யும் விட்டு யோகாப்பியாச பராயணனுய் சாந்தனுய்ப் பரப்பிரஹ் மத்தை யடைகிறான்.

ஜாஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஸ்த்ரீஶூத்ராணாஞ்சபாவநம் ॥
ஶாந்தயே கர்மணாமந்யத் யோகாந்நாஸ்தி விமுக்தயே ॥

பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய ஸ்திரீ சூத்திரர்களுக்குக் கர்மங்களின் சாந்தியாகிய முக்தியின் பொருட்டுப் பரிசுத்தமானது யோகத்தைவிட வேறில்லை" யென்பதும், தக்ஷஸ்மிருதியில் வெதிரேகமுகமாகக் கூறியிருக்கும்.

"ஸ்வஸம்வேத்யம் ஹி தத்ப்ரஹ்ம குமாரீஸ்த்ரீஸுகம் யதா ।
அயோகீ நைவ ஜாநாதி ஜாத்யந்தோ ஹி யதா கடம் ॥

அந்தப்பிரஹ்மம் குமாரிஸ்திரீசுகத்தைப்போல தன்னாலேயே அறியத்தக்கதாம். பிறவிக்குருடன் குடத்தை அறியாததுபோல அயோகியானவன் அறியான்." என்பதுமாகிய இவை முதலியன ஸ்மிருதிகள். வியாசரால் மகாபாரதத்தில் யோகமார்க்கத்தில் கூறப்பட்டிருக்கும்.

"அபிவர்ணாவக்ருஷ்டஸ்து நாரீவா[illegible]க்ஷிணீ ।
தாவப்யேதேந மார்க்கேண கச்சேதாம் பரமாம் கதிம் ।

வர்க்கத்தினின்றும் நீங்கியவனாயிருக்கினும், அல்லது தர்மத்தை விரும்பும்நாரியாயிருக்கினும் அவ்விருவரும் இந்த(யோக) மார்க்கத்தால் பரமகதியையடைவர்.

யதி வா ஸர்வதர்மஜ்ஞோ யதி வாப்யந்ருதீ பவேத் ।
யதி வா தார்மிக: ஶ்ரேஷ்டோ யதி வா பாபக்ருத்தம: ।
யதி வா புருஷவ்யாக்ரோ யதி வா க்லைப்யதாரக: ।
நர: ஸம்ஸாரதுக்கௌகம் ஜராமரணஸாகரம் ।
அபிஜிஜ்ஞாஸமாநோபி ஶப்தப்ரஹ்மாதிவர்ததே ॥

(இஃதில்லாத) நரனானவன் சகல தருமங்களையும் அறிந்தவனாயிருக்கினும், அல்லது துர்ச்செய்கையுடையவனாயிருக்கினும், சிரேஷ்டதர்மமுடையவனாயிருக்கினும், அல்லது மிகுந்தபாவியாயிருக்கினும், புருஷவியாக்கிரமாயிருக்கினும், அல்லது புருஷத்தன்மையில்லாவனாயிருக்கினும் அவன் மகாதுக்கமாகிய ஜராமர

ணசுரகரத்தைச் சேவிக்கத்தக்கவனுகின்றான். யோகத்தையறிய விரும்புகிறவனும் சப்தபிரஹ்மத்தை (வேதத்திற்கூறிய கர்மங்களை)க்கடக்கின்றான்." என்பதும்,

"𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍𑌨𑍇𑌵𑌂 𑌸𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌨𑌿𑌯𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 ||
𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌪𑌰𑌮𑌾𑌂 𑌮𑌤𑍍𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ||
𑌯𑌤𑍍𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 ||

அடங்கியமனதையுடைய யோகியானவன் இப்படி எப்போதும் மனதைச் சமாதானமுடையதாகச்செய்து, (சம்சார நிவிருத்தியாகிய) சாந்தியென்னும் மேலான நிர்வாணமாகிய எனது நிலையையடைகிறான். எந்தஸ்தானம் (கைவல்லியம்) சாங்கியர் (ஞான நிஷ்டசந்நியாசி) களால் அடையப்படுகின்றதோ (அது யோகிகளாலும் அடையப்படுகின்றது). என்னும் பகவற்கீதையும்,

𑌯𑍋𑌗𑌾𑌤𑍍𑌸𑌞𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑍋𑌗𑍋 𑌮𑌯𑍍𑌯𑍇𑌕𑌚𑌿𑌤𑍍𑌤𑌤𑌾 ||

யோகத்தினுல் ஞானம் உண்டாகின்றது. யோகமென்பது என்னிடத்து ஒ[illegible]ாயிருத்தல்" என்னும் ஆதித்ய (சௌர) புராணவாக்கியமும,

𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌚𑍍𑌚 𑌯𑍋𑌗𑌾𑌦𑍃𑌤𑍇 𑌨 𑌹𑌿 |
𑌸 𑌚 𑌯𑍋𑌗𑌶𑍍𑌚𑌿𑌰𑌂 𑌕𑌾𑌲𑌮𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌦𑍇𑌵 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌿 ||

ஆத்மஞானத்தால் முக்தியுண்டாகின்றது. அதுவும் (ஞானமும்) யோகமின்றி யுண்டாகிறதில்லை. அந்தயோகமும் வெகுகால அப்பியாசத்தினுலேயே சித்திக்கின்றது" என்னும் ஸ்கந்த புராணவசனமும்,

"𑌕𑍁𑌤𑌃 𑌪𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑍋𑌗𑌂 𑌪𑌰𑌮𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌮𑍍 |
𑌯𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌭𑌾𑌨𑍁𑌮𑌨𑍍𑌤𑌮𑌿𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 |

இதற்மேல் எதனுல் சூரியனைப்போல ஆத்மாவாகிய ஈசுவரனைப் பார்க்கின்றார்களோ, அந்த மிகத்துர்லபமாகிய யோகத்தைச் சொல்லுகிறேன்.

𑌯𑍋𑌗𑌾𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌦𑌹𑌤𑌿 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌮𑌶𑍇𑌷𑌂 𑌪𑌾𑌪𑌪𑌞𑍍𑌜𑌰𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ||

யோகாக்கினியானது சகல பாவக்கூட்டங்களேயும் விரைவில் தகிக்கின்றது. அதனால் பிரஸன்னமாகிய ஞானம் உண்டாகின்றது. ஞானத்தினால் நிர்வாண(மோக்ஷ)த்தையடைகிறான்'' என்னும் கூர்மபுராண சிவவாக்கியமும்,

தயாயதெ தஉதிஉா நுயா ஸுாஷிவுஷுதீஃவஈா ।
பொமெநஹஹுெதஸா தா நவாநெறுநதாகெநவிஜ ॥

புத்திமான் மேலாகிய நிர்விருத்தி (சுகம்) உண்டாகும் வண்ணம் முயற்சி செய்யக்கடவன். அதுவோ (சுகமோ) யோகத்தினால் அடையப்படுகின்றது. வேறொன்றினாலும் அடையப்படுகிறதில்லை.

ஸவதாவெநதவூநாஂ பெஈஹொஷிவஈஉளஷயழு ।
வஈாவஈவு ஸதூாயீயஷுஸு நிவஷுாணஸஂஸவா ।

பவ(சம்சார)தாபத்தினால் தபிக்கின்றவர்களுக்கு யோகமே மேலாகிய ஔஷதமாம். உலகவிஷ[illegible] வெறுப்புண்டாகியதும் பராவர(பரப்பிரஹ்ம)த்தில் பிரியமு[illegible]ாகிய புத்தி எவனுக்கிருக்கின்றதோ,

ஸவபொமாஞுநாஉுூ ஸஉூஸெக்ஷுஈஸஞபஃ ।
நிவஷுாணஂவஈஉஂநிதுஂ வுாவெுாதெுவநஸாஂஶுபஃ ॥

அவனும் யோகாக்கினியினால் சகல கிலேசக்கூட்டங்களும் தகிக்கப்பட்டவனாய் நித்தியமும் மேலானதுமாகிய நிர்வாணத்தையடைகிறான். சம்சயமில்லை.

ஸஂவுாவூயொமஹிஸிஷூவஹெணஷுா। ஸாதூஉுஶுஷு நாஜ
நக்ஷிஞிஜுஶுுதெகூாயஷுஂ தெமெநவஸகுஂகூுதழு ॥

யோகசித்தியைப் பூரணமாகப் பெற்றவனுக்கு ஆத்மதரிசனத்தைவிட வேறு காரியம் சிறிதும் தோற்றுகி[illegible]தில்லை, அதனாலேயே சகலமும் செய்யப்பட்டதாகிறது.

கூதூாஈாஉஃஸஉாவஹணஷுஃ ஸவாஉாதுஷிகூாஹதுஃ ।
கூதஷஸுாஹிநிவெஷுஉுஃ வஈஉாநுயெஸுவ ।

ஆத்மாராமனும் எப்போதும் பூர்ணனும் அத்தியந்த சுகத்தை யடைந்தவனுமாவன். அதன்பின்பரமாநந்த மயனுகிய அவனுக்கு நிர்வேதம் (பிரியமின்மை) உண்டாம். (பரமாநந்தவடிவமேயாகின்றமையின் எதிலும் பிரியமுண்டாகாதென்பது கருத்து.)

தவஸாஹாவிதா தூநொ பொமிநஃஸாயதெநபாஃ |
வ தூஷிஜஹா தூநொ யொமெநெவஜஹாணூவழ ||

தவத்தால் பாவிக்கப்பட்ட மனதையுடைய யோகிகளாகிய இந்திரியங்களை யடக்கிய மகாத்மாக்கள், யோகத்தினலேயே (சம்சாரமாகிய) மகாசமுத்திரத்தைக் கடக்கிறார்கள்" என்னும் கருடபுராணவசனமும்,

"யதூஃஸவஹூதாநாம் ஸ்ரீநாவகாரகழ |
கவிகீடவதமாநாம் தஹஃஸ்ரயஃவாவக |
உதகஃகவிஃஷ ஜெவெஜெவஷிஹிஸயா |
பொமவஸ்ய ஷெஷாதிகூவாநுவரா ||

என்ற சிரேயசு (புண்ணியம்) சகல பூதங்களுக்கும், ஸ்திரீகளுக்கும், புழு விட்டில்களுக்கும் உபகாரமுள்ளதாயிருக்கின்றதோ, அந்தமேலான சிரேயஸை எங்களுக்குச் சொல்லுகவென்று முன்தேவர்களாலும் தேவரிஷிகளாலும் கேட்கப்பட்டவராகிய கபிலர், அவர்களுக்குயோகமே மேலான சிரேயஸென்று சொல்லியிருக்கின்றார்" என்னும் விஷ்ணுதர்மவாக்கியமும்,

"ஊஸஹாராஜஸஸார விஷவெமவிஷஸிகா |
யொமமாருஜெதூண வாவநெநாவஸாத்ஷதி ||

இராமா! சம்சாரமென்னும் விஷவிவேகமுள்ள விடூசிகை வியாதியானது பரிசுத்தமாகிய யோகமென்னும் காருடமந்திரத்தாற் கெடுகின்றது" என்னும் வசிஷ்டர்வாக்கியமும், புராணங்களாம்.

தத்துவமஸிமுதலிய வாக்கியங்களாலும் அபரோக்ஷஞானம் உண்டாவதாயிருக்க, அதிகசிரமத்தால் சாதிக்கப்படும் யோகத்

தில் பிரயாசப்படுவானேன்? வாக்கியத்தாலுண்டாகும் ஞானம் அபரோக்ஷமாமென்பதில் பிரமாணமில்லையென்று சொல்லலாகாது. தத்துவமஸிமுதலிய வாக்கியங்களாலுண்டாகிய ஞானம் அபரோக்ஷஞானமாம். அபரோக்ஷவிஷய முடையதாயிருத்தலால், நேத்திரசம்பந்தமான குடமுதலியவற்றின் பிரத்தியக்ஷம் போல், என்னும் அநுமானம் பிரமாணமாயிருத்தலால், விஷயத்திலுள்ள அபரோக்ஷத்தன்மையானது வடிவமில்லாததாயிருத்தலால், ஏதுசித்தியாதென்று சொல்லலாகாது. அஞ்ஞானத்திற்கு விஷயமாகின்ற சித்துத்தன்மை அதன் தாதான்மியத்தையடையுந்தன்மையென்னும் இரண்டிலொருவடிவம் அதற்குச் செவ்வையாய் நிரூபிக்கத்தக்கதாயிருத்தலால், எப்படிக்கடமுதலியவற்றில் சக்ஷு(நேத்திர)சம்பந்தத்தால் அந்தக்கரணவிருத்திதசையில் அவ்வதிஷ்டான சைதன்னியத்தின் அஞ்ஞானம் நிவர்த்தியாதலால், அந்தச்சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விஷயமாதலும் சைதன்னியதாதான்மியத்தை யடைதலும் அபரோக்ஷத்துவமாகின்றதோ, அதுபோல தத்[illegible]ஸிமுதலிய வாக்கியங்களால் சுத்தசைதன்னியாகார அந்தக்[illegible]க்தியுண்டாகுங்கால், அவ்வஞ்ஞானம் நிவர்த்தியாதலினாலே[illegible]த்துவம் அஞ்ஞானவிஷயமாகின்றமையால் சைதன்னியத்திற்கு அபரோக்ஷத்துவமுண்டு. ஆகலின் ஏது சித்தியாதென்பதில்லை. * அப்பிரயோஜகத்துவமுமில்லை; ஞானத்தாலறியப்படுந் தன்மையாகிய அபரோக்ஷத்துவம் பிரத்தியக்ஷ பரோக்ஷ விஷயமுடைமையாற் பிரயோஜகமாயிருத்தலால். இந்திரியஜந்நியத்துவமோ இல்லை; மனதிற்கு இந்திரியத்துவ மில்லாமையினாலே சுகமுதலிய விஷயங்களில் வியபிசரித்(நியமந்தப்பு)தலால்.

அல்லது அபிவியக்தசைதன்னியத்திற்கு அபின்னத்தன்மையாகத் தோற்றிக்கொண்டிருக்குந்தன்மை, விஷயத்தின் அபரோக்ஷத்துவமாம். அபிவியக்தத்தன்மையும் ஆவரணநிவிருத்தியுடைமையாம். பரோக்ஷவிருத்திஸ்தலத்தில் ஆவரண[illegible]நிவிருத்தியில்லாமையால் அதிவியாப்தியில்லை. சர்ப்பமுதலி[illegible]ய பிராந்தியை

---

* ஏதுவிருக்கட்டும்; சாத்தியமில்லாதிருக்கட்டுமென்பது, அப்பிரயோஜகத்துவம்.

யுண்டாக்கும் தோஷமுடையவனுக்கு இது சர்ப்பமல்ல இரஜ்ஜுவாமென்னும் வாக்கியத்தாலுண்டாகும் விருத்தியோ ஆவரணத்தை நிவர்த்திக்கிறதில்லை. ஆகையால் அங்கே விஷபம் பரோக்ஷமே வேதாந்தவாக்கியத்தாலுண்டாகும் ஞானமோ, ஆவரணத்தை நிவர்த்திப்பதாயிருத்தலால் அபரோக்ஷமேயாம். அது மனனமுதலியவற்றிற்குமுன் உண்டாயிருக்கின்றது. ஞானத்தை நிவர்த்திக்கும் பிரமாண அசம்பாவனை முதலிய தோஷசாமானியமில்லாத விசிஷ்டமே அஞ்ஞானத்தை நிவிர்ப்பதாயிருத்தலால், அன்றியும்

" தஂகூளவநிஷதஂ வுருஷஂவு௱ஹாமீ ॥

அந்த உபநிஷதப் புருடனைக் கேட்கின்றேன்" என்னும் சுருதியாலடையப்பட்ட உபநிஷத்துமாத்திரத்தா லறியப்படுந்தன்மை யோகத்தாலறியப்படுந்தன்மையில் பொருத்தமுடையதாகாது. ஆகையால் தத்துவமஸிமுதலிய வாக்கியங்களினாலேயே அபரோக்ஷமுண்டாமெனின், அப்படியல்ல; அநுமானம் அப்பிரயோஜகமாதலால் [illegible]யக்ஷத்தின்பொருட்டு முற்கூறிய அக்ஷ (இந்திரிய)சா[illegible]யமுமில்லை. ஒவ்வொரு இந்திரியத்தன்மையால் காரா[illegible]த்தன்மையாக அதன் ஜந்நியத்தன்மைக்கே பிரயோஜகத்தன்மையிருத்தலால், நித்தியாநித்திய சாதாரணப் பிரத்தியக்ஷத்தன்மையிலோ பிரயோஜகத்துவம் சிறிதுமில்லை. அம்மதத்திலோ பிரத்தியக்ஷ விசேஷத்தில் இந்திரியம் காரணம் அதன் விசேஷத்தில் சப்தவிசேஷம் காரணமாமென்றிப்படிக் காரியகாரணத்தன்மை யிரண்டுண்டாகின்றது. மனதிற்கு இந்திரியத்துவமில்லை; மனதிற்கு இந்திரியத்தன்மையில்லை யென்பதில்லை; மனதிற்கு இந்திரியத்தன்மையில் பாதகமில்லாமையால் இந்திரியங்களுக்கு மனம்நாதன் என்பது மனிதர்களைப் போலுத்தேசித்து, மனிதர்களுக்கு இவன் இராஜா என்பதைப்போல இந்திரியங்களிலேயே கொஞ்சம் மேன்மையுடையதாகச் சொல்லப்படுகின்றது. அதற்கும் அநிந்திரியத்துவமில்லை; ஆயினும் அகண்டவுபாதி விசேஷமே உண்மையாம். இதனாற்றான் "பாயுவாதி கன்மேந்திரியம்; மனம் நேத்திரமுதலியன ஞானேந்திரியம்" என்றும், "இந்திரியசம்பந்தம் பிரத்தியக்ஷமாம். அதீந

திரியம் அப்பிரத்தியக்ஷமாம்'' என்றும் சக்திப்பிரமாணசொரூப மாகிய கோசத்தி (நிகண்டி)லும் இந்திரியப்பிரமாணமின்றிய ஞானத்திற்கு அப்பிரத்தியக்ஷத்துவம் கூறி மனதிற்கு இந்திரியத் துவம் அறிவிக்குந்தன்மை பொருந்துகின்றது.

"இந்த்ரியாணிதசைகஞ்ச ||

இந்திரியங்கள் பதினொன்று'' என்னும் கீதாவசனம் மன தின் இந்திரியத்தன்மையிற் பிரமாணமாம். அன்றியும் தத்துவ மஸி முதலிய வாக்கியஜந்நியஞானம் சாப்தமாம். சப்தஜந்நிய மாகையால், "யஜேத யாகஞ்செய்யக்கடவன்'' என்பவைமுத லிய வாக்கியங்களாலுண்டாகும் ஞானத்தைப்போலவென்னும் இதனால் அபரோக்ஷவிரோதியாகிய சாப்தத்துவத்தைச் சாதிக் குந் தன்மையில் * சற்பிரதிபக்கமுண்டாகின்றது. இது அப்பிர யோஜகமுமன்று; சாப்தத்தை முன்னிட்டே சப்தத்திற்கு உண் டாக்குந் தன்மையால் இலாவகமூலமான அநுகூலதர்க்கமிருத் தலால். உன்மதத்திலோ சப்தத்தி[illegible]ரத்தியக்ஷமங்கீக ரித்தலால் காரியகாரணத்தன்மையாகிய இ[illegible]டக் கற்பித்த லில் கௌரவமிருக்கின்றது. இன்னும் மனனநி[illegible]யாசனங் களுக்கு முன்னும் உண்டாயிருக்கின்றது. உன்மதத்தில் பரோ க்ஷமும் அஞ்ஞானத்தை நிவர்த்திப்பதாகாமையின், அஞ்ஞான நிவர்த்தியின்பொருட்டுப் பாதஞானத்தன்மையினலே ஏதுத்த ன்மையாமென்னும் கௌரவமிருக்கின்றது. எமக்கோ சமாதியப் பியாச பரிபாகத்தால் அசம்பாவனை முதலிய சகலமலங்களும் நீங்கிய அந்தக்கரணத்தால் ஆத்மாவைக் காணுங்கால் தரிசன மாத்திரத்தினலேயே அஞ்ஞானம் நிவர்த்தியாதலால் ஒரு கௌர வத்திற்கும் இடமில்லை.

---

* எந்தஹேதுவிற்கு சாத்தியத்தின் (துணிபொருளின்) அபாவத் தைச்சாதிக்கும் மற்றோர் ஹேதுவிருக்கின்றதோ, அ[illegible] சற்பிரதிபக்க மாம் (மறுதலையுடைதாம்). அது "சத்தம் நித்தியம், சுரோத்திரத்திற்கு விஷயமாகுதலால், சத்தத்தன்மைபோலும்'' "சத்தம் அநித்தியம், காரியமா யிருத்தலால், குடம்போலும்'' எனவரும்.

„𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌗𑍂𑌢𑍋𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇 ।
𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌤𑍍𑌵𑌗𑍍𑌰𑍍𑌯𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃 ॥
𑌯𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑍀 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 ॥

இந்தப்புருஷனாகிய ஆத்மா பிரஹ்மாதி ஸ்தம்பபரியந்தமாகிய சகல பூதங்களிலும் கூடமாய் (பார்த்தல் கேட்டல் முதலிய கர்மங்களுள்ளதாய், அவித்தையினாலும் மாயையினாலும் மறைகப்பட்டதாய்) எதற்கும் ஆத்மாவா (தானாகவே) யிருத்தலால் விளங்குகிறதில்லை. ஆனால் ஏகாக்கிரத்தன்மையுள்ள சூக்ஷ்ம வஸ்துக்களை நிரூபிக்கு மியல்புடைய புத்தியினால் சூக்ஷ்மதரிசிகளாகிய பண்டிதர்களால் (ஆத்மா சகல பூதங்களிலும் கூடமாயிருக்கினும்) அறியப்படுகின்றது. விவேகியானவன் வாக்கை மனதில் ஒடுக்கவேண்டும்.” என்று ஆரம்பித்து, அஞ்ஞானநிவிருத்தியென்னும் பொருளுடைய

„𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍁𑌖𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

(அவித்[illegible]ம கர்மமென்னும்) மிருத்தியுவினின்றும் விடப்படுகி[illegible]” என்று முடிகின்ற கடவல்லியிலுள்ள மிருத்யுவின் (இயமனது) உபதேசத்தால் இவ்வர்த்தம் சம்மதமாகின்றபடியால், இதில் ஓர்விதவாதமுமில்லை. மனனமுதலியவற்றிக்கு முன் உண்டாகிய ஞானம் பரோக்ஷமேயாகலின், பிரதிபந்தத் தன்மையாகிய கௌரவமில்லை யென்னும் மதம் ஆதரிக்கப்படுமாயின், அதுவும் சிரவணமுதலியவற்றால் மனதிற்குச் சமஸ்காரம் சித்தித்தபோது அவ்வியவகிதோத்தரம் (தேசகால மறைப்பின்றிய அடுத்த க்ஷணத்தில்) ஆத்மதரிசனம் சம்பவித்தலால், அதன்பின் வாக்கியஸ்மரண முதலியவற்றைக் கற்பித்தலாகிய பெருங் கௌரவத்தைச் சம்பாதிப்பதேயாம். அப்படியானால் நாங்கள் தர்க்கயுக்திமாத்திரத்தால் சப்தஜந்நிய ஞானத்திற்கு அபரோக்ஷத்துவங் கூறவில்லை.

„𑌤𑌂 𑌤𑍍𑌵𑍌𑌪𑌨𑌿𑌷𑌦𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌿

அந்த ஔபநிஷத்துப் புருஷனைக் கேட்கிறேன்” என்னும் பிரகதாரணிய சுருதியினாலும் கூறுகின்றோம். உபநிடதத்துவம்

புருஷனுக்கு உபநிஷதத்தினுலாகிய புத்திக்கு விஷயமாந்தன்மை மாத்திரமன்று? பிரத்தியக்ஷமுதலியவற்றால் அறியப்படும் உபநிஷத்துத்தன்மையினும் வியவகாரம் சம்பவித்தலால். எப்படி பன்னிரண்டு கபாலங்களில் எட்டுக்கபாலங்களிருக்கினும் பன்னிரண்டு கபாலங்களாலாகியதாக எட்டுக் கபாலமுதலியவற்றின் வியவகாரமுண்டாகின்றதோ. எப்படி இரண்டு புத்திரன்முதலியவற்றில் ஒரு புத்திரன்முதலிய வியவகாரமுண்டாகின்றதோ அப்படியிங்குமாம். வேறிடத்தில் அப்படிப்பட்ட வியவகாரமில்லை. ஆகையால் உபநிஷத்துமாத்திரத்தால் அறிப்படுந் தன்மையே பிரத்தியயார்த்தமா (ஞானத்தின் பொருளா)ம். அதுவும் மனதினுல் அறியப்படுந் தன்மையிற் பொருந்துமெனின், அப்படியல்ல. பிரத்தியயத்தினுல் உபநிஷத்திற்கு வேறுகிய யாவும் காரணத்தன்மையாக வேறுபிரித்தறிவிக்கப்படுகிறதில்லை. சப்தாபரோக்ஷவாதியாகிய உன்னுலும் ஆத்மாபரோக்ஷத்தில் மனனமுதலியவற்றிக்குக் காரணத்துவம் அங்கீகரிக்கப்படுதலால், ஆனுல் புராணமுதலிய சப்தாந்தரங்களே

"ஶ்ரோதவ்ய꞉ ஶ்ருதிவாக்யேப்⁴ய꞉ ॥

சுருதி வாக்கியங்களால் கேட்கத்தக்கதாம்" என்று சொல்லுதலால், அவ்வர்த்தம் எனக்கும் சம்மதமாமென்னு மிதுசிறிதுமில்லை. பிரமாணுந்தரவியாவிருத்தியில் தாற்பரியகற்பனமும் ஆத்மாபரோக்ஷத்தில் சப்தத்தின்பிரமாணத்தன்மையில் சித்தித்ததாகவே சொல்லத்தக்கதாம். சப்தாந்தரவியாவிருத்தி தாற்பரியமோ சுருதிமுதலியவற்றிற்குச் சம்மதமாயிருத்தலால் கற்பிக்கத்தக்கதேயாம். இப்படியிருக்குமாயின்,

"மனஸைவாநுத்³ரஷ்டவ்யம் மனஸைவேத³மாப்தவ்ய꞉ ॥

மனதினுலேயே பார்க்கத்தக்கதாம் மனதினுலேயே இது அடையத்தக்கதாம்." என்பவைமுதலிய சுருதிகளும் நேராகச் சொல்லியவைகளாகும். சிலர் தரிசனவிருத்தியின்பொருட்டு மனதுமாத்திரத்திற்கு உபாதானத்தன்மை கூறும் சுருதிகள் விரோதப்படாவென்று கூறுகின்றனர். அது மிகவும் விசாரிக்கப்பொருக்காததாம். ஏதனுலெனின், பிரமாண ஆகாங்க்ஷயி

(விருப்பத்தி)ல் பிரவர்த்தித்துள்ள அவை எப்படி உபாதானத்தைப்பற்றியனவாகும்.

"காம:ஸங்கல்போவிசிகித்ஸாஶ்ரத்தாஶ்ரத்தாத்ருதிரத்ருதி ரித்யேதத்ஸர்வம் மன ஏவ ||

காமம், சங்கற்பம், சந்தேகம், சிரத்தை, அசிரத்தை, திருதி (நிலையுடைமை), அதிருதி (நிலையின்மை) என்னுமிவையாவும் மனமேயாம்" என்னும் இவைமுதலிய சுருதிகளால் சாவதாரண (நிச்சயவாக்கிய)த்தால் சகலவிருத்திகளுக்கும் மனோமாத்திர உபாதானமுடைமை அறிவிக்கப்படுதலால், ஆகாங்க்ஷையில்லாமையால் உபாதானதாற்பரியமுடைமையாக எப்படி வர்ணிக்கக்கூடும்? முன்னே இரண்டாவது வல்லியில் பிரணவத்தைப் பிரஹ்மத்தையறிவிப்பதாகக் கூறியிருத்தலால், அதுவும் அபரோக்ஷத்திற்கு ஏதுவாமென்னும் சங்கையை நிவர்த்திக்க,

"மனஸைவ[illegible]த்ரஷ்டவ்ய ||

மனதி[illegible]மய பார்க்கத்தக்கதாம்" என்னுமிவைமுதலியன சாவதாரணவாக்கியங்களாமென்றே வர்ணிக்கக்கூடியவைகளாம். இனி அதிகமாய்ப் பேசுதலினின்றும் அமைதிபெறுவாம். உண்மையாகவே யோகிகளுக்குச் சமாதியில் தூரத்திலுள்ளபதார்த்தங்களின் ஞானமுண்டாமென்பது சகல சாஸ்திரங்களிலும் பிரசித்தம். அப்போது பரோக்ஷசாமக்கிரியை யில்லாமையால், அது (தூரதிருஷ்டி) பரோக்ஷமன்று. பகுத்தறியத்தக்க முன்னநுபவமில்லாமையால், ஸ்மரணமுமன்று. சுபசித்தாந்தமாதலால், சுகமுதலியவற்றின் ஞானத்தைப்போல் சாக்ஷிவடிவமுமன்று. பிரமா (ப்ரமா) சாமானியத்தில் கரணநியமமிருத்தலால், அப்பிரமாணமுடையது மன்று. நேத்திரமுதலியவற்றால் உண்டானது மன்று; அவற்றின் சம்பந்தமில்லாமையால். ஆகையால் அது மானசிகப் பிரமாவென்றே சொல்லத்தக்கதாமென்று மனதின் இந்திரியத்தன்மையும் பிரமாணத்தன்மையும் தூரத்தள்ளத்தக்கனவேயாம். எவர்கள் யோகம் சுருதி இரண்டிற்கும் சமுச்சயத்தை (கலப்பைக்) கற்பிக்கின்றார்களோ அவர்

களுக்கும் முற்கூறிய தூஷண (குற்ற)ங்கள் அதில் நிலைபெறும். ஆதலால் யோகஜந்நியசம்ஸ்காரத்தோடுகூடிய மனதுமாத்திரத்தால் அறியத்தக்கது ஆத்மாவென்பது சித்தித்தது. ஸ்திரீயைப் பாவிக்கின்றவனுக்கு வியவகித (தேசகாலங்களால் மறைந்துள்ள) ஸ்திரீயின் சாக்ஷாத்காரம்போல, பாவனையாலுண்டாகுந்தன்மையால் ஆத்மசாக்ஷாத்காரத்திற்கு அப்பிரமாணத்துவப்பிரசங்கமில்லை; பாதிக்கப்படாதவிஷயத்துவத்தினாலும், தோஷஜந்நியத்தன்மையில்லாமையாலும், ஸ்திரீயின் சாக்ஷாத்காரம் பாதிக்கப்படும் விஷயமுடையதா யிருத்தலாலும், தோஷஜந்நியமா யிருத்தலாலும் அப்பிரமாணியம்; பாவனையாலுண்டாகியதா யிருத்தலால் பாவனாசமாதியின் ஞாபகத்தன்மையில் வேறுபிரமாணம் பொருந்துவதுமில்லை; அதுமனதின் சகாயத்தையுடையதா யிருத்தலால். பிரமாணத்தை நிரூபித்தலிற் சமர்த்தர்களாகிய நையாயிகர் முதலியோர்களாலும் யோகத்தாலாகிய பிரத்தியக்ஷம், அலௌகிகப்பிரத்தியக்ஷத்தில் அந்தர்ப்பாவம் செய்ய(அடக்க)ப்பட்டிருக்கின்றது.

யோகத்தினாலாகிய அலௌகிக சம்பந்த[illegible]ல் யோகிகள் வியவகிதமாய்த் தூரத்திலுள்ள சூக்ஷ்மபதார்த்தங்[illegible]யும் ஆத்மாவையும் யதார்த்தமாக அறிகின்றனர். அப்படியே பாதஞ்சல சூத்திரத்தில்,

"ஐதம்ஹரா தத்ரவ்ரஜ்ஞா"

அதில் (சமாதியில்) உண்டாகும் பிரஞ்ஞை, யதார்த்தமுடையதென்னும் பொருளுள்ள ரிதம்பரையெனப்படும்.

"ஶ்ருதாநுமாநப்ரஜ்ஞாப்யா மந்யவிஷயாவிஶேஷாத்வாத் ||

"அது (ரிதம் பரபிரஞ்ஞை) ஆகம அநுமானப்பிரஞ்ஞைகளுக்கு அந்நியமான விஷயமுடையதாம். விசேஷார்த்த(நிருவிகற்பவிஷய)முடைமையின்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. சப்தத்திற்கு பதார்த்தத்தன்மை யவச்சேதகத்தினை முன்னிட்டும், அநுமானத்திற்கு வியாபகத்தன்மை யவச்சேகத்தினை முன்னிட்டும், ஞானத்தை யுண்டாக்குந்தன்மையாகிய நியமத்தால்,

அதைக் கிரகித்தலில் யோக்கிய விசேஷியமாத்திரத்தைப்பற்றி யதா யிருத்தலாமென்பது பொருள். இதில் வாதராயண(வியாச) ரால் செய்யப்பட்ட பாஷியம்

"ஶ்ருதமாகமவிஜ்ஞானம் தத்ஸாமாந்யவிஷயம் நஹ்யாகமேந ஶக்யோ விஶேஷோऽபிதாதும் கஸ்மாத் நஹி விஶேஷேண க்ருதஸங்கேத: ஶப்த இதி ||

"சுருதம் அதாவது ஆகமவிஞ்ஞானமாகிய அது சாமானிய விஷயமுடையதாம். விசேஷத்தோடு செய்யப்பட்ட சங்கேத முடையதன்று சப்தம் என்பதனுல் ஆகமத்தால் விசேஷம் சொல்லக்கூடியதன்று.

ததாऽநுமாநம் ஸாமாந்யவிஷயமேவ யத்ர ப்ராப்திஸ்தத்ர கதிர்யத்ராப்ராப்திஸ்தத்ர ந பவதி கதிரித்யுக்தம் | அநுமாநேந ச ஸாமாந்யேநோபஸம்ஹார: தஸ்மாச்ச்ருதாநுமாந விஷயோ நவி[illegible]கஶ்சிதஸ்தீதி | நசாஸ்ய ஸூக்ஷ்மவ்யவஹித விப்ரக்ரு[illegible]ஸ்ய வஸ்துந: லோகப்ரத்யக்ஷேண க்ரஹணம் | நசாஸ்ய விஶேஷஸ்யாப்ரமாணகஸ்யாபாவோऽஸ்தீதி ஸமாதிப்ரஜ்ஞாநிர்க்ராஹ்ய ஏவ ஸ விஶேஷோ பவதி பூதஸூக்ஷ்மகதோ வா புருஷகதோ வா தஸ்மாச்ச்ருதாநுமாநப்ரஜ்ஞாப்யாமந்யவிஷயா ஸா ப்ரஜ்ஞா விஶேஷார்தத்வாத் ||

அவ்வாறே அநுமானமும் சாமானியவிஷயமுடையதேயாம். எங்குப்பிராப்தியோ அங்குகதியுளது. எங்குப்பிராப்தியில்லையோ அங்குகதியில்லையென்று சொல்லப்பட்டுளது. அநுமானத்தினுல் சாமானியத்தோடு உபசங்காரமாம் ஆதலால் ஆகமாநுமானவிஷயமாகும் விசேஷம் ஓரிடத்துமில்லையென்க. இந்தச் சூக்ஷ்மமும் மறைபட்டுளதும் தூரத்திருப்பதுமாகிய வஸ்துவிற்கு உலகப்பிரத்தி[illegible]க்ஷத்தில் கிரகணமில்லை. அப்பிராமாணிகமான இந்தவிசேஷம் இல்லை யென்பதில்லை. சமாதிப்பிரஞ்ஞையினுலேயே கிரகிக்கத்தக்க அந்தவிசேஷம் புருஷனிடத்திருப்பதாகவாவது பூதசூக்ஷ்மங்களில் இருப்பதாகவாவது இருக்கின்றது.

ஆதலால் ஆகமாநுமானப் பிரஞ்ஞைகளிலும் அந்நியவிஷயமுடை யதாம். அந்தப்பிரஞ்ஞை; விசேஷார்த்தமுடைமையால்." என் பதாம். யோகபீஜத்தில்

"ஜ்ஞாநநிஷ்டோ விரக்தோ(அ)பி தர்மஜ்ஞோ(அ)பி ஜிதேந்த்ரிய: |
விநா யோகேந தேவோ(அ)பி ந மோக்ஷம் லபதே ப்ரியே ||

பிரியமுள்ளவளே(பார்வதீ)! ஞானநிஷ்டனாய், விரக்தனாய் சகலதருமமறிந்தவனாய், இந்திரிய ஜெயமுள்ளவனாயிருக்கினும், அவன் தேவனாயினும் யோகமின்றி மோக்ஷமடையான்." என்று சொல்லப்பட்டிருக்கிறது. அன்றியும்,

"தஏவ ஸக்த: ஸஹ கர்மணைதி |
லிங்கம் மநோ யத்ர நிஷக்தமஸ்ய ||

என்னும் சுருதியினாலும்,

"காரணம் குணஸங்கோ(அ)ஸ்ய ஸ[illegible]த்யோநிஜந்மஸு ||

இவனுக்குச் சதசத்துயோனிகளிற் பிற[illegible]தக் காரணம் குணசங்கமா(குணச்சேர்க்கையா)ம்" என்னும் ஸ்ம[illegible]யினாலும், தேகம் நீங்கும் காலத்து எதில் இராகாதிகள் தடிக்கின்றனவோ, அந்தயோனியையே ஜீவன் அடைகிறான் என்பதனால் யோகமில்லாதவனுக்கு ஜன்மாந்தரம் (வேறு பிறப்பு) உண்டாகவேசெய்யும்; மரணகாலத்து அதிகமாயுண்டாகும் கலக்கம் அயோகியால் நீக்கப்படக்கூடாமையின். அது யோகபீஜத்தில்

"தேஹாவஸாநஸமயே சித்தே யத்யத்விபாவயேத் |
தத்ததேவ பவேஜ்ஜீவ இத்யேவம் ஜந்மகாரணம் |

தேகம் நீங்குங்காலத்துச் சித்தத்தில் எது எது பாவிக்கப்படுகின்றதோ, அததுவேயாகின்றான் ஜீவன், என்றிப்படி ஜன்மத்திற்குக் காரணமிருக்கின்றது.

தேஹாந்தே கிம் பவேஜ்ஜந்ம தந்ந ஜாநந்தி மாநவா: |
தஸ்மாஜ்ஜ்ஞாநம் ச வைராக்யம் ஜீவஸ்ய கேவலம் ஶ்ரம: |

தேகாந்தத்தில் இன்னதேக முண்டாகுமென்பதை மனிதர்கள் அறியார். ஆகையால் ஞானமும் வைராக்கியமும் ஜபமும் சிரமமாத்திரமேயாம்.

விவீவிகாயதாஹூா ஜெஹெய்யாநாயி3வ்ய்ெத ।
கஸள கிவ்யாஸ்ருாெெகஃ-ஷொெஹாணெவாகுயஂஸவீ ॥

தேகத்தில் எறும்பு கடித்தால் தியானத்தினின்றும் விலகுமவன் தேளினுற் கொட்டப்பட்டாலாவது அல்லது தேகாந்தத்திலாவது எப்படிச் சுகமுடையவனுவன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. யோகிகளுக்கோ யோகசாமர்த்தியத்தால் கடைசிக்காலத்திலும் ஆத்மபாவனையால் மோக்ஷமேயாகுதலால் ஜன்மாந்தரமுண்டாகாது. அது பகவானுற்கூறப்பட்ட

"வ்யாணகாலெ உநஸாவலெந
ஹக்ூாயாக்ூெயாமவலெநவெவ ।

மாரணகாலத்தில் நிச்சலமான மனதினுலும் பக்தியினுலும் சமாதியிலாகிய ச... தி (வாசனையி) னுலுண்டாகும் சித்தஸ்திரத்தன்மை... னும் இலக்ஷணமுள்ள யோகபலத்தினுலும்" என்னு மி... முதலியவற்றுலும்

"ஶதஂவெகா ஹ்ருயஸ்நாஃ ।

இருதயத்தின் நாடிகள் நூறும் ஒன்றுமாம்" என்னும் இவைமுதலிய சுருதிகளாலும் சொல்லப்பட்டிருக்கிறது. தத்துவமஸிமுதலிய வாக்கியங்களுக்கு அபரோக்ஷஞானத்தை யுண்டாக்குந்தன்மையில் அவற்றின் விசாரம் வியர்த்தமேயாமென்று சங்கிக்கக்கூடாது; வாக்கிய விசாரத்தினுலாகிய ஞானம் யோகவாயிலாக அபரோக்ஷஞானத்திற்குச் சாதனமாயிருத்தலால். இது விஷயமாகவே யோகபீஜத்தில் கௌரீசுவரசம்வாதம் விசேஷமாயிருக்கிறது. அதினின்றும் சிறிது எடுத்தெழுதப்படுகிறது:—

ஜெவ்வாவ,

"ஜ்ஞாநிஷ்டூா தாயெவெ தெஷாஂஹவதிகீஷ்ஸி ।
மதிஃகுயஜெவெஸ்காஞ்யாஷா தவாரியெ ॥

தேவி கேட்கலுற்றாள் :—காருணியமெனும் அமுதக்கடலாகிய தேவேசா! எந்த ஞானிகள் மரிக்கின்றார்களோ அவர்கள் நிலை எப்படிப்பட்டதாகும்? சொல்லுவீராக"

ஈஸ்வர உவாச,

"தேஹாந்தே ஜ்ஞாநிந: புண்யாத் பாபாத் ஃபலமவாப்யதே |
யாத்ருசம் தத்ததநுபூய ஜ்ஞாநீ புநர்பவேத் |
பச்சாத் புண்யேந மஹதா ஸித்தைஸ்ஸஹ ஸமாகத: |
ததஸ் ஸித்தஸ்ய க்ருபயா யோகீ பவதி நாந்யதா |
ததோ நச்யதி ஸம்ஸாரோ நாந்யதா சிவபாஷிதம் ||

ஈசுவரன் சொல்லலாயினார்:—தேகாந்தத்தில் * ஞானியால் புண்ணியபாவங்களின் பலம் அடையப்படுகின்றது. எப்படிப்பட்ட பலம் உண்டாகின்றதோ, அதைப் புசித்து ஞானி மறுபடியும் பிறப்பான். பிறகு அவனுக்கு புண்ணியத்தினால் சித்தர்களோடு சேர்க்கையுண்டாகின்றது. அதன்பின் சித்தர்(மோக்ஷ சித்தியை யுடையவர்)களது கிருபையால் யோகியாகின்றான்; வேறுவிதத்தாலாகிறதில்லை. அதனால் சம்ஸாரம் நசிக்கிறது. வேறுவிதத்தினால் நசிக்கிறதில்லையென்று ஈசுவரனால் சொல்லப்பட்டது."

தேவ்யுவாச,

"ஜ்ஞாநாதேவ ஹி மோக்ஷம் வதந்தி ஜ்ஞாநிந: ஸதா |
கதம் யோகஸ்ஸித்திதோ பவேந்மோக்ஷதோ பவேத் ||

தேவி கேட்கலுற்றாள்:-வேறுவிதத்தினாற் சித்திக்கிறதில்லை. ஞானத்தினாலேயே எப்போதும் மோக்ஷமுண்டாமென்று ஞானிகள் சொல்லுகின்றனர். ஆகையால் யோகமெப்படி மோக்ஷத்தைத் தருவதாம்?"

ஈஸ்வர உவாச,

"ஜ்ஞாநேநைவ ஹி மோக்ஷோ ஹி
தேஷாம் வாக்யம் து நாந்யதா |

* இங்கே ஞானிகளென்றது திடாபரோக்ஷ ஞானமில்லாதவர்கள்.

ஸவெஃவஷஷிவஜ்ஞ ஜயொஹவதி தஷிஃகிழ |
விநாயஃஜெநவீயெஃண கயஂஜபவோவூஃயாக |
தயாயொமெநாஹிதஂஜ்ஞாநஂ மொக்ஷாயநொஹவெக ||

ஈசுவரன் சொல்லலாயினர்:—ஞானத்தினலேயே மோக்ஷமுண்டாமென்னும் அவர்கள் வாக்கியம் வித்தியாசமுடையதன்று சகலரும் வாளினலேயே ஜயமுண்டாமென்று கூறுகின்றார்கள். ஆயினும் யுத்தமும் வீரிய(பல)மு மின்றி எப்படி ஜயத்தையடையக்கூடும்? அதுபோல * யோகமின்றியஞானம் மோக்ஷத்தின் பொருட்டாகாது." என்பதாம் அப்படியானல் ஜனகாதிகளுக்கு யோகமில்லாமலும் பிரதிபந்தமின்றிப் ஞானமும் மோக்ஷ

* இது யோகசிகோபநிஷத்வாக்கியம். இங்ஙனமே யோகம் ஞானத்திற்குச் சாதனமாமென்பது "யோகமின்றிய ஞானம் எப்படி மோக்ஷத்தைத் தருவதாம்" என்று யோகதத்துவோபநிஷத்திலும் "அநேகஜன்மங்களிலப்பியசிக்கப்பட்டஞானத்தால்யோகம் அடையப்படுகின்றது.[ஞானம் யோகசாதனமாமென்பதைப் பகவற்கீதையின் கசு-வது அத்தியாயத்தினது முதல் சுலோகபாவி[illegible]ண்க] ஞானமோ ஒரு ஜன்மத்திலநுஷ்டிக்கப்பட்ட யோ[illegible]லேயே யுண்டாகின்றது. ஆகையால் யோகத்தைப் பார்க்கி[illegible]மேலானதில்லை. யோகமார்க்கமே மோக்ஷத்தைத் தருவதா" மென்று யோகசிகோபநிஷத்திலும். "யோகியானவன் தவமுடையோர், ஞானிகள் (சாஸ்திரப் பயிற்சியுடையோர்), கர்மிகள் (அக்கினிஹோத்திராதி கர்மஞ்செய்வோர்) என்னும் இவர்களைப்பார்க்கிலும் மேலானவனாக மதிக்கப்பட்டிருக்கின்றான். ஆகையால் ஓ! அர்ச்சுனா! நீ யோகியாகக்கடவாய்." என்று பகவற்கீதையிலும், "மன்னியயோகந்தன்னால் ஞானம் வந்தெய்துமந்த; வுன்னருஞானந்தன்னால் யோகம்வந்தெளிதினெய்து; மின்னவையிரண்டுங்கைவந்திறைஞ்சினேன் றனக்கியான்மற்; றன்னியனல்லனன்னேன் றன்னுடனொருவனவேன்" என்றும், "இன்னணம்பிரமமாகுஞ்சாங்கியமிசைத்தோமீதின், மன்னுறமனத்தைச்சேர்த்தன் மாண்புடையோகமாகும்; பன்னருஞானம்யோககாரணம் பழிப்பில்யோகந் துன்னுதற்கரியஞானகாரணமாகித்தோன்றும்" என்றும், யோகியரடைந்த முத்திச்சாங்கியருற்றுவாழ்வர்; சேகெறியோகத்தோடுசாங்கியத்தெளிவு தன்னை; யோகமாயெண்ணினேரைத் தத்துவமறிந்தோரென்னச்; சோகமோகங்கள்சொற்றதொல்லைமாமுனிவர்சொல்வார்" என்றும் கூர்மபுராணத்திலும், "யோகத்தினல் விஞ்ஞானம் சித்திக்கின்றது. ஞானத்தினல் யோகம்பிரகாசிக்கின்றது. ஞானயோகத்தால் மோக்ஷம் இலயிக்

மும் கேட்கப்பட்டிருத்தலால், யோகத்தினாலேயே பிரதிபந்த மில்லாத ஞானமும் மோக்ஷமு முண்டாமென்பது எப்படியெ னின், அது சொல்லப்படுகின்றது:— * அவர்களுக்குப் பூர்வ ஜன்மங்களி லநுஷ்டிக்கப்பட்ட யோகத்தினாலாகிய சம்ஸ்காரத் தால் ஞானங்கிடைத்ததென்று புராணமுதலியவற்றில் கேட்கப் பட்டிருக்கின்றது. அதெப்படியெனின்,

"ஜைகீஷவ்யோ யயாவிப்ரோ யயாசைவாஸிதாதய:
க்ஷத்ரியா ஜநகாத்யாஸ்து துலாதாராதயோ விஶ:।
ஸம்ப்ராப்தா:பரமாம் ஸித்திம் பூர்வாப்யஸ்தயோகத:।

ஜைகீஷவ்வியரென்னும் பிராஹ்மணரும், அஸிதர் முதலி யோரும், ஜனகர்முதலிய க்ஷத்திரியர்களும், † துலாதாரர்முத லிய வைசியர்களும் முன் அப்பியாசித்தயோகத்தால் மேலாகிய சித்தியையடைந்தனர்.

யேऽபி வ்யாதாதய:ஸத்ஸ்ஶூத்ரா:[illegible]வகாதய: ।
தைத்யா யீஸம்ஹாஶாஸ்த்ரம் ஶாம்பவ[illegible]ஸிநீ।

---

கின்றது. அங்ஙனமின்றிக் கோடிகிரந்தங்களினாலும் அடைய[illegible]தக்கதன்று" என்று இராஜசித்தாந்த இராஜயோகத்திலும், "அரணிக்கட்டையிலு ள்ள அக்கினி யெப்படிக் கடைதலின்றி வெளிப்படாதோ, அதுபோல அப் பியாசயோகமின்றி ஞானம் பிரகாசியா' தென்று யோகசிகோபநிஷத் திலும், "விரும்புஞ்சரியை முதன்மெய்ஞ்ஞான நான்கு; மரும்புமலர் காய் கனிகளன்றோ பராபரமே" என்று தாயுமானவராலும் இப்படியே இன் னும் மற்றப்பெரியோர்களாலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

* "யோகமில்லாதவர்கள் அபக்குவிகள்; யோகத்தோடு கூடியவர் கள் பக்குவிகள்" என்னும் யோகசிகோபநிஷத்தின் வாக்கியத்தால் பக் குவிகளாகிய ஜனகன்முதலியோர்கள் பூர்வஜன்மங்களில் யோகத்தையப் பியசித்தவர்களேயாவர். அப்படியே "ஜடபாதர்முதலியோர்களுக்கு ஜன் மாந்திரகர்மவசத்தால் சித்தம் சம்யமத்திற்குரியதாயிருந்தமையால், அவர் களுக்கு மற்றச் சாதனங்கள் வேண்டுமென்பதில்லை" என்று கருடபுராண த்திலும், "யோ[illegible]யர்க்கேஞான மொழுங்காம்பே ரன்பான: தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே" என்னும் தாயுமானவர் வாக்கிய முதலியவற்றினாலுங் காண்க.

† துலாதரர் வாராணசியிலிருந்த ஓர் வணிகர்.

[illegible] ।

ஜ்ஞாநநிஷ்டாம் பராம் ப்ராப்தா: பூர்வாப்யாஸயோகத: ॥

அதுபோல தர்மவியாதன் முதலிய எழுசூத்திரர்களும் பைலவகர்முதலியோரும், மைத்திரேயி, சுலபை, சார்ங்கி, சாண்டிலி, தபஸ்வினியென்னு மிவர்களும் மற்றுமநேகரும் முன் அப்பியசித்தயோகத்தால் மேலாகியஞானநிஷ்டையை அடைந்தனர்” என்பதாம்.

அன்றியும், முற்பிறப்புகளில் அநுஷ்டிக்கப்பட்ட யோகாப்பியாசத்தின் புண்ணியதாரதம்மியத்தால் சிலர் பிரஹ்மபுத்திரத்தன்மையையும், சிலர் தேவரிஷித்தன்மையையும், சிலர் பிரஹ்மரிஷித்தன்மையையும், சிலர் முனித்தன்மையையும், சிலர் பக்தத்தன்மையையும் அடைந்தவர்களா யிருக்கிறார்கள். அதில் உபதேசமின்றியும் ஆத்மசாக்ஷாத்காரமுடையவர்களானார்கள். அப்படியே, இரணியகர்ப்பர், வசிஷ்டர், நாரதர், சனற்குமாரர், வாமதேவர், சுகர்முதலியோர் பிறப்பினாலேயே சித்தர் (மோக்ஷசித்தியைப் பெற்றவர்)களானாரென்று புராணமுதலியவற்றிற் கேட்கப்படுகின்றது. பிராஹ்மணனே மோக்ஷாதிகாரியென்று யாது புராணமுதலியவற்றிற் கேட்கப்படுகின்றதோ, அது அயோகி (யோகமில்லாதவர்)களது பக்ஷமாம். அது கருடபுராணத்தில்,

“ யோகாப்யாஸோ ந௄ணாம்யேஷாம்
நாஸ்தி ஜந்மாந்தரார்ஜித: ।
யோகஸ்ய ப்ராப்தயே தேஷாம்
ஶூத்ரவைஶ்யாதிகக்ரம: ॥

ஜன்மாந்திரத்தில் செய்யப்பட்ட யோகாப்பியாசம் எந்த நரர்களுக்கு இல்லையோ, அவர்களுக்கு யோகத்தையடையும் பொருட்டுச் சூத்திரர் வைசியர்முதலிய கிரமமுண்டு.

[illegible] ।
[illegible] ॥

ஸ்திரீத்தன்மையினின்றும் சூத்திரத்தன்மையை யடைகிறான். அதினின்றும் வைசியத்தன்மையை யடைகிறான். அதி

னின்றும் க்ஷத்திரியனும் விப்பிரனுமாகின்றான். அதினின்றும் கிருபாஹீன(தயையில்லாதவ)னாகின்றான்.

க்ஷத்ரியாத்ஸ்ம்ருதோ ராஜா க்ஷத்ரியாஷ் சிதக:வா꞉ |
தஸ்மாஜ்ஞா நிக்ஷ:ஹேய்ய விப்ரா ஸ்ர் ர்த் கிருஷ்ணோஹே: ||

அதினின்றும் வித்துவானாகிய பிராஹ்மணனாகின்றான். ஸ்மிருதனும் (ஸ்மிருதியை யநுசரிக்கிறவனும்) யாகஞ்செய்பவனுமாகின்றான். அதன்பின் கர்மஸியாசி(சந்நியாசி)யாகின்றான். அதினின்றும் ஞானித்தன்மையை யடைகின்றான், இவ்வாறு யோகிக்கிரமமாக முக்தியடைகின்றான். (சூத்திர வைசியாதிக்கிரமமாக யோகியாய் முக்தியை யடைகின்றான் என்பது பொருள்)" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால் யோகத்தில் சகலருக்கும் அதிகாரம் கேட்கப்படுதலால், யோகத்தினாலுண்டாகிய தத்துவ ஞானத்தினால் சகலரும் முக்தியடைகிறார்களென்பது சித்தம்.

"ஶுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோ(அ)பிஜாயதே |
அதவா யோகிநாமேவ |

யோகபிரஷ்டன் புனிதமாகிய ஸ்ரீமான்களது வீட்டிலேனும் யோகிகளது வீட்டிலேனும் பிறக்கிறான்" என்னும் பகவானது வாக்கியத்தால் யோகிகளுக்கு பிரஷ்டர் (யோகத்தினின்று நழுவினவர்)களாயினும் சூத்திராதிக் கிரமமில்லை. இவ்வளவில் அமைதிபெறுவாம். (கரு)

(அ-கை) பிராணமனோலயமின்றி மோக்ஷம் சித்தியாதென்று சொல்லப்பட்டது. அதில் பிராணலயமுண்டாயின்மனோலயமுமுண்டாமென, அதன் (பிராணனது) இலயக்கிரமத்தைக் கூறுகின்றார்:—

* ஜாக்ரதாஸ்ஸுஷுப்தாஸ்ச த்யாக்தாவாயுர்ஜயோமம் |
யுக்தாஸ்வைவஸுஷும்நே பஹ்மாரந்த்ரே நிரோதயேத் ||

(இ-ள்) எப்போதுமே (" ஸுராஜ்யாமிஸ்தேஶே |
நல்லராஜ்ஜியமும் தர்மமுள்ள தேசமும்" என்று சொல்லப்பட்டி

* இது யோகசிகோபநிஷத்வாக்கியம்.

ருக்கும் இலக்ஷணமுள்ள) நல்ல ஸ்தானத்திலிருந்துகொண்டு, சுழுமுனையென்னும் மத்தியநாடியை நன்றாய்ப் பேதிக்குந்தன் மையைக் குருமுகமாயறிந்து, பிராணவாயுவை மத்தியிற் செல் லுவதாக்கிப் பிரஹ்மரந்திரத்தில் நிரோதித்தல் வேண்டும்.

அது வாசிஷ்டத்தில்,

"அப்⁴யாஸேந பரிஸ்பந்தே³ ப்ராணாநாம் க்ஷயமாக³தே |
மந꞉ ப்ரஶமமாயாதி நிர்வாணமவஶிஷ்யதே ||

அப்பியாசத்தால் பிராணனது அசைவிற்கு க்ஷயம்வரும் போது மனம் மிகவும் சாந்தியை யடைகின்றது. அப்போது நிர்வாணம் மிஞ்சுகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. பிராணனும் மனமும் இலயமாகுங்கால் பாவனாவிசேஷமாகிய சமாதியோடு சேர்க்கப்பட்ட அந்தக்கரணத்தால் பாதிக்கப்ப டாத ஆத்மசாக்ஷாத்காரம் உண்டாகின்றது. அப்போது சீவ னோடிருந்துகொண்டே முக்தனாகின்றான். (௧௬)

(அ-கை) பி[illegible]மானால் காலஜயமுண்டாமெனக் கூறு கின்றார்:—

ஸூர்யாசந்த்³ரமஸௌ த⁴த்த꞉ காலம் ராத்ரிந்தி³வாத்மகம் |
போ⁴க்த்ரீ ஸுஷும்நா காலஸ்ய கு³ஹ்யமேதது³தா³ஹ்ருதம் ||

(இ-ள்) சூரியனும் சந்திரனும் இராப்பகல் வடிவமாகிய காலத்தைச் செய்கின்றன. சரஸ்வதியென்னும் சுழுமுனை (சூரி யசந்திரர்களாற் செய்யப்பட்ட இராப்பகல் வடிவமாகிய) கால த்தைப் புசிப்பதாயிருக்கின்றது. இது இரகசியமாய்ச் சொல் லப்பட்டது.

இரண்டரைக்கடிகை சூரியன் ஓடுகின்றது. இரண்டரைக் கடிகை சந்திரன் ஓடுகின்றது. சூரியன் ஓடுங்கால் பகலென்றும், சந்திரன் ஓடுங்கால் இரவென்றும் சொல்லப்படுகின்றது. இவ்வா கிகர்களது இராப்பகலில் யோகிகளுக்குப் பன்னிரண்டு இராப் பகல் வடிவமாகிய காலவிவகாரம் நடக்கின்றது. அப்படிப்பட்ட கால அளவால் ஜீவர்களுக்கு ஆயுளளவுமாகின்றது. எப்போது

சுழுமுனைமார்க்கத்தால் வாயு பிரஹ்மரந்திரத்தில் ஒடுங்குகின்றதோ, அப்போது இராப்பகல் வடிவமாகிய காலமில்லாமையால் "சுழுமுனை காலத்தைப் புசிப்பதாயிருக்கின்றது" என்று சொல்லப்பட்டது. எது வரையிலும் பிரஹ்மரந்திரத்தில் வாயுவொடுங்குகின்றதோ, அதுவரையிலும் யோகிகளுக்கு ஆயுள்விருத்தியுண்டாகின்றது. நீண்டகாலம் சமாதியை அப்பியசித்த யோகியானவன் முன்னமே மரணகாலத்தை யறிந்து பிரஹ்மரந்திரத்தில் வாயுவைக் கொண்டுபோய்க் காலனை நிவர்த்திக்கிறான் சுவேச்சையாகத் தேகத்தியாகமும் செய்கிறான் என்பதுகருத்து.

(அ-கை) இதுவுமது:—

* த்வாஸப்ததிஸஹஸ்ராணி நாடீத்வாராணி பஞ்ஜரே ।
ஸுஷும்நா ஶாம்பவீ ஶக்தி: ஶேஷாஸ்த்வேவ நிரர்த்தகா: ॥

(இ-ள்) பஞ்சரத்தில் (பஞ்சரம்போல் நரம்பு எலும்பு முதலியவற்றால் கட்டப்பட்டிருக்கும் சரீரத்தில்) † எழுபத்தீராயிரம் நாடித்துவார(வாயு பிரவேசிக்கும் [illegible]ங்களிருக்கின்றன. அவற்றுள், சுழுமுனை யென்னும் மத்தியநா[illegible]ாம்பவி சக்தியாம். மற்றவை (இடைபிங்கலை முதலியன) பிர[illegible]னமில்லாதவைவாம் (முற்கூறிபபிரயோஜனமில்லாமையால்).

---

* இது யோகசிகோபநிஷத்வாக்கியம்.

† எழுபத்தீராயிரம் நாடிகளுள் சுழுமுனை, இடை, பிங்கலை, குகு, சரச்சுவதி, யசசுவினி, பூஷை, விசுவோதரை, வருணை, அத்திசிங்குவை, பயசுவினி, சங்கினி, காந்தாரை, அலம்புடை யென்னும் பதினான்கும் முக்கியமானவைகள். அவற்றுள்ளும் சுழுமுனை, இடை, பிங்கலையென்னும் மூன்றும் பிரதானமாம். அவற்றுள்ளும் குற்றமற்ற சுழுமுனைநாடி மிகப் பிரதானமாம். இதனையே பிரஹ்மநாடியென்பர். அப்பதினான்கு நாடிகளின் இலக்கணம் வருமாறு:—

(க) முதுகின் நடுவில் வீணாதண்டமென்னும் எலும்புக்கூடு ஒன்று சிரசுவரையிலும் பொருந்தியிருக்கின்றது. அந்த எலும்புக்கூடாகிய மேருவின் மத்தியில் சி[illegible]சின் நடுவெழியுகுந்து புருவநடுவரையிற் பொருந்துகின்ற சூக்ஷ்மமாகிய துவாரம் ஒன்றிருக்கின்றது அதுவே பிரஹ்மநாடியென்னும் சுழுமுனையாம். அதற்குத் தேவதை சிவன் இது

இதனால் பக்தர்களுக்கு ஸம்-சுகம், ஹவதி உண்டாகின்றது. ஆகையால் இது சாம்பவியாம். அல்லது இது சம்புவாகிய ஈசுவரனதாகையால் சாம்பவியாம். அல்லது தியானத்தினால் சம்புவையடைவிப்பதாயிருத்தலால் சாம்பவியாம். அல்லது சம்புவின் ஆவிர்ப்பாவத்தை யுண்டாக்குவதாயிருத்தலால் சாம்பவியாம். அல்லது ஸம்-சுகவடிவாய் ஹவதி-நிற்கின்றது. ஆகையால் சாம்

---

"சுழுமுனைநாடி இரண்டு காற்பெருவிரலினின்றும் மூலாதாரபரியந்தம் இருவகையாகவும் மூலாதாரமுதல் ஒருவகையாகவும் பத்தாதாரங்களையடைந்து துவாதசாந்தம்வரை மேற்செல்வதாயிருக்கும்" என்று சித்தாந்த சாராவளியிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

(உ) சுழுமுனைக்கு இடதுபாகத்திலிருப்பது இடை. அது இடது நாசியில் வியாபித்து நிற்கும். தேவதை விஷ்ணு.

(ங) சுழுமுனைக்கு வலப்பாகத்திலிருப்பது பிங்கலை. அது வலது நாசிவரையிற் பொருந்திநிற்கும். தேவதை பிரஹ்மா

(ச) சுழுமுனைக்கு முன்னிருப்பது குகு அது குய்யம்வரையிற் பொருந்திநிற்கும். [illegible]ருந்து உற்பத்தியானதாயினும் சுழுமுனையின் முன்பாகத்தைச் [illegible]யாயடைந்து ஆண்குறிபரியந்தம் சென்றிருக்கிறது. தே[illegible] அக்கினி. பிருதிவியென்றுங் கூறுவர்.

(ரு) சுழுமுனைக்குப் பின்னிருப்பது சரச்சுவதி. அது நாவளவு பொருந்திநிற்கும். தேவதை விராட்டு

(சு) இடைக்கு முன்னிருப்பது அத்திசிங்ஙுவை அது இடதுகாற்பெருவிரலளவு பொருந்திநிற்கும். தேவதை வருணன்.

(எ) இடைக்குப் பின்னிருப்பது காந்தாரி. அது இடதுகண்வரையிற் பொருந்திநிற்கும். தேவதை சந்திரன். இந்திரனென்றும் கூறுவர்.

(அ) பிங்கலைக்கு முன்னிருப்பது யசசுவினி. அது வலதுகாற்பெருவிரல்வரையிற் பொருந்தியிருக்கும். தேவதை சூரியன். பிரஹ்மாவென்றுங் கூறுவர்.

(கூ) பிங்கலைக்குப் பின்னிருப்பது பூஷை. அது வலது நேத்திரம் வரையிற் பொருந்திநிற்கும். தேவதை திக்கு. ஈசுவரனென்றுங் கூறுவர்.

(க0) அத்தி[illegible]ங்ஙுவை குகுவென்னும் இரண்டு நா[illegible]களுக்கும் மத்தியில் விசுவோத(ரி)ரையென்னும் நாடியிருக்கின்றது. அது முகம்வரையிற் பொருந்திநிற்கும், தேவதை அக்கினி.

பவியாம். அல்லது சம்புவாகிய ஆத்மாவினதாயிருத்தலால் சாம்பவியாம். அல்லது சித்து வெளிப்படும் ஸ்தானமாயிருத்தலால் சாம்பவியாம். அல்லது தியானத்தால் ஆத்மசாக்ஷாத்காரத்திற்கு ஏதுவாயிருத்தலால் சாம்பவியாம். (கஅ)

(அ-கை) இதுவுமது:—

வாயுஃவரிவிதாயஸூாஃ ஙூ நாஸஹக்ஷுணலீழ |
வொயயிகூவாஸஷ ஊாயாം வு விஶெஃநிரொயதஃ ||

(இ-ள்) வாயு அப்பியாசிக்கப்பட்டதாகுமாயின் ஜடராக்கினியுடன் குண்டலிசக்தியை விழிப்பித்துப் பிரதிபந்தமின்றிச் சுழுமுனையிற் பிரவேசிக்கும்.

வாயுசுழுமுனை(சரஸ்வதி)யிற் பிரவேசிக்கும்பொருட்டு அதன் அப்பியாசம் செய்யவேண்டுமென்பது பொருள். (ககூ)

(அ-கை) இதுவுமது:—

ஸஷ ஊாவாஹிநிவு ாணெ ஸிஜு [illegible] \வஃநொ ந ஙீ |
சுநுயொகூிதராஹுாஸாஃ வுயாமெ[illegible] ாமிநாം ||

---

(கக) யசசுவினிகுருவென்னும் நாடிகளுக்கு மத்தியில் [illegible]ருணை(வாருணீ)யென்னும் நாடியிருக்கின்றது. அது குண்டலிக்குக் கீழும்மேலுமாகச்சரீரமெங்கும் பொருந்திநிற்கும். தேவதை வாயு.

சஉ. பூஷைசரச்சுவதியென்னும் நாடிகளுக்கு மத்தியில் பயசுவினியென்னும் நாடியிருக்கின்றது அது வலதுசெவிவரையிற் பொருந்திநிற்கும் தேவதை பிரஜாபதி.

(கஙு) காந்தாரி சரச்சுவதியென்னும் நாடிகளுக்கு மத்தியில் சங்கினியென்னும் நாடியிருக்கின்றது. அது இடதுசெவிவரையிற் பொருந்தி நிற்கும் தேவதை சந்திரன்.

(கச) கந்தமத்தியில் அலம்புடை நாடியிருக்கின்றது. அது குதம்வரையிற் பொருந்திநிற்கும். தேவதை வருணன். சூரியனென்றும் ஆத்மாவென்றும் கூறுவர்.

இந்நாடிகளெல்லாம் கந்தத்தினின்றும் அரசிலையின் [illegible]ரம்புகளைப்போலக் கிளைகிளையாய்ப்பிரிந்து போகின்றன.

இது தர்சனோபநிஷதம், சாண்டில்யோபநிஷதம், சூதசங்கிதை முதலியவற்றிற்கூறியதாம்.

(இ-ள்) பிராணன் சுழுமுனையிற் செல்லுவதாகுங்கால் மனோன்மணி (உன்மனியவஸ்தை) சித்திக்கின்றது. அப்படியில்லையாயின் (பிராணன் சுழுமுனையிற் செல்லுவதாகாவிடின்), மற்ற (சுழுமுனைக்கந்நியமாகிய) அப்பியாசங்கள் யோகி (யோகாப்பியாசி)களுக்குப் பிரயாசத்தின்பொருட்டே யாகின்றன.

(அ-கை) இதுவுமது:—

வவநொவயுவெதயெந ஊநஷெநவவயுவதெ ।
ஊநஷுவயுவதெயெந வவநஷெநவயுவதெ ॥ உக ॥

(இ-ள்) எந்தயோகியால் பிராணவாயு கட்டப்படுகின்றதோ அந்தயோகியால் மனமும் கட்டப்படுகின்றது. எவனால் மனம் கட்டப்படுகின்றதோ, அவனால் பிராணனும் கட்டப்படும்.

மனம் பிராணனென்னும் இரண்டில் ஒன்றைக் கட்டினால் இரண்டும் கட்டப்பட்டதாமென்பது பொருள். (உக)

(அ-கை) இ —

ஹெது ... ஹித்தஸ்ய வாஸநாவஸமீரணஃ ।
தயொ ... நஷ வணகஷ்ிஂஷ்ுள உாவஹிவிநஸ்யதஃ ॥ உஉ ॥

(இ-ள்) சித்தம் பிரவிருத்தித்தற்கு வாசனை (பாவனை=சம்ஸ்காரம்) பிராணவாயுவென இரண்டு ஏதுக்களிருக்கின்றன. அவற்றுள், ஒன்று நஷ்டமாயின் அவ்விரண்டும் நசிக்கும்.

வாசனை நசித்தால் வாயு சித்தம் என்னுமிரண்டும் நசிக்கும். சித்தம் நசித்தால் வாயு வாசனையென்னுமிரண்டும் நசிக்குமென்பது அபிப்பிராயம். அது வாசிஷ்டத்தில்,

“ வெஸீஜொராஊஹித்தஸ்ய வ்ராணஸ்நஉதவாஸநெ ।
வணகஷ்ிஂஷ்ுதயொநஷெ க்ஷிவஂவெவிநஸ்யதஃ ॥

இராமா! சித்தத்திற்குப் பிராணசலனம் வாசனையென்று இரண்டு காரணங்களுண்டு. அவற்றுள், ஒன்று நஷ்டமானால் இரண்டும் உடனே நஷ்டமாகும்” என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதிற்றனே,

" யாவத்விலீநம் நமந: தாவத்வாஸநாக்ஷய: ।
நக்ஷீணாவாஸநா யாவச்சித்தம் தாவந்நஶாம்யதி ॥

மனம் * ஒடுங்காதவரையில் வாசனை நசியாது. வாசனை நசியாதவரையில் சித்தம் நசியாது.

யாவந்ந தத்த்வவிஜ்ஞாநம் தாவச்சித்தஶம: குத: ।
யாவந்ந சித்தோபஶமோ ந தாவத்தத்த்வவேதநம் ॥

தத்துவஞானமுண்டாகாதவரையில் சித்தம் நசியாது. சித்தம் நசியாதவரையில் தத்துவஞானமுண்டாகாது.

யாவந்ந வாஸநாநாஶஸ்தாவத்தத்த்வாகம: குத: ।
யாவந்ந தத்த்வஸம்ப்ராப்திர்ந தாவத்வாஸநாக்ஷய: ॥

வாசனை நசியாதவரையில் தத்துவஞானமுண்டாவதேது? தத்துவஞான முண்டாகாதவரையில் வாசனாக்ஷயமுண்டாகாது.

தத்த்வஜ்ஞாநம் மநோநாஶோ வாஸநாக்ஷய ஏவ ச ।
மித:காரணதாம் கத்வா து:ஸாத்யாநி ஸ்திதாநி ஹி ॥

தத்துவஞானம், மனோநாசம், வாசனாக்ஷயம் மூன்றுமிவைகளே ஒன்றற்கொன்று காரணத்தன்மையையடைந்து சாதித்தற்கரியனவாயிருக்கின்றன.

த்ரய ஏதே ஸமம் யாவந்நாப்யஸ்தா முஹுர்முஹு: ।
தாவந்ந தத்த்வஸம்ப்ராப்திர்பவத்யபி ஸமாஶதை: ॥

ஆகையால் இம்மூன்றும் எதுவரையில் சமமாய் அடிக்கடி அப்பியசிக்கப்படவில்லையோ, அதுவரையில் நன்றாய் ஆசிரயிக்கப்படு மிவற்றால் தத்துவஞானத்தினடை வுண்டாகாது'' என்று வெதிரேகமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (௨௨)

(அ-கை) இதுவுமது:—

ஏனாய த்ருவிலீயேத வஹ்நிஸ்த்ருணீயதே ।
வஹ்நிநா லீயதே த்ரு ஏஷ த்ருவிலீயதே ௨௩ ॥

* இப்படியே அன்னபூர்ணோபநிஷத்திலும், முக்திகோபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

(இ-ள்) எதில் (எந்தஆதாரத்தில்) மனம் ஒடுங்குகின்றதோ, அதில் வாயு ஒடுங்குகின்றது. வாயு எதில் ஒடுங்குகின்றதோ, அதில் மனம் ஒடுங்குகின்றது. (௨௩)

(அ-கை) இதுவுமது:—

து³க்³தா⁴ம்பு³வத் ஸம்மிலிதாவுபௌ⁴ தௌ
துல்யக்ரியௌ மாநஸமாருதௌ ஹி |
யதோ மருத் தத்ர மந:ப்ரவ்ருத்தி-
ர்யதோ மநஸ்தத்ர மருத்ப்ரவ்ருத்தி: || ௨௪ ||

(இ-ள்) எதில் வாயு பிரவிருத்திக்கின்றதோ, அதில் மனது பிரவிருத்திக்கின்றது. எதில் மனது பிரவிருத்திக்கின்றதோ அதில் வாயு பிரவிருத்திக்கின்றது. ஆகையால் பாலும் நீரும் போல் செவ்வையாய்க் கலந்துள்ள மனம் வாயுவென்னும் அவ்விரண்டும் சமானக்கிரியையுள்ளனவாம்.

அது வாசி ல

“ஸஹ விநீ நித்யம் ஜந்தோ: ப்ராணசேதஸீ |
குஸுமாமோத³வந்மிஶ்ரௌ திலதைலவத்ஸ்தி²தே |
குருதஶ்ச விநாஶேந கார்யம் மோக்ஷாக்²யமுத்தமம் || ௨௪ ||

ஜீவர்களுக்கு நித்தியம் இன்றியமையாதனவாகிய பிராணனும் சித்தமும் பூவும் மணமும்போல கலந்தவைகளாய், எள்ளுமெண்ணெயும்போல விருந்துகொண்டு விநாசத்தால் மோக்ஷமென்னும் உத்தமமான காரியத்தைச் செய்கின்றன” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (௨௪)

(அ-கை) இதுவுமது:—

தத்ரைகநாஶாத³பரஸ்ய நாஶ
ஏகப்ரவ்ருத்தேரபரப்ரவ்ருத்தி: |
அத்⁴வஸ்தயோஶ்சேந்த்³ரியவர்க³வ்ருத்தி:
ப்ரத்⁴வஸ்தயோர்மோக்ஷபத³ஸ்ய ஸித்³தி⁴: || ௨௫ ||

(இ-ள்) அவற்றுள் (மனம் பிராணனென்னுமிரண்டனுள்), ஒன்றின் நாசத்தால் மற்றதன் நாசமும், ஒன்றன் பிரவிருத்தியால் (வியாபாரத்தால்) மற்றதன் பிரவிருத்தியுமுண்டாகின்றன. (மனம் பிராணனென்னும்) அவ்விரண்டும் இலயமாகாதிருக்கின், இந்திரியவர்க்கங்களின் விருத்தியும் (இந்திரியசமூகங்கள் தத்தம் விஷயங்களிற் பிரவிருத்தித்தலும்), அவ்விரண்டும் இலயமாயின் மோக்ஷபதத்தின் சித்தியுமுண்டாம். (அவை இலயமாகுங்கால் புருஷன் சொரூபத்தில் நிலைத்தலாலென்பது பொருள்).

“ தத்ராவிஸாயு்ஃபவநஸ்யநாஶஃ
ஷ஡ஂமயொமாயிநிஷெவணெந ।
ஜநோவிநாஶஸ்துமுரொஃஃஸாஜா
நிஜெஷஜாத்ரெண ஸுஸாயுவவ ॥

(பிராணன்மனமென்னும்) அவ்விரண்டிலும் பிராணனது நாசம் ஷடங்கமுதலியவற்றின் அப்பியா...கால் சாதிக்கத்தக்கதாம். மனோநாசமோ குருப்பிரசாதத்தா... மாத்திரத்தால் நன்றாய்ச் சாதிக்கத்தக்கதேயாம்.” என்னுமிது ...கபீஜத்தில் மூலசுலோகத்திற்கடுத்த சுலோகமாம். (உரு)

(அ-கை) இதுவுமது:—

* ரஸஸ்யஜநஸஸ்சைவ வஞலதுாவஸஹாவதஃ ।
ரஸொஃஜொஜநாவஃ கிஂநஸிஃயதிஹூதலெ ॥உசா॥

(இ-ள்) இரசத்திற்கும் (பாதரசத்திற்கும்) மனதிற்கும் சுபாவமாகச் சஞ்சலத்துவமுண்டு. இரசம் கட்டுப்பட்டால் சித்தம் கட்டுப்பட்டதாகின்றது. அதனால் உலகத்தில் எது சித்தியாது? (எல்லாஞ்சித்திக்குமென்பது பொருள்.) (உசா)

(அ-கை) அதனையே கூறுகின்றார்:—

* ஜூஹிதொஹாரதெவ்யா யீநூநொஜீவ திஸ்யழ ।
ஃஃவெவர தாஂயத்தெ ரஸொவாயஞ்ஸ்வாவதி ॥ உஎ ॥

---

* இவ்விரண்டும் வராகோபநிஷத்வாக்கியங்கள்.

(இ-ள்) பார்வதி! இரசமும் வாயுவும் மூர்ச்சிதமாயின் வியாதிகளைப் போக்குகின்றன. மிருதமாயின் சுவயம் (தமதுசாமர்த்தியத்தால்) வெகுகாலம் ஜீவிப்பிக்கின்றன. பத்தமா (கட்டுப் பட்டனவாகுமா) யின் ஆகாயத்தில் சஞ்சரிக்குந்தன்மையைத் தருகின்றன.

ஓஷதிவிசேஷங்களின் சம்பந்தத்தால் (சபலசஞ்சல)நீங்கிய இரசமும் கும்பகங்களினந்தத்தில் இரேசகம் நிவர்த்திக்கப்பட்ட வாயுவும் மூர்ச்சிதமெனப்படும், பஸ்மமாகிய இரசமும் பிரஹ்மரந்திரத்திலொடுங்கிய வாயுவும் மிருதமெனப்படும், கிரியா விசேஷத்தால் குளிகைவடிவமாகச் செய்யப்பட்ட இரசமும் தாரணுவிசேஷத்தால் புருவமத்தியில் தரிக்கப்பட்ட வாயுவும் பத்தமெனப்படும். (உஎ)

(அ-கை) இதுவுமது:—

உநஸெ்யெ ஸ்ரிரொவாயு
ஸ்தொவிநு: ஸ்ரிரொ ஹவெக |
விநு[illegible] ஸ்துஷாவஸத்வம்
வி[illegible]ஸ்யமுஜாயதெ ‖ உஅ ‖

(இ-ள்) மனம் ஸ்திரப்பட்டால் வாயு (பிராணன் ஸ்திர)மாகும், அதனால் (வாயுவின் ஸ்திரத்தன்மையால்) விந்து (சுக்கிலம்) ஸ்திரமாகும். விந்து ஸ்திரமானால் பலமும், பிண்ட(தேக)த்தின் ஸ்திரத்தன்மையும் உண்டாகின்றது. (உஅ)

(அ-கை) இதுவுமது:—

* இந்ரியாணாம் மநொநாயொ மநொநாயஸ்து மாருத: | ‖
மாருதஸ்ய லயொநாயொ ஸலயொநாதமாஶ்ரித: ‖உகூ

(இ-ள்) சுரோத்திரமுதலிய இந்திரியங்களுக்கு மனம் (அந்தக்கரணம்) நாதன் (பிரவிருத்திப்பது) ஆம். மனதிற்குப் பிராணன் நாதனும், பிராணனுக்கு மனோலயம் நாதன், அம்மனோலயம் நாதத்தை ஆசிரயித்திருக்கின்றது. (அதாவது மனம் நாதத்தில் ஒடுங்குகின்றது என்பது பொருள். (உகூ)

* இது வராகோபநிஷத்வாக்கியம்.

(அ-கை) இதுவுமது:—

𑌸𑍋𑌽𑌯𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌤𑍁 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌖𑍍𑌯𑍋 𑌮𑌾𑌸𑍍𑌤𑍁 𑌵𑌾𑌪𑌿 𑌮𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 ।
𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑌲𑌯𑍇 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ ௩௦ ॥

(இ-ள்) அவ்விதுவே(சித்தலயமே)மோக்ஷமென்னும் பதத்திற்கு வாச்சியமாகுக. அந்நியமதத்தால் ஆகாதிருக்க; சித்தலயம் சுழுத்தியிலுமிருத்தலால். பிராணன் மனமென்னும் இரண்டும் இலயமாகுங்காலத்து அநிர்வாச்சியமாகிய ஆநந்தம் நன்[illegible]ருய்ப் பிரவர்த்திக்கின்றது. (அநிர்வாச்சிய ஆநந்தமுண்டானல் ஜீவன் முக்திசுகம் உண்டாகவேசெய்யும். இதிற்சமுசயமில்லை யென்பது கருத்து). (௩௦)

(அ-கை) இதுவுமது:—

𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌶𑍍𑌵𑌾𑌸𑌨𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑌃 𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌸𑍍𑌤𑌵𑌿𑌷𑌯𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌨𑌿𑌶𑍍𑌚𑍇𑌷𑍍𑌟𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌶𑍍𑌚 𑌲𑌯𑍋 𑌜𑌯𑌤𑌿 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ॥ ௩௧ ॥

(இ-ள்) சுவாசநிசுவாசங்கள் நஷ்[illegible]தும், சப்தாதிவிஷயக்கிரகணம் நஷ்டமாகியதும், சேஷ்டை([illegible])செய்கை)கள் நீங்கியதும், விகாரங்(அந்தக்கரணச்செய்கை)களில்லா[illegible]துமாகிய இலயம் (தியேயாகார அந்தக்கரணவிருத்தி), யோகிகளுக்கு எல்லாவற்றினும் மேலானதாக விருக்கின்றது.

வெளிவாயு உள்ளே பிரவேசித்தல், சுவாசம். உள்ளிருக்கும் வாயுவை வெளியேவிடுதல், நிசுவாசம். (௩௧)

(அ-கை) இதுவுமது:—

* 𑌉𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌨𑌿𑌃𑌶𑍇𑌷𑌾𑌶𑍇𑌷𑌚𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌃 ।
𑌸𑍍𑌵𑌾𑌵𑌗𑌮𑍍𑌯𑍋 𑌲𑌯𑌃 𑌕𑍋𑌽𑌪𑌿 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌾𑌗𑌗𑍋𑌚𑌰𑌃 ॥ ௩௨ ॥

(இ-ள்) சகல சங்கற்ப(மனதின் பரிணாம)ங்களும் நஷ்டமாகியதும், சகல செய்கைகளும் முற்றிலும் நீங்கியதும், தன்னால் அறியக்கூடியதும், வாக்கிற்கெட்டாததுமாகிய ஓர் விலக்ஷணமாகிய இலயம் யோகிகளுக்கு உண்டாகின்றது. (௩௨)

---

* வராகோபநிஷத்வாக்கியம்.

(அ-கை) இதுவுமது:—

யத்ர த்ருஷ்டிர்லயஸ்தத்ர பூதேந்த்ரியஸநாதநீ |
ஸாஶக்திர்ஜீவபூதாநாம் த்வே அலக்ஷ்யே லயம்கதே || ௩௩ ||

(இ-ள்) எதில் (எந்தவிஷயமாகிய பிரஹ்மத்தில்) திருஷ்டி (அந்தக்கரணவிருத்தி)யிருக்கின்றதோ, அதிலேயே இலயமுண்டாகின்றது. யோகிகளுக்குப் பூதங்களையும் இந்திரியங்களையும் சாசுவதமாகவுடையதும், சீவர்களின் சக்தியென்னும் வித்தையுமாகிய இவ்விரண்டும் யோகிகளுக்கு அலக்ஷியமாகிய (குறிக்கப்படாத) பிரஹ்மத்தில் இலயமடைகின்றன.

சத்காரியவாதத்தில் அவித்தையில் காரியசமூகங்களிருத்தலால், பூதங்களையும் இந்திரியங்களையும் சாசுவதமாகவுடையதென்றார்.

(அ-கை) இதுவுமது:—

லயோலய இதி ப்ராஹு: கீத்ருஶம் லயலக்ஷணம் |
அபுநர்வாஸநோத்தாநா ல்லயோவிஷயவிஸ்ம்ருதி: || ௩௪ ||

(இ-ள்) இலயம் இலயமென்று அநேகர் கூறுகின்றனர். அவ்விலயத்தின் சொரூபம் எப்படிப்பட்டதெனின், அதனைக் கூறுகின்றார். மறுபடியும் வாசனை யெழும்பாமையால் சத்தமுதலிய விஷயங்களையாவது, தியேயாகார (தியானிக்கப்படுபொருள்) வடிவமாகிய விஷயங்களையாவது மறத்தல், இலயமாம். அதாவது இலயமென்னும் சப்தத்திற்குப் பொருளாம். (௩௪)

(அ-கை) இதுவுமது:—

வேதஶாஸ்த்ரபுராணாநி ஸாமாந்யகணிகா இவ |
ஏகைவ ஶாம்பவீமுத்ரா குப்தா குலவதூரிவ || ௩௫ ||

(இ-ள்) நான்கு வேதங்களும் ஆறு சாஸ்திரங்களும் பதினெண்புராணங்களும் (அனேகம் புருஷர்களால் அறியத்தக்கனவாயிருத்தலால்) சாமானிய கணிகை (வேசி)யைப் போன்றனவாம். சாம்பவிமுத்திரை யொன்றே (புருஷவிசேஷனலறியத்தக்கதா யிருத்தலால்) குலஸ்திரீயைப்போல் இரகசியமானதாம். ()

## சாம்பவிமுத்திரை.

(அ-கை) சித்தலயத்தின்பொருட்டுப் பிராணலயத்தின் சாதனவடிவமாகிய முத்திரைகளைச் சொல்லக்கருதி, அவற்றுள் சாம்பவி முத்திரையைக் கூறுகின்றார் :—

* 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂𑌬𑌹𑌿𑌰𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑌿 𑌨𑌿𑌮𑍇𑌷𑍋𑌨𑍍𑌮𑍇𑌷𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾 ।
𑌏𑌷𑌾𑌸𑌾𑌶𑌾𑌂𑌭𑌵𑍀𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌵𑍇𑌦𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁𑌗𑍋𑌪𑌿𑌤𑌾 ॥

(இ-ள்) உள்ளே(ஆதாரமுதல் பிரஹ்மரந்திரம்வரையிலுள்ள சக்கரங்களுள் தன்னாற் கொள்ளப்பட்ட சக்கரத்தில்) இலக்ஷியமு(அந்தக்கரணவிருத்தியு)ம், வெளியில் (தேகத்திற்கு வெளிப்பிரதேசத்தில்) மூடுதலும் திறத்தலுமில்லாத திருஷ்டி (கண்பார்வை)யுமாக விருத்தல் எதுவோ, அப்படிப்பட்ட இது (சிவப்ரியை அல்லது சிவாவிர்ப்பாவத்தையுண்டாக்குவதென்னும்) சாம்பவிமுத்திரையாம். இது இருக்குமுதலிய வேதங்களிலும் சாங்கியபாதஞ்சலமுதலிய சாஸ்திரங்களிலும் பாதுகாக்கப்பட்டுள்ளதாம்.

சித்தம் தியேயாகார(தியானிக்கப்படும் பொருள்வடிவ)மாகப் பிரவேசிங்குங்கால் மூடுதலும் திறத்தலுமின்றிய திருஷ்டியுண்டாகின்றது. (௩௬)

(அ-கை) சாம்பவிமுத்திரையை யநுவதித்துக் காட்டுகின்றார் :—

† 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌵𑌿𑌲𑍀𑌨𑌚𑌿𑌤𑍍𑌤𑌪𑌵𑌨𑍋 𑌯𑍋𑌗𑍀𑌸𑌦𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌤𑌾𑌰𑌯𑌾 𑌬𑌹𑌿𑌰𑌧𑌃𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑌪𑌿 ।
𑌮𑍁𑌦𑍍𑌰𑍇𑌯𑌂𑌖𑌲𑍁 𑌶𑌾𑌂𑌭𑌵𑍀 𑌭𑌵𑌤𑌿𑌸𑌾𑌲𑌬𑍍𑌧𑌾 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌃
𑌶𑍂𑌨𑍍𑌯𑌾𑌶𑍂𑌨𑍍𑌯𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂𑌸𑍍𑌫𑍁𑌰𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌪𑌦𑌂𑌶𑌾𑌂𑌭𑌵𑌮𑍍 ॥

(இ-ள்) எந்த அவஸ்தையில் உள்ளே (அநாஹதபதுமமுதலியவற்றில்) இருக்கும்(சகுணேசுவர மூர்த்திமுதலியவை, அல்லது தத்துவமசிமுதலியவாக்கியத்தின் இலக்ஷியமாகிய ஜீ

* இது சாண்டில்யத்திற் கூறப்பட்டுள்ளது.

† இது சாண்டில்யோபநிஷத் வாக்கியம்.

வேசுவராபின்ன அகம்பிரஹ்மாஸ்மி யென்னும் வாக்கியார்த்த மாகிய பிரஹ்மம் என்னும்) இலக்ஷியத்தில் சித்தமும் வாயுவும் எவனுக்கு ஒடுங்குகின்றதோ, அந்தயோகி அசைவற்ற கருமணி களையுடைய திருஷ்டியால் தேகத்தின் வெளிப்பிரதேசத்தில் பார்த்துக்கொண்டிருக்கினும் வெளிவிஷயங்களைப் பார்க்காதவனு கவே இருக்கிறுன். அந்தச் சாம்பவிமுத்திரை குருவின் அநுக் கிரகத்தாற் பெறப்பட்டதாயின், அப்போது அந்த (இதுவென்று சொல்லக்கூடாத) சாம்பவ (சாம்பவிமுத்திரையிற்றோற்றும்) பத(ஆத்மசொரூப)மென்னும் சூனியாசூனிய விலக்ஷணமாகிய மேலான தத்துவம்(வாஸ்தவமானபொருள்) விளங்குகின்றது.

தியேயாகாரவிருத்தி யிருத்தலால் சூனியவிலக்ஷணமென் றும், அதுவும் தோற்றுதிருத்தலால் அசூனியவிலக்ஷணமென் றுங் கூறினர். அப்படியே

"அந்தர்லக்ஷ்யவிலீனசித்தபவநோ யோகீ ஸதா வர்ததே த்ருஷ்ட்யா நிச்சலதாரயா பஹிரத: பச்யந்நபச்யந்நபி। முத்ரேயம் கலு [illegible] ஶாம்பவீ பவதி ஸா லப்தா ப்ரஸாதாத்குரோ: சூந்யாசூந்யவிலக்ஷணம் ஸ்புரதி தத்தத்வம் பதம் ஶாம்பவம்॥

ஏகாக்கிரசித்தனுகிய யோகி நீக்கமின்றிய அந்தர்லக்ஷிய மாய்ச் சுகத்தைப் பார்த்துக்கொண்டு விழித்தலும் இறத்தலு மின்றிய பார்வையாயிருத்தலாகிய இது சாம்பவிமுத்திரையாம். இது தந்திரங்களையுணர்ந்த கிரீசனுகிய பரமேசுவரனுல் தந்திரங் களில் பாதுகாக்கப்பட்டிருக்கின்றது. யோகிகளுக்கு மனேலய த்தைச் செய்வதும் மோக்ஷத்தைத்தருவதும் துர்லபமுமாகிய இது தத்துவவிருப்புடையோர்களின் பொருட்டாம்.

ஊர்த்வத்ருஷ்டிரதோத்ருஷ்டி ரூர்த்வவேதோ ஹ்யத:ஶிரா:। ராதாயந்த்ரவிதாநேந ஜீவந்முக்தோ பவேத்க்ஷிதௌ॥

ஊர்த்துவவேதம் (மேல் ஊடுருவிச் செல்லுதல்) ஊர்த்துவ (மேல்) திருஷ்டியும், கீழ்நாடிகள் அதோதிருஷ்டியுமாம். இரா தாயந்திரவிதானத்தால் பூமியில் ஜீவன்முக்தனுகின்றுன்." என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (௩எ)

(அ-கை) இதுவுமது:—

ஶ்ரீஶாம்ப⁴வ்யாஶ்ச கே²சர்யா அவஸ்தா²தா⁴மபே⁴த³த: |
ப⁴வேச்சித்தலயாநந்த³: ஶூந்யே சித்ஸுக²ரூபிணி || ௩௮ ||

(இ-ள்) ஸ்ரீ சாம்பவிமுத்திரை கேசரிமுத்திரை என்னுமிரண்டினது அவஸ்தை ஸ்தானங்களின் பேதத்தால் சூனியமாகிய (தேசகாலவஸ்து பரிச்சேதமில்லாத அல்லது சஜாதீய விஜாதீய சுவகதபேதமில்லாத) சிதாநந்தசொரூப ஆத்மாவில் சித்தலயமாகிய ஆநந்தம் உண்டாகின்றது.

சாம்பவிக்கு வெளிதிருஷ்டியால் வெளியவஸ்தை (நிலைமை)யும் கேசரிக்கு புருவநடுப்பார்வையால் உள்ளவஸ்தையுமாம். சாம்பவிக்கு இருதயபாவனையும் கேசரிக்குப் புருவநடுவுமே ஸ்தானங்கள். ஸ்ரீசாம்பவிக்கும் கேசரிக்கும் அவஸ்தைஸ்தானமென்னும் சாதனும்சத்தில் பேதமுண்டு. சித்தலயாநந்தமாகிய பலாமிசத்தில் பேதமில்லையென்பது தாற்பரியம். (௩௮)

## உன்மனீ.

(அ-கை) * உன்மனிமுத்திரையைக் கூறுகின்ற[illegible]:—

தாரே ஜ்யோதிஷி ஸம்யோஜ்ய கிஞ்சிது³ந்நமயேத்³ப்⁴ருவௌ |
பூர்வயோக³ம் மநோ யுஞ்ஜந்நுந்மநீகாரக: க்ஷணாத் || ௨௯ ||

(இ-ள்) கண்ணின்மணிகளை † ஜோதியில் (இரண்டுகண்மணிகளையும் நாசிநுனியிற் சேர்த்தலாற் பிரகாசிக்கும் தேஜசில்) சேர்த்துப் புருவங்களைக் கொஞ்சம் மேலே உயர்த்தவேண்டும். முன் (முற்கூறிய அந்தர்லக்ஷியம் பஹிர்திருஷ்டியென்னும் வடிவினதாகிய) யோகத்தை(யுக்தியை)யுடையமன (அந்தக்கரணத்)தை யோகத்திற் பொருத்துவானாயின், யோகி க்ஷணத்தில் (முகூர்த்தத்தில்) உன்மனியவஸ்தையையுடையவனாகின்றான்.

---

* இது சா[illegible]டில்யத்திற் கூறப்பட்டுள்ளது.

† புருவநடுவில் வெண்மைமுதலிய ஜோதிவட்டங்களைக் காண்டலாலுண்டாகும் சித்திகளைச் சிவபுராணத்துக்காண்க.

(அ-கை) உன்மனியைவிட கடத்தற்குபாயம் வேறில்லையெனக் கூறுகின்றார்:—

கேசிதாகமஜாலேந கேசிந்நிகமஸங்குலை: |
கேசித்தர்கேண முஹ்யந்தி நைவ ஜாநந்தி தாரகம் || ௬O ||

(இ-ள்) சாஸ்திரதந்திரமுதலியவற்றை யுணர்ந்த சிலர் ஆகம (சாஸ்திரதந்திராதி) ஜாலங்களாலும், சிலவைதிகர் நிகமசங்குலங்களா(வேதத்திற் கூறிய பலத்தின் மிகுதிப்பாட்டினா)லும், சிலவைசேஷிகர்முதலியோர் தர்க்க (சுவகற்பித யுக்திவிசேஷ)த்தாலும் மோகிக்கின்றார்கள்; தாரகத்தை (கடத்தற்குபாயமாகிய உன்மனீயவஸ்தையை) அறிகிறதில்லை என்பதுபொருள்.

“ஆகதம் ஶிவவக்த்ரேப்ய: த்ரயாணாம் ஸம்பந்தாதாகமா: ||

இவற்றால் அர்த்தங்கள் புத்தியில் ஏறுகின்றமையால் ஆகமங்களாம்” ஜாலத்தை(வலையை)ப்போல பந்தனத்திற் கேதுவாகுமவற்றிற்கூறிய பலன்களை ஜாலங்களென்றார். (௬O)

(அ-கை) இத[illegible]:—

* அர்தோந்மீலிதலோசந: ஸ்திரமநா நாஸாக்ரதத்தேக்ஷண
ஶ்சந்த்ரார்காவபி லீநதாமுபநயந் நிஸ்பந்தபாவேந ய: ||
ஜ்யோதீரூபமஶேஷபீஜமகிலம் தேதீப்யமாநம் பரம் |
தத்வம் தத்பதமேதி வஸ்து பரமம் வாச்யம் கிமத்ராதிகம் || ௬க ||

(இ-ள்) பாதிதிறந்த கண்களையுடையவனும், ஸ்திர(நிச்சல) மனதுடையவனும், நாசாக்கிரத்தில்(நாசிநுனி பாகத்தில் அல்லது பன்னிரண்டங்குல அளவில்) வைக்கப்பட்ட பார்வை யுடையவனும், நிஸ்பந்தத்தன்மையால் (காயேந்திரியமனதுகளின் நிச்சலத்தன்மையால்) சந்திர சூரியர்களையும் இலயமாக்குவி (பிராணசஞ்சாரத்தையும் ஸ்தம்பிவி) க்கிறவன் எவனோ, அவன் (எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கும்) ஜோதிவடிவமும், (ஆகாயமுதலியவற்றின் உற்பத்திவாயிலாக) சர்வகாரணமும், பூரணமும், சுவப்பிரகாசமும், பர (காயேந்திரியமனதுகளுக்கு சாக்ஷியாகிய)

* இது சாண்டில்யத்துள்ளது.

தத்துவமு (ஆரோபமில்லாததும் வாஸ்தவிகமு)மான அந்த (இதென்று சொல்லக்கூடாத) பதமாகிய பரம(சர்வேர்த்கிருஷ்ட) வஸ்துவை (ஆத்ம சொரூபத்தை) அடைகிறன். (யோகி உன்மனி யவஸ்தையில் சுவசொரூபத்தில் நிலைத்தவனுகின்றனென்பது பொருள்.)இதில் அதிகமாகச் சொல்லவேண்டியதென்ன? (வேறு வஸ்துவை யடைகிறனென்று இதில் என்னசொல்லவேண்டியிருக்கிறது என்பது பொருள்).

பன்னிரண்டங்குல வளவில் என்பது வசிஷ்டராலும்

* "த்வாதசாங்குலபர்யந்தே
நாஸாக்ரே விமலேம்பரே ।
ஸம்வித்த்ருசோ: ப்ரசாம்யந்த்யா:
ப்ராணஸ்பந்தோ நிருத்யதே ॥

பன்னிரண்டங்குல அளவுள்ள நாசிநுனியாகிய விமலாம்பரத்தில் (பரிசுத்த ஆகாசத்தில்) சம்வித்து (ஞானம்) பார்வை யெனுமிரண்டும் ஒடுங்குவதால் பிராணனது அசைவு நிரோதிக்கப்படுகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (சுக)

(அ-கை) உன்மனிபாவனையின் காலநியமத்தைக் கூறுகின்றார்:—

‡ திவா ந பூஜயேல்லிங்கம் ராத்ரௌ சைவ ந பூஜயேத் ।
ஸர்வதா பூஜயேல்லிங்கம் திவாராத்ரிநிரோதத: ॥ சஉ ॥

(இ-ள்) பகலில் (சூரியசஞ்சாரத்தில்) இலிங்கத்தை(சர்வகாரணமாகிய ஆத்மாவை)ப்பூஜி(பாவி)க்கலாகாது. இராத்திரியி

* இவ்வாக்கியத்தைச் சாண்டில்யோபநிஷத்திலும் காணலாம். இவ்வாக்கியத்திற் கூறியபடி,

"நாசிக்கதோமுகம்பன்னிரண்டங்குல
நீசித்தம்வைத்து நினையவும்வல்லையேன்
மாசித்திமாயோகம்வந்துதலைப்பெய்துந்
தேகத்திற்கென்றுஞ்சிதைவில்லையாகுமே."

என்னுந் திருமந்திரத்திலுங் காண்க.

‡ இதனை சாண்டில்யோபநிஷத்திற் காண்க.

(சந்திரசஞ்சாரத்தி)லும் பூஜிக்கலாகாது. ("வாயுசலித்தால் சித்தஞ்சலிக்கு" மென்று சொல்லப்பட்டிருத்தலால் சந்திர சூரிய சஞ்சாரத்தில் சித்தஸ்திரத்தன்மை யில்லாமையால்) பகலிரவென்னும் சூரிய சந்திரர்களை நிரோதித்து, எப்போதும் இலிங்கமென்னும் ஆத்மாவைப் பூஜிக்கவேண்டும்.

ஆத்மா சர்வகாரணமென்பதற்கு,

"ஸ தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூதஃ ॥

இந்த ஆத்மாவினின்றும் ஆகாசமுண்டாயிற்று" என்னும் தைத்திரிய சுருதி பிரமாணம். தியானமே ஆத்மபூஜையாம். அது வாசிஷ்டத்தில்,

"த்யாநமேவார்ஹணம் ஸாரம் த்யாநமேவாஸ்ய பூஜநம் ।
விநா தேந ந தேநாயமாத்மா லப்யத ஏவ ஹி ॥

தியானநைவேத்தியமே ஆத்மா; தியானம் இதன் மகார்ச்சனம். அது (தியானம்) ஒழிந்தமற்றொன்றால் இவ்வாத்மா அடையப்படமாட்டாது." என்று சொல்லப்பட்டிருக்கின்றது. சூரியனும் சந்திரனும் நிரோதமாகுங்கால் சுழுமுனைக்குள் பிராணனடங்குகின்றது. அப்போது மனம் ஸ்திரத்தன்மையடைதலால் அப்போது பாவிக்கவேண்டும். அது (சுழுமுனையிற் பிராணனடங்கின் மனம் ஸ்திரத்தன்மை யடையுமென்பது)

"ஸுஷும்நாமத்யகே வாயௌ மநஸ்ஸ்தைர்யம் ப்ரஜாயதே ॥

சுழுமுனைமத்தியில் வாயு பிரவேசித்தலால் மனதிற்கு ஸ்திரத்தன்மை யுண்டாகின்றது" என்பதனுற் சொல்லப்பட்டிருக்கின்றது. (சஉ)

கேசரி.

(அ-கை) கேசரியைக் கூறுகின்றார்:—

ஸவ்யதக்ஷிணநாடிஸ்தோ மத்யே சரதி மாருதஃ ।
திஷ்டதே கேசரீ முத்ரா தஸ்மிந்ஸ்தாநே ந ஸம்ஶயஃ ॥ சங ॥

(இ-ள்) இடது வலது நாடிகளிலுள்ளவாயு எந்த மத்தியப் பிரதேசத்தில் செல்லுகின்றதோ, அந்தப் பிரதேசத்தில் கேசரி முத்திரை ஸ்திரமுடையதாகின்றது. இதிற் சமுசயமில்லை. (சங)

(அ-கை) இதுவுமது:—

* ஐடாபிங்கலயோர்மத்யே ஶூந்யம்சைவாநிலம்க்ரஸேத் |
திஷ்டதே கேசரீமுத்ரா தத்ர ஸத்யம் புந: புந: || ௪௪ ||

(இ-ள்) இடைபிங்கலைகளின் மத்தியிலிருக்கும் சூனியம் (ஆகாயம்) வாயுவை விழுங்குகின்றது. அதில் (சூனியத்தில்) கேசரிமுத்திரை ஸ்திரமாகின்றது. மறுபடியும் மறுபடியும் சத்தியம்.

சூனியத்தில் பிராணன் ஸ்திரமாகுதலே வாயுவை விழுங்குதலெனப்படும். (௪௪)

(அ-கை) இதுவுமது:—

* ஸூர்யாசந்த்ரமஸோர்மத்யே நிராலம்பாந்தரம் புந: |
ஸம்ஸ்திதா வ்யோமசக்ரே யா ஸா முத்ரா நாம கேசரீ || ௪௫ ||

(இ-ள்) சூரியசந்திரர்களென்னும் இடைபிங்கலைகளின் மத்தியில் நிராலம்பமாகிய உள்ளவகாசத்திலிருக்கும் ஆகாயங்களின் சமுதாயத்தில் செவ்வையாய்ப் பொருந்தியிருப்பது எதுவோ, அம்முத்திரை கேசரி யெனப்படும்.

புருவமத்தியில் சகல ஆகாயங்களுக்கும் சம்பந்தமிருத்தலால் ஆகாயங்களின் சமுதாயமென்றார். அது

"பஞ்சஸ்ரோத:ஸமந்விதே ||

ஐந்துநாடிகள் சம்பந்தித்துள்ளதில்" என்பதனாற் சொல்லப்பட்டிருக்கின்றது. (௪௫)

(அ-கை) இதுவுமது:—

ஸோமாத்யத்ரோதிதா தாரா ஸாக்ஷாத் ஸா ஶிவவல்லபா |
பூரயேதது லாம் திவ்யாம் ஸுஷும்நாம் பஶ்சிமே முகே ||

(இ-ள்) எந்தக்கேசரியில் சந்திரனினின்றும் அமிர்ததாரை யுண்டாகின்றதோ, அந்தக்கேசரி சாக்ஷாத் சிவப்பிரியையா

* இவை சாண்டில்யோபநிஷத்தின் வாக்கியங்கள்.

(சிவத்திற்குப் பிரியமுள்ளதா)ம். இணையற்றதும் திவ்விய (சகல நாடிகளிலும் உத்தம)மானதுமாகிய. சுழுமுனையைப்பச்சிமமுகத்தில் நாவினுற் பூரிக்கவேண்டும்.

நாவினுலென்பது வருவிக்கப்பட்டது. (௪௯)

(அ-கை) இதுவுமது:—

வூரவஸ்ரொவெவவவெடிக த நிஸ்நிதாவெவவரீஹவெஜ |
ஸுஹு)ஸ்ராவெவரீகெஜ்ரா வ)ூநீஸ்ஸ்ம்வு ஜாயதெ ‖ ௫௰ ‖

(இ-ள்) முன்னமே சுழுமுனையைப் பிராணனுற் பூரிக்கவேண்டும். அப்போது நிச்சயிக்கப்பட்ட (சந்தேகமில்லாத) கேசரியென்னுமுத்திரை யுண்டாகின்றது. (முன்னமே பிராணனுல் பூரிக்காமல் நாக்குமாத்திரத்தால் பச்சிமமாகப் பூரிக்கின், அப்போது மூடாவஸ்தையையுண்டாக்கும் கேசரியுண்டாம். (நிச்சயிக்கப்பட்ட கேசரியுண்டாகாதென்பது கருத்து.) * கேசரிமுத்திரையும் அப்பியசிக்கப்படின் உன்மனியுண்டாகின்றது. (சித்தத்திற்குத் தியேயாகார ஆவேசத்தால் துரியாவஸ்தையுண்டாகின்றது.)

சுழு[முனை]யைப் பிராணனுலென்பது வருவிக்கப்பட்டது.

(அ-கை) இதுவுமது:—

ஹூவொரெயெ)ஶிவஸ்ராநம் ஶநஸ்த்ரு விஶீயதெ |
ஜாதவ)ம் தவூம் தூயம் தத்ரகாலொநவிஷ)தெ ‖

(இ-ள்) புருவமத்தி சிவமென்னும் (சுகவடிவமாகிய) பிரத்தியகபின்னபரமாத்மாவின் ஸ்தானமாம். அதில் (சிவத்தில்) மனம் ஒடுங்குகின்றது. (சிவாகாரவிருத்திப் பிரவாகமாகின்றது.) அந்தச் சித்தலயவடிவமாகிய துரிய (ஜாக்கிர சொப்பன சுழுத்திகளுக்கந்நியமாகிய நான்காவது) பதம் அறியவேண்டியதாம். அந்தப்பதத்தில் காலன்(மிருத்தியு)இல்லை. அல்லது சூரியசந்திரர்களின் நிரோதத்தால் ஆயுளைக்குறைக்கும் காலம்(சமயம்)இல்லையென்பது பொருள்.

---

* இது சாண்டில்யத்திலுள்ளது.

அது "சுழுமுனைகாலனைவிழுங்குவதாம்" என்பதனால் முன் சொல்லப்பட்டிருக்கின்றது. (௪௮)

(அ-கை) இதுவுமது:—

அப்யஸேத்கேசரீம் தாவத்யாவத்ஸ்யாத்யோகநித்ரித꞉ |
ஸம்ப்ராப்தயோகநித்ரஸ்ய காலோ நாஸ்தி கதாசந ||௪௯||

(இ-ள்) யோகநித்திரையுடையவனாகும்வரையில் கேசரிமுத்திரையை அப்பியசிக்கவேண்டும். யோகநித்திரையை யடைந்தவனுக்கு ஒருக்காலும் காலன்(மரணம்)இல்லை.

சர்வவிருத்திநிரோதம், யோகநித்திரை. (௪௯)

(அ-கை) இதுவுமது:—

நிராலம்பம் மந꞉ க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் |
ஸபாஹ்யாப்யந்தரம் வ்யோம்நி கடவத்திஷ்டதி த்ருவம் ||௫௦||

(இ-ள்) எவன் மனதை நிராலம்ப(ஆலம்பசூனிய)மாக்கி, ஒன்றையும் சிந்தியாதிருக்கின்றானோ (கேசரிமுத்திரையிலுண்டாகும் பிரமாகாரவிருத்தியையும் பரவைராக்கியத்தால் விடுகின்றானோ), அவன் உள்ளும்வெளியுமிருக்கும் ஆகாயத்தில் கடத்தைப்போல நிற்கிறான். இது நிச்சயம்.

எப்படி ஆகாயத்திலிருக்கும் கடம் உள்ளும்வெளியும் ஆகாயத்தால் நிறைந்ததாகின்றதோ அதுபோல கேசரியில் ஆலம்பனத்தை (பற்றுக்கோட்டை) விடுதலால் யோகி பிரஹ்மத்தால் நிறைந்தவனாகின்றான் என்பது பொருள். (௫௦)

(அ-கை) இதுமது:—

பாஹ்யவாயுர்யதா லீநஸ்ததா மத்யோ ந ஸம்ஶய꞉ |
ஸ்வஸ்தாநே ஸ்திரதாமேதி பவநோ மநஸா ஸஹ || ௫௧ ||

(இ-ள்) தேகத்திற்கு வெளியிலுள்ள வாயு (தனக்கு உட்பிரவிருத்தியின்மையால்) கேசரியில் எப்படி இலயமாகின்றதோ, அப்படியே தேகமத்தியிலிருக்கும் வாயு (தனக்கு வெளிப்பிரவிருத்தியின்மையால்) இலயமாகின்றது. இதிற்சமுசயமில்லை.

பிராணன் தனது ஸ்தானத்தில் (ஸ்திரத்தன்மைக் கதிஷ்டானமாகிய பிரஹ்மரந்திரத்தில்) சித்தத்தோடு ஸ்திரத்தன்மையை யடைகின்றது. (ருக)

(அ-கை) இதுவுமது:—

ஷவஹ்யஸா நஸ்ய வாயு மாரெடுகிவாநிஸ்ஷ |
ஈஹ்யஸாஜ்ஞயுதெவாயு உநஹூலெதுவஸீயதெ ‖ ருஉ ‖

(இ-ள்) இப்படி வாயு மார்க்கத்தில் (சுழுமுனையில்) பகலுமிரவும் அப்பியாசிக்கின்றவனுக்கு அப்பியாசத்தால் எந்த ஆதாரத்தில் பிராணன் இலயமாகின்றதோ, அதிற்றானே (வாயுவின் இலயாதிஷ்டானத்திலேயே) மனம் இலயமாகின்றது. (ருஉ)

(அ-கை) இதுவுமது:—

ஈஷ்யெதஃஹாவயெஷஹ ஸாவாகதஷஹுகஂ |
ஷிஷ்யெதுவஹாகாயொ ஹாவஷவராகுஃ ‖ ருங ‖

(இ-ள்) இரந்திர(துவார)த்தினின்று வெளிப்படும் அமிர்தத்தால் பாதமுதல் சிரசுபரியந்தமாகிய தேகத்தை முழுகுவிக்கிறான். மகா(மிகமேலான)காயமுடையவனும் மகாபலபராக்கிரமமுடையவனுமாகிய யோகி அமிர்தத்தால் முழுகுதலால் சித்தனேயாகின்றான். (ருங)

(அ-கை இதுவுமது:—

* ஶக்தியெ ஃநஃகு ஶக்திஂ நஸயெமாஷ |
நநஸாநகூவொக யாஶயெதூஂவஷ ‖ ருச ‖

(இ-ள்) சக்தி(குண்டலி)யின் மத்தியில் மனதைச் செய்து (மனதை அதின்வடிவாக்கி) சக்தியை மனதின் மத்தியிலுள்ளதாக்கி (சக்தியின் தியான ஆவேசத்தால் சக்தியை மனதில் ஒருமைப்படுத்தி, அதனால் குண்டலியை விழிப்பித்து) மனதால் மனதைப்பார்த்து (புத்தியை மனதற் பார்த்தலால் ஸ்திரப்படுத்தி), பரமபதத்தை (சர்வோத்கிருஷ்டசொரூபத்தை)த் தரிக்க (தாரணைக்கு விஷயமாக்க)வேண்டும் (ருச)

* இது சாண்டில்யயோகதுளடலியுபநிஷங்களின் வாக்கியம்.

(அ-கை) இதுவுமது:—

* க²மத்⁴யே குரு சாத்மாநம் ஆத்மமத்⁴யே ச க²ம் குரு |
ஸர்வம் ச க²மயம் க்ருத்வா ந கிஞ்சித³பி சிந்தயேத் || ௫௫ ||

(இ-ள்) (ஆகாயத்தைப்போல் பூர்ணமாயிருக்கும் பிரஹ்மமாகிய) ஆகாயத்தின் மத்தியில் ஆத்மாவை (சுவசொரூபத்தை)ப் பாவி அதாவது பிரஹ்மம் நானென்று பாவி. ஆத்மாவில் (சொரூபத்தில்) ஆகாயத்தை (பூரணப்பிரஹ்மத்தை) பாவி அதாவது நான் பிரஹ்மமென்று பாவி. எல்லாவற்றையும் ஆகாயமாகச் செய்து (பிரஹ்மமயமாகப் பாவித்து) ஒன்றையும் சிந்திக்கலாகாது. (நான் பிரஹ்மமென்னும் தியானத்தையும் விடவேண்டும் என்பது பொருள்.) (௫௫)

(அ-கை) இப்படிச்சமாகிதனு (சமாதியடைந்தவனு)க்குச் சொரூபத்தில் நிலைத்தலைக் கூறுகின்றார்:—

† அந்த꞉ ஶூந்யோ ப³ஹி꞉ ஶூந்ய꞉
ஶூந்ய꞉ கும்ப⁴ இவாம்ப³ரே |
அந்த꞉ பூர்ணோ ப³ஹி꞉ பூர்ண꞉
பூர்ண꞉ கும்ப⁴ இவார்ணவே || ௫௬ ||

(இ-ள்) உள்ளே (அந்தக்கரணத்தில்) சூனியமாம். [பிரஹ்மத்திற்கந்நியமாகிய விருத்தியில்லாமையால் துவிதீய (இரண்டாவது) சூனியமாம்]. அந்தக்கரணத்திற்கு வெளியிலும் [துவிதீய (இரண்டாவதின்) தரிசனமில்லாமையால்] சூனியமாம். ஆகாயத்திலிருக்கும் கும்பம் உள்ளும் வெளியும் சூனியமாயிருத்தல்போல் சூனியமாம். (பிரஹ்மாகாரவிருத்தியிருத்தலால் அல்லது அது பிரஹ்மத்திற்கு வாசமாயிருத்தலால்) உள்ளே (அந்தக்கரணத்தில் அல்லது இதயாகாசத்தில்) பூரணமாம். (சத்தையினால் பிரஹ்மத்திற் கந்நியமாகிய விருத்தியின்மையால் அல்லது பிரஹ்மம் பூரணமாயிருத்தலால்) வெளியில் அந்தக்கரணத்திற்கு வெளியில் அல்லது இருதயாவகாசத்திற்கு வெளியி[ல்]) பூரணமாம்,

---

* இது சாண்டில்யோபநிஷத் வாக்கியம்.

† இது வராகோபநிஷத் வாக்கியம்.

சமுத்திரத்திலிருக்கும் கடம்போல் பூரணமாம். (சமுத்திரத்திலிருக்கும் கடம் முற்றிலும் ஜலத்தால் நிறைந்திருத்தல்போல் சமாதிநிஷ்டனாகிய யோகி பிரஹ்மத்தால் பூரணனாகின்றான் என்பது பொருள்.) (௫௬)

(அ-கை) இதுவுமது:—

* 𑌬𑌾𑌹𑍍𑌯𑌚𑌿𑌨𑍍𑌤𑌾 𑌨 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾 𑌤𑌥𑍈𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑌚𑌿𑌨𑍍𑌤𑌿𑌕𑌾 ।
𑌸𑌰𑍍𑌵𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ॥ ௫௭ ॥

(இ-ள்) சமாதியடைந்தயோகியால் பாகிய (புறச்) சிந்தை செய்யத்தக்கதன்று. அப்படியே ஆந்தரசிந்தனமும் (பாகியசிந்தனம்போல் மனதினால் கற்பிக்கப்பட்ட உயர்ந்த இன்பகரமான மாளிகை, வீதிமுதலியவற்றின் சிந்தனமும்) செய்யத்தக்கதன்று. (பாகியாந்தரமாகிய) சருவசிந்தனத்தையும் விட்டு, ஒன்றையும் சிந்திக்கலாகாது.

ஒன்றையும் சிந்திக்கலாகாது என்றமையால் பரவைராக்கியத்தால் ஆத்மாகார விருத்தியையும் விடவேண்டும். அதை விட்டால் சொரூபத்தில் நிலைத்தலாகிய ஜீவன்முக்தியுண்டாகுமென்பது கருத்து. (௫௭)

(அ-கை) பாகியாந்தரசிந்தையை விடுதலால் சாந்தியுண்டாகின்றதென்பதில் வசிஷ்டரது வாக்கியத்தைப் பிரமாணமாகக் கூறுகின்றார்:—

𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑌕𑌲𑌨𑍈𑌵 𑌜𑌗𑌤𑍍𑌸𑌮𑌗𑍍𑌰𑌂
𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑌕𑌲𑌨𑍈𑌵 𑌮𑌨𑍋𑌵𑌿𑌲𑌾𑌸𑌃 ।
𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌤𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪
𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍁𑌹𑌿 𑌰𑌾𑌮 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍍 ॥ ௫௮ ॥

(இ-ள்) மானசிகவியாபாரமாகிய சங்கற்பமாத்திரத்தின் சிருஷ்டியே தோன்றுகின்ற இவ்வெல்லா ஜகத்துமாம் (பாகியப்பிரபஞ்சம் மனோமாத்திர கற்பிதமென்பது பொருள்.) மனதின் விலாசம் (உயர்ந்த இன்பகரமான மாளிகை, வீதிமுதலிய நானா

* இது சாண்டில்யோபநிஷத் வாக்கியம்.

விஷயாகார கற்பனை) சங்கற்பமாத்திர சிருஷ்டியே. (மானசப் பிரபஞ்சமும் சங்கற்மாத்திர சிருஷ்டியேயாமென்பது பொருள்.) சங்கற்பமாத்திர(பாகியாந்தரப்பிரபஞ்ச)த்தில் உள்ள மதி (சத்தியத்தன்மையாகிய புத்தி)யை விடுக. அப்போது செய்யவேண்டியது யாதெனின்? (ஆத்மாவினிடத்துள்ள கர்த்திருத்துவ போக்திருத்துவ சுகித்துவங்களும், சஜாதீயவிஜாதீய சுவகத பேதமும, தேசகாலவஸ்து பரிச்சேதமுமாகிய கற்பனையென்னும் விசிஷ்டகற்பனையாகிய விகற்பமின்றிய) நிருவிகற்ப ஆத்மாவை ஆசிரயித்து (தாரணை முதலியவற்றிற்கு விஷயமாக்கி), இராமா! நிச்சயமாகிய (சந்தேகமின்றிய) சாந்தி (பரமஉபசாந்தி)யை அடைவாய்.

சாந்தியால் சுகத்தையும் அடைவாயென்பது கருத்து. அது

“ நசாபாவயத꞉ ஶாந்திரஶாந்தஸ்ய குத꞉ ஸுகம் ॥

ஆத்மாவைப் பாவி(தியானி)யாதவனுக்குச் சாந்தியேது? சாந்தியில்லாதவனுக்குச் சுகமேது?” என்று பகவானால் வெதிரேகமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

(அ-கை) இதுவுமது:—

* கர்பூரமநலே யத்வத்ஸைந்தவம் ஸலிலே யதா।
ததா ஸந்தீயமாநம் ச மநஸ்தத்த்வே விலீயதே ॥ ௫௬ ॥

(இ-ள்) எப்படி அக்கினியிற் பொருத்தப்பட்ட கர்ப்பூரம் சேஷமாய் இலய(அக்கினிவடிவ)மாகின்றதோ, எப்படி ஜலத்திற் சேர்க்கப்படும் உப்பு தன் வடிவத்தைவிட்டு ஜலவடிவமான்றதோ, அதுபோல ஆத்மாவாகிய தத்துவத்தில் சேர்க்கப்படும் மனம் ஆத்மாகாரமாகின்றது. (௫௬)

(அ-கை) மனம் இலயமானால் துவைதமும் இலயமாகுமென்று மூன்று சுலோகங்களாற் கூறுகின்றார்:—

* ஜ்ஞேயம் ஸர்வம் ப்ரதீதம் ச ஜ்ஞாநம் ச மந உச்யதே।
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஸமம் நஷ்டம் நாந்ய꞉ பந்தா த்விதீயக꞉ ॥

* இவை சாண்டில்யோபநிஷத்தின் வாக்கியங்கள்.

(இ-ள்) ஞேயம் ஞாதம் ஞானமென்னு மிவையாவும் (மனதின் கற்பனைமாத்திரமாயிருத்தலால்) மனமென்று சொல்லப்படுகின்றன. ஞானமும் ஞேயமும் சமமாக மனதோடு இலயமாகுமாயின் இரண்டாவது வழி(மனோவிஷயம்)வேறு இல்லை.) துவைதமில்லை யென்பது பலிதார்த்தம்.) (௬0)

(அ-கை) இதுவுமது:—

𑌮𑌨𑍋𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ।
𑌮𑌨𑌸𑍋 𑌹𑍍𑌯𑍁𑌨𑍍𑌮𑌨𑍀𑌭𑌾𑌵𑍇 𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌨𑍈𑌵𑍋𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 ॥

(இ-ள்) தோற்றுகின்ற இந்த யாதொரு சராசரமாகிய ஜகத்துமுழுவதும் மனோதிருசியமாம். (மனதால் தோற்றப்படுவதாம். அதாவது மனதின் சங்கற்பமாத்திரத்தாலாமென்பது பொருள்). மனதின் உன்மனீபாவத்தால் (விலயத்தால்) துவைதம் (பேதம்) தோற்றுகிறதில்லை. (துவைதப்பிரமை தோற்றுதற் கேதுவாகிய மனதின் சங்கற்பமில்லாமையால்.)

மனதின் சங்கற்பம் இருந்தால் தோற்றுகின்றது; இல்லாவிட்டால் தோற்றுகிறதில்லை. ஆகையால் சகலஜகத்தும் பிரமமே (பிராந்தியே); பிராந்தித்தோற்றமுள்ள சரீரமுடையதாயிருத்தலால் பிராந்திக்கு அதிஷ்டானமாகிய பிரஹ்மம் (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮)சத்தியமென்று அங்கீகரித்திருத்தலால் பௌத்தமதப் பிரசங்கமில்லை.

(அ-கை) இதுவுமது:—

* 𑌜𑍍𑌞𑍇𑌯𑌵𑌸𑍍𑌤𑍁𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌦𑍍 𑌵𑌿𑌲𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌮𑌾𑌨𑌸𑌮𑍍 ।
𑌮𑌨𑌸𑍋 𑌵𑌿𑌲𑌯𑍇 𑌜𑌾𑌤𑍇 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌮𑌵𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ॥ ௬௨ ॥

(இ-ள்) ஞேயவஸ்துவை (ஞானத்திற்கு விஷயமாகும் நாமரூபாத்மகமாகிய சகலசராசரத்தையும்) விடுதலால் மனது சச்சிதாநந்த வடிவமாகிய ஆத்மாகாரமாகின்றது. மனது இலயமாகுங்கால் கைவல்லியம் மிஞ்சுகின்றது. (அத்விதீய ஆத்மசொரூபம் மிஞ்சுகின்றது யென்பது பொருள்.) (௬௨)

---

* இது சாண்டில்யோபநிஷத் வாக்கியம்.

(அ-கை) இதுவுமது:—

𑌏𑌵𑌂 𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑍋𑌪𑌾𑌯𑌾𑌃 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑌵𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 |
𑌸𑌮𑌾𑌧𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌾𑌃 𑌕𑌥𑌿𑌤𑌾𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑍈𑌰𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃 ||

(இ-ள்) இப்படி (அந்தர்லக்ஷியம் பஹிர்திருஷ்டி என்னுமிவைமுதலிய முற்கூறிய பிரகாரத்தால்) மகாத்மாக்களாகிய (சமாதிபரிசீலனத்தால் சுத்தமான ஆத்மாவையும், அந்தக்கரணத்தையு முடையவர்களாகிய) மச்சேந்திரர்முதலிய பூர்வாசாரியர்களால் நாநாவித உபாய(சாதன)ங்களையுடையனவும், செவ்வையான (சமுசயவிபரீதமின்றிய) சுவா(ஆத்மா)நுபவத்தோடு கூடியனவுமாகிய (சித்தவிருத்தி நிரோதமென்னும்) சமாதியை யடையும் மார்க்கங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. (௬௩)

(அ-கை) சுழுமுனை முதலியவற்றால் கிருதகிருத்தியராகியவர், அவற்றை வணங்குகிறார்:—

𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾𑌯𑍈 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌿𑌨𑍍𑌯𑍈 𑌸𑍁𑌧𑌾𑌯𑍈 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 |
𑌮𑌨𑍋𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑍈 𑌨𑌮𑌸𑍍𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌮𑌹𑌾𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑍈 𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 ||

(இ-ள்) சுழுமுனையும், ஆதாரசக்தியாகிய குண்டலியும், புருவநடுவிலுள்ள சந்திரனினின்றுண்டாகும் அமிர்தமும், துரியாவஸ்தையாகிய மனோன்மனியும், ஜடமாகிய காயேந்திரிய மனதுகளுக்குச் சேதனத்தன்மையைச் சம்பாதிப்பதாயிருத்தலால் சர்வோத்தமமாகிய சிற்சக்தியும், சித்தாகிய ஆத்மசொரூபமாகிய உமக்கு நமஸ்காரம். (௬௪)

## நாதாநுசந்தானரூப சமாதியுபாயம்.

(அ-கை) நாநாவிதமாகிய சமாதியுபாயங்களைக்கூறி நாதாநுசந்தானரூபமாகிய முக்கிய உபாயத்தைப் பிரதிஞ்ஞைசெய்கின்றார்:—

𑌅𑌶𑌕𑍍𑌯𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌬𑍋𑌧𑌾𑌨𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌸𑌂𑌮𑌤𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌗𑍋𑌰𑌕𑍍𑌷𑌨𑌾𑌥𑍇𑌨 𑌨𑌾𑌦𑍋𑌪𑌾𑌸𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ||

(இ-ள்) விற்பத்தியில்லாமையால் தத்துவஞான சாமர்த்திய மில்லாத மூடர்களுக்கும் சம்மதமாகிய கோரக்கநாதரால் சொல்லப்பட்ட நாதவுபாசனை (நாதாநுசந்தானம்) சொல்லப்படுகின்கிறது. (சுஞ)

மூடர்களுக்கும் என்ற உம்மையால் படித்தவர்களுக்குக் கேட்பானேன் என்பது அறியப்படுகின்றது. கோரக்கநாதராற் சொல்லப்பட்ட தென்பதனால், பெரியோர்களாற் கூறப்பட்டமையால் இது கொள்ளத்தக்கதாமென்பது அறியப்படுகின்றது. ()

(அ-கை) இதுவுமது:—

ஞூிநாடுெநஸவாஉகொ்டி
ஓயவுகா௱ா°கூயிதாஜுபஷி |
நாஉாந¬ஸஙாநகூ©°கூ©°வ
°நஹ்ா°©ஹ°¬வு).த°ஂஓயாநாழ

(இ-ள்) ஸ்ரீ ஆதிநாதராகிய பரமேசுவரனாற் சொல்லப்பட்ட ஒன்றேகாற்கோடி இலயப்பிரகாரங்கள் (சித்தலயசாதன பேதங்கள்) சிலாக்கியமாயிருக்கின்றன. அவற்றுள் * நாதாநுசந்தானமொன்றையே எல்லாவற்றிற்கும் பிரதானமாக அறிகிறோம்.

சிரேஷ்டமான இலயசாதனங்களெல்லாவற்றினும் மேலானதாயும் கோரக்கரால் சம்மதிக்கப்பட்டதாயு மிருத்தலால் நாதாநுசந்தானமே அவசியம் விதிக்கப்பட்டதாமென்பது கருத்து.

(அ-கை) சாம்பவிமுத்திரையின் † நாதாநுசந்தானத்தைக் கூறுகின்றார்:—

---

* இது ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரியர்களாலும் யோகதாராவளியில் "உலகத்தில் சதாசிவனாற் சொல்லப்பட்ட ஒன்றேகால் இலக்ஷம் இலயங்களிருக்கின்றன. அவ்விலயங்களெல்லாவற்றுள்ளும் நாதானுசந்தானசமாதியொன்றையே மேலானதாக யான் மதிக்கின்றேன்." என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

† ஸ்ரீ சங்கரர் சொல்லுகின்றார்:—தேவி! யோகிசரின் இதத்தை விரும்பிமேலான ஞானத்தைச் சொல்லுகிறேன்; கேள். எவனுக்கும் சொல்லத்தக்கதுமன்று; கொடுக்கத்தக்கதுமன்று. சிரத்தையுள்ளவனும்,

ஶப்³த³ப்³ரஹ்மேதி தாம் ப்ராஹு꞉ ஸாக்ஷாத்³தே³வ꞉ ஸதா³ஶிவ꞉ ।
அநாஹதேஷு சக்ரேஷு ஶப்³த³꞉ ஸ பரிகீர்த்தித꞉ ॥ ௬௭ ॥

---

பக்தியோடுகூடியவனும், புத்திமானும், நாஸ்திகத்தன்மையில்லாதவனும், சுத்தனும், தர்மிஷ்டனுமாயுள்ளவனுக்குக் கொடுக்கத்தக்கதாம். யோகத்தை யுண ந்தவன் இரவில் ஜனங்கள் உறங்கியபின் தீபமின்றி இருளில் தனது படுக்கையில் சுகாசனத்திலிருந்து, சுட்டுவிரல்களால் இரண்டுகாதுகளையும் செவ்வையாய் மூடினுல் அதனுல் ஜாடராக்கினியினுலுண்டாகிய சப்தமானது கேட்கப்படும். அதனுல் உண்ட அந்நம் க்ஷணத்தில் பாகமாகின்றது; சர்வரோகங்களும், ஜ்வராதி வெகு உபத்திரவங்களும் கெடுகின்றன. எவன் தினமும் ஏகாந்தத்தில் இரண்டுநாழிகை கவனிக்கின்ருனே, அவன் மிருத்தியுவைஜயித்து விரும்பியவண்ணம் தனதிச்சையினுல் இங்குதிரிகுவன்; முற்றும் எல்லாவற்றையும் காண்கின்ருன். எல்லாச்சித்தியுமடைகின்ருன். மாரிகாலத்தில் ஆகாயத்திலுள்ள மேகம் சப்திக்கின்ற சப்தத்தினைப்போன்ற அந்நாதத்தினைக்கேட்டு யோகி உடனே சம்ஸாரபந்தத்தினின்றும் விடுபடுகிருன். அதனுல் அந்நாதம் நித்தியம் சூக்ஷ்மமும் சூக்ஷ்மதாமுமாகின்றது. தேவி! இந்தச் சப்தவிதிக்கிரமம் உனக்குச் சொல்லப்பட்டது. தானிய விருப்புடையோன் வைக்கோலை நீக்குவதுபோல பந்தம் முழுவதையும் நீக்கக்கடவன். இந்தச் சப்தப்பிரஹ்மத்தையடைந்து பிறிதொன்றனை விரும்புகிறவர்கள் எவர்களோ, அவர்கள் முட்டியினுல் ஆகாயத்தை இடிப்பவர்களும் பசியினுல் உமியைக் குத்துபவர்களுமாவர். இந்தப் பிரஹ்மம் சுகத்தைத்தருவதும் மோக்ஷகாரணமும் அவாச்சியமும், அக்ஷரமும், எல்லாவுபாதிகளுமொழிந்ததும் மேலானதுமாமென்று அறிந்து காலபாசத்தினுல் மோகிக்கப்பட்டவர்களாய் மிருத்தியு பாசவசப்பட்ட குபுத்[illegible]களாகிய அப்பாபிகள் சப்தப்பிரஹ்மத்தினை அறியார்கள். பிரஹ்மத்தினை [illegible]துவரையில் அடையவில்லையோ, அதுவரையில் சம்ஸாரத்திற் சுழலுகின்றனர். பரதத்துவத்தினை யுணர்ந்தபோது ஜன்மபந்தத்தினின்றும் விடுபடு[illegible]ன்ருன். நித்திரை சோம்பல் என்னும் மகாவிக்கினமாகிய சத்துருவை முயற்சியினுல் ஜயித்து, சுகாசனத்திருப்பவனுய் நித்தியம் இரவில் சப்தப்பிரஹ்மத்தினை அப்பியசிக்கவேண்டும். நூறுவயதான கிழவன் இதனையடைந்து ஆயுசுபரியந்தம் அப்பியசிக்கின், மாணத்தை ஜயித்த சரீரமும், நடுக்கமின்மையும், ஆரோக்கியமும், ஆயுள்விருத்தியும், அறிவும் அக்கிழவனிடத்துக் காணப்படுமெனின், தருணனிடத்துச் சொல்லவேண்டியதென்னையுளது? ஓங்காரமன்று; மந்திரமன்று; பீஜமன்று; அக்ஷரமன்று; அநாகதமும், உச்சரிக்கப்படாததுமாம் சப்தப்பிரஹ்மமாகிய பாசிவம். ஆதலால் பிராணனுணர்ந்தவர்களால் இலக்ஷிக்கப்படும் நாதங்கள் ஒன்பதுவகை

(இ-ள்) முக்தா(சித்தா)சனத்திலிருக்கும் யோகி சாம்பவி முத்திரையைச் செய்து, ஏகாக்கிரசித்தனாய் வலதுகாதில் சுழுமுனை நாடியிலுள்ள நாதத்தைக் கேட்கக்கடவன்.

---

யாகச் சொல்லப்படும். அவற்றை நாதசித்தியைத் தழுவியமுறையாக பிரயத்தினத்தால் கூறுகின்றேன். கோஷம், வெண்கலச்சப்தம், கொம்பு, மணி, வீணை முதலியன புல்லாங்குழல், துந்துபி, சங்கு, மேககர்ஜனையென்பன. ஒன்பதாவது (மேக) சப்தத்தினைவிட்டு ஓங்காரத்தினைச் செவ்வையாய்ப் பற்றவேண்டும். இவ்வாறு யோகி எப்போதும் தியானஞ்செய்து புண்ணியபாவங்களினாற் பற்றப்படுகிறதில்லை எப்போதுகேட்கும் (நாதம்) கேட்கப்படுகிறதில்லையோ அப்போது அப்பியசிக்கின்ற அவன் ஆறுமாசத்தில் இறப்பான். யோகி அதில் இரவும் பகலும் நிற்கவேண்டும். அதனால் மிருத்தியுவை ஜயிக்கும் சப்தம் ஏழுதினங்களில் உற்பத்தியாகின்றது.

க. ஆத்ம(சித்த)சுத்தியைச் செய்வதும், பாபம், சர்வவியாதிகளையும் கெடுப்பதும், வசியாகருஷணமுண்டாவதும் உத்தமமுமான கோஷமென்னும் நாதம் சப்திக்கின்றது.

உ. வெண்கலநாதம் சப்திக்கின்றது. அது பிராணிகளின் கதியை நிறுத்துகின்றது. விஷம் பூதக்கிரகங்களெல்லாவற்றையும் கட்டுகின்றது; இதிற் சம்சயமில்லை.

ங. கொம்புநாதம் சப்திக்கின்றது. அது அபிசாரத்திலும், வித்துவேஷ உச்சாடனத்திலும் சத்துருமாரணத்திலும் பொருத்துவதாம்.

ச. மணிச்சப்தம் இது சர்வதேவர்களது ஆகருஷணத்திலும் பொருத்துவதாமெனின், உலகத்தில் மனிதர்களதாகருஷணத்தைப்பற்றி கேட்பானேன்? யக்ஷகந்தர்வ கன்னிகைகளும் அதன் ஆகர்ஷணத்தா கட்டுப்படுகின்றனர். யோகிகள் தாம்விரும்பிய மகாசித்தியை இஷ்டப்படி பெறுவர்.

ரு. வீணாநாதம் யோகிகளால் எப்போதும் கேட்கப்படுகின்றது. அதனால் தூரதிருஷ்டி உண்டாகின்றது.

சு. புல்லாங்குழற்சப்தம் சப்திக்கின்றது. அதனால் சர்வஞ்ஞத்துவம் பிறக்கின்றது.

எ. துந்துபிநாதம் சப்திக்கின்றது. அதனால் ஜராமரணம் நீங்குகின்றது.

அ. சங்கநாதம் சப்திக்கின்றது. அதனால் யோகி தான் கருதியவடிவம் பெறுந்தன்மையை அடைகின்றான்.

அது திரிபுராசாரசமுச்சயத்தில்

“ 𑌆𑌦𑍌 𑌮𑌤𑍍𑌤𑌾𑌲𑌿𑌮𑌾𑌲𑌾
𑌜𑌨𑌿𑌤𑌰𑌵𑌸𑌦𑍃𑌶𑌸𑍍𑌤𑌾𑌰𑌸𑌂𑌤𑌾𑌰𑌕𑌾𑌰𑍀
𑌨𑌾𑌦𑍋𑌽𑌸𑍌 𑌵𑌾𑌂𑌶𑌿𑌕𑌸𑍍𑌯𑌾
𑌨𑌿𑌲𑌭𑌰𑌿𑌤𑌲𑌸𑌦𑍍𑌵𑍇𑌣𑍁𑌨𑌿𑌃𑌸𑍍𑌵𑌾𑌨𑌤𑍁𑌲𑍍𑌯𑌃 ।
𑌘𑌣𑍍𑌟𑌾𑌨𑌾𑌦𑌾𑌨𑍁𑌕𑌾𑌰𑍀
𑌤𑌦𑌨𑍁 𑌜𑌲𑌧𑌿𑌧𑍍𑌵𑌾𑌨𑌧𑍀𑌰𑍋 𑌗𑌭𑍀𑌰𑍋
𑌗𑌰𑍍𑌜𑌤𑍍𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌘𑍋𑌷𑌃
𑌪𑌰 𑌇𑌹 𑌕𑍁𑌹𑌰𑍇 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌾𑌡𑍍𑌯𑌾𑌃 ॥

இந்த நாதம் முதலில் மதுவுண்ட வண்டுக்கூட்டங்களாலுண்டாகும் சப்தத்திற்குச் சமான சப்தசம்ஸ்காரத்தைச் செய்வதாயும், அதன்பின் மூங்கில் கூட்டங்களின் காற்று நிறம்பிவிளங்கும் மூங்கிலின் நாதத்திற்குச் சமானமானதாயும், கண்டாநாதத்தின் எதிரொலியாயும், சமுத்திரத்தின் திரமான ஒலியாயும், கம்பீரமாய் (மிகக் கடுமையாய்)க் கர்ஜிக்கும் இடியின் ஓசையாயும் பிரஹ்மநாடியின் இந்த மேலாகிய இரந்திரத்தில் இருக்[கி]ன்றது.” என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

## பராங்முகி முத்திரை.

(அ-கை) * பராங்முகி முத்திரையால் நாதாநுசந்தானத்[தை]த் கூறுகின்றார் :—

௧. மேகநாதம் சப்திக்கின்றது. இதனால் யோகி ஆகாயசங்கமத்தால் சர்வஞ்ஞனும் சர்வதர்சியுமாகின்றான். காமரூபியா (விரும்பியவடிவம் பெறுபவனா) கின்றான்.”

இவ்வாறு நாதாநுசந்தானப்பியாசக் கிரமமும் அதன் பயனும் சிவபுராணத்துக்கூறப்பட்டுள. இவ்வாறே தசநாதமும் அந்த தசநாதங்களின் பயனும் ஹம்ஸோபநிஷத்திற் கூறப்பட்டிருக்கின்றன. மற்றோர்வகை நாதாநுசந்[தா]னக்கிரமம் பிரஹ்மவித்தியோபநிஷத்திற் கூறப்பட்டுளது. அவை யாவும் விரிவஞ்சிவிடப்பட்டன.

* இது யோகசூடாமணியுபநிஷத்திலும் கூறப்பட்டுளது.

ஶ்ரவணபுடநயநயுகல
க்ராணமுகாநாம் நிரோதநம் கார்யம் |
ஶுத்தஸுஷும்நாஸரணௌ
ஸ்புடமமல: ஶ்ரூயதே நாத: || ௬௮ ||

(இ-ள்) இரண்டுகாது இரண்டுகண் இரண்டு நாசித்துவாரம் வாய் என்னும் இவற்றைக் கைவிரல்களால் நிரோதனஞ்செய்ய (மூட) வேண்டும். அப்போது பிராணாயாமத்தாற் சுத்தமாயிருக்கும் சுழுமுனைமார்க்கத்தில் அமலமாகிய (களங்கமின்றிய) நாதம் ஸ்புடமாய் (வியத்தமாய்—வெளிப்படையாய்)க் கேட்கப்படுகின்றது.

நிரோதனம் செய்யும் தன்மை

"அங்குஷ்டாப்யாமுபே ஶ்ரோத்ரே தர்ஜநீப்யாம் து சக்ஷுஷீ |
நாஸாபுடௌ ததாந்யாப்யாம் ப்ரச்சாத்ய கரணாநி வை ||

பெருவிரல்களால் இரண்டு காதுகளையும் சுட்டுவிரல்களால் இரண்டு கண்களையும் மோதிர விரல்களால் இரண்டு நாசிகளையும் மூடி, சகாரத்தால் (உம்மையால்) மற்ற விரல்களால் வாயையும் மூடி" என்னும் தரிசனோபநிஷத் வாக்கியத்தினாலறிக. இதை ஷண்முகிமுத்திரை என்றும் கூறுவர்.

நாத அவஸ்தாபேதம்.

(அ-கை) இனிநாதத்தின் நான்கவஸ்தைகளைக் கூறு[illegible]றார் :—

ஆரம்பஶ்ச கடஶ்சைவ ததா பரிசயோऽபி ச நிஷ்பத்தி: |
ஸர்வயோகேஷு ஸ்யாதவஸ்தாசதுஷ்டயம் || ௬௯ ||

(இ-ள்) * ஆரம்பாவஸ்தை, கடாவஸ்தை, பரிசயாவஸ்தை, நிஷ்பத்தியவஸ்தை யென்று (சித்தவிருத்தி நிரோத உபாயங்களாகிய சாம்ப[illegible] முதலிய) சகல யோகங்களிலும் நான்கு அ[illegible]ஸ்தை (வியவஸ்தை) களிருக்கின்றன. (௬௯)

* இது வராகயோகதத்வோபநிஷதங்களிற் கூறப்பட்டுள்ளது.

### ௧. ஆரம்பாவஸ்தை.

(அ-கை) அவற்றுள் * ஆரம்பாவஸ்தையைக் கூறுகின்றார் :-

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑍇𑌰𑍍𑌭𑌵𑍇𑌦𑍍𑌭𑍇𑌦𑍋 𑌹𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 𑌶𑍂𑌨𑍍𑌯𑌸𑌂𑌭𑌵𑌃 ।
𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌃 𑌕𑍍𑌵𑌣𑌕𑍋 𑌦𑍇𑌹𑍇𑌽𑌨𑌾𑌹𑌤𑌃 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌧𑍍𑌵𑌨𑌿𑌃 ॥ ௭௦ ॥

(இ-ள்) அநாஹதசக்கிரத்திலிருக்கும் பிரஹ்மகிரந்தியின் பேதம் (பிராணுப்பியாசத்தாற்பேதித்தல்) எப்போது உண்டாகின்றதோ, அப்போது ஆநந்தத்தைத் தருவதும், சூனிய (இருதயாகாய)த்திலுண்டாவதும், நாநாவிதக்கிண்கிணிச் சத்தம்போன்றதுமாகிய அநாஹதத்துவனி (ஒலி) தேகத்தின் மத்தியில் கேட்கப்படுகின்றது. (௭௦)

(அ-கை) இதுவுமது:—

𑌦𑌿𑌵𑍍𑌯𑌦𑍇𑌹𑌶𑍍𑌚 𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑍀 𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌸𑍍𑌤𑍍𑌵𑌰𑍋𑌗𑌵𑌾𑌨𑍍 ।
𑌸𑌮𑍍𑌪𑍂𑌰𑍍𑌣𑌹𑍃𑌦𑌯𑌃 𑌶𑍂𑌨𑍍𑌯 𑌆𑌰𑌮𑍍𑌭𑍇 𑌯𑍋𑌗𑌵𑌾𑌨𑍍𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

(இ-ள்) சூனியமாகிய இருதயாகாசத்தில் நாதாரம்பமுண்டாகின்றது. அப்போது பிராணவாயுவால் நன்றாய்ப் பூரணமாகிய யோகியானவன் திவ்விய (ரூபலாவண்ணியபலமுள்ள) தேகமுடையவனும், பிரதாபமுடையவனும், திவ்விய (உத்தமமாகிய) கந்தமுள்ளவனும், ரோகமில்லாதவனுமாவன். (௭௧)

இருதயாகாசம் விசுத்தாகாசம் புருவமத்தியாகாசம் என்னுமிவை யோகிகளால் சூனியம் அதிசூனியம் மகாசூனியமென்னும் பேர்களால் விவரிக்கப்படுகின்றன.

### ௨. கடாவஸ்தை.

(அ-கை) ‡ கடாவஸ்தையைக் கூறுகின்றார்:—

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌯𑌾𑌂 𑌘𑌟𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌮𑌧𑍍𑌯𑌗𑌃 ।
𑌦𑍃𑌢𑌾𑌸𑌨𑍋 𑌭𑌵𑍇𑌦𑍍𑌯𑍋𑌗𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌦𑍇𑌵𑌸𑌮𑌸𑍍𑌤𑌦𑌾 ॥ ௭௨ ॥

(இ-ள்) இரண்டாவதாகிய கடாவஸ்தையில் வாயு (பிரா

* இது யோகதத்வோபநிஷத்திற் கூறப்பட்டுள்ளது

‡ இது வராகயோகதத்துவோபநிஷத்தில் கூறப்பட்டுளது.

ணன்) ஆத்மாவோடு நாதபிந்துக்களை ஒருமைப்படுத்திக் கண்டஸ்தானத்திலிருக்கும் மத்தியசக்கிரத்தி லுள்ளதாகுங்கால், யோகி (யோகாப்பியாசி) திடா(ஸ்திரா)சனமுள்ளவனாய், ஞானியாய் (முன்னினுமதிக புத்திசாமர்த்தியமுடையவனாய்), ரூபலாவண்ணிய மிருதிப்பாட்டால் தேவர்களுக்குச் சமானமாகின்றான்.

அது ஈசுவரனாற்சொல்லப்பட்ட இராஜயோகத்தில்,

ப்ராணாபாநௌ நாதபிந்தூ ஜீவாத்மபரமாத்மநோ:।
மேளநாத் கடதே யஸ்மாத் தஸ்மாத் வை கட உச்யதே ॥

பிராணாபானனும், நாதவிந்துவும் ஜீவாத்மபரமாத்துமாக்களுஞ் சேர்த்து கடித்த(நிகழ்த)லால் அது கடமெனப்படுகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (எ௨)

(அ-கை) இதுவுமது:—

விஷ்ணுக்ரந்தேஸ்ததோ பேதாத் பரமாநந்தஸூசக:।
அதிஶூந்யே விமர்தஶ்ச பேரீஶப்தஸ்ததா பவேத் ॥ எ௩ ॥

(இ-ள்) அதன்பின் (பிரஹ்மகிரந்தியைப் பேதித்தபின்) கண்டத்திலிருக்கும் விஷ்ணுகிரந்தியைக் கும்பகத்தால் பேதித்தலால், இனியுண்டாகும் பிரஹ்மாநந்தத்தைச் சூசிப்பிப்பதாய் அதிசூனியத்தில் (கண்டாவகாசத்தில்) அநேகநாதமுழக்கமும் பேரிசப்தமும் அப்போதுண்டாகின்றது. (எ௩)

## பரிசயாவஸ்தை.

(அ-கை) * பரிசயாவஸ்தையை இரண்டரைச் சுலோகங்களாற் கூறுகின்றார்:—

த்ருதீயாயாம் து விஜ்ஞேயோ விஹாயோமர்தலத்வநி:।
மஹாஶூந்யம் ததா யாதி ஸர்வஸித்திஸமாஶ்ரயம் ॥ எ௪ ॥

(இ-ள்) மூன்றாவது பரிசயாவஸ்தையில் புருவநடுவாகாசத்தில் மத்தளத்தொனிபோன்ற நாதம் விசேஷமாய் அறியத்தக்கதாகின்றது. அப்போது (அவ்வவஸ்தையில்) பிராணன் அணி

---

* இது வராகோபநிஷத்திற் கூறப்பட்டுளது.

மாதி சகலசித்திகளுக்கும் ஆசிரயமாகிய மகாசூனியமென்னும் புருவநடுவாகாசத்தை அடைகின்றது. (௭௪)

(அ-கை) இதுவுமது:—

சித்தாநந்தம் ததா ஜித்வா ஸஹஜாநந்தஸம்பவ: ।
தோஷது:கஜராவ்யாதி க்ஷுதாநித்ராவிவர்ஜித: ॥ ௭௫ ॥

(இ-ள்) அப்போது யோகி சித்தாநந்தத்தை (நாதவிஷயாந்தக்கரணவிருத்தி ஜந்நியசுகத்தை) ஜெயித்துச் சுபாவிகமாகிய ஆத்மசுகத்தின் ஆவிற்பாவமுடையவனாய் வாதபித்தகபதோஷங்கள், அவற்றாலுண்டாகிய துக்கம் (அத்தியாத்மமுதலிய வேதனை), மூப்பு, வியாதி, பசி, நித்திரை யென்னுமிவைகளில்லாதவனாகின்றான். (௭௫)

(அ-கை) அப்போதெனின், எப்போதென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

ருத்ரக்ரந்திம் யதா பித்த்வா சர்வபீடகதோ(அ)நில: ॥

(இ-ள்) எப்போது ஆக்கினைசக்கிரத்திலுள்ள உருத்திரகிரந்தியைப் பேதித்துப் பிராணன் ஈசுவரபீடமாகிய புருவநடுவை அடைந்ததாகின்றதோ அப்போது. (௭௫½)

நிஷ்பத்தியவஸ்தை.

(அ-கை) * நிஷ்பத்தியவஸ்தையைக் கூறுகின்றார்:—

நிஷ்பத்தௌ வைணவ: சப்த: க்வணத்வீணாக்வணோ பவேத் ॥௭௬॥
ஏகீபூதம் ததா சித்தம் ராஜயோகாபிதாநகம் ॥
ஸ்ருஷ்டிஸம்ஹாரகர்தா(அ)ஸௌ யோகீஸ்வரஸமோ பவேத் ॥

(இ-ள்) நிஷ்பத்தியவஸ்தையில் வேணுநாதமும் க்வண என்று சப்திக்கின்ற வீணாநாதமும் உண்டாகின்றன. அப்போது (அவ்வவஸ்தையில்) சித்தம் (விஷயவிஷயிகளின் அபேத உபசாரத்தால்) ஒரு விஷயிவடிவமாகின்றது. அது இராஜயோகமென்னும் பெயருடையதாம். (சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையே

* வராகமுதலியவுபநிஷதங்களிற் காண்க.

இராஜயோகமென்பது பொருள்.) இந்த (நாதாநுசந்தான பராகிய) யோகி சிருஷ்டிசங்கார கர்த்தாவாய் ஈசுவரசமனாகின்றான்.

பிராணன் பிரஹ்மரந்திரத்திற் செல்லுங்கால் நிஷ்பத்தியவஸ்தை யுண்டாகின்றது. (எஎ)

(அ-கை) இதுவுமது :—

அஸ்து வா மாஸ்து வா முக்திரத்ரைவாகண்டிதம் ஸுகம் |
லயோத்பவமிதம் ஸௌக்யம் ராஜயோகாதவாப்யதே ||எஅ||

(இ-ள்) மோக்ஷமிருக்கட்டும் அல்லது இல்லாதிருக்கட்டும். இதனாலேயே அகண்டிதமாகிய சுகமிருக்கின்றது. இலயத்தாலுண்டாகும் இந்தச்சௌக்கியம் இராஜயோகத்தாலடையப்படுகின்றது. (எஅ)

(அ-கை) இதுவுமது :—

ராஜயோகமஜாநந்த: கேவலம் ஹடகர்மிண: |
ஏதாநப்யாஸிநோ மந்யே ப்ரயாஸபலவர்ஜிதாந் ||

(இ-ள்) இராஜயோகத்தை யறியாதவர்களாய் ஹடகர்மத்தைமாத்திர[illegible]முடைய இவ்வப்பியாசிகளைப் பிரயாசத்தின் பலமில்லாதவர்களாக மதிக்கிறேன். (எகூ)

(அ-கை) இதுவுமது :—

உந்மந்யவாப்தயே ஶீக்ரம் ப்ரூத்யாநம் மம ஸம்மதம் |
ராஜயோகபதம் ப்ராப்தும் ஸுகோபாயோऽல்பசேதஸாம் |
ஸத்ய: ப்ரத்யயஸந்தாயீ ஜாயதே நாதஜோ லய: || அ0 ||

(இ-ள்) சீக்கிரம் உன்மனியவஸ்தையை யடையும்பொருட்டு புருவநடுவில் தியானித்தல் சுவாத்மாராமனாகிய * எனக்குச் சம்மதம். இது (புருவ நடுத்தியானம்) † இராஜயோகபதத்தை

* இப்படியே இலயங்களுள் புருவமத்திய நாட்டமே மேலானதென்று கூறும் ஹடதீபிகைகாரர்மதமே எமதுமதமென்றார் ஹடரத்நாவளிகாரர்

† யோகங்களுக்கெல்லாம் இராஜாவாயிருத்தலால் இராஜயோகமாம். இது "யோகங்களுக்கெல்லாம் இராஜாவாயிருத்தலால் இராஜயோகமென

(துரியாவஸ்தையை) அடைவதற்கு அற்பபுத்தி யுடைவர்களுக்கும் சுகமாய்ச் சாதிக்கத்தக்க உபாயமாம். (மற்றவர்களுக்குச் சொல்லுவானேனென்பது அபிப்பிராயம்). நாதத்தினுலுண்டாகும் சித்தவிலயம் பிரத்தியக(ஞான)த்தைச் செவ்வையாய்த் தருவதாகின்றது. (௮௦)

(அ-கை) இதுவுமது :—

நாதாநுஸந்தாநஸமாதிபாஜாம்
யோகீஶ்வராணாம் ஹ்ருதி வர்த்தமாநம் ।
ஆநந்தமேகம் வசஸாமகம்யம்
ஜாநாதி தம் ஶ்ரீகுருநாத ஏக: ॥ அக ॥

(இ-ள்) நாதாநுசந்தானத்தால் சமாதியை (ஏகாக்கிரத்தன்மையை) அடையும் யோகீசுவரர்களது இருதயத்தில் விருத்தியாகும் இதுவென்று வாக்கினுற் சொல்லக்கூடாத யோகசாஸ்திரப்பிரசித்தமாகிய முக்கிய ஆநந்தத்தை அநந்நியராகிய ஸ்ரீ குருநாதரே அறிவர்.

இதனுல் நாதாநுசந்தான ஆநந்தம் குருவினுலறியத்தக்கதேயாமென்பது சூசிப்பிக்கப்பட்டது. (அக)

(அ-கை) நாதாநுசந்தானத்தால் பிரத்தியாகாராதி கிரமமாகச் சமாதியைக் கூறுகின்றுர் :—

கர்ணௌ பிதாய ஹஸ்தாப்யாம் யம் ஶ்ருணோதி த்வநிம் முநி: ॥
தத்ர சித்தம் ஸ்திரீகுர்யாத் யாவத் ஸ்திரபதம் வ்ரஜேத் ॥

(இ-ள்) முனி (மனனசீலர்களாகியயோகி)களால் கைப்பெருவிரல்களால் இரண்டு காதுகளையும் மூடுவதினுல் எந்தத்துவனி கேட்கப்படுகின்றதோ, அந்தத் தொனியால் சித்தத்தை ஸ்திரபதமாகிய துரியத்தை யடையும்வரையில் ஸ்திரப்படுத்தவேண்டும்.

---

ப்படும்; அல்லது ஜீவர்களுக்கு இராஜாவை (விளங்கிக்கொண்டிருக்கும் அவ்வியயமாகிய பரப்பிரஹ்மத்தை) யடைவிப்பது எதுவோ. அது இராஜயோகமெனப்படும்' என்று வாமதேவமகேசுவரசம்வாதமாகிய யோகாப்பியாசத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

அது, “ துரியாவஸ்தை சித்தை வெளிப்படுத்தும் நாதத்தின்வேதன மெனப்படும். நாதாநுசந்தானத்தால் வாயுவின் ஸ்திரத்தன்மையும் அணிமாதிகளும் உண்டாகின்றன ” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அது திரிபுராச்சாரசமுச்சயத்திலும்

,, விஜிதொஹவதீஹதெநவாயுஃ
ஸஹஜொயஸ்யஸஂஜீதஃவ ணாதஃ ।
அணிமாதிகுணாஹவதிதஸ்யாதித
வண்யஹீஹாஙணொஃயஸ்ய ।
ஸுராஜதநுஜவைரிரஙெஸ்ரு
விநிருயஸ்வகராஂஙுலிஹயெந ।
ஜலயெரிவயீஜநாதஃஹஃவ ஸாஞ
ஸஹஸாஶ்ருணொதிஹதஸ்யஃ ॥

சுராஜகுமாரவைரிரந்திரத்தில் தனது கைப்பெருவிரல்களிரண்டினுல் நிரோதித்து, உள்ளேபரவும் சமுத்திரம்போன்ற திரமான நாதத்தைச் சீக்கிரமாக மனிதன் கேட்கிறுன். அதனுல் எவனுக்குச் செவ்வையாய் எழும்பிய நாதமும் வாயுவும் சகஜமாய் ஜயிக்கப்பட்டவைகளாகின்றனவோ( அந்த மஹாகுணேதயமுள்ளவனுக்கு அணிமாதி குணங்களும் அளவிறந்த புண்ணியமு முண்டாகின்றன ” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (சுராஜன்—இந்திரன், அவன் குமாரன்—அர்ச்சுனன், அவன் வைரி—கர்ணன், அக்கரண ரந்திரத்தில்—காதின் துவாரத்தில் என்பது பொருள்).

(அ-கை) இதுவமது :—

*ஸுஹ்யஸ்யாெநாதொ஽யம் பாஹ்யம் ஸூவ்ருணைதயநிஃ ।
வஷாவிகெஷவலிஃவம் ஜிஹவாயொ நீஸஂவீஹவெகு ॥ அரு ॥

(இ-ள்) அப்பியாசிக்கப்படும் இந்த (அநாஹதமென்னும்) நாதம் பாகிய வெளியிலுண்டாகும் சுரோத்திரத்திற்கு விஷயமாகின்ற) தொனியைச் சூழ்கின்றது. யோகி (நாதாப்பியாசி) ஒரு

* இவை நாதபிந்தூபநிஷத் வாக்கியம்.

பக்ஷ(அரைமாத)த்தில் சகல விக்ஷேப(சித்தசாஞ்சலிய)ங்களை யும் ஜெயித்துச் சுகி(நிஜாநந்தமுடையவன்)ஆகின்ருன்.

(அ-கை) இதுவுமது:—

* ஶ்ரூயதே ப்ரதமாப்யாஸே நாதோ நாநாவிதோ மஹாந்
வர்த்தமாநே ததாப்யாஸே ஶ்ரூயதே ஸூக்ஷ்மஸூக்ஷ்மக꞉ ||

(இ-ள்) முதலப்பியாசத்தில் நாநாவிதமாகிய பெரிய (சமுத்திரம் மேகம் பேரிமுதலியவற்றைப் போன்ற) நாதம் கேட்கப்படுகின்றது, பின் நாதாநுசந்தானம் விருத்தியாகுங்கால் சூக்ஷ்ம சூக்ஷ்மமாகக் கேட்கப்படுகின்றது. (௮௪)

(அ-கை) நாநாவித நாதத்தை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்ருர்:—

* ஆதௌ ஜலதிஜீமூத பேரீ ஜர்ஜரஸம்பவா꞉
மத்யே மர்தலஶங்கோத்தா கண்டா காஹலஜாஸ்ததா || ௮௫ ||

(இ-ள்) ஆதியில் (வாயு பிரஹ்மரந்திரத்திற் செல்லுங்காலத்து) சமுத்திரம், மேகம், பேரி, சர்ச்சரம் (கனகப்பட்டையென்னும் ஓர் தோல்வாத்தியம்) என்பவற்ருலுண்டாகியவைகளைப் போன்ற நாதமும், அப்படியே மத்தியில் (பிரஹ்மரந்திரத்தில் வாயுஸ்திரப்பட்டபின்) மத்தளம், சங்கு, கண்டா(மணி), காகளம் என்பவற்ருலுண்டாகியவைகளைப் போன்ற நாதமும்.

(அ-கை) இதுவுமது:—

* அந்தே து கிங்கிணீவம்ஶவீணா ப்ரமரநிஸ்வநா꞉|
இதி நாநாவிதா நாதா꞉ ஶ்ரூயந்தே தேஹமத்யகா꞉ || ௮௬ ||

(இ-ள்) அந்தத்தில் (பிராணன் பிரஹ்மரந்திரத்தில் மிகவும் ஸ்திரமானபின்) கிண்கிணி, வேணு, வீணை (தந்திரி), வண்டு என்பவற்றின் சப்தங்களைப்போன்ற நாதங்களுமாக, இப்படி நாநாவிதநாதங்கள் தேகத்தின் மத்தியிலுள்ளனவாகக் கேட்கப்படுகின்றன. (௮௬)

* இவை நாதபிந்தூபநிஷத் வாக்கியங்கள்.

(அ-கை) இதுவுமது:—

* 𑌮𑌹𑌤𑌿 𑌶𑍍𑌰𑍂𑌯𑌮𑌾𑌣𑍇𑌽𑌪𑌿 𑌮𑍇𑌘𑌭𑍇𑌰𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑍇 𑌧𑍍𑌵𑌨𑍌 |
𑌤𑌤𑍍𑌰 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑌰𑌂 𑌨𑌾𑌦𑌮𑍇𑌵 𑌪𑌰𑌾𑌮𑍃𑌶𑍇𑌤𑍍 || அஎ ||

(இ-ள்) மேகம் பேரிமுதலியவற்றிலுண்டாகிய சப்தம்போன்ற பெருஞ்சப்தங்கள் கேட்கப்படினும், அவற்றுள் சூக்ஷ்மத்தினும் சூக்ஷ்மமாகிய நாதத்தையே சிந்திக்கவேண்டும்.

சூக்ஷ்மமாகிய நாதம் நெடுநேரமிருப்பதா யிருத்தலால் அதில் ஆசக்தமுள்ள சித்தமும் நெடுநேரம் ஸ்திரமுடையதாகு (நிலைக்கு) மென்பது கருத்து. (அஎ)

(அ-கை) இதுவுமது:—

* 𑌘𑌨𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑍇 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌾 𑌘𑌨𑍇 |
𑌰𑌮𑌮𑌾𑌣𑌮𑌪𑌿 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌂 𑌮𑌨𑍋 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌚𑌾𑌲𑌯𑍇𑌤𑍍 || அஅ ||

(இ-ள்) (பேரிமுதலியவற்றின்) கனமாகிய நாதத்தைவிட்டு சூக்ஷ்மத்திலும் அல்லது சூக்ஷ்மத்தைவிட்டு கனநாதத்திலுமாக இரமிப்பதாயிருக்கினும் (கனசூக்ஷ்மமென்னும் இரண்டிலொரு நாதத்தைக் கொள்ளுதல் தள்ளுதல்களால் கிரீடிப்பதாயிருக்கினும்) விக்ஷிப்த(இராஜதத்தால் அத்தியந்தசஞ்சல)மாகிய மனதை வேறிடத்தில் (வேறுவிஷயத்தில்) செலுத்தலாகாது.

வேறுவிஷயத்தில் ஆசக்தியுள்ள ‡ க்ஷிப்தமனம் சமாதியடையாது. நாதங்களில் இரமிக்கும் மனமோ சமாதியடையும் என்பது கருத்து. (அஅ)

---

* இது நாதபிந்தூபநிஷத் வாக்கியங்கள்.

‡ க்ஷிப்தம் (உழல்நிலை), மூடம் (உறக்கநிலை), விக்ஷிப்தம் (இருமைநிலை), ஏகாக்கிரம் (ஒருவழிநிலை), நிருத்தம் (தன்னிலை) என யோகபூமிகை (அவஸ்தை) ஐந்தாம்.

(க) க்ஷிப்தம்:—ஒவ்வொரு கணத்தினும் இருவினையாகிய காற்றினால் அநுபவிக்கப்படும் பலபொருளிலும் ஆசையுடையதாய் விரைவில் சுழலும்படி செலுத்தப்பட்ட மனதின் நிலைமையாம்.

(உ) மூடம்:— தூக்கம், சோம்பல், நெடுநீர்முதலியவற்றோடுங்கூடிய மனநிலையாம். (நெடுநீர்=வறிதுகாலந்தாழ்த்தல்=தாமசம், வறிது=வீண்.)

(அ௲கை) இதுவுமது:—

* 𑌯𑌤𑍍𑌰 𑌕𑍁𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌵𑌾 𑌨𑌾𑌦𑍇 𑌰𑌮𑌤𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌮𑌨𑌃 ।
𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌸𑍁𑌸𑍍𑌥𑌿𑌰𑍀𑌭𑍂𑌯 𑌤𑍇𑌨 𑌸𑌾𑌰𑍍𑌧𑌂 𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 ॥

(இ-ள்) அல்லது யாதேனும் ஓரிடத்தில் (கனசூக்ஷமமென்னு மேதேனு மொன்றில்) மனம் முதலில் பற்றுமாயின் அதிற்றானே நன்றாய் ஸ்திரமுடையதாய் அந்நாதத்தோடு விலயமாகின்றது.

இங்கே முன்வாக்கியத்தால் பிரத்தியாகாரமும், இரண்டாவதால் தாரணையும், மூன்றாவதால் தியானவாயிலாக சமாதியும் சொல்லப்பட்டிருக்கின்றது. (அகூ)

---

(௩) **விக்ஷிப்தம்:**—எப்போதாயினும் ஒருபோது சமாதியோடுகூடி, மற்றைப்போதெல்லாம் விடயங்களில் உழலுகின்ற மனநிலைமையாம். சமாதி=கருவிகரணங்களெல்லாம் தன்னிலையில் ஒத்து நிற்றல்; விடயம்=பற்றப்படும் பொருள்.

(௪) **ஏகாக்கிரம்:**—இயமநியமாதி அட்டாங்கயோகப் பயிற்சியின் வல்லபத்தால் ஓரே பொருளினிடத்தில் மனத்தின் ஒழுக்கமா[illegible], இடைவிடாது தொடர்ந்து செல்லும் வெள்ளம்போல், செல்லும் நிலைமையாம் (ஒழுக்கம் என்பது இவ்விடத்தில், நடக்கும் நடை). இதில் சம்பிரஞ்ஞாத சமாதி யுண்டாகின்றது.

(௫) **நிருத்தம்:**—மனம், தன்னை மறந்து சோர்ந்துபோகாமல் விழித்ருந்தும், வெறொருபுறவிடயத்திலும் உணர்ச்சி பிறவாது இருத்தலும், அவ்வுணர்ச்சி யொருகால் வேண்டும்போது, பிறப்பதற்கு ஏதுவாகிய அதன் காரியம் வித்துப்போல வாசனைமாத்திரையில் சேடப்பட்டுக் கெடாது நிற்றவமாகிய அந்நிலைமையாம் (சேடம்=மீதி) இதில் அசம்பிரஞ்ஞாத சமாதி யுண்டாகின்றது. இதனையே யோகமென்றும் நிருவிகற்பசமாதியென்றும் கூறுவர். அவற்றுள் க்ஷிப்தம் மூடமென்னும் இரண்டவஸ்தைகளினும் சமாதி பொருந்தாது. மூன்றாவதாகிய விக்ஷிப்தத்தில் எப்போதாயினும் ஓர் காலத்தில் சமாதியுண்டாயினும், விக்ஷேபத்தின் பிரதானத்தால் யோகபக்ஷத்தில் நிலைக்கிறதில்லை. வேகமாகிய காற்றால் விக்ஷேபிக்கப்படும் தீபம்போல் தானே நஷ்டமாய்விடுகின்றது. ஏனையயிரண்டுமே சமாதிக்குரியனவாம்.

(அ-கை) இதுவுமது:—

* மகரந்தம்பிபந்ப்ருங்கோ யதா கந்தம் நாபேக்ஷதே |
நாதாஸக்தம் ததா சித்தம் விஷயாந்நஹி காங்க்ஷதே ||

(இ-ள்) மகரந்த(புஷ்பரச)த்தைக் குடிக்கும் வண்டு கந்தத்தை விரும்பாததுபோல, நாதத்தில் ஆசக்தமுள்ள சித்தம் சிரக்கு (மாலை) சந்தன வனிதாதிவிஷயங்களை விரும்புகிறதில்லை. (கூ0)

(அ-கை) இதுவுமது:—

* மனோமத்தகஜேந்த்ரஸ்ய விஷயோத்யானசாரிண: |
நியந்த்ரணே ஸமர்த்தோऽயம் நிநாதநிசிதாங்குச: ||

(இ-ள்) சப்தாதிவிஷயமாகிய உத்தியானத்தில் சஞ்சரிக்கும் மனமென்னும் மதயானையை யடக்குதலில் இந்த அநாகதத்தொனியாகிய கூரிய அங்குசம் சாமர்த்தியமுடையதாம்.

இந்தச் சுலோகங்களால்

"சப்தாதிஷ்வநுஸக்தாநாம் இந்த்ரியாணாம் யதாக்ரமம் |
யத்ப்ரத்யாஹரணம் தேஷாம் ப்ரத்யாஹாரஸ்ஸ உச்யதே ||

விஷயங்களிற் சஞ்சரிக்கும் நேத்திர முதலியவற்றைக் கிரமப்படி பிரத்தியாகாரம் செய்தல் (திருப்புதல்), பிரத்தியாகாரமெனப்படுகின்றது" என்று விஷ்ணுபுராணத்திற் கூறிய இலக்ஷணமுடைய ‡ பிரத்தியாகாரம் சொல்லப்பட்டது. (கூ[illegible])

---

* இது நாதபிந்தூபநிஷத் வாக்கியம்.

‡ தரிசனம், சாண்டில்யம், திரிசிகி, யோகதத்துவமுதலியவுபநிஷத்துக்களிலும் சூதசங்கிதை முதலியவற்றிலும் சொல்லப்பட்டிருக்கும் பிரத்தியாகாரத்தின் இலக்ஷணங்கள் வருமாறு:—

(க) சுபாவமாக விஷயங்களிற் செல்லும் இந்திரியங்களைப் பலமாக இழுத்தல் பிரத்தியாகாரமெனப்படும்.

(உ) எதைப் பார்க்கிறானோ அது முழுவதும் பிரஹ்மமாமெனக் காண்டல், பிரத்தியாகாரமாம்.

(ங) பாதம், அங்குஷ்டம், கரடு, கணைக்கால், முழந்தாள், தொடை, பாயு, இலிங்கம், நாபி, இருதயம், கழுத்து-மிடறு, அண்ணம், நாசி, கண்

(அ-கை) இதுவுமது:—

* 𑌬𑌦𑍍𑌧𑌂 𑌤𑍁 𑌨𑌾𑌦𑌬𑌨𑍍𑌧𑍇𑌨 𑌮𑌨𑌸𑍍𑌸𑌂𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌚𑌾𑌪𑌲𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌿 𑌸𑍁𑌤𑌰𑌾𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌂 𑌛𑌿𑌨𑍍𑌨𑌪𑌕𑍍𑌷𑌃 𑌖𑌗𑍋 𑌯𑌥𑌾 ||

(இ-ள்) நாதபந்தத்தாற் கட்டப்பட்ட (நாததாரணையில் ஆசக்த முள்ள)தும், அதனுமேலேயே க்ஷணத்திற்குக்ஷணம் விஷ

---

புருவநடு, நெற்றி, சிரசென்னும் பதினெட்டு மர்மஸ்தானங்களிலும் கிரமமாகத் தரித்தல் அதாவது அந்த ஸ்தானங்களில் ஆரோக அவரோகக்கிரமமாகப் பிரத்தியாகாரஞ் செய்தல், பிரத்தியாகாரமாம்.

(ச) நித்தியகர்மங்களின் பலத்தை விடுதல், பிரத்தியாகாரமாம்.

(ரு) மரணபரியந்தம் தான் செய்யும் சுத்தாசுத்தங்களெல்லாவற்றையும் பிரஹ்மத்தினிடத்திற் செய்தல், பிரத்தியாகாரமாம்.

(சா) நித்தியகர்மங்களையும் காமியகர்மங்களையும் பிரஹ்மாராதனைப் புத்தியாகச் செய்தல், பிரத்தியாகாரமாம்.

(எ) வாயுவை ஒரு ஸ்தானத்திலிருந்து மற்றொரு ஸ்தானத்தில் அதாவது தந்த (பல்) மூலத்தினின்றும் கண்டஸ்தானத்திலும், கண்டஸ்தானத்தினின்று மார்பிலும், மார்பினின்று வயிற்றிலும், வயிற்றினின்று நாபியிலும், நாபியினின்று குண்டலியிலும், குண்டலியினின்று மூலாதாரத்திலும், மூலாதாரத்தினின்று இரண்டு கடிகளிலும், கடிகளினின்று தொடைகளிலும், தொடைகளினின்று முழந்தாள்களிலும், முழந்தாள்களினின்று கணைக்கால்களிலும், கணைக்கால்களினின்று பாதாங்குஷ்டங்களிலுமாக நிரோதித்தல், பிரத்தியாகாரமாம்.

(அ) சலனமில்லாதவனாய்ச் சுவஸ்திகாசனத்திலிருந்துகொண்டு இரண்டு நாசிகளாலும் வாயுவை இழுதுப் பாதமுதல் சிரசுபரியந்தம் பூரிக்கவேண்டும். பின்னர் இரண்டு பாதங்களிலும், அதுபோல மூலாதாரத்திலும், நாபியிலும், இருதயத்திலும், கண்டமூலத்திலும், அண்ணத்திலும், புருவநடுவிலும், நெற்றியிலும், சிரசிலும் நிறுத்துதல், பிரத்தியாகாரமாம்.

(கூ) சகல விஷயங்களிலும் பராமுகமாயிருத்தல், பிரத்தியாகாரமாம்

(க0) வித்துவான் தனது புத்தியை யிழுத்துச் சமசித்தமுள்ளவனாய் நிர்த்துவந்துவமும் நிர்விகற்பமுமாகிய ஆத்மாவில் நிறுத்துதல், சாக்ஷாத் வேதாந்தமுணர்ந்தவர்களால் பிரத்தியாகாரமெனப்படும்.

* இது நாதபிந்தூபநிஷத் வாக்கியங்கள்.

யத்தைக் கிரகித்தலாகிய சபலத்தன்மையை நன்றாய் விட்டது மாகிய மனம், இறகொடிந்த பக்ஷிபோல் மிகவும் ஸ்திரத்தன்மையை(தாரணையை)யடைகின்றது.

இதனால்

“ ப்ராணாயாமேந பவநம் ப்ரத்யாஹாரேண சேந்த்ரியம் |
வசீக்ருத்ய தத: குர்யாத் சித்தஸ்தாநம் ஸுபாச்ரயே ||

பிராணுபாமத்தால் வாயுவையும் பிரத்தியாகாரத்தால் இந்திரியத்தையும் வசப்படுத்தி, அதன்பின் சுபாசிரய (சகுண அல்லது நிர்க்குணபிரஹ்ம)த்தில் சித்தத்தின் ஸ்திரத்தன்மையைச் செய்யவேண்டும்” என்று விஷ்ணுபுராணத்திற் கூறப்பட்டிருக்கும் இலக்ஷணமுடைய சுபாசிரயத்தில் சித்தத்தை வைத்தலென்னும் * தாரணை சொல்லப்பட்டது. (கூஉ)

---

* தரிசனம், திரிசிகி, சாண்டில்யம், யோகதத்துவமுதலிய உபநிஷத்துக்களிலும், சூதசங்கிதைமுதலிய மற்றச் சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கும் தாரணையினிலக்கணம் வருமாறு:—

(க) தேகமத்தியவாகாசத்தில் பாகியாகாசத்தையும், பிராணவாயுவில் வெளிவாயுவையும், உதராக்கினியில் வெளியக்கினியையும், ஜலாம்சத்தில் ஜலத்தையும், பிருதிவி பாகத்தில் பிருதிவியையும் தரிக்கவேண்டும். இவற்றிற்கு ஹ, ய, ர, வ, ல என்னும் மந்திரங்களைக் கிரமமாக உச்சரிக்கவேண்டும்.

(உ) [க] பாதமுதல் முழந்தாள் வரையில் பிருதிவிஸ்தானமெனப்படும். பிருதிவி நாற்கோணமும் மஞ்சள் நிறமும், லகாரம் அக்ஷரமுமாம். பிருதிவியம்சத்தில் வாயுவையாரோபித்து, லகாரத்தோடுகூடிய பொன்வடிவமாகிய நான்கு முகங்களையுடைய பிரஹ்மாவைத் தியானித்து ஐந்து நாழிகை நிறுத்தவேண்டும். அதனுல் பிருதிவிஜயத்தையடைகிறுன். இந்த யோகிக்குப் பிருதிவியின் சம்பந்தத்தால் மாணமுண்டாகாது.

[உ] முழந்தாள்முதல் பாயுவரையில் அப்புஸ்தானமெனப்படும். அப்பு அர்த்த சந்திரவடிவமும், வெண்ணிறமும், வம்பீஜமுமாம். அப்புஸ்தானத்தில் வாயுவையாரோபித்து நாற்புயமுடையவரும், கிரீடியும், சுத்தஸ்படிகம்போன்றவரும், பீதாம்பரதாரியும், அச்சுதருமாகிய நாராயணனை வகாரத்தோடு தியானித்து ஐந்து நாழிகை நிறுத்தவேண்டும் அதனுல் சகல பாவங்களினின்றும் நீங்குகிறுன். ஜலத்தினுல் பயமில்லை. ஜலத்தில் மாணமுமில்லை.

[௩] பாயுமுதல் இருதயம்வரையில் அக்கினியின் ஸ்தானமெனப்படும் அக்கினி முக்கோணவடிவமும், இரக்தவர்ண(நிற)மும், ரகாரம் பீஜமுமாம். அக்கினியில் வாயுவையாரோபித்து திரிநேத்திரமுடையவரும் தருணுதித்தனைப் போன்றவரும், சர்வாங்கங்களிலும் விபூதியணிந்தவரும், நல்ல பிரசன்னமுடையவரும், வரத்தைத்தருபவருமாகிய ரகாரத்தோடு விளங்கும் உருத்திரனைத் தியானித்து ஐந்து நாழிகை நிறுத்தவேண்டும். இவன் அக்கினியினால் தகிக்கப்படான். அக்கினிகுண்டத்திற் பிரவேசிக்கினும் அவன் சரீரம் தகிக்கப்படமாட்டாது.

[௪] இருதயமுதல் புருவநடுவரையில் வாயுஸ்தானமெனப்படும். வாயு அறுகோணவடிவமும் கருநிறமும் யகாரம் பீஜமுமாம். வாயுஸ்தானத்தில் பிராணனை ஆரோபித்து, அதில் எங்கும் முகமுள்ள சர்வஞ்ஞனாகிய ஈசுவரனை யகாரத்தோடு தியானித்து ஐந்து நாழிகை நிறுத்தவேண்டும். அப்போது வாயுவைப்போல ஆகாயத்திற் சஞ்சரிப்பவனாகின்றான். அவனுக்கு வாயுவினால் பயமும் மரணமுமில்லை.

[௫] புருவநடுமுதல் சிரசுவரையிலும் ஆகாயஸ்தானமெனப்படும். ஆகாயம் வட்டவடிவமும் புகைநிறமும் ஹகாரம் பீஜமுமாம். ஆகாயத்தில் வாயுவை ஆரோபித்து சுத்த ஸ்படிகம் போன்றவரும், ஐந்து முகங்களையுடையவரும், பத்து புஜங்களையும் மூன்று கண்களையுமுடையவரும், சர்வாயுதங்களைத் தரித்தவரும், சகல ஆபரணங்களையுமணிந்தவரும், உமைபாகரும், இளம்பிறை சூடியவரும், வரதரும், சர்வகாரணகாரணரும், ஹகாரத்தோடுகூடிய சங்கரரும், விந்துரூப மகாதேவருமாகிய வியோமவடிவ சதாசிவத்தைத் தியானித்து ஐந்துநாழிகை நிறுத்தவேண்டும். ஆகாசதாரணத்தால் அவனுக்கு ஆகாயத்திற் சரிக்குந்தன்மையுண்டாகின்றது. அவன் எவ்விடத்திலிருக்கினும், மரணபயமில்லை. சுகத்தையனுபவிப்பன்.

இது பஞ்சதாரணை.

(௬) புருஷனிடத்தில் சகலத்தையும் நடத்தும் போதாநந்தவடிவமாகிய சிவத்தைப் புத்திமான் நித்தியமும் சகல பாவங்களும் நீங்கும்பொருட்டுத் தாரணை செய்யவேண்டும்.

(௭) பிரஹ்மாதி காரியவடிவங்களைத் தத்தம் காரணத்தில் ஒடுக்கி, எல்லாவற்றிற்குங் காரணமான அவ்வியக்தமும் நிரூபிக்கத்தகாததுமாகிய அசேதனத்தைப் பிரணவமாகிய சம்பூரண சாக்ஷாத் ஆத்மாவினிடத்தில் தாரணை செய்யவேண்டும்.

(௮) ஆத்மாவினிடத்தில் இந்திரியங்களோடு மனதைச் சேர்த்தல், தாரணையாம்.

தசதாரணை மார்க்கண்டேயத்துக் கூறப்பட்டுளது.

(அ-கை) இதுவுமது—:

* ஸவசிஂதாஂ வரித்யஜ்யஸாவயாநெநசெதஸா |
நாதவஊவாநுஸஂெயோ யொமஸாஂராஜ்யமிஜ்ஜதா ‖ ௬௩ ‖

(இ-ள்) யோக சாம்பிராஜ்ஜியத்தை (இராஜயோகமுடைமையை) விரும்பியவனால் சகல (பாகியாந்திரவிஷயங்களின்) சிந்தையையும் விட்டுச் சாவதான(ஏகாக்கிர)மாகிய சித்தத்தால் நாதமே அநுஷ்டிக்கத்தக்கதாம்.

இதனால்

“ தத்ரைவ தத்ரைகாக்ர்யஸஂததிஸ்சாந்யநிஸ்ப்ருஹா |
தத்த்யாநஂ ப்ரதமைரஂகைஃ ஷட்பிர்நிஷ்பாத்யதெ ந்ருப ‖

அரசனே! அந்தத்தாரணை செய்யப்பட்டவடிவின் வடிவமாகிய விருத்தியின் ஏகாக்கிரத்தன்மையாகிய சந்ததியு (பிரவாகமு)ம் அதற்கந்நியவிஷயங்களிற் செல்லாமையும் தியானமாம். அதுமுதல் ஆறு அங்கங்களால் சம்பாதிக்கப்படுகின்றது.” என்று விஷ்ணுபுராணத்திற் கூறப்பட்டிருக்கும் இலக்ஷணமுள்ளதும்,

“ தத்ர ப்ரத்யயைகதாநதா த்யாநஂ ‖

அதில் (தாரணை செய்யப்பட்ட விஷயத்தில்) விருத்தியின் ஏகாக்கிரத்தன்மை (ஒருவடிவாந்தன்மை) தியானமா” மென்று பாதஞ்சலசூத்திரத்தில் சொல்லப்பட்ட இலக்ஷணமுள்ளதுமாகிய † தியானம் சொல்லப்பட்டது. (க

---

* இது நாதபிந்தூபநிஷத் வாக்கியம்.

† தரிசனம், சாண்டில்யம், யோகதத்துவமுதலிய உபநிஷத் களிலும், சூதசங்கிதை முதலியவற்றிலும் சொல்லப்பட்டிருக்கும் தியா லக்ஷணம் வருமாறு:—

(க) சத்தியமும், பரப்பிரஹ்மமும், சகல சம்சாரத்திற்கும் மருந்தும் ஊர்த்துவரேதசுடையவரும், விரூபாக்ஷரும், விசுவரூபரும், யோகீசுவர மாகிய மகேசுவரனே அவரே நானென்று ஆதரவோடு தியானிக்கவேண்டு

(உ) அசலமும், நித்தியமும், ஆதிமத்தியாந்தமில்லாததும், அஸ் லமும், ஆகாயமல்லாததும், பரிசிக்கப்படாததும், பார்க்கப்படாததும், இ சமுங்கந்தமுமில்லாததும், அப்பிரமேயமு (அளக்கப்படாதது)ம், உவமை

(அ-கை) இதுவுமது:—

* நாதோऽந்தரங்க ஸாரங்க பந்தநே வாகுராயதே |
அந்தரங்க குரங்கஸ்ய வதே வ்யாதாயதேऽபி ச || ௯௪ ||

(இ-ள்) நாதம் அந்தரங்கமாகிய மனமென்னும் மானைக்கட்டுவதில் (அதன் சஞ்சலத்தன்மையைக் கெடுப்பதில்) வலையைப் போன்றிருக்கின்றது. [வலைபந்தனத்தால் சாரங்கத்தின் (மானின்) சஞ்சலத்தன்மையைக் கெடுத்தல்போல நாதம் மனதின் சஞ்சலத்தன்மையைக் கெடுக்கின்றது என்பது பொருள்]. அந்தரங்கமாகிய குரங்கத்தை (மனமாகிய யானை) க்கொல்லுதலில் (நாநா விருத்தி யுண்டாதலைக்கெடுத்தலில்) வேடனைப்போன்றிருக்கின்

---

யில்லாததும், தியானிக்கப்படுபொருளுக் கப்பாற்பட்டதும், சச்சிதாநந்தமும், ஆத்மாவுமாகிய பிரஹ்மத்தை (அாதப்பிரஹ்மமே) நானென்று விசேஷமுக்தியின்பொருட்டுத் தியானிக்கவேண்டும். அன்றியும் "ஓர் பரமாத்வைதபாவமிருக்கின்றது. அதுவே ஆத்மாவென்பதாக எப்படி யெப்படியெழும்புகின்றதோ, அங்கே சொரூபமாகவே பாவிக்கவேண்டும் அவ்வெல்லாப் பூதங்களிலும் சமதிருஷ்டியும் பாவிக்கவேண்டு" மென்று சித்தசித்தாந்தபத்ததியில் தியானலக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கே மூர்த்தித்தியானமென்னும் சகுணம், ஆத்மயதார்த்தத்[...]ரமை என்னும்நிர்க்குணமென்று இருவகைத்தியானம் சொல்லப்பட்டது. இவற்றுள் "மனது நிலைக்கும்பொருட்டு முதலில் ஸ்தூலவடிவத்தை விசேஷமாய்ச் சிந்திக்கவேண்டும். அதி(ஸ்தூலத்தி)ல் நிலைத்த மனது சூக்ஷமத்திலும் [...]லபெறும்" என்னும் கருடபுராணவாக்கியத்தாலும்,

"ஸ்தூலே து நிஶ்சலம் சேதோ பத்வா ஸூக்ஷ்மேऽபி தத்ஸ்திரம் ||

சித்தத்திற்கு ஸ்தூலத்தில் நிச்சலமுண்டாயின், சூக்ஷமத்தில் நல்ல [...]லைப்புண்டாகின்றது" என்னும் சிவபுராணவாக்கியத்தாலும் முன்னர் சகுணமும் பின் நிர்க்குணமும் முறையே அப்பியசிக்கத்தக்கனவாம். இக்கருத்தேபற்றி இந்நூலாசிரியர் நாதாநுசந்தானத்தை விசேஷமாகக் கூறினார். இப்படியப்பியசிக்கும் புருஷனாகிய மகாத்மாவிற்குக் கிரமமாக வேதா[...]த விஞ்ஞானமுண்டாகும் இதிற் சமுசயமில்லை. தியானத்தின் பிரசம்ஸை சிவபுராணம் வாயுசங்கிதை உத்தாபாகம் ௨௯-வது அத்தியாயத்தில் சொல்லப்பட்டுளது.

* இது நாதபிந்தூபநிஷத் வாக்கியம்

றது. (வேடன் வலையினுற் கட்டுப்பட்ட மிருகத்தைக் கொல்லுவதுபோல் நாதமும் தன்னிடத்து ஆசக்தமாகிய மனதைக் கொல்லுகின்றது என்பது பொருள்). (௯௪)

(அ-கை) இதுவுமது :—

𑌅𑌨𑍍𑌤𑌰𑌂𑌗𑌸𑍍𑌯𑌯𑌮𑌿𑌨𑍋 𑌵𑌾𑌜𑌿𑌨𑌃𑌪𑌰𑌿𑌘𑌾𑌯𑌤𑍇 |

𑌨𑌾𑌦𑌸𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑍍𑌤𑌿𑌰𑌤𑍋𑌨𑌿𑌤𑍍𑌯 𑌮𑌵𑌧𑌾𑌰𑍍𑌯𑌾𑌹𑌿𑌯𑍋𑌗𑌿𑌨𑌾 ‖

(இ-ள்) அன்றியும், அது யோகியின் அந்தக்கரணமாகிய குதிரைக்கு வாசலிற் கிடக்கும் கட்டை அல்லது இருப்புச்சலாகை போன்றிருக்கின்றது. (குதிரை லாயத்தில் முன்னுல் போட்டிருக்கும் கட்டை அல்லது இருப்புச்சலாகை குதிரையை வெளியிற் போகாதபடி தடுக்கின்றது, அதுபோல நாதம் அந்தக்கரணத்தை வெளியிற் போகாதபடி தடுக்கின்றது.) ஆகையால் நாதத்தின் உபாசனை யோகிகளாற் பிரதிதினமும் ஆதரிக்கத்தக்கதேயாம். (௯௫)

(அ-கை) இதுவுமது :—

𑌬𑌦𑍍𑌧𑌂𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌚𑌾𑌞𑍍𑌚𑌲𑍍𑌯𑌂 𑌨𑌾𑌦𑌗𑌨𑍍𑌧𑌕𑌜𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 |

𑌮𑌨𑌃𑌪𑌾𑌰𑌦𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌿𑌰𑌾𑌲𑌮𑍍𑌬𑌾𑌖𑍍𑌯𑌖𑍇𑌟𑌨𑌮𑍍 ‖ ௯௬ ‖

இ-ள்) மனமென்னும் பாதரசம் நாதமென்னுங் கந்தகத்தோடு சேர்த்தலால் கட்டப்பட்டு (நாதமொன்றிலேயே ஆசக்தியுடையதாய்), அதனுலேயே சஞ்சலத்தன்மை (அநேக விஷயாகார விருத்திப் பரிணுமம்) நீங்கி, நிராலம்ப (பிரஹ்மமென்னும் அபரிச்சின்ன ஆகாயத்திற் செல்லுதலை [ததாகார (அதேவடிவமாகிய) விருத்திப்பிரவாகத்தை] யடைகின்றது.

பாதரசம் கந்தகசம்பந்தத்தால் கட்டுப்பட்டு (குளிகைவடிவமாய்)ச் சஞ்சலம் நீங்கி, ஆகாயகமனத்தைச் செய்விப்பதுபோல, நாதத்தால் கட்டுப்பட்ட மனமும் அவிச்சின்னமாகிய பிரஹ்மாகார விருத்தியைச் செய்விக்கின்றது என்பது பொருள். (௯௬)

(அ-கை) இதுவுமது :—

* நாதஸ்ரவணத꞉ க்ஷிப்ரமந்தரங்கபுஜங்கம꞉ ।
விஸ்ம்ருத்ய ஸர்வமேகாக்ர꞉ குத்ரசிந்நஹி தாவதி ॥ கூஎ ॥

(இ-ள்) நாதசிரவணத்தால் சீக்கிரமாய் மனமென்னும் சர்ப்பம் எல்லாவற்றையும் மறந்து ஏகாக்கிரமாய் (நாதாகாரவிருத்திப் பிரவாக முடையதாய்) எங்கும் (வேறு விஷயங்களில்) ஓடுகிறதில்லை.

சர்ப்பம்போல சபலமுடையதாயும் நாதத்திற் பிரியமுடையதாயு மிருத்தலால், மனதைச் சர்ப்பமாக உருவகம் பண்ணினர். தியானத்திற்குப் பிந்திய சுலோகங்களால்,

தஸ்யைவ கல்பநாஹீநம் ஸ்வரூபக்ரஹணம் ஹியத் ।
மநஸா த்யாநநிஷ்பாத்ய꞉ ஸமாதிஸ்ஸோऽபிதீயதே ॥

அதன் (நாமரூபாதி) கற்பனையின்றிய சொரூபக்கிரகணம் எதுவோ, அதுவே மனதின் தியானத்தால் சம்பாதிக்கப்படும் சமாதியெனப்படும்" என்று விஷ்ணுபுராணத்திற் கூறிய இலக்ஷணமுள்ளதும்,

" ததேவார்த்தமாத்ர நிர்பாஸம் ஸ்வரூபசூந்ய[illegible]மிவஸமாதி꞉

அந்தத்தியானமே பிரத்தியய சொரூபமில்லாததுபோல் தியானிக்கப்படும் வஸ்துமாத்திரமாய் விளங்குதல், சமாதியெனப்படும்" என்று பாதஞ்சலசூத்திரத்திற் கூறிய இலக்ஷணமுள்ளதுமாகிய சம்பிரஞ்ஞாதலக்ஷண ‡ சமாதிசொல்லப்பட்டது. (கூஎ)

---

* இது நாதபிந்தூபநிஷத் வாக்கியம்.

‡ அநேக சுருதிகளிற் சொல்லப்பட்டிருக்கும் சமாதியிலக்கணம் வருமாறு:—

(க) திரிபுடியில்லாத பரமாநந்த சொரூப சுத்தசைதன்னிய வடிவமாகிய ஜீவாத்ம பரமாத்ம ஐக்கியாவஸ்தை, சமாதியெனப்படும்.

நித்தியமும் எல்லாவற்றினுமுள்ளதும், தோஷங்களில்லாததும், கூடஸ்தருமாகிய ஆத்மா ஒன்றாயிருந்துகொண்டு, மாயை மயக்கத்தால் பேதப்படுகின்றது. சொரூப(வாஸ்தவ)மாகப் பேதப்படுகிறதில்லை. ஆகையால் அத்வைதமொன்றேயுளது; பிரபஞ்சமுமில்லை; சம்சாரமுமில்லை. எப்

(அ-கை) இதுவுமது :—

ஶ்லோகம்: கடாகாஶ மடாகாஶ வடிவில் ஆகாயமொன்றேயாக இருப்பதுபோல ஜீவாத்ம பரமாத்மா என இருவகையாக ஆத்மா சொல்லப்படுகிறது. (சம்ஸ்கிருத ஶ்லோகம் தமிழ் கிரந்த எழுத்தில், சரியாக வாசிக்க இயலவில்லை)

படி ஆகாயமொன்றே கடாகாயம் மடாகாயமெனப்படுகின்றதோ, அது போல ஆத்மாவொன்றே பிராந்தர்களால் ஜீவாத்மா பரமாத்மாவென இரண்டு வகையாகச் சொல்லப்படுகின்றது. நான் தேகமல்லன்; பிராணனல்லன்; இந்திரியங்களல்லன்; மனமல்லன்; சாக்ஷிசொரூபமாயிருத்தலால் கேவல சிவமேயான் என்னும் புத்தியெதுவோ, அதுவே இங்கே சமாதியெனப் படுகின்றது.

தியானிக்கிறவன் தியானமென்னுமிரண்டையும் விட்டு, காற்றில்லா விடத்துள்ள தீபம்போல தியானிக்கப்படுபொருள் ஒன்றைமாத்திரம் விஷயம் செய்யும் சித்தம், சமாதியெனப்படும்.

நானே பரப்பிரஹ்மம்; பரப்பிரஹ்மமே நானென்னும் நிலை, சர்வ விருத்தி நிரோதமாகிய சமாதியெனப்படும். செவ்வையாகத் தியானத்தை மறத்தலும், சமாதியெனப்படும். பிரபாசூனியமும், மனசூனியமும், புத்தி சூனியமும், நிராமயமும் சர்வசூனியமுமாகிய நிராபாசம், சமாதியெனப் படும். ஊர்த்துவ (மேல்) பூரணமும் அதோ (கீழ்) பூரணமும் மத்திய பூரணமுமாகிய சிவசொரூபம், பாரமார்த்திகசமாதியாம். உத்தான (எழுகின்ற) ச[ம்]ஸ்காரங்(வாசனை)களின் தடையும், நிரோத (அடங்குகின்ற) சம்ஸ்காரங்களின் பிரகடத்தன்மையுமான அந்தக்கரணத்தின் ஏகாக்கிரத்தன்மையாகிய பரிணாமம், சமாதியெனப்படும். அச்சமாதி, சவிகற்பசமாதி, நிருவிகற்பசமாதியென் றிருவகைப்படும். அவற்றுள் சவிகற்பசமாதி, திருசியாநுவித்தம் சப்தாநுவித்தமென இருவகையாம். இருவகைச் சவிகற்[பமு]மும், நிருவிகற்பமுமாகிய இம்மூன்றும் ஆந்தரம்பாகியமென்னும் வே[று]பாட்டால் அறுவகைப்படும்.

ஞாதா ஞானம் ஞேயமென்னும் திரிபுடித்தோற்றத்தோடு அதிவிதீயப் பிரஹ்மத்தில் அந்தக்கரணவிருத்தி நிலைத்தல், சவிகற்பசமாதியெனப்[ப]டும்.

"முக்குண வடிவமாகிய அந்தக்கரணத்திற்கும், அதன் மூன்று வித பரிணாம(விகார)மாகிய சாந்தகோரமூடவிருத்திகளுக்கும் 'நான் என்றும் சாக்ஷியாயிருக்கிறேன்' அவற்றுள் நான் அநுசூதமாயிருத்தலால்" என்[னு]னும் வடிவினதாக நிரந்தரமுண்டாகும் சித்த விருத்தியின் பரிணாமம், தி[ரு]சியாநுவித்தசவிகற்பமாம். முமுக்ஷுக்களால் திருசியத்தையவலம்பித்து[ச்] செய்யப்படுவது, திருசியாநுவித்தமாம்.

(இ-ள்) கட்டையிற் பிரவர்த்தித்த அக்கினி கட்டையோடு சாந்தமாவது (சுவாலைவடிவத்தை விட்டு தன்மாத்திரை வடிவமாக நிற்பது) போல நாதத்திற் பிரவர்த்தித்த சித்தம் நாதத்துடன் இலயமாகின்றது. (இராஜத தாமதவிருத்திகளின் நாசத்தால் சத்துவமாத்திரசேஷமும் சம்ஸ்காரசேஷமு முண்டாகின்றது).

அது மைத்திராயணீய மந்திரத்திலும்
“ 𑌯𑌥𑌾 𑌨𑌿𑌰𑌿𑌂𑌧𑌨𑍋 𑌵𑌹𑍍𑌨𑌿𑌃 𑌸𑍍𑌵𑌯𑍋𑌨𑌾𑌵𑍁𑌪𑌶𑌾𑌮𑍍𑌯𑌤𑌿 |
𑌤𑌥𑌾 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑍍𑌷𑌯𑌾𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌸𑍍𑌵𑌯𑍋𑌨𑌾𑌵𑍁𑌪𑌶𑌾𑌮𑍍𑌯𑌤𑌿 ||

எப்படி விறகில்லாத அக்கினி தனது காரணத்தில் இலயமாகின்றதோ, அதுபோல் விருத்தி நசித்தலால் சித்தம் தனது காரணத்தில் இலயமாகின்றது ” என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

---

‘ நான் அசங்கன், அத்விதீய சொப்பிரகாசன் ’ என்னும் வடிவினதாக நிரந்தரமுண்டாகும் சித்தவிருத்தியின் பரிணமம், சப்தாநுவித்தசவிகற்பமாம். அசங்கமுதலிய சப்தத்தையவலம்பித்துச் செய்யப்படுவது, சப்தாநுவித்தமாம்.

முற்கூறிய இருவகை விருத்திப் பிரவாகங்களின் நிரோதத்தோடு சித்தம் பிரஹ்மவஸ்துவில் நிலைத்தல், நிருவிகற்பசமாதியாம். இம்மூன்றும் ஆந்தரமாம் இப்படியே சூரியன்முதலிய வெளியாலம்பனத்தில் முற்கூறிய மூன்றுவித சமாதிகளையும் செய்தல், பாகியமாம்.

அச்சவிகற்பசமாதியையே சப்தாநுவித்தம் சப்தாநநுவித்தமென இரண்டு வகையாகவும் கூறுவர், ‘ அகம்பிரமாஸ்மி ’ என்னும் சப்தத்தோடு அநுவித்தம் (கூடியது), சப்தாநுவித்தம். அந்தச் சப்தமில்லாதது, சப்தாநநுவித்தம்.

அன்றியும் சமாதி, சம்பிரஞ்ஞாதம் அசம்பிரஞ்ஞாதமென இரண்டு வகையாம். அவற்றுள் விஜாதீயப்பிரத்தியயவிருத்திகளின் அந்தராயமி(மறைப்பி)ன்றியதைலதாரையைப்போல இடையில்லா சஜாதீயப்பிரஹ்மாகாரவிருத்திப்பிரவாகம், சம்பிரஞ்ஞாதசமாதியாம். சகல விருத்திகளின் நிரோதத்தோடு சித்தம் நிருவிகற்ப பிரகாரமாக நிலைத்தல், அசம்பிரஞ்ஞாத சமாதியாம். இவற்றுள் சம்பிரஞ்ஞாதசமாதி இந்நூலின் கூசு-வது சுலோகமுதல் நாலுசுலோகங்களாலும் அசம்பிரஞ்ஞாதசமாதி கூஅ-வது முதல் ஐந்துசுலோகங்களாலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(அ-கை) இதுவுமது :—

கண்டாதிநாதஸக்தஸ்தப்தாந்தஃகரணஹரிணஸ்ய |
ப்ரஹரணமபி ஸுகரம் ஶரஸந்தாநப்ரவீணஶ்சேத் ||

(இ-ள்) பாணத்தைப் பூட்டுதலில் (பாணத்தைப்போல் வேகமாய்ச் செல்லுவதாகிய வாயுவைச் சுழுமுனை மார்க்கமாகப் பிரஹ்மரந்திரத்திற் சேர்த்தலில்) சாமர்த்திய மிருந்தால் கண்டாதி (மணி, சங்கு, மத்தளம், உடுக்கை, துந்திமி, மேகமுதலியவற்றின்) நாதங்களில் பற்றியிருத்தலால் நிச்சலமாகிய அந்தக்கரணமென்னும் மானைக் கொல்லுதல் (நாநாவிருத்திகளைப் பிரதிபந்தத்தில்) சுகமாய்ச் செய்யக்கூடும். (௯௯)

(அ-கை) இதுவுமது :—

அநாஹதஸ்ய ஶப்தஸ்ய த்வநிர்ய உபலப்யதே |
த்வநேரந்தர்கதம் ஜ்ஞேயம் ஜ்ஞேயஸ்யாந்தர்கதம் மநஃ |
* மநஸ்தத்ர லயம் யாதி தத்விஷ்ணோஃ பரமம் பதம் || ௧௦௦ ||

(இ-ள்) அநாகத சப்தத்தின் எந்தத்தொனி கேட்கப்படுகின்றதோ, அந்தத் தொனிக்குள் ஞேயம் (சொப்பிரகாச சைதன்னியம்) இருக்கின்றது. ஞேயத்திற்குள் மனமடங்கி யிருக்கின்றது. (ஞேயாகாரத்தன்மை யடைந்திருக்கின்றது). அதில் (ஞேயத்தில்) மனம் விலயமடைகின்றது. (பரவைராக்கியத்தால் சகல விருத்தி சூனியமாகிய சம்ஸ்கார முண்டாகின்றது). அது விஷ்ணு (வியாபகமாகிய பரமாத்மா) வின் பரம (அந்தக்கரண விருத்தியில்லாமையால் நிருபாதிகமாகிய) பத (சொரூப)மாம்.

“ பத்யதே யோகிபிரிதி பதம் ||

யோகிகளா லடையப்படுகின்றமையால் பதமெனப்படுகின்றது ” என்று சொல்லப்பட்டிருக்கிறது. (௧௦௦)

(அ-கை) இதுவுமது :—

* தாவதாகாஶஸங்கல்போ யாவச்சப்தஃ ப்ரவர்த்ததே |
நிஃஶப்தம் தத்பரம் ப்ரஹ்ம பரமாத்மேதி கீயதே || ௧௦௧ ||

* இவை நாதபிந்தூபநிஷத் வாக்கியங்கள்.

(இ-ள்) எதுவரையிலும் அநாகத சப்தம் கேட்கப்படுகின்றதோ, அதுவரையிலும் (சப்தம் ஆகாயத்தின் குணமாயிருத்தலால், அல்லது குணகுணிகளுக்கு அப்பேதமிருத்தலால்) ஆகாயத்தின் சங்கற்பமுண்டாகின்றது. மனதோடு சப்தம் விலயமாகுதலால் சப்தமின்றியது எதுவோ, அது பரப்பிரஹ்மமெனும் சொல்லிற்கு வாச்சியமான பரமாத்மாவென்று சொல்லப்படுகின்றது.

சகல விருத்திகளும் இலயமாகுங்கால் உண்டாகும் சொரூபஸ்திதி எதுவோ, அதுவே பரப்பிரஹ்மம், பரமாத்மாவெனும் சப்தங்களால் சொல்லப்படுகின்றதென்பது கருத்து. (க0க)

(அ-கை) இதுவுமது :—

𑌯𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌨𑌾𑌦𑌰𑍂𑌪𑍇𑌣 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍇𑌵𑌸𑌾 |
𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑌾𑌕𑌾𑌰𑌃 𑌸 𑌏𑌵 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ‖ க0உ ‖

(இ-ள்) நாதவடிவமாக யாதொன்று கேட்கப்படுகிறதோ, அது சக்தியே. தத்துவங்களின் இலயத்தையுடைய நிராகாரம் எதுவோ, அதுவே பரமேசுவரன். (சகல விருத்திகளும் நசிக்குங்கால் சொரூபாவஸ்திதியுடையது எதுவோ, அது ஆத்மாவென்பது பொருள்).

“கட்டையிற்பிரவிருத்தித்த அக்கினி” யென்பவை முதலிய சுலோகங்களால் இராஜயோகத்திற்குப் பிந்திய பரியாயமாகிய அசம்பிரஞ்ஞாதசமாதி சொல்லப்பட்டது. (க0உ)

(அ-கை) இதுவுமது :—

𑌸𑌰𑍍𑌵𑍇 𑌹𑌠𑌲𑌯𑍋𑌪𑌾𑌯𑌾 𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 |
𑌰𑌾𑌜𑌯𑍋𑌗𑌸𑌮𑌾𑌰𑍂𑌢𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌕𑌾𑌲𑌵𑌞𑍍𑌚𑌕𑌃 ‖ க0௩ ‖

(இ-ள்) (ஆசனகும்பக முத்திரைவடிவமாகிய) ஹடவுபாயங்களும், (நாதானுசந்தானம், சாம்பவிமுத்திரை முதலிய) இலயவுபாயங்களுமாகிய யாவும் இராஜயோகத்தின் பொருட்டுச் சொல்லப்பட்டன. (மனதின் சர்வவிருத்தி நிரோத லக்ஷணமாகிய) இராஜயோகத்தையுடைய புருஷன் காலனை ஜெயித்தவனாகின்றான். (க0௩)

(அ-கை) இதுவுமது :—

தத்த்வம் பீஜம் ஹட: க்ஷேத்ரமௌதாஸீந்யம் ஜலம் த்ரிபி: |
உந்மநீ கல்பலதிகா ஸத்ய ஏவ ப்ரவர்த்ததே || ௧௦௪ ||

(இ-ள்) தத்துவ (சித்த)மாகிய பீஜம், ஹட (பிராணுபான ஐக்கியலக்ஷணமாகிய பிராணுயாம) மென்னும் க்ஷேத்திரம், ஔதாஸீன்யம் (பரவைராக்கியம்) என்னும் ஜலம் ஆகிய இம்மூன்றுலும் உன்மனியென்னும் கற்பகக்கொடி உடனே யுண்டாகின்றது.

பீஜத்தைப்போல் உன்மனியவஸ்தையென்னும் மூலவடிவமாகப் பரிணமிப்பதாயிருத்தலால், சித்தத்தைப் பீஜம் (வித்து) என்ருர். க்ஷேத்திரத்தி (பூமியி)ற்போல பிராணுயாமத்தில் உன்மனி (அசம்பிரஞ்ஞாத அவஸ்தை) யென்னும் கற்பகக்கொடி யுண்டாகுதலால் ஹடத்தை க்ஷேத்திரமென்ருர். அக்கொடியினுற்பதிக்குக்காரணமா யிருத்தலாலும், பரவைராக்கியத்தையேதுவாகவுடைய சம்ஸ்காரவிசேஷம் சித்தத்தின் அசம்பிரஞ்ஞாதமாமென்பது அதன் இலக்ஷணமாயிருத்தலாலும், பரவைராக்கியத்தை ஜலமென்ருர். சகல இஷ்ட சித்திக்கும் சாதனமாயிருத்தலால், உன்மனியைக் கற்பகக்கொடி யென்ருர் (௧௦௪)

(அ-கை) இதுவுமது :—

ஸதா நாதாநுஸந்தாநாத் க்ஷீயந்தே பாபஸஞ்சயா: |
நிரஞ்ஜநே விலீயேதே நிஶ்சிதம் சித்தமாருதௌ || ௧௦௫ ||

(இ-ள்) எப்போதும் நாதாநுசந்தானஞ்செய்தலால் பாவக்கூட்டங்களெல்லாம் நசிக்கின்றன. மனமும் பிராணனும் நிச்சயமாகவே நிரஞ்சனத்தில் (நிர்க்குணமாகிய சைதன்னியத்தில்) இலயமுடையவைக ளாகின்றன. (௧௦௫)

(அ-கை) உன்மனியவஸ்தையை யடைந்த யோகியின் ஸ்திதியைக் கூறுகின்ருர் :—

* ஶங்கதுந்துபிநாதம் ச ந ஶ்ருணோதி கதாசந |
காஷ்டவஜ்ஜாயதே தேஹ உந்மந்யாவஸ்தயா த்ருவம் || ௧௦௬ ||

---

* இவை நாதபிந்தூபநிஷத் வாக்கியங்கள்.

(இ-ள்) சங்கு துந்துபிகளின் நாதம் ஒருகாலத்திலும் கேட்கிறதில்லை. உன்மனியவஸ்தையால் தேகம் (அசைவற்றிருத்தலால்) நிச்சயமாகவே கட்டையைப்போலாகின்றது. (கoசு)

(அ-கை) இதுவுமது :—

ஸவாவஸ்தாவிநிர்முக்த ஸர்வசிந்தாவிவர்ஜித: |
ம்ருதவத்திஷ்டதே யோ யோ ஸமுக்தோ நாத்ர ஸம்ஶய: ‖ கoஎ ‖

(இ-ள்) எந்த யோகி (சகலவிருத்தி நிரோதமாகிய யோகத்தையுடைய துரியாவஸ்தை யடைந்தவன்) சகல (ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, மூர்ச்சை, மரணமென்னும் ஐந்து) அவஸ்தைகளினின்றும் விடுபட்டவனுய் எல்லா நினைவுகளும் நீங்கி மரித்தவனைப்போல விருக்கின்றானோ, அவன் ஜீவனோடிருந்துகொண்டே முக்தனுகின்றான்.

சகலவிருத்திகளும் நிரோதமாகுங்கால் ஆத்மாவின் சொரூபமாக நிலைத்தலால் முக்தனுகின்றான், அது பாதஞ்சலசூத்திரத்தில்

“ ததா த்ரஷ்டு: ஸ்வரூபேவஸ்தானம் ‖

அப்போது (விருத்திநிரோதமாகுங்கால்) திருஷ்டாவாகிய சேதனத்தின் சொரூபத்தில் நிலைப்புண்டாகின்றது” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (கoஎ)

(அ-கை) இதுவுமது :—

காத்யதே ந ஸ காலேந பாத்யதே ந ஸ கர்மணா |
ஸாத்யதே ந ஸ கேநாபி யோகீ யுக்த: ஸமாதிநா ‖

(இ-ள்) சமாதியோடு பொருந்திய யோகி காலனால் விழுங்கப்படான்; (செய்யப்பட்ட சுபாசுப) கர்மங்களால் பாதிக்கப்படான்; ஜனனமரணதிகளுண்டாதலில் கிலேசப்படான்); எதனாலும் (வேறு புருஷனாலாயினும் யந்திர மந்திர முதலியவற்றாலாயினும்) சாதிக்கப்படான்.

கர்மங்களால் பாதிக்கப்படானென்பது பாதஞ்சலசூத்திரத்தின் சமாதிப்பிரகரணத்தில்

" ததஃக்லேசகர்மநிவ்ருத்திஃ ॥

அதனால் (சமாதிலாபத்தால்) அவித்தையாதி கிலேசங்களும் சுபாசுபகர்மங்களும் முற்றிலும் நிவர்த்தியாகின்றன" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (க0அ)

(அ-கை) இதுவுமது :—

ந கந்தம் ந ரஸம் ரூபம் ந ச ஸ்பர்சம் ந நிஸ்வநம் ।
நாத்மாநம் ந பரம் வேத்தி யோகீ யுக்தஃ ஸமாதிநா ॥

(இ-ள்) சமாதியோடுபொருந்திய யோகி நற்கந்த துர்க்கந்தங்களையும், (தித்திப்பு, புளிப்பு, கைப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பென்னும் அறுவகை) இரசங்களையும், செம்மை, கருமை, வெண்மை, பொன்மை, பசுமை, புகைமை, சித்திரமென்னும் எழுவகை) உருவங்களையும், (சீதம், உஷ்ணம், உஷ்ணசீதமில்லாமையென்னும் மூன்றுவித) பரிசங்களையும், (சங்கு துந்துபிமுதலிய பாகியாந்தர) நாதங்களையும் ஆத்மாவை (தேகத்தை) யும், பிறரையும் அறியான்.

ஆத்மாவென்பது தேகத்திலும் தைரியத்திலும், ஜீவனிலும் சுபாவத்திலும் பரமாத்மாவிலும் வருமென்பது அமரம்(நிகண்டு)

(அ-கை) இதுவுமது :—

சித்தம் ந ஸுப்தம் நோ ஜாக்ரத் ஸ்ம்ருதிவிஸ்ம்ருதிவர்ஜிதம் ।
ந சாஸ்தமேதி நோதேதி யஸ்யாஸௌ முக்த ஏவ ஸஃ ॥

(இ-ள்) எவனுடைய அந்தக்கரணம் சுழுத்தியடையாததாயும், ஜாக்கிரமில்லாததாயும், நினைப்பு மறப்பில்லாததாயும், நாசமில்லாததாயும், உற்பத்தி யில்லாததாயு மிருக்கின்றதோ, அப்படிப்பட்ட இவன் ஜீவன்முக்தனே.

திரிகுணமாகிய அந்தக்கரணத்தில் எப்போது சாத்விக இராஜதங்களையடக்கிச், சகலகரணங்களையும் ஆவரிக்கும் (மறைக்கும்) தமசு ஆவிர்ப்பாவமாகின்றதோ, அப்போது அந்தக்கரணத்திற்கு விஷயாகார பரிணாமமில்லாமையால், அது சுழுத்தி யெனப்படுகின்றது. ஆவரிக்கும் தமசு இல்லாமையால் சுழுத்தியடையாதென்றார். இந்திரியங்களால் அர்த்த (விஷய)க்கிரகணமில்லாமையால் ஜாக்கிரமில்லாததென்றார். விருத்திசாமானிய மில்லாமையாலும் உற்போதகம் (விழிப்பு) இல்லாமையாலும், நினைப்பில்லாததென்றார். ஸ்மிருதியனுகூல சம்ஸ்கார மில்லாமையால் மறப்பில்லாததென்றார். சம்ஸ்காரசேஷமாகிய சித்தமிருத்தலால் நாசமில்லாததென்றார். விருத்தியுற்பத்தியாகாமையால் உற்பத்தியில்லாததென்றார். (௧௧௦)

(அ-க) இதுவுமது :—

* நவிஜாநாதி ஶீதோஷ்ணம் நது:கம் நஸுகம் ததா |
நமாநம் நாவமாநம் ஸந்த்யக்த்வாது ஸமாதிநா ||

(இ-ள்) சமாதியோடு பொருந்திய யோகி சீதோஷ்ணபதார்த்தங்களையும், துக்கத்தை யுண்டாக்குகின்ற பிறராற் செய்யப்படும் அடிமுதலியவற்றையும், சுரபி (வாசனையுள்ள) சந்தனாதிகளைப் பூசுதல்முதலிய சுகசாதனத்தையும், மானத்தையும், அவமானத்தையும் அறியான். (௧௧௧)

(அ-கை) இதுவுமது :—

ஸ்வஸ்தோ ஜாக்ரதவஸ்தாயாம் ஸுப்தவத்யோऽவதிஷ்டதே |
நிஶ்வாஸோச்ச்வாஸஹீநஶ்ச நிஶ்சிதம் முக்த ஏவ ஸ: ||

(இ-ள்) சுவஸ்தனைப் (பிரசன்னமாகிய இந்திரிய அந்தக்கரணங்களுள்ளவனைப்), உசுவாச நிசவாசமில்லாதவனைப், சொப்பன

* இது நாதபிந்தூபநிஷத் வாக்கியம்.

சுழுத்திகளின் (நிவிருத்தியாகிய) ஜாக்கிராவஸ்தையில் தூங்குகிறவனைப்போல் (காயேந்திரிய வியாபாரசூனியனாய்) இருக்கிறவன் எவனோ, அவன் நிச்சயமாக ஜீவன்முக்தனே.

சுவஸ்தன் என்பதனால் மூர்ச்சை தந்திரை முதலியவை யில்லாமை குறிப்பிக்கப்படுகின்றது. ஜீவன்முக்தனது சொரூபம் தத்தாத்திரேயரால்

*"𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌧𑍍𑌯𑌾𑌨𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌃 𑌸𑌮𑌾𑌧𑌿𑌂 𑌚 𑌤𑌤𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍇𑌤𑍍 |
𑌦𑌿𑌨𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌕𑍇𑌨𑍈𑌵 𑌸𑌮𑌾𑌧𑌿𑌂 𑌸𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 |
𑌵𑌾𑌯𑍁𑌂 𑌨𑌿𑌰𑍁𑌧𑍍𑌯 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 𑌜𑍀𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑍇𑌦𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 ||

நிர்க்குணத்தியானமுள்ளவன் அதன்பின் சமாதியையும் அப்பியசிக்கவேண்டும். பன்னிரண்டுநாளிலேயே சமாதியைச் செவ்வையாய் அடைகிறான். மேதாவி வாயுவை நிரோதித்து நிச்சயமாகவே ஜீவன் முக்தனாகின்றான்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(அ-கை) இதுவுமது :—

𑌅𑌬𑌧𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌶𑌕𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 |
𑌅𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 ||

(இ-ள்) சமாதியோடு பொருந்திய யோகியானவன் சகல சஸ்திர(ஆயுத)ங்களாலும் கொல்லப்படான். எவர்களாலும் வெல்லப்படான். (வசீகரணம் மாரணம் உச்சாடனமுதலிய பிரயோஜனமுள்ள) மந்திர யந்திரங்களாலும் வசீகரிக்கப்படான்.

இப்படி யோகத்தை யடைந்த யோகிக்கு அநேக விக்கினங்கள் வருகின்றன. அவற்றை நிவர்த்திக்கும் பொருட்டு அவற்றையறிய வேண்டியிருத்தலால், அவைகளும் காட்டப்படுகின்றன. தத்தாத்திரேயரால்,

"𑌆𑌲𑌸𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑍋 𑌵𑌿𑌘𑍍𑌨𑍋 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑌥𑍍𑌯𑌤𑍇 |
𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌧𑍂𑌰𑍍𑌤𑌗𑍋𑌷𑍍𑌠𑍀 𑌚 𑌤𑍃𑌤𑍀𑌯𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑌾𑌧𑌨𑌂 |
𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍋 𑌧𑌾𑌤𑍁𑌵𑌾𑌦𑌃 𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑌿 𑌯𑍋𑌗𑌵𑌿𑌦𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ||

* இது யோகதத்துவோபநிஷத் வாக்கியம்.

முதல் விக்கினம் ஆலசியமும், இரண்டாவது முற்கூறிய தூர்த்தர்கூட்டமும், மூன்றாவது மந்திரசாதனமும், நான்காவது தாதுவாதமுமாமென்று யோகவித்துக்கள் அறிகின்றனர்" என்றும், மார்க்கண்டேயபுராணத்தில்

𑌉𑌪𑌸𑌰𑍍𑌗𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌦𑍃𑌷𑍍𑌟𑍇 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 |
𑌯𑍇 𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍇 𑌸𑌂𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑍇𑌣 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌮𑍇 ||

யோகிகளுக்கு ஆத்மாவைத் தரிசிக்குங்கால் எந்த விக்கினங்கள் பிரவிருத்திக்கின்றனவோ, அவற்றை யுனக்குச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேள்.

𑌕𑌾𑌮𑍍𑌯𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌮𑌾𑌨𑍁𑌷𑌾𑌨𑌭𑌿𑌵𑌾𑌂𑌛𑌤𑌿 |
𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑍋 𑌦𑌾𑌨𑌫𑌲𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌮𑌾𑌯𑌾𑌂 𑌕𑍁𑌪𑍍𑌯𑌂 𑌧𑌨𑌂 𑌦𑌿𑌵𑌮𑍍 ||

காமியக்கிரியைகளையும் அப்படியே காமத்தால் மனிதன், ஸ்ரீகள், தானபலன், வித்தை, வஞ்சகம், பொன்வெள்ளிக்கன்னியமான உலோகம், தனம், சுவர்க்கம்,

𑌦𑍇𑌵𑌤𑍍𑌵𑌮𑌮𑌰𑍇𑌶𑌤𑍍𑌵𑌂 𑌰𑌸𑌾𑌯𑌨𑌂 𑌵𑌯𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 |
𑌮𑌰𑍁𑌤𑍍𑌪𑍍𑌰𑌪𑌤𑌨𑌂 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌜𑌲𑌾𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑌨𑌂 𑌤𑌥𑌾 ||

தேவத்துவம், அமரேசத்துவம் (இந்திரத்துவம்), இரசாயனம், வயசு, கிரியை, யாகம், ஜலத்திலும் அக்கினியிலும் பிரவேசித்தல் என்பவற்றையும், அப்படியே

𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 𑌫𑌲𑌾𑌨𑌿 𑌨𑌿𑌯𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 |
𑌤𑌥𑍋𑌪𑌵𑌾𑌸𑌾𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌤𑌾𑌚𑍍𑌚 𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑌨𑌾𑌦𑌪𑌿 ||

சிரார்த்தத்தின் பலத்தையும், சகல தானங்களின் பலத்தையும், அப்படியே நியமங்களையும் இச்சிக்கிறான். அப்படியே உபவாசங்களாலும், பூர்த்தங்களா (தடாகம் தண்ணீர்பந்தல் நந்தனவனமுதலியவை ஏற்படுத்தலா) லும், தேவதார்ச்சனைகளாலும்,

ஸ்ருதிஸ்ம்ருதிஹ்ருக்ஷார்த்ரஹ்ருபவஸ்யஷோடஷிவாம்ஹதி
விக்நைர்ஜுஷ்டம்வ்ருதம் தைர்ந்யுதபத்நாஜேத்ராதீநிவர்த்யயேத் |
ப்ரஹ்மாஸம்ஸ்ரீதம்ஸக்தசித்தஸ்து விக்நேப்யோ விப்ரமுச்யதே ||

அதிதிகளாலும், கர்மங்களாலும் உண்டாகின்ற விக்கினங்களை இச்சிக்கிறான். இப்படி விக்கினங்களுண்டாகின்றன. அவற்றை யோகி முயற்சியால் நிவர்த்திக்கவேண்டும். மனதைப் பிரஹ்மத்தோடு அசங்கமாக்கி (எதனோடும் கூடாததாகச்செய்து) விக்கினங்களினின்றும் விடுபடுகிறான்" என்றும், பதும புராணத்தில்

யஸ்யைவம் மநோ நவிக்ஷிப்யதே தைர்விக்நை ஹிராநகஸ்ய |
ததாஸ்ய தஸ்ய பரம் ப்ரஹ்மாதி துர்லபம் ||

எப்போது இவன் மனது இவ்விக்கினங்களால் சிதறவில்லையோ, அப்போது மேல் அதிதுர்லபமாகிய அந்தப் பரப்பிரஹ்மத்தையடைகிறான்" என்றும், யோகபாஸ்கரத்தில்"

ஸாத்விகீம் த்ருதிமாஸ்தாய ஸத்த்வேந ஸுஸ்திர: |
நிர்குணம் மநஸா த்யாயந் விக்நேப்யோ விப்ரமுச்யதே ||

யோகி சாத்விகமாகிய தைரியத்தைப் பற்றிக்கொண்டு சத்துவத்தால் நன்றாய் ஸ்திரமுடையவனாய் நிற்குணத்தை மனதினால் தியானித்தலால் விக்கினங்களினின்றும் விடுபடுகிறான்.

ஏவம் யோகமுபாஸீந: ஸக்ராதிபதநிஸ்ப்ருஹ: |
ஸித்த்யாதிவாஸநாத்யாகீ ஜீவந்முக்தோ பவேந்முநி: ||

இப்படி, யோகத்தை யுபாசிக்கின்றவனாய், இந்திராதிபதங்களை விரும்பாதவனாய், * சித்திமுதலியவற்றின் வாசனையை விட்டவனாயிருக்கும் முனி, ஜீவன்முக்தனாகின்றான்.

விகாரஸ்யஹி யா நோக்தா: ஸந்தி விக்நா ஹ்யநேகஶ: |
யத்நேந விஷ்ணுஹாரயோபாதராணீயா ஹியோகிநா ||

---

* சித்தியை விரும்பின் முக்தியையடையாரென்பதை,

"அரும்பெறல் யோக நன்கிற் கைவந் தோரவற்றின் போகம்;
விரும்புறின் முத்தியெய்தார் வெறு வெளியதனிற்றோன்றும்;

இன்னும் அநேக * விக்கினங்களிருக்கின்றன. அவை விரியுமென்னும் அச்சத்தால் விடப்பட்டன. அவை சிவவிஷ்ணுக்களைத் தியானித்தலால் யோகியால் தள்ளத்தக்கனவாம்" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(அ-கை) யோகிகளல்லாதவர்களுக்கு ஞானமில்லையென்று நிராகரித்து, யோகிகளுக்கே ஞானமுண்டாமெனக் கூறுகின்றார்:-

𑌯𑌾𑌵𑌨𑍍𑌨𑍈𑌵 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿 𑌚𑌰𑌨𑍍 𑌮𑌾𑌰𑍁𑌤𑍋 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 ।
𑌯𑌾𑌵𑌦𑍍𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌰𑍍𑌨 𑌭𑌵𑌤𑌿 𑌦𑍃𑌢𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌵𑌾𑌤𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍 ।
𑌯𑌾𑌵𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌨𑍇 𑌸𑌹𑌜𑌸𑌦𑍃𑌶𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌨𑍈𑌵 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 ।
𑌤𑌾𑌵𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌦𑌤𑌿 𑌤𑌦𑌿𑌦𑌂 𑌦𑌮𑍍𑌭𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌲𑌾𑌪𑌃 ॥ ககசு ॥

(இ-ள்) சுழுமுனை நாடியிற் செல்லும் பிராணவாயு எதுவரையிலும் பிரஹ்மரந்திரத்தளவு நன்றாய்ப் பிரவேசிக்கவில்லையோ (பிரஹ்மரந்திரத்திற் செல்லுவது ஸ்திரமாகுமாதலின், பிரஹ்மரந்திரத்திற் சென்று ஸ்திரமாகவில்லையோ), எதுவரையில் பிராணவாயுவைப் பிரதிபந்தித்தலால் (கும்பகத்தால் ஸ்திரமாக்குதலால்) விந்துதிடமாகவில்லையோ, எதுவரையில் பிராணவாயுவைப் பிரதிபந்தித்தலால் தத்துவம் (மனம்) சுட்[illegible]விக தியேயாகாரவிருத்திப் பிரவாகமுடையதாகவில்லையோ, அதுவரையில் எவன் ஞானத்தைப் பேசுகிறானோ அந்த ஞானம் இடம்பமாத்திர மித்தியாப் பிரலாபமாம். (இடம்பமாக ஞானத்தைப் பேசுதலால் நான் உலகத்தில் பூஜ்ஜியனாவேன் என்னும் புத்தியாகப் பொய் பேசுதலேயாம்):

---

பரம்பொருளாகுமென்னைப் பாவித்தோர் முத்தி சேர்வர் ;
விருந்திடு பிரமம் யானே யென மறைவிளம்புமன்றே"

என்னும் கூர்மபுராணவாக்கியத்தாற் காண்க.

* யோக குணம், உத்ஸர்க்கங்களென்னும் பெயர்களாற் சொல்லப்பட்டிருக்கும். அவற்றை விரிவாயறிய விரும்புவோர் யோககுண்டலியுபநிஷது, சிவசங்கிதை, வாயுசங்கிதை, இலிங்கபுராண முதலியவற்றிற் காண்க. யோகத்தின் உபசர்க்கங்களும் அவற்றின் நிவிருத்தியுபாயங்களும் சௌரபுராணத்தில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன.

அசைகின்றதோ, அவனது சித்தம் சஞ்சலமுடையதேயாம். விந்துவும் சித்தமும் வாயுவு மசைந்துகொண்டிருக்குமாயின், ஜனங்கள் பிறந்திறந்துகொண்டேயிருப்பர். இவ்வார்த்தை சத்தியம் சத்தியம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. யோகபீஜத்திலும்,

"சித்தம் ப்ரணஷ்டம் யதி3 பா4ஸதே வை
தத்ர ப்ரதீதௌ மருதோऽபி நாஶ: ।
ந வா யதி3 ஸ்யாந்ந து தஸ்ய ஶாஸ்த்ரம்
நாத்மப்ரதீதிர்ந கு3ருர்ந மோக்ஷ: ॥

சித்தம் நஷ்டமானதாகத் தோற்றினல் வாயுவும் நாசமுடையதாகத் தோற்றும். அங்ஙனமில்லையேல் அவனுக்குச் சாஸ்திரமுமில்லை. ஆத்மஞானமு மில்லை; குருவுமில்லை; மோக்ஷமுமில்லை" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதனல் பிராணனும் விந்துவும் சித்தமும் ஜயமானல் ஞானவாயிலாக யோகிகளுக்கு மோக்ஷமுண்டாமென்பது சூசிப்பிக்கப்பட்டது. அது அமிர்தசித்தியில்,

"யாமவஸ்தா2ம் வ்ரஜேத்3வாயுர்பி3ந்து3ஸ்தாமேவ க3ச்ச2தி ।
யதா2 [illegible]ஸாத்4யதே வாயுஸ்ததா2 பி3ந்து3: ஸாத்4யதே ॥

வாயு எந்த அவஸ்தையை யடைகின்றதோ, அந்த அவஸ்தையை விந்து அடைகின்றது. வாயு எப்படிச் சாதிக்கப்படுகின்றதோ, அப்படியே விந்துவும் சாதிக்கப்படுகின்றது.

* மூர்ச்சி2தோ ஹரதி வ்யாதீ4ன் ப3த்3த4: கே2சரதாம் நயேத் ।
ஸர்வஸித்3தி4கரோ லீனோ நிஶ்சலோ முக்திதா3யக: ।
யதா2வஸ்தா2 ப4வேத்3பி3ந்தோ3ஸ்ததா2வஸ்தா2 ததா2 ததா2 ॥

மூர்ச்சிதம் வியாதியைக் கெடுக்கின்றது. விருத்தம் கேசரத் (ஆகாயத்திற் செல்லும்) தன்மையைத் தருகின்றது. லீனம் சர்வசித்திகளையும் தருகின்றது. நிச்சலம் முக்தியைத் தருவத[ாகி]ன்றது. விந்துவின் அவஸ்தை எப்படி எப்படி யுண்டாகின்[றதோ]

---

* இது வராகோபநிஷத் வாக்கியங்கள்.

தோ, அப்படி அப்படியே சித்தத்தின் அவஸ்தையுமுண்டா கின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படியானால்

"யொமாஸ யொாயாவொக்ஷாநுணாஂஶெ்ரயொவிவித்ஸயா।
ஜ்ஞாநஂகா்ஊஂவஹக்திஸ்ஹநொவாயொ௨நெ்ரா௯ஸ்திகூத்ரவிசு ॥

நரர்களின் சிரேயசை விதிக்கக் கருதிய என்னால் ஞானம் கர்மம் பக்தியென்று மூன்று யோகங்கள் சொல்லப்பட்டிருக்கின் றன. இவற்றிற் கந்நியமாகிய உபாயங்கள் ஓரிடத்துமில்லை" என்று பகவானாற் சொல்லப்பட்ட மூன்று மோக்ஷவுபாயங்களி ருக்க யோகமே மோக்ஷோபாயமாமென்பது எப்படியாமெனின், அப்படியல்ல; அவைகள் யோகத்திலடங்கி யிருத்தலால் அப் படியே,

"ஆத்மாவாஅரெ த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோமந்தவ்யோ நிதித்யா ஸிதவ்ய: ॥

ஏ! மைத்திரேயி! ஆத்மாவானது பார்க்கத்தக்கதும், கேட் கத்தக்கதும், மனனஞ்செய்யத்தக்கதும், நிதித்தியாசனஞ் செய் யத்தக்கதுமாம்" என்னும் சுருதியால் பரமபுருஷார்த்த சாதனமா கிய ஆத்மசாக்ஷாத்காரத்திற்கு ஏதுவாக சிரவண மனன நிதித் யாசனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள், சிரவண மனனமிரண்டும் நியமத்துள்ளடங்கிய சுவாத்தியாயத்தில் அடங் குகின்றன. நியமவிவரணத்தில் யாஞ்ஞவல்கியரால்,

"ஸித்தாந்தஶ்ரவணஂ ப்ரோக்தஂ வேதாந்தஶ்ரவணஂ புதை: ॥

சித்தாந்த சிரவணமென்பது வேதாந்தசிரவணமாமென்று விவேகிகளாற் சொல்லப்பட்டிருக்கின்றது" என்று வெளிப்படை யாகவே சிரவணத்திற்கு நியமத்தில் அடக்கம் கூறப்பட்டிருக் கின்றது.

"ஙயிதவ்யெஷஂஸஙுரஂவாவஹாரணஂஸெதிஹாஸகஂ।
வஷெஷுயவ்யநஂயஶுஸஷாஹ்யாஸொாஜவஷ்யதஃ॥

வேதத்தையாவது சூத்திரத்தையாவது இதிகாசங்களோடு புராணங்களையாவது அத்தியயனம்செய்து, பதங்களில் அத்தியயனஞ்செய்தலாகிய சதாப்பியாசம் (இடைவிடாப்பழக்கம்) ஜபமெனப்படும்" என்று யுக்திகளால் அநவரதம் சிந்திக்கும் இலக்ஷணமுடைய சதா அப்பியசிக்கும் வடிவினதாகிய மனனத்திற்கும் நியமத்தில் அடக்கம் சொல்லப்பட்டிருக்கின்றது. விஜாதீயபிரத்தியயத்தை நிரோதித்தல் பூர்வக சஜாதீயபிரத்தியயப்பிரவாகரூபமாகிய நிதித்தியாசனமானது சொல்லப்பட்ட இலக்ஷணமுள்ள தியானத்தில் அடங்கும். அதுவும் அதன் பரிபாக வடிவமாகிய சமாதியால் ஆத்மசாக்ஷாத்காரவாயிலாக மோக்ஷத்திற்கு ஹேதுவாம். ஈசுவரார்ப்பண புத்தியாக நிஷ்காமகர்மத்தை யநுஷ்டித்தலாகிய கர்மயோகம்,

" தவஸ்ஸ்வாத்யாயேஶ்வரப்ரணிதாநாநி க்ரியாயோக: ||

தவம் சுவாத்தியாயம் ஈசுவரப் பிரணிதானம் என்பவை கிரியாயோகம்" என்று பாதஞ்சல சூத்திரத்திற் கூறப்பட்ட நியமத்திற்குட்பட்ட கிரியாயோகத்திலடங்கும். அவற்றுள் தவம் ஈசு[illegible]யில்,

" உபவாஸவ்ரதாசாத்ரைக்ருச்ச்ரசாந்த்ராயணாதிபி: |
ஶரீரஶோஷணம் ப்ராஹுஸ்தாபஸாஸ்தப உத்தமம் ||

* பராக கிருச்சிர சாந்திராயணமுதலிய விரதங்களால் சரீரத்தை உலர்த்துதல் உத்தமதவமென்று தவமுடையோர் கூறுவர்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. சுவாத்தியாயமு[illegible] அதில் (ஈசுவரகீதையில்),

" வேதாந்தஶதருத்ரீயப்ரணவாதிஜபம் புதா: |
ஸத்த்வஶுத்திகரம் பும்ஸாம் ஸ்வாத்யாயம் பரிசக்ஷதே ||

---

* பராகமுதலியவற்றின் இலக்கணம் பஞ்சதசி ௩௨௨-வது சுலோ[illegible]தின் டிப்பணியில் காண்க.

வேதாந்தம் (உபநிஷத்து) சதருத்திரீயம், பிரணவமுதலிய வற்றின் ஜபத்தைப் புருஷர்களுக்குச் சத்துவ(அந்தக்கரண)சுத்தியைத்தரும் சுவாத்தியாயமாமென்று விவேகிகள் கூறுவர்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஈசுவரப்பிரணிதானமும் அதில் (ஈசுவர[illegible]கீதையில்),

" [illegible] ||

வாக்கு, மனம், காயம் என்பவற்றின் கர்மங்களாகிய [illegible]துதி, ஸ்மரணம், பூஜை யென்பவற்றால் மிக நிச்சலமாகிய பக்[illegible] டாகின்றது. இது ஈசுவரபூஜனமாம்" என்று சொ[illegible] ருக்கின்றது. கிரியாயோகமும் பரம்பரையாகச் சமாதியினை ஆத்மசாக்ஷாத்காரவாயிலாகவே மோக்ஷத்திற்கு ஏதுவாமென் பது,

" [illegible] ||

சமாதிபாவனையின் பொருட்டும் கிலேசத்தைக் கெடுக்கும் பொருட்டுமா" மென்னும் அடுத்த சூத்திரத்தால் பதஞ்ச[illegible] வானல் ஸ்பஷ்டமாக்கப்பட்டிருக்கிறது.

" [illegible] ||

பஜிக்கிறது=இதனால் அந்தக்கரணம் பகவதாகார(வடிவ) மாகச் செய்யப்படுகிறது. அதனால் பக்தியெனப்படும்" என்னும் கரணவிற்பத்தியால் (சொல்லிலக்கணத்தால்),

" [illegible] |
[illegible] ||

சிரவணம், கீர்த்தனம், விஷ்ணுஸ்மரணம், பாதசேவனம், அர்ச்சனம், வந்தனம், தாசியம் (அடிமைத்தன்மை), சக்கியம்

(தோழமை), ஆத்மநிவேதனம்” என்று ஒன்பதுவிதமாகச் (பதுமபுராண முதலியவற்றிற்) சொல்லப்பட்ட சாதனபக்தி சொல்லப்படுகின்றது. அது (சாதனபக்தி) ஈசுவரப்பிரணிதான வடிவமாகிய நியமத்தில் அடங்குகிறது. அதுவும் சமாதிக்கு ஏதுவாமென்பது பதஞ்சலிபகவானால்,

,, 𑌈𑌶𑍍𑌵𑌰𑌪𑍍𑌰𑌣𑌿𑌧𑌾𑌨𑌾𑌦𑍍𑌵𑌾

அல்லது ஈசுவரப்பிரணிதானத்தால்” என்று சொல்லப்பட்டிருக்கின்றது ஈசுவரவிஷயகமாகிய பிரணிதானமென்னும் பக்திவிசேஷத்தால் சமாதிலாபம் (சமாதிபலம்) உண்டாகின்றதென் [...]ரத்தின் பொருள்.

𑌭𑌜𑌨𑌮𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯𑌭𑌗𑌵𑌦𑌾𑌕𑌾𑌰𑌤𑌾𑌰𑍂𑌪𑌂𑌭𑌕𑍍𑌤𑌿𑌃

பஜனம்=அந்தக்கரணம் பகவதாகாரமாதல் பக்தியென்னும் பாவவிற்பத்தியால் பிரயோஜன வடிவமாகிய பக்தி சொல்லப்படுகின்றது. அதுவே பிரேமபக்தியெனப்படுகின்றது. அதன் இலக்ஷணம் நாராயணதீர்த்தரால்,

[...]𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌃 𑌈𑌶𑍍𑌵𑌰𑌚𑌰𑌣𑌾𑌰𑌵𑌿𑌨𑍍𑌦𑌵𑌿𑌷𑌯𑌕𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌿
𑌕𑌾[...]𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌕𑌪𑍍𑌰𑌮𑍇𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑍋𑌽𑌨𑌵𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌃 ॥

ஈசுவர சரணாரவிந்தத்தை விஷயிக்கும் ஏகாக்கிரமாகிய அத்தியந்தப்பிரேம(பிரிய)ப் பிரவாகமாகிய அநவச்சின்னம் (இடையின்மை) பிரேமபக்தியோகமாம்” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. மதுசூதனசரஸ்வதிகளால்,

“ 𑌦𑍍𑌰𑌵𑍀𑌭𑌾𑌵𑌪𑍂𑌰𑍍𑌵𑌿𑌕𑌾 𑌹𑌿 𑌮𑌨𑌸𑍋 𑌭𑌗𑌵𑌦𑌾𑌕𑌾𑌰𑌤𑌾𑌰𑍂𑌪𑌾
𑌸𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌕𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 ॥

திரவத்தன்மை பூர்வகமான மனதின் பகவதாகாரத்தன்மை வடிவினதாகிய சவிகற்பவிருத்தி, பக்தியாம்” என்றும் சொல் லப்பட்டிருக்கின்றது. அது

‘‘ஶ்ரத்தாபக்தித்யானயோகாதவைஹி ॥

சிரத்தை பக்தி தியான யோகங்களால் அறிக’’ என்னும் சுருதியாலும்,

‘‘பக்த்யா மாமபிஜாநாதி ॥

பக்தியா[illegible] என்னையறிகிருன்’’ என்னும் ஸ்மிருதியாலும் ஆத்மசாக்ஷ[illegible]த்காரவாயிலாக மோக்ஷ ஏதுவாம். பக்தர்களோ, சுக[illegible]மே புரு[illegible]ர்த்தமாகையால் துக்கமின்மைக் கபின்னமான நிரதிசயசுகத்தின் தாரைவடிவமாகிய பிரேமபக்தியே புருஷ[illegible]ர்த்தமென்று கூறுவர். அதுவோ (பிரேமபக்தி[illegible] சம்பி[illegible] சமாதியிலடங்குகின்றது. இதனாலே அஷ்டாங்கயோ[illegible] நியமாகப் பரமபுருஷார்த்த சாதனமொன்றுமில்லை யென்ப[illegible] சித்தித்தது. (கக௪)

நான்காம் உபதேசம் முற்றுப்பெற்றது.

ஹடயோகப்பிரதீபிகை.

முற்றிற்று.

